கம்ப சித்திரம்

# சுந்தர காண்டம்

Kambaramayam
Sundara Kandam

ஆசிரியர் :

பி. ஸ்ரீ.

கரந்தைத் தமிழ்ச் சங்க அமைச்சர்

திரு. நீ. கந்தசாமிப் பிள்ளை அவர்கள்

முகவுரையுடன்



விற்பனையாளர் :

நவ பாரதி பிரசுராலயம் லிமிடெட்

திருநெல்வேலி : : சென்னை

வந்திருக்கிறார்கள். கம்பராமாயணத்தை எந்தெந்த நோக்கத்தோடு, எந்தெந்த வகையில், புலவர்கள் உரை செய்து விரிவுரை பரப்பியிருக்கின்றார்கள் என்பதை ஆராய்ந்து பார்ப்பதே ஒரு சிறந்த ஆராய்ச்சியாக முடிதலும் கூடும். இந்த நூற்றாண்டில், இதுவரை கம்பராமாயண உரைகளும் விரிவுரைகளும் நிகழ்ந்து வந்திருப்பதை ஒருவாறு இம்முகவுரையில் நாம் பார்ப்பதும் பொருத்தமாகுமென்று கருதுகிறேன்.

கம்பராமாயணத்தின் இனிமையை மக்களுக்கு விளக்கவேண்டுமென்று வந்த புலவர்கள், இந்நூற்றாண்டின் முற்பகுதிகளில், சிற்றூர்களிலும் பட்டினங்களிலும் ஆண்டுக்கு ஒருமுறை பொது இடங்களில் விரிவுரை செய்வது வழக்கமாக இருந்து வந்தது. இலக்கிய நயம் கருதியும், பக்தியிற் படிந்தும், பல மக்களும் கூடி மிக அமைதியாக அமர்ந்து கேட்டு ஆனந்திப்பார்கள். கம்பராமாயணப் புலவர்களைக் 'கம்பராமாயணப் பிரசங்கியார்' என்றும், 'பாகவதர்' என்றும் அழைப்பதுண்டு. அவர்கள் கம்பர் புலமையை வெளிப்படுத்தக் கையாண்ட முறைகளிலும், சொல்லிய உரைகளிலும் சில இக்காலத்தில் பலருக்கு நகை விளைவிக்கக் கூடியவையாகவும் இருக்கும். ஒவ்வொரு வகையையும் சுருக்கமாகக் கீழே குறிப்பிடுகிறேன்.

பிரசங்கியார், அயோத்தி மன்னன் தசரதனுடைய அரண்மனையை விவரிக்கத் தொடங்கி, அங்குள்ள தூண்கள், சுவர்கள், படிகள் முதலியவற்றை முத்தாலானவை யென்றும், பவழம் பதித்தவை யென்றும், மணியிற் குயின்றவை யென்றும் பலவாறு மனம்போன வாறெல்லாம் அடுக்கி, 'பவழத் தூண்களில் ஆயிரம், வயிரத் தூண்களில் ஆயிரம்' என்றெல்லாம் குறைந்தது மூன்று மணி நேரமாவது அந்த அரண்மனையைப் பற்றிக் கூறி, கூறுகின்ற போது சொற்கள் புறப்படுகின்ற வேகத்தாலும், ஒலி வேற்றுமைகளாலும் மக்களை மயங்கச் செய்வார். மக்கள் மயங்கியிருக்கின்ற நிலையில்,

*தத்த னத்தன தானன தானன*
*முத்த னத்தன முன்னன பின்னன*
*இந்த னத்நன இராமன(து) இல்லமே !'*

என்ற ஒரு பாட்டையும் பாடி, 'இந்த ஒரு பாட்டிலே யல்லவா கம்ப நாட்டாழ்வார் எல்லாவற்றையும் அடக்கிக் கூறியுள்ளார்...இன்னும் இந்தப் பாட்டிற்கு உரை சொல்ல வேண்டுமானால் ஒரு வருஷமும் சொல்லலாம் !' என்று கூறி, 'ஆஞ்சநேயர் திருவடிகளே சரணம் !' என்று முடித்துவிடுவார். மக்களெல்லோரும் வியந்து, 'இந்த ஒரு வரியில் இவ்வளவும் அடங்கியிருப்பது பூர்வ புண்ணியத்தாலல்லவா பாகவதருக்கு விளங்கியது ! நம்மால் இதை அணுகவும் முடியாது!' என்று அஞ்சி, 'ஜய, ஜய ராம் !' கூறி விட்டுப் பூசனைப் பொருள்களை வாங்கிக் கொண்டு தந்தம் இல்லம் சென்றுவிடுவார்கள்.

இதற்கு ஒரு சிறிது மேற்படியாகப் பிரசங்கம் செய்ய வந்தவர்கள், கம்பராமாயணப் பாட்டைத் தப்புந் தவறுமாக நல்ல இசையோடு மட்டும் பாடி, இராமாயண நிகழ்ச்சிகளில் சிலவற்றை எடுத்து விரிவாகக் கூறி முடித்துவிடுவார்கள். இத்தகைய பிரசங்கங்களால் இராமாயணக் கதை பருப்பொருளாக ஒருவாறு மக்களுக்கு விளங்கி வந்தது. தங்கள் பிரசங்கத்திற்கு இனிமை ஊட்ட வேண்டிப் பிரசங்கிகள் அருணசலக் கவிராயரின் இராமாயணக் கீர்த்தனைகளையும், வேறு தனிப்பாடல்களையும், 'கம்பராமாயணம்' என்ற பெயரோடேயே பிரசங்கித்து வருவதும் உண்டு. இத்தகைய பிரசங்கங்களாலேதான் 'விடங்கொண்ட மீனைப் போலும்' என்பது போன்ற பல பாட்டுக்கள் கம்பர் ஆதரவுக்குள்ளாயின !

கல்லூரிகளிலும் பள்ளிக்கூடங்களிலும் கற்பிக்கப்படும் தமிழ்ப் பாடங்களில் கம்பராமாயணமும் பாடமாக அமையவே, அரசாங்கத் திட்டப்படிக் கல்வி பயிலும் மாணவர்கள் கம்பராமாயணத்தைப்

படிக்கத் தொடங்கினர். இந்த நிலையில் நன்கு பதிப்பித்த பாட்டுக்களும், அப்பாட்டுக்களைத் தெளிவாகப் பொருளளவிலும் இலக்கண அமைப்பிலும் தெரிந்து கொள்ளக் கூடிய முறையில் உரைகளும் பரவுவனவாயின. கம்பர் புலமையை உண்மையாகத் தெரிந்து கொள்வதற்குமுன் பாடல்களின் பொருளைத் தெரிந்து கொள்வதற்கு இந்த நிலை பெரிதும் உதவுவதாயிற்று.

மற்ருெரு நிலையில், ஒரு தொடருக்குப் பல பொருள்களை உள்ளடக்கிக் கூறும் கவிகளே சிறந்தன என்னும் நோக்கத்தோடு சில புலவர்கள் கம்பருக்கு உரைகண்டு விரிவுரை செய்தார்கள். இவர்கள், பாடலின் சில சொற்களை எடுத்துக் கொண்டு, பல வாறு பிரித்து, தம் மனதிலுள்ள கருத்துக்களை யெல்லாம் அச் சொற்களே தருவதாக உரை கண்டு விரிவுரை செய்து கம்பருக்குப் புகழ் தேட ஆரம்பித்தார்கள். இந்த நிலை கம்பரிடத்தில் ஒரு சிலரை ஈடுபடுத்தியது. 'எண்ணிலா அருந்தவத் தோன்' என்ற சொற்ருெடரை எடுத்துக்கொண்டு, 'அளவில்லாத அருமையான தவங்களைச் செய்த விசுவாமித்திர முனிவன்' என்று முதலில் சொல்வார்கள். அதன் பிறகு ஒரு மறுப்பு எழுப்புவார்கள். 'என்ன ? காட்டிலே தவம் செய்கின்ற ஒரு தவசிக்கு அஞ்சியா நாடாளும் மன்னன் கேட்பது கொடுப்பது?' என்று சொல்வார்கள். அதன் பிறகு, 'கம்பர் சாமானியப் புலவரா ? பாருங்கள், அந்தச் சொல்லில் ஒரு பொடி வைத்திருக்கிருர் ! அதுதான் தசரதனை மயக்கியதற்குக் காரணம்' என்று கூறி, "இதோ, இன்று என் எதிரில் தவசியாக வந்திருக்கிறவன் ஒரு காலத்தில் என் போன்றதோர் மன்னனுக இருந்து, தான் கேட்டதை ஒரு முனிவன் கொடுக்கவில்லை யென்ற கோபத்தினுல் அரசையும் துறந்து, தவக் கோலம் கொண்டு, கடுந்தவம் இயற்றி, இன்று தபோதனர் தலைவனுக விளங்குகின்ருன். நான் அவன் கேட்டதை மறுத்தால் என் செய்வானே ?" என்று அஞ்சுகிருன் தசரதன்' என்பார்கள். இவ்வளவும் கம்பர் கூறிவிட்டார் என்று சொல்லி, 'எண்ணில -

யோசித்துப் பார்த்தால்; ஆ-காமதேனுவின்பொருட்டு; வரும் தவத்தோன் - மேற்கொண்ட தவத்தையுடையான்' என உரை காண்பார்கள். இந்த நிலையில் உள்ள புலவர்கள், 'ஒரு தொடருக்கு எவ்வளவுக் கெவ்வளவு வெவ்வேறு வகையான பொருள்களை உரையாக விரிக்கின்றேமோ அவ்வளவுக்கவ்வளவு புகழுமுண்டு' என்ற நம்பிக்கையில் பிரசங்கம் செய்ய ஆரம்பித்துவிட்டார்கள். சுக்கிரீவனிடம் விடை தெரிந்துவர இலக்குவனை அனுப்பியபோது ராமன் கூறிய,

'நஞ்சம் அன்னவ ரைநலிந் தால்,அது
வஞ்சம் அன்று,ம னுவழக் காதலான்,
அஞ்சி லம்பதில் ஒன்றறி யாதவன்
நெஞ்சில் நின்றுநி லாவநி றுத்துவாய்!'

என்ற பாட்டை எடுத்துக்கொண்டால், '"அஞ்சில் அம்பதில் ஒன்றறியாதவன்" என்றால், அஞ்சிலும் தெரியாத, ஐம்பதிலும் தெரியாத மூடனாகிய சுக்கிரீவன்' என்பார்கள். பிறகு, "அஞ்சிலம் பதிலொன்றறி" என்று விரித்து, '"நாம் அவன் குரங்குப் படைக்குப் பயந்தோமில்லை; அவனிடமிருந்து ஒரு பதில் தெரிந்து வா!" என்று ராமன் சொன்னான்' என்பார்கள். அதன்பிறகு, '"அப்படி எண்ணினானா சுக்கிரீவன்? நம்முடைய சிறு அம்புக்கும் பதில் சொல்ல வல்லவனா? அம்+சில்+அம்பு, அதில் ஒன்று அறியாதவன்"' என்று பிரிப்பார்கள். 'ஜானகி தனிமையால் மனம் வருந்தி அழ, அவள் அழகிய கண்ணினின்று விழுகின்ற கண்ணீர்த் துளிகளைக் கருதாத கல்நெஞ்சனான சுக்கிரீவன்' என்று சொல்லி, 'மற்றொரு வகையாகப் பாருங்கள்: கம்பர் சாமானியப் புலவரா? ராமபிரான் தான் விரோதிகிருது என்றும், துந்துமியின் எலும்புக் கூட்டைக் காலால் உதைத்து எறிந்தவன் என்றும் காட்டிக்கொள்ளவே அல்லவா கவிஞர் இவ்வாறு கூறினார்!' என்பார்கள். 'அஞ்சிலம்பது' என்ற தொடருக்கு 'அஞ்சுகூட்டிய ஐம்பது—ஐம்பத்

தைந்து' என்றும், 'அஞ்சு இல்லாத ஐம்பது—நாற்பத்தைந்து' என்றும் கணக்கிட்டு, அறுபது வருஷங்களை எண்ணி விரோதிகிருது என்றும், துந்துமி என்றும் பொருளைக் கண்டு அவையோருக்குக் கூறி, தாங்களும் கைகொட்டிக் களித்து, அவையோரையும் கைகொட்டச் செய்து, கம்பனின் கவிச் சிறப்பை வியந்து கழிமகிழ்வெய்திக் காலம் போக்குவார்கள்.

வேறொரு நிலையில், 'கம்பரிடம் தொனி அர்த்தம் காண்கின்றோம்' என்று சொல்லிச் சில புலவர்கள் சில பாடல்களை எடுத்துக் கொண்டு, நேர்பொருள்களைக் கூறி முடித்து அதன் பிறகு அந்தச் சொற்களுக்கே வேறு பொருள்களைக் கூறி, 'கம்பர் இவற்றையெல்லாம் உள்ளடக்கியே கூறினார்' என்று சொல்லுவார்கள். உதாரணமாக, 'பாகத்தில் ஒருவன் வைத்தான்....' என்ற பாட்டில், முடிவில் 'எங்ஙனம் வைத்து வாழ்தி?' என்ற சொற்றொடருக்கு, '"நீ எப்படி வைத்து வாழப் போகிறாய்?" என்பதினாலேயே, "சீதையைப் பெற்றால் நீ வாழவே மாட்டாய்!" என்ற பொருள் பிறந்துவிட்டது' என்பார்கள். 'இந்திரன் சசியை...' என்ற பாட்டில், 'அந்தரம் பார்க்கில் நன்மை அவர்க்கில்லை, உனக்கே ஐயா!' என்ற இறுதி அடிக்கு, முதலில், 'தேவர்களுக்கெல்லாம் மேற்குறித்தபடி அவரவர்கள் பெற்ற தேவியர்களால் நன்மையில்லை — நன்மையெல்லாம் உனக்கே!' என்று பொருள் சொல்லி, உடனே மாற்றி, '"அந்தரம் பார்க்கில் நன்மை அவர்க்கு — மேலுலகத்தாராகிய தேவர்களுக்கே நன்மை; "இல்லை உனக்கே, ஐயா!—உனக்கு நன்மையே இல்லை!"' என்று இராவணனிடம் சொன்னதாகப் பொருள் காண்பார்கள்.

இவற்றையெல்லாம்விட வேறொரு நிலையில் கம்பருக்கு மிக உயர்ந்த புலமை நிலையை ஏற்படுத்திவிடுவதாக எண்ணிச் சிலசில செய்யுட்களைக் 'கம்ப சூத்திரம்' என்று பெயர் கொடுத்து விரிவான பொருள் கூறிவந்தார்கள். சுந்தர காண்டத்தில்,

'"குறுமுனி குடித்த வேலை
குப்புறும் கொள்கைத் தாதல்
வெறுவிது விசயம் வைகும்
விலங்கல்தோள் அலங்கல் வீர!
சிறிறி(து)என்(று) இகழற் பாலை
அல்லை, நீ சேறி!" என்று,
உறுவலித் துணைவர் சொன்னார்;
ஒருப்பட்டான் பொருப்பை ஒப்பான்.'

என்ற செய்யுளை எடுத்துக் கொண்டு, 'இது ஒரு கம்ப சூத்திரம்; இதில் சுந்தர காண்டம் முழுவதும் அடங்கிவிட்டது; ஆராய்ந்து பாருங்கள்! "குறுமுனி- சிறிய யானைக்கன்று போன்றவனான ஸ்ரீ ராகவ மூர்த்தி;" இவ்விடத்திலே "முனி" என்பது யானை யைக் குறிக்கும் என்பதை "முனிக்குப் பொருகளிறு நீரூட்டும் பொன்னித் துறைசைக் குறு திருச்சிற்றம் பலம் என்கோ!" என்பதில் "முனி" என்பது யானை யைக் குறித்ததல்லவா? ஸ்ரீ ராமபிரானை யானையாகக் கொள்வது கம்பர் மரபென்பதைப் "போதக மனைய வன்" என்பது போன்ற பிரயோகங்களால் கற்றோர் அறிவர். இதனாலே "குறுமுனி" என்றால் ஸ்ரீ ராம பிரான் என்பது தெளிவாயிற்றல்லவா! வேறு சொற் களால் ஸ்ரீ ராமனைக் குறிக்காது "குறுமுனி" என்று சொல்வதில் இந்தச் சந்தர்ப்பத்திற்கு ஏற்ற நயமும் உண்டு. தென்னாடு ஆளாதபடி ராவணனை அடித்துத் துரத்தினவன் குறுமுனியே ஆனபடியால், அந்த ராவணன் தென்னாடும் ஆளாதபடி மாளச் செய் வதற்கு அவதரித்த மூர்த்தி ஸ்ரீ ராமன் ஆனபடியால், "குறுமுனி" என்று நயம்படக் கூறினார் என்பது அறிக. ராவணனை அகஸ்தியர் துரத்தியடித்தாரென் பது நாமாகக் கூறுவதல்ல. இந்த வரலாறுகளெல் லாம் சங்க நூல்களிலே பரக்கக் காணலாம்' என்று தொடர்ந்து, பிறகும் பின்கண்டவாறு உரை விரிப் பார்கள்:

'குடித்து - ஒரு பாணத்தால் நீர் முழுமையும் குடிக்கச் செய்து. அ வேலை - அந்தச் சமுத்திரத்தை. குப்புறும் - தாண்டி வருவான். கொள் - சீதையைக் கொள்ளலாம் என்ற உனது மனோரதம். கைத்து ஆதல் - கைகூடுவதாகும் என்பது. வெறுவிது - வீணனதே, விசயம் வைகும் விலங்கல - பரமேச்வரன் எழுந்தருளியிருக்கப்பெற்ற ஸ்ரீ கைலாச பர்வதத்தால். தோள் அலங்கல - தோள் வருந்துதலையுற்ற. வீர - ஏ, பொய் வீரனை ராவணனே. சிறிது இது - பிறருடைய தாரத்தை விரும்பும் இது மிகவும் இகழத் தக்கதாம். என்று இகழற்பாலை - என்று இழித்துக் கூறி ராவணனை இகழக கடவாய. அல்லை - லோகமாதாவாகிய சீதாதேவியை. நீ சேறி - நீ அடையக் கடவாய். என்னு - என்று. உறுவலித் துணைவர் சொன்னார் - ஒத்த பராக்கிரமம் உடையவர்களான துணைவர்கள் சொன்னார்கள். பொருப்பை - இலங்கை மலையை. ஒருப்பட்டான் - ஒருங்கே எரித்தவனை ஹனுமான். ஒப்பான் - அதற்குச் சம்மதிப்போன் ஆனான்.'

இவ்வாறு பலவகையாகச் சொற்களைப் பிரித்துப் பொருள் கண்டு, சுந்தரகாண்டத்தின் நிகழ்ச்சிகள் அனைத்தையுமே இந்த ஒரு பாட்டிலிருந்து பல பல வகையாக விரிவுரை செய்வார்கள்.

இத்தகைய பலவேறுபட்ட விரிவுரை நிலைகளில் எடுத்துக்காட்டாகச் சிலவற்றைமேலே காட்டினேன். இவ்விரிவுரைகளின் ஏற்றத்தாழ்வுகள், கேட்போர் அறிவுநிலைக்கும், உணர்ச்சிநிலைக்கும் தக்கவாறு தோன்றுவனவாகும். எவ்வாறாயினும் கம்பராமாயணத்தைப் பலவேறு இடங்களிலும் பலவேறு காலங்களிலும் பரவச் செய்து வந்த ஒரு நற்செயலுக்காவது நாம் இவர்களுக்கு நன்றி பாராட்ட வேண்டியவர்களே.

சுந்தர காண்டம் ராமாயணத்திலேயே அழகு பெறுங் காண்டம் என்பதும், படிப்போர் திருமகளின்

அருளைப் பெறச் செய்யும் ஆற்றல் உடையது என்பதும் நம்மவர்களில் பலரும் கொண்டுள்ளதொரு கொள்கையாகும். இக்காண்டத்துக்கு முன் உரை கண்டவர்களில் திருவாளர்கள் புலவர்கள்-கோவிந்தப் பிள்ளை அவர்களையும், வை. மு. கோபால கிருஷ்ணமாசாரியார், சே. கிருஷ்ணமாசாரியார், வை. மு. சடகோபராமாநுஜாசாரியார் ஆகியவர்களையும் நாம் நன்றியுடன் நினைக்கவேண்டும்.

தமிழ்நாட்டிலும் தமிழ் வழங்கும் இடங்களிலும் கம்பராமாயணத்தைத் தெரியாதவர்கள் ஒருவரும் இல்லையென்று கூறத் துணிவோமானால், அது போலவே திருவாளர் பி. ஸ்ரீ.யையும் தெரியாதவர்கள் ஒருவருமில்லை என்று கூறிவிடலாம். பொதுவாகத் தமிழ் இலக்கியத்திற்கும், சிறப்பாகக் கம்பராமாயணத்திற்கும் அவர் செய்துள்ள தொண்டுகள் பல. 'ஆனந்த விகடன்' மூலமாகக் கம்பராமாயணத்தைப் பலரும் கற்று நலமடையச் செய்வதற்குப் பல ஆண்டுகட்கு முன்னரேயே, சொற்பொழிவுகள் மூலமாகவும் வேறு சில தாள்கள் மூலமாகவும் கம்பராமாயணத்தில் தமிழ் மக்களுக்கு ஆர்வமும் அறிவும் பெருகிவரச் செய்திருக்கிறார். இவர் உரை எழுதிப் பதிப்பித்திருக்கும் முறை பேச்சு முறையை ஒட்டியதாகும். இவர் சொற்பொழிவாற்றும்போது அவையோர்க்கு ஏற்படும் உணர்ச்சி இவ்வுரையைப் படிக்கும்போதும் உண்டாக வேண்டும் என்ற நோக்கத்தோடு எழுதியிருப்பினும், நேர்முகமாகக் கேட்டு அனுபவிக்கும் அனுபவத்திற்கும் இதற்கும் வேறுபாடு இல்லாமல் போகமுடியவில்லை. இந்த வேறுபாடு எங்கும் காணக் கூடியதே. ஆதலால், இது ஒரு குறையன்று. இவரிடத்தில் இக்குறை குறைவாகவே இருக்கிறது என்பது மகிழற்பாலது. ஏறக்குறைய இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னர் நம் பி. ஸ்ரீ. தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தில், 'சீதை தனிமொழி' என்னும் தலைப்பில் இந்நூலில் காணப்பெறும் பகுதியை விரித்துச் சொற்பொழிவாற்றியபோது, அங்குக் கூடியிருந்த அன்

பர்கள் உள்ளமெல்லாம் உணர்ச்சி மயமாகி மெய்ம் மறந்தார்கள். அந்த நிகழ்ச்சியிலிருந்து கம்பராமா யணச் சொற்பொழிவில் ஒரு புதுயுகம் பிறந்ததாகவே நான் கருதுகிறேன்.

செய்யுள்களுக்கு முன்னரேயே செய்யுள்கள் எழுவதற்குக் காரணமான நிலையைப் படிப்பவர்கள் உள்ளத்தில் பதியும்படி தெளிவாகவும் சுருக்கமாக வும் கூறியிருப்பது, படிப்பவர்கள் உள்ளத்தைச் செய் யுள்களை ஏற்றுக்கொள்ளும் நிலைக்குச் செம்மை செய்து வைக்கிறது. செம்மையான உள்ளத்தோடு செய்யுளைப் படிக்கும்போது, செய்யுள்-உணர்ச்சி ஒளி வீசும் மணிபோலப் பலபல உணர்ச்சி - அலை வீசும் கதிர்களைப் பரப்பி, செம்மை செய்த உள்ளமாகிய பசும் பொன்னில் பதிந்த பன்முக மணிகளாக அமர்ந்து அணிசெய்கின்றது. செய்யுள்களைத் தெரிந்து கொள்வதற்கு வேண்டிய அளவு உரையும் கொடுத்திருப்பது ஓரளவு தமிழ்பயின்றோரும் அஞ்சா மலும் ஐயமில்லாமலும் செய்யுள்களின் பொருள் களைத் தெரிந்து கொள்வதற்கு உதவுகிறது. இந்த முறையில் உரை எழுதுவதால் செய்யுள்களெல்லாம் படிப்பவர்களுடைய உடைமையாக மாறிவிடுகின்றன. இதுதான் கல்வி உடைமை. இந்த உடைமை உள்ளத் தை நல்வழிப் படுத்தியும்,உணர்ச்சியைச் செம்மையாக ஓங்கச் செய்தும்,செயலைத் தமக்கும் பிறர்க்கும் நலஞ் செய்யும் வழியில் ஊக்கியும், கற்போருக்கும், அவர் வழியாகச் சமூகத்துக்கும் பேருதவி செய்வதாகும்.

கம்பராமாயணத்தைப் பக்தி நூலாகப் படித்து நலம்பெறும் கொள்கையில் ஈடுபடாதவர்களும் இலக் கியமாகக் கற்றுப் பயனடைதற்கும், கம்பரைப் பல வழியில் ஆராய்ச்சி செய்து நலம் அடையும் விருப்பத் தைத் தூண்டுதற்கும் இவ்வுரை பெரிதும் உதவி செய்யுமென்பதில் ஐயமில்லை. இலக்கியம் என்பது இன்பமாகப் பொழுது போக்குவதற்கு மட்டில் பயன் படுத்திக்கொள்வதன்று ; மக்களிடத்தில் உயர்ந்த எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் உண்டாக்கி,

மக்கள் வாழ்க்கையையே உயர்வடையச் செய்யும் ஆற்றலுடையது என்ற நிலையில் கம்பராமாயணத்தைக் கற்க முன் வருவார்க்கு இவ்வுரை வழிகாட்டியும் வழித்துணையுமாக இருந்து, கற்பவர்களது விருப்பத்துக்கும் உழைப்புக்கும் ஏற்ப, எண்ணிறந்த நன்மைகளைப் பயக்கும் என்பது என் துணிபு. இவ்வுரையின் நலங்களை எடுத்துக் காட்டவேண்டுமென்றால், கற்கண்டு மலையிலும் தேனருவியிலும் சுவை காணும் பகுதிகளைத் தேறுவது போலாகும். ஆதலின், 'கற்கண்டு மலையும், தேனருவியும் உங்கள் கைவசமாகிவிட்டன, அவரவர்கள் அன்புக்கும் ஆர்வத்துக்கும் ஏற்றபடி சுவைகண்டு நலமடையுங்கள்' என்று கூறுவதே என் முகவுரையாகும்.

இம் முகவுரை எழுதுவதற்குத் தகுதியுடையவர் பலர் இருப்பவும், அன்பு மேலீட்டால் அப்பெருமையை எனக்கு அளித்த பதிப்பாளர் திருவாளர் ப. ராமஸ்வாமி அவர்களுக்கு என் நன்றியைச் செலுத்தி, தமிழிலக்கியத்திற்குப் பல்வழியிலும் பணி செய்து தம் வாழ்க்கையையே தமிழ்முன்னைக்கு உரிமை செய்து உழைக்கும் நம் அன்பர் பி. ஸ்ரீ.க்கும் நீடிய நல்வாழ்வு தந்து, பல நூல்களும் அவர் வழியாக வெளிவருவதற்கு அருள் செய்யுமாறு தமிழன்னையின் திருவடிகளை வணங்கி நிற்கின்றேன்.

கரந்தைத் தமிழ்ச் சங்கம்

நீ. கந்தசாமி

*

# சௌந்தரிய பஹல்

உலகின் மிகப் பழைய வீர காவியத்தை உலகின் மிகச் சிறந்த வீர காவியமாகச் செய்துவிட்ட பெருமை தமிழின் பெருமை: இது பலவேறு இலக்கியங்களையும் ஓதி உணர்ந்த தமிழறிஞர்கள் கருத்து. ஆனால், இப்பெருமையை உலகம் ஒப்புக்கொள்ளும் காலம் சமீபத்தில் இல்லை என்று தோன்றுகிறது. தமிழ் மக்களே ஒருமுகமாய்த் தமிழுக்குரிய தனிப் பெரும் பதவியை இன்னும் ஒப்புக்கொண்டதாய்த் தெரியவில்லை. தமிழ் நாட்டில் கம்பன் பிறந்ததும், தமிழிலே பாடியதும், சம்பூர்ண இராமனைத் தமிழ் நாட்டில் அவதரிக்கச் செய்து, இமயம் முதல் குமரி வரையிலுள்ள இந்தியப் பெருமக்களின் உள்ளத்திலும் உதிரத்திலும் ஊறிப்போன இராம கதையைத் தமிழ்ப் பெருமக்களின் பேரிதிகாசமாக்கியதும் ஆகிய இச் செயல்களே, இப்பெருங் கவிஞனின் புகழுக்கு ஒருவாறு இடையூறாகி விட்டனவோ என்றுகூட நான் சில சமயங்களில் கவலைப்பட்டதுண்டு. எனினும், பல்லாயிரக் கணக்கான தமிழ்ச் சகோதரர்கள் இன்று கம்பன் கவிதையிலே மோகித்துக் கிடப்பது, இப் பெருங் கவிஞனையும் தமிழ் மொழியையும் எதிர்நோக்கி யிருக்கும் உலகப் புகழுக்கு ஒரு முற்குறியாகும் என்றே நம்புகிறேன்.

வால்மீகி ராமாயணம் ஆங்கில மொழி பெயர்ப்பின் மூலமாக உலகப் பிரசித்தி பெற்றிருக்கிறது. துளஸீ ராமாயணம் ஆங்கில மொழியில் பெயர்க்கப் பெற்றதோடு, ருஷ்ய

மொழியிலும் வெளிவந்திருக்கிறது. கம்பனுக்கோ ஹிந்தி மொழிபெயர்ப்பும் இல்லாததால், வட இந்தியாவும் இந்த மேதாவிலாசத்தைச் சிறிதும் கண்டுகொள்ள இயலவில்லை. ஹிந்தியில் மட்டு மல்ல, உலகப் பெருமொழியாகிய ஆங்கிலத்தி லும் கம்பனைக் காட்டத் தமிழறிஞர்கள் முற் பட வேண்டும். தக்க கவிப் புலமையும் கல்விப் புலமையும் வாய்ந்தவர்கள் முக்கியமான காட்சி களையாவது திறம்பட மொழிபெயர்த்து உதவும் போதுதான் கவிதையுலகில் இத் தனிப்பெருஞ் சிகரத்தை நாகரிக உலகம் முழுதும் ஒருவாறு கண்டு களிப்புறக் கூடும்.

உலக மகாகவிகளின் சிறு கூட்டத்திலே ஹோமர், ஷேக்ஸ்பியர், வால்மீகி முதலானவர்க ளுடன் ஒருங்கு வைத்து எண்ணும் சிறப்பு நம் தமிழ்க் கம்பனுக்கும் உண்டென்பதைப் பல ஆண்டுகளுக்கு முன்பே ஆராய்ச்சி - அறிஞர் களான திரு. வ. வே. ஸு. ஐயர், திரு. கே. என். சிவராஜ பிள்ளை முதலானோர் நன்குணர்ந்து கொண்டனர். இவ்வுண்மையை நம் தேசீய மகா கவி பாரதியாரும் நன்றாக அறிந்திருந்தார். தமிழ் இலக்கிய சரித்திரத்தின் அதிமுக்கிய நிகழ்ச்சி யாகிய கம்ப ராமாயண அரங்கேற்றம் உலக இலக்கிய சரிதத்திலும் ஒரு பெரு நிகழ்ச்சியாகக் கருதத் தக்கது என்பதை இந்நாளிலும் சில தமி ழறிஞர்களும் ரஸிகர்களும் உணர்ந்து பிரசாரம் செய்து வருகிறார்கள்.

திருக்குறள், திருவாசகம், நாலடியார் முத லான சில தமிழ் நூல்கள் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பெற்று, தமிழ் நாகரிகத்திற்கும் தமிழர் பண்பாட்டுக்கும் சான்றாக இருக்கின்றன. புற நானூறு என்ற சங்க இலக்கியத்திலிருந்து சில பாடல்களும் பழந் தமிழ் நாகரிகத்தை ஒரு

வாறு வெளி நாடுகளுக்கு அறிவிக்கும் முறையில் ஆங்கில பாஷையில் ஆக்கப் பெற்றிருக்கின்றன. ஆழ்வார், நாயன்மார் பாடல்களில் சிலவும் ஆங்கில உடை தரித்து இடைக்காலக் கோயில் நாகரிகத்திற்குச் சான்றாக உலாவி வருகின்றன. எனினும், இம் முயற்சிகளெல்லாம் உலக இலக்கிய சரிதத்திலே தமிழகத்திற்கு ஒரு நிச்சயமான ஸ்தானத்தை அளித்திருக்கின்றன என்று கருத முடியவில்லை. சங்கப் புலவர்களைச் சிற்றொளி நல்கும் சிறு சிறு நட்சத்திரங்களாகவும், சிலப்பதிகாரத்தைத் தமிழ் இலக்கிய வானில் ஒளிரும் ஒரு பெரு நட்சத்திரமாகவும், ஆழ்வார் நாயன்மார்களை அருளொடு மிளிரும் இன்னொளிகளாகவும், சேக்கிழாரை விடிவெள்ளியாகவும், திருவள்ளுவரைப் பூர்ண சந்திரனாகவும் உவமிக்கும் அறிஞர் ச. வையாபுரிப் பிள்ளை, கம்பனைத் தன் பேரொளி வெள்ளத்தால் விண்ணையும் மண்ணையும் ஜோதிமயமாக்கும் **கவிகுல பாஸ்கரன்** என்று வருணித்திருக்கிறார்: இக் கவிகுல பாஸ்கரனது பேரொளி-ஆங்கில வாயிலாகக் கலையுலகில் ஒருவாறு வீசும்போது தான் நமது நாகரிகத்தின் மாட்சியும் சிறந்த பண்பாடும் உலகக் கலைஞர்களுக்கு உள்ளவாறு ஓரளவாவது புலனாகும் என்று தோன்றுகிறது.

இத்தகைய தனிப் பெருஞ் சிறப்பு வாய்ந்த கம்ப ராமாயணத்தைத் தமிழர்களின் **காவியக் கோயில்** என்று கருதலாம். இக் கோயிலுக்கு முன் வாயிற் பூஞ்சோலையாக அமைந்திருப்பது பால காண்டம். கட்டடம் ஆரம்பமாவது அயோத்தியா காண்டத்திலே. இக் காண்டமும், ஆரணிய காண்டம், கிஷ்கிந்தா காண்டம், சுந்தர காண்டம் ஆகியவைகளும் இக்கோயிலின் நான்கு மாடங்கள். இம்மாடங்களுக்கெல்லாம் ஒரு கோபுரமாக

அமைவது யுத்த காண்டம். சுந்தர காண்டத்தை இக் கோயிலின் 'சௌந்தரிய மஹல்' என்று சொல்லலாம்.

இக் காண்டத்திற்கு இப் பெயர் வந்த காரணம் குறித்து அபிப்பிராய பேதங்கள் உண்டு. அயோத்தியில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைப் பால காண்டத்திலும், அயோத்தியா காண்டத்தின் முற்பகுதியிலும் காணலாம். இலங்கையில் நடந்த பெரு நிகழ்ச்சிகளைச் சுந்தர காண்டத்திலும் யுத்த காண்டத்திலும் காண்கிறோம். காட்டில் நிகழ்ந்தவை ஆரணிய காண்டம்; கிஷ்கிந்தை நிகழ்ச்சிகள் கிஷ்கிந்தா காண்டம். காவிய நாயகனது இளமைப் பருவத்தைக் குறிப்பதால் பால காண்டமென்று முதலாவது காண்டமும், யுத்தப் பெரு நிகழ்ச்சிகளைக் குறிப்பிடுவதால் யுத்த காண்டமென்று இறுதிக் காண்டமும் பெயர் பெற்றிருக்கின்றன. அயோத்தியில் நடந்த மந்திராலோசனை, சதியாலோசனைகளின் பயனாக இராமன் நகர் நீங்கி ஆரணியம் செல்லும் பகுதியை அயோத்தியா காண்டமென்று குறிப்பிட்டு, ஆரணியத்திலும் கிஷ்கிந்தையிலும் நடந்த காரியங்களை வெளியிடும் காவியப் பகுதிகளுக்கு முறையே ஆரணிய காண்டமென்றும் கிஷ்கிந்தா காண்டமென்றும் பெயரிட்டிருப்பது போல், சுந்தர காண்டத்திற்கு லங்கா காண்டமென்று ஏன் பெயரிட்டிருக்கலாகாது?

சுந்தரன் என்ற ஒரு பெயர் ஹனுமானுக்கு உண்டென்று கூறி அவனுடைய மகிமையை விளக்குகிறது சுந்தர காண்டம் என்று கருதுவோருண்டு. ஆனால், சுந்தர 'காண்டத்தினாலேயே ஹனுமானுக்குச் சுந்தரன் என்ற பெயரும் பிற்காலத்தில் ஏற்பட்டிருக்கலாமல்லவா? வேறு சிலர் இராமனுடைய ரூப சௌந்தரியத்தைச்

சீதைக்கு ஹனுமான் எடுத்துக் கூறுவதால் இக் காண்டத்திற்கு இப்பெயர் ஏற்பட்டிருக்கலா மென்று கருதுவர். இன்னும் சிலர் கதை யழகு, கவிதை யழகு குறித்து இப்பெயர் வந்ததாகவும் விவகரிப்பர். இந்த ஊகங்களெல்லாம் பொருத்த மானவை அல்ல என்றே தோன்றுகிறது.

இனி, சுந்தரியான சீதையின் சௌந்தரி யத்தை இக்காண்டம் நன்கு வெளியிடுகிறது என்று கருதலாமா? ஆனால், சீதையின் உருவ அழகை இக்காண்டம் வற்புறுத்தவில்லை என்பது திண்ணம். ‘நலன் அற உணங்கிய நங்கை’ என்றும், ‘ஓவியம் புகை உண்டதே ஒக்கின்ற உருவாள்’ என்றும் இக்காண்டத்திலே வருணிக் கப்பெறுகிறாள் சீதை. ஆகவே, அரக்கர் பேரூரில், அசோக வனச் சிறையிலே, குண சௌந்தரி யத்தில் முற்றும் மறைந்து போயிற்று ரூப சௌந் தரியம் என்றுதான் சொல்லவேண்டும்.

இத்தகைய குண சௌந்தரியத்தின் விதையை முதன் முதல் மிதிலையில் காண்கிறோம். ‘சதகோடி மின் சேவிப்ப மின்னரசென்னும்படி நின்றாள்!’ என்று வருணிக்கப்பெற்ற கன்னிகா ரத்தினத்திற் கும் குண சௌந்தரியம் உயிர்நிலையாக இருந்தது. ஆனால், அப்போது உருவ அழகிலே மறைந்திருந் தது குண அழகு. மிதிலைச் செல்வி அயோத்திச் செல்வியாகி இல்லறம் நடத்தி வரும்போது குண அழகு உருவ அழகையும் மிஞ்சிவிடுகிறது.

> **‘மண்ணினும் நல்லள்;**
> **மலர்மகள், கலைமகள்,**
> **கலையூர்**
> **பெண்ணினும் நல்லள்**
> **பெரும்புகழ்ச் சனகி’**

என்று வசிஷ்ட முனிவர் கூறுவதிலிருந்து அயோத்திச் செல்வியின் குண சௌந்தரியம், ரூப

சௌந்தரியத்திலும் மும்மடங்கு பொலிந்தது என்பது குறிப்பு. அயோத்திச் செல்வி காடுறை செல்வியாகி இராமனுடைய கஷ்டங்களைப் பகிர்ந்துகொண்டபோது குண சௌந்தரியம் காட்டுத் தீயேபோல் ஜொலிப்பதைக் காண்கிறோம். காடுறை செல்வி சிறை புகுந்த செல்வியானதும், ரூப சௌந்தரியம் தேய்ந்து குண சௌந்தரியத்திலே மறைந்து போகிறது. கற்பினுக்கு அணியைக் கண்டு வந்த செய்தியை இராமனிடம் தெரிவிக்கும் ஹனுமான், 'நங்கையைக் கண்டேன் அல்லேன்! நங்கையின் குண அழகையே கண்ணுற்றேன்!' என்று கூறுகிறான்.

சீதையின் குண சௌந்தரியத்தை லட்சிய சிகரமாக வெளியிடுகிறது கம்பனது சுந்தர காண்டம். சிறை யிருந்தவள் ஏற்றம் கூறுவது இராமாயணம் என்று கூறுவதும் கம்பன் கருத்தை அரண் செய்வதாகும். இத்தகைய குண சௌந்தரியத்தை எடுத்துக் காட்டுவது தான், இக் காண்டத்திலே நன்கு வெளிப்படும் ஹனுமானது வீர சௌந்தரியமும். 'சோகத்தாள் ஆய நங்கை' என்று ஹனுமானால் வருணிக்கப்பெறும் சிறையிருந்த செல்வியைச் சித்திரிக்க, அரக்கர் பேரூராகிய போகபூமியும் ஒரு பகைப் புலம் ஆகிறது. இந்நகரிலே,

> 'வானவரே முதலோரை
> வினவுவனேல், வல்அரக்கன்
> தான்ஒருவன் உளனாக,
> உரைசெய்யும் தருக்கிலரால்'

என்று ஹனுமான் எண்ணுகிறபடி, . தேவர்கள் 'தருக்கு' அல்லது சுயமரியாதை அற்ற அடிமைகளாக இருக்கிறார்கள். அரக்கரோ அதிகச் செருக்கால் அழிகின்றார். சிறை புகுந்த செல்வியிடந்

தான் உண்மையான சுயமரியாதையை ஹனுமான் காண்கிறான் :

> ‘ தருக்(கு)உயர் சிறையுற்(று) அன்ன
> தகைமையள் தமியள் அம்மா ! ’

சீதையின் இத்தகைய குண அழகைத் தூக்கிக் காட்டுகின்றன அரக்கர் நிலையும் அமரர் நிலையும் !

சீதையை முதன்முதல் கண்ணுற்றதுமே ஹனுமான், ‘ நங்கையர் மனத் தவத்திற்கு முனிவர்களின் கடுந்தவமும் ஈடாகாது !’ என்று பூரித்துப் போகிறான்.

> ‘ தனிமையும் பெண்மையும்
> தவமும் இன்னதே !
> வனிதையர்க் காகநல்
> அறத்தின் மாண்பெலாம் !’

என்று சீதையின் குண சௌந்தரியத்தைப் பெண் குலத்தின் வெற்றியாக மதிக்கிறான். இராமன் முன்பும் இதே தோரணையில் பேசி முடிக்கிறான்.

இந்த வெற்றியை இராமனது வெற்றிக்குப் பெருங் காரணமாகக் குறிப்பிடுகிறது கம்பனது சுந்தர காண்டம். இதன் இறுதிப் படலம் இக் காண்டத்திற்கே வெற்றி—ஒரு சௌந்தரிய சிகரம்.

கம்பன் என்ற தமிழ்க் கோயிலின் சௌந்தரிய மஹாலைக் கண்டு களித்து, உயர்ந்த லட்சியங்களையும், வாழ்க்கை - உண்மைகளையும், சிறந்த பண்பாட்டையும் ஒப்பற்ற கவிதை வாயிலாக மனோபாவத்திலே விதைத்துக்கொள்வதற்கு எனது இச்சிறு முயற்சி ஒரு வழிகாட்டியாக உதவுமானால், அதனை நான் பெரும் பாக்கியமாகக் கருதுவேன்.

என்னிடம் அளவற்ற அன்புகொண்டு, எனது அற்ப இலக்கியப் பணியையும் பெரிதாக மதித்து, இந்நூலுக்கு அருமையான முகவுரை எழுதியுதவிய தமிழறிஞரும், சிறந்த ரஸிகரும், கரந்தைத் தமிழ்ச் சங்க அமைச்சருமாகிய அன்பர் திருவாளர் - நீ. கந்தசாமிப் பிள்ளை அவர்களுக்கு என் உளம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பி. ஸ்ரீ.

# பொருளும் பக்கமும்

வென்றி வாள்புடை விசித்து, மெய்ம்மைபோல்
என்றும் தேய்வுறுத் தூணி யாத்(து), இரு
குன்றம் போன்(று)உயர் தோளின் கொற்றவில்
ஒன்று தாங்கினான் உலகம் தாங்கினான்.

—கம்பன்

# சுந்தர காண்டம்

## 1. கடல் தாவும் ஹனுமான்

கடல் கடப்பதாக உடன்பட்டு ஹனுமான் மகேந்திரமலையில் பேருருவம் கொண்டு நிற்கிறான். ஆனால், தாவிப்போவதற்கு முன்னமே ராட்சஸ ராஜதானி கண்முன் ஓடிவருகிறது. என்ன மாயம்! எங்கேயோ உயரத்திலிருந்து அந்நகரம் ஏன் இப்படி இவ்வளவு அவசரமாக இறங்கி வரவேண்டும்?

லங்காபுரியின் பேரழகு, போகம், செல்வச் சிறப்பு முதலியவற்றைக் குறித்து எவ்வளவோ விசாரித்துத் தெரிந்து கொண்டிருக்கிறான். ஆனால், இவ்வளவு சுலபமாக அதைக் கண்டுபிடித்துவிடலாம் என்று இவன் எதிர்பார்க்கவில்லை.

உண்மையில், ஹனுமானுக்கு அருகே தோன்றிய பொன்னாடு அரக்கர் வசிக்கும இலங்கையன்று. இவன் ஓங்கி வளர்ந்துகொண்டிருக்கிறான் மகேந்திர மலைமீது நின்றுகொண்டே. வளர்ந்துவரும் வேகத்தில், அதி தூரத்திலே வானத்திலுள்ள தேவலோகமே இவனை நெருங்கிவிடுகிறது.

'இதுதான் இலங்கையோ?' என்று பிரமிக்கிறான். பிரமிப்பு வெகு விரைவில் சந்தேகமாகிறது. விரைவாகவே ஐயம் தீர்ந்து, 'இது இலங்கை அன்று. சுவர்க்க லோகந்தான்' என்று முடிவு கட்டுகிறான்:

ஆண்தகை, ஆண்(டு)அவ்
வானோர் துறக்கநா(டு)
அருகில் கண்டான்,
'ஈண்(டு)இது தான்கொல்
வேலை இலங்கை?' என்(று)
ஐயம் எய்தா,
வேண்டரு விண்ணா(டு)
என்னும் மெய்ம்மைகண்(டு),
உள்ளம் மீட்டான்,
'காண்தகு தோகை
உம்பர் இல்' எனக்
கருத்துள் கொண்டான்.

[ஆண்தகை - ஆண்மைக் குணமுள்ள ஹனுமான். ஆண்டு - அங்கே; அப்போது. வானோர் - வானத்தில் வசிக்கும் தேவர். துறக்கம் - சுவர்க்கம். ஈண்டு - இங்கே; இப்போது. தான்கொல் - தானோ. வேலை - கடல். எய்தா - எய்தி; அடைந்து. வேண்டு அரு - வேண்டுதல் இன்மை ஆகின்ற; விருப்பமே இல்லாமல் போகக் கூடிய. விண் நாடு - தேவலோகம். மீட்டான் - மீட்டுக் கொண்டான். காண்தகு - காணத் தக்க. தோகை - மயில்போலும் சாயலையுடைய சீதை. உம்பர் - மேல் உலகத்தில். இல் - இல்லை.]

ராம தூதனாகப் போகும் ஹனுமானை 'ஆண் தகை' என்று எடுத்த எடுப்பில்—சுந்தர காண்டத்

தின் முதல் பாட்டின் முதல் பதத்திலேயே—குறிப்பிடுவது எவ்வளவு பொருத்தமானது! ஆண்தகையே தூதனாகப் போனால்தான் உண்மையான வெற்றி கிடைக்கும், காரியசித்தி ஏற்படும் என்பது குறிப்பு. இக்குறிப்பை உணர்ந்தே புகழேந்திப் புலவர் தமது நளவெண்பாவின் முதல் பாட்டிலும் 'ஆண்தகையே தூதுவனாய்ச் சென்று' எனக் கண்ணன் பாண்டவருக்குத் தூதுபோனதைக் குறிப்பிடுகிறார்.

இந்த ராம தூதனுடைய பேராண்மையாகிய வீர சௌந்தரியம்தானே இந்தச் சுந்தர காண்டத்தில் சீதையின் குண சௌந்தரியத்தையும் தூக்கிக் காட்டுகிறது! ஆம், 'ஆண்தகை' காண்டம் முழுமைக்கும் ஒரு ஜீவநாதம்.

'ஆண்டு' என்ற அடுத்த சொல், அந்த மகேந்திர மலையிலிருந்தே ஹனுமான் சுவர்க்க லோகத்தைக் கண்டுகொண்டான் என்பதை வற்புறுத்துகிறது. அந்தச் சுவர்க்கம் எவ்வளவோ நெடுந்தூரத்தில் இருக்கிறது என்பதை 'அவ்வானோர் துறக்க நாடு' என்ற சொற்றொடர் எவ்வளவு சுலபமாக உணர்த்தி விடுகிறது! 'அ' என்ற சுட்டு, 'வானோர்' என்று நீளமாக உச்சரிக்கும் அச்சொல், இவற்றுக்கும் மேலாகத் 'துறக்கம்' என்ற சொல்—இத்தனையும் அந்த அதிதூரத்தை உய்த்துணர வைக்கின்றன. (உடம்பைத் துறந்து அடையக்கூடியது துறக்கம்.)

அத்தகைய தொலைதூரம், 'ஈண்டு, இது' என்று சொல்லும்படி—கையால் எட்டி எடுக்கக்கூடிய ஏதோ ஓர் அலமாரித் தட்டிலிருந்து எடுப்பதுபோல் பொருள்களை எடுத்துக்கொள்ளலாம் என்று தோன்றும்படி—இவ்வளவு அதிசமீபமாகி விடுகிறது.

ஹனுமான் எவ்வளவோ தெளிவாகத்தான் லட்சியத்தை உள்ளத்தில் பதியவைத்துக்கொண்டிருந்தான். இலங்கையைக் கடல்சூழ் இலங்கை ('வேலை இலங்கை') என்றே கருதியிருந்தான். ஆனால் தேவலோகம் என்ற போக பூமியிலும் கடலும் தீவும் இருக்கக் கூடுமல்லவா? இவ்வுலகின் அதிசயமான பிரதிபிம்பம்தானே அவ்வுலகம்?

இந்நிலையில் ஹனுமானுக்குச் சந்தேகம் தெளிந்ததுதான் எப்படி? சுவர்க்கத்தைப்போல் இலங்கையும் போக பூமிதான்! ஆனால், சுவர்க்கத்திலே வேறோர் இன்பம் வேண்டுமே என்று விரும்புவதற்கு வழியில்லாதபடி அமைந்திருக்கின்றனவாம் இன்பங்கள். மனத்திலே குறை ஏற்பட்டால் அல்லவா அதை நிறை செய்யவேண்டும் என்னும் விருப்பமும் ஏற்படும்? அந்த விண்ணாட்டின் வசீகர சக்தியால் விருப்பம் இல்லாமலே போய்விடுகிறது. ஹனுமானுடைய மன நிலையும் அத்தகைய நிலையை அடையப் பார்க்கிறது. ஆகவே, அந்தச் சுவர்க்க நாட்டை 'வேண்டரு விண்ணாடு' என்று கண்டுகொள்கிறான்.

அந்த மெய்ம்மை கண்டு, அந்த அபாயத்தையும் கண்டுகொள்கிறான் ஹனுமான். சீதையைத் தேடுவதாகிய ராம காரியம் என்ற விருப்பத்தையும இழந்து விடுவதா? ஹனுமான் விண்ணாட்டின் போக லகிரியை உதறித் தள்ளிவிடுகிறான். பள்ள மடையில் பாயும வெள்ளமென உள்ளம் பாய்ந்து செல்கிறது போகத்தை நோக்கி. இந்திரிய ஜயம் பெற்ற ஹனுமானது உள்ளம்கூடப் பளிச்சென்று பாய்ந்து செல்லப் பார்த்ததாம். ஆனால் ஆண்தகை அதை முயன்று பிடித்து மீட்டுக்கொள்கிறான்.

'சீதை அங்கே இருக்கமுடியாது. ஆதலால், உள்ளமே! அங்கு நீ போகவேண்டாம்' என்று நய மாகக் கட்டளை யிடுகிறான். என்ன சித்த சக்தி! லட்சியம் மனக்கண்முன் நிற்பதால், முதன்முதல் மயங்கிய போதிலும், முடிவில் தெளிவடைகிறான்.

'காணத்தக்க லட்சியம் மேலே விண்ணுலகில் இல்லை; கீழே மண்ணுலகில்தான் இருக்கிறது' என்று தெளிந்ததும், ஹனுமானுடைய கண்ணும் மனமும் தாழ்ந்து தெற்கு மாகடலை நோக்குகின்றன. உடனே கட்டுக்காவல் அமைந்த இலங்கை மாநகரம் தோன்று கிறது. வட்டமான மதிலும், பொன்மயமான கோட்டை கொத்தளங்களும் பச்சைப் பசுஞ்சோலைகளின் நடுவே கம்பீரமாய்க் காண்கின்றன. வெற்றிக்கொடி பறக் கும் ஆசாரவாசலின் வழியாக மாடவீதிகளும் பிறவும் தெரிகின்றன. வீதிகளின் இரு புறத்திலும் ரத்தின கசிதமான மாளிகைகள், பொன்மயமான வீடுகள், முத்துக்கள் இழைக்கப்பெற்று வெண்ணிறமாக விளங்கும் உபரிகைகள்.

இவற்றையெல்லாம் கண்ட ஹனுமான் சந்தோஷ மிகுதியால் தோள்கொட்டி ஆரவாரம் செய்கிறான், ஆகாயமும் திக்குகளும் குலுங்கும்படி:

**கண்டனன், இலங்கை**
**மூதூர்க் கடிபொழில்,**
**கனக நாஞ்சில்**

**மண்டல மதிலும்,**
**கொற்ற வாயிலும்,**
**மணியில் செய்த**

வெண்தளக் கனக
மாட வீதியும்,
பிறவும் எல்லாம் :
அண்டமும் திசைகள்
எட்டும் குலுங்கத்தோள்
கொட்டி ஆர்த்தான்.

[மூதூர் - முது ஊர், பழமையான நகரம். கடி - காவல். பொழில் - சோலை. கனக நாஞ்சில் - பொன் மயமான மதிலுறுப்பு. மண்டலம் - வட்டம். கொற்ற வாயில் - ஆசார வாசல். தளம் - உபரிகை. ஆர்த் தான் - ஆரவாரஞ் செய்தான்.]

இவ்விதமாக இலங்கையைக் கண்டு விசேஷ உள்ளக் கிளர்ச்சியோடு கடலைத் தாவப்போகிறான் ஹனுமான். பேருருவத்தில் இவன் தனது லட்சியத் தைக் கண்டதுபோல், நாமும் மனக்கண்ணிலாவது நமது லட்சியத்தைப் பார்த்து உத்ஸாகத்தோடு முயற்சி செய்யவேண்டும் என்பது படிப்பினை. அபாரமான தன்னம்பிக்கை சூட்சும உலகில் நமக்கும் விசுவ ரூபத்தை அளித்துவிடுகிறது.

தாவிப்போவதற்கு முன் ஹனுமான் கால்களை ஊன்றி அழுத்துகிறான் - விண்ணிலே கிளம்புவதற்கு விசை கொள்ளத்தான். அப்பொழுது அந்த மலைப் பிரதேசத்திலே பெருங்குழப்பம் உண்டாகிறது. மலை கீழே அழுந்துவதால் பாம்புகள் விஷத்தைக் கக்கிக் கொண்டு நெளிந்து வெளிப்படுகின்றன :

வன்றந்த வரிகொள்
நாகம், வயங்(கு)அழல்
உமிழும் வாய,

பொன்தந்த முழைகள்
தோறும் புறத்(து)உராய்ப்
புரண்டு போவ !

[வல் தந்தம் - வலிய விஷப் பல். வயங்கு அழல் - எரிகிற விஷாக்கினி. வாய - வாய்களை உடையனவாய். முழை - குகை. புறத்து - வெளியே. உராய் - உரசிக் கொண்டு.]

மலையானது வயிறு கீறிக் குடல்கள் பிதுங்கிச் சரிவதுபோல வெளிப்படுகின்றனவாம் பாம்புகள். 'வயங்(கு)அழல் உமிழும் வாய' என்ற சப்த சித்திரம் அந்தப் பாம்புகள் உரசி நெளிந்து புரண்டு போவதை எவ்வளவு பிரத்தியட்சமாக்கி விடுகிறது! விஷப் பாம்புகளையும் பொன்னுடன் கூடிய மலைக்குகைகளை யும் உறவு கொள்ளும்படி செய்திருக்கும் சித்திரந் தான் எவ்வளவு அருமையானது !

ஹனுமான் அழுத்துவதால் குகைகள் நெருக் குண்டு சுருங்கச் சுருங்க, பாம்புகள் நெளிந்து வெளிப் படவும், குகைகளில் கவலையில்லாமல் தூங்கிக்கொண் டிருந்த சிங்கங்கள் என்ன செய்கின்றன பாருங்கள் ! மிருக ராஜாக்கள் அல்லவா ? பிடரி ரோமத்தை உதறிக் கொண்டு நிமிர்கின்றனவாம். அதனால், அப்படியே இரத்தம் கக்கி நெரிந்து கிடக்கின்றன. பறவைகளோ, இரைச்சலிட்டுக்கொண்டு சூரியனை மறைத்து ஆகா யப் பந்தல் இடுகின்றன :

புகல்அரும் முழையுள்
துஞ்சும் பொங்(கு)உளைச்
சிங்கம் பொங்கி,

உகல்அரும் குருதி
கக்கி, உள்ளுற
நெரிந்த ஊழின் ;
அகல்இரும் பரவை
நாண, அரற்றுறு
குரல ஆகிப்
பகல்ஒளி கரப்ப,
வானை மறைத்தன
பறவை எல்லாம்.

[புகல்அரு - புகுவதற்கு அருமையாகிய. துஞ்சும் - தூங்குகிற. பொங்கு உளை - மிகுதியான பிடரி ரோமம். உகல்அரும் குருதி - சிந்துதல் இல்லாத இரத்தம். உள் உற - உள்ளேயே. ஊழின் - முறையாக. அகல் - அகன்ற. இரும் பரவை - பெரிய கடல். அரற்று உறு - ஆரவாரிக்கின்ற. குரல ஆகி - குரலை உடையன ஆகி. கரப்ப - மறைய.]

வேறொரு புறம் திரும்பி, இந்தப் பிரம்மாண்டமான குழப்பத்திலே பிரம்மாண்டமான மிருகங்களான யானைகள் படும்பாட்டைப் பார்க்கலாம் :

மொய்உறு செவிகள்
தாவி முது(கு)உற,
முறைகால் தள்ள,
மைஅறு விசும்பி
னூடு நிமிர்ந்தவா
லதிய, மஞ்சின்
மெய்உறத் தழீஇய
மெல்லென் பிடியொடும்,
வெருவ லோடும்,

கைஉற மரங்கள்
சுற்றிப் பிளிறின
களிநல் யானை.

[மொய் உறு - வலிமை பொருந்திய. முறை - தடவை. கால் - காற்று. மைஅறு - களங்கம் அற்ற. விசும்பின் ஊடு - ஆகாயத்தின் இடையே. வாலதிய - வால்களை உடையனவாய். மஞ்சின் - மேகம் போன்ற. மெய் - உடம்பு. உறத் தழீஇய - உறத் தழுவிய, இறுகத் தழுவிய. மெல்லென் - மென்மையான. பிடி - பெண் யானை. வெருவலோடும் - அச்சத்தோடும். பிளிறின - வீரிட்டன. களி - மதவெறி. நல் - சிறந்த.]

அதிர்ச்சியினால் பயந்துபோன யானைகள் முறம் போன்ற தங்கள் செவிகளை அசைக்கும்போது, அச் செவிகள் தாவி முதுகில் அடித்து ஒவ்வோர் அசைவிலும் காற்றைத் தள்ளுகின்றனவாம். அப்படிக் காதை ஆட்டிக்கொண்டும், அச்சத்தால் வாலைத் தூக்கிக்கொண்டும் ஓடி வந்து, திக்பிரமையால் அப்படியே நின்றுவிடுகின்றன. களங்கமற்ற வானத்தினூடு அந்த வால்கள் அப்படி நிமிர்ந்திருக்க, அப்படியே பயந்து ஓடிவந்த பெண் யானைகளும் ஆண் யானைகளுக்கு அருகே வந்து நெருங்கி ஒடுங்கி நிற்கின்றன, உடலோடு உடல் பொருந்தத் தழுவி. இவற்றை 'மென்மையான பெண் யானைகள்' ('மெல்லென் பிடி') என்கிறான் கவிஞன். யானைக் காதலருக்கும் காதலி மெல்லியல்தான்!

அபாய காலத்திலே காதலனுடன் இருப்பது காதலிக்குத் திருப்தி, யானைக் காதலிக்கும்கூட - என்று காட்டும் கவிஞன், இப்போது மலையில் அதிர்ச்சி

அதிகப்பட்டதும், பயத்துடன் அந்த யானைகள் அருகேயுள்ள மரங்களைத் துதிக்கையால் சுற்றி நின்று மதங்கொண்டு வீரிடுவதையும் காட்டுகிறான்.

காதலையும் தாய்மையையும் (தாயின் தன்மையையும்) காட்டிலே வளர்ந்த துஷ்ட மிருகங்களிடத்திலும் பார்க்கிறோம். இப்படிப்பட்ட அபாய காலத்திலும் தாய்ப்புலிகள் தங்கள் சிறிய குட்டிகளை மறந்துவிடவில்லை. அஞ்சி நிலைகெட்டு ஓடும்போதும் அவை குட்டிகளை வாயில் கவ்விக்கொண் டிருக்கின்றன. 'அந்தக் குட்டிகளின் சின்னஞ்சிறு உடம்பிலே ரோமம் அரும்பவில்லை; கண்கள் மலரவில்லை' என்று எவ்வளவு அனுதாபத்துடன் காட்டுகிறான் கவிஞன்!

புன்புற மயிரும்
பூவாக், கட்புலம்
புறத்து நாறு,
வன்பறழ் வாயில்
கவ்வி, வல்லியம்
இரிந்த மாதோ!

[புல் புற மயிர் - சிறிய உடல் மயிர். பூவா - பூவாதன; (இங்கே) அரும்பாதன. கட்புலம் - கண்கள். புறத்து நாறு - வெளியே மலராதன. வல் பறழ் - வலிய குட்டி. வல்லியம் - புலி. இரிந்த - நிலைகெட்டு ஓடின.]

விசுவரூப ஹனுமான் கால்களை ஊன்றி நின்ற பாரத்தைப் பொறுக்காமல், மகேந்திரமலை கீழே அமுங்குவதும் சுழல்வதுமாக இருக்கிறது. மலைச் சுனைகள் அருவியாக மாறுகின்றன. அசைவற்

றுத் தவம் செய்துகொண்டிருந்த முனிவர்களோ, தவம் முடிவதற்கு முன்னமே கூண்டோடு கைலாசம் போகிறவர்களைப்போல், அப்படியே ஆகாய வீதியில் வீசப்படுகிறார்களாம் :

கடல்உறு மத்(து)இ(து)
என்னக் கருவரை
திரியுங் காலை,
மிடல்உறு புலன்கள்
வென்ற மெய்த்தவர்
விசும்பின் உற்றார்,
திடல்உறு கிரியில்
தாம்தம் செய்வினை
முற்றி முற்று(து),
உடல்உறு பாசம்
வீசா(து), உம்பர்செல்
வாரும் ஒத்தார்.

[கடல் உறும் மத்து - கடலில் பொருந்திய மதது ; (இங்கே) மந்தரமலை. திரியுங்காலை - திரியும்பொழுது; சுழலும் பொழுது. மிடல் உறு - வலிமை மிக்க. மெய்த் தவர் - உண்மையான தவத்தை உடையவர்கள். விசும் பின் - ஆகாயத்தில். உற்றார் - சென்றவர்களாய். திடல் உறு - மேடாகப் பொருந்திய. கிரி - மலை ; (இங்கே) மகேந்திர மலை. செய் வினை - செய்யத் தொடங்கிய காரியம். முற்றி முற்றுது - முற்றும் முடி யாமலே. உடல் உறு - உடம்பில் பொருந்திய. உம்பர்- மேல் உலகம்.]

இந்த அபாயமும் சில காதலர்களுக்குப் பாக்கிய மாக முடிகிறது. அதோ, கணவரோடு பிணங்கிக்

கொண்டிருக்கும் தெய்வப் பெண்கள் இப்போது என்ன செய்கிறார்கள் ?

ஊறிய நறவும்
உற்ற குற்றமும்
உணர்வை உண்ணச்,
சீறிய மனத்தர்,
தெய்வ மடந்தையர்
ஊடல் தீர்வுற்(று)
ஆறினர், அஞ்சு
கின்றார், அன்பரைத்
தழுவி, உம்பர்
ஏறினர் ; இட்டு
நீத்த பைங்கிளிக்(கு)
இரங்கு கின்றார்.

[நறவு - மது. மடந்தையர் - பெண்கள். ஊடல் - பிணக்கு ; காதலர் கலகம். தீர்வுற்று - தீர்ந்து. உம்பர் - வானம். இட்டு நீத்த - விட்டுவிட்ட. இரங்கு கின்றார் - வருந்துகிறார்கள்.]

பிணக்கத்திற்குக் காரணம் காதலர் செய்த குற்றமா ? ' அதுமட்டுமில்லை ; மதுபானமும் சேர்ந்து தான் மதியை உண்டுவிட்டது !' என்கிறான் கவிஞன். ' முதலில் மனிதன் கள்ளை உண்ணுகிறான் ; பிறகு கள் கள்ளை உண்ணுகிறது ; கடைசியாகக் கள் மனிதனை உண்டுவிடுகிறது !' என்று சொல்வதுண்டு. இந்த நிலையை அடைந்துவிட்டார்கள் காதலிமார். பாளையில் ஊறிய மது, மூங்கில் குழலில் வார்க்கப் பட்டுப் பூமியில் புதைத்து வைக்கப்படும் ; பூமியின்

குடலில் ஊறிக் காரமேறி, இக்காதலர் வயிற்றிலும் ஊறி உணர்வை உண்டுவிட்டது! இந்த நிலையில் காதலர் செய்த, அல்லது செய்ததாகக் கருதப்பட்ட, அற்பக் குற்றமும் பிரமாதமாகப்படுகிறது. காதலிமார் காதலரைச் சீறுகிறார்கள்.

ஆனால், ஹனுமானால் மலையில் ஏற்பட்ட அபாய நிலை காதலர்களுக்கு அனுகூலமாகி விடுகிறது. திடீரென்று மலை குலுங்கியதும், இவர்கள் மனம் நடுங்கி, ஊடல் தீர்ந்து, சீற்றம் தீர்ந்து, அன்பரைத் தழுவிக் கொண்டு வானவீதியில் ஏறிப்போகிறார்கள்!

போகும்போது ஒரே ஒரு கவலைதான்: 'நாம் வளர்த்த கிளியைக் கூட்டிலே விட்டுவிட்டோமே!' என்பதுதான் அக்கவலை. அந்த அபாயத்திலும் கிளியைக் காப்பாற்றிக் கொண்டுவந்திருக்க வேண்டும் என்ற இரக்க உணர்ச்சி பெண்மை யுணர்வுக்குப் பெரிதும் பொருத்தமானது. பெண்மையைத் தெய்வப் பெண்மை ஆக்கவல்லது இவ்வுணர்வின் மலர்ச்சியும் கனிவுமே என்று கருதலாம்.

லட்சியமே கண்ணாகப் பயங்கரமான அபாய முயற்சியில் தலையிடும் ஹனுமான் எத்தனை விதமான குழப்பங்களுக்குக் காரணமாகிறான்! ஆனால், அந்த லட்சியம் மகோன்னத நன்மை விளைக்கப்போகிறதல்லவா?

தேவர்களும், முனிவர்களும், மற்றும் மூன்று லோகங்களிலுமுள்ள பெரியோர்களும் முறை முறையாக விரைந்து வந்து ஹனுமானை நெருங்கி மொய்த்துக் கொண்டவர்களாய், கொத்துக் கொத்தாகப் பூக்களையும், சந்தனம், வாசனைப்பொடி, ரத்தினங்கள் முதலியவற்றையும் ஹனுமான் மீது வாரிச் சொரிந்து, 'போய்

வாருமையா, ராமதூதரே!' என்று வாழ்த்தி விடை கொடுத்தார்கள். அவர்களுடைய உள்ளக் கிளர்ச்சிகளெல்லாம் மேலும் உத்ஸாக மூட்டின ஹனுமானுக்கு.

அப்போது ஹனுமான் நின்ற நிலையையும் அந்த அபாரமான தன்னம்பிக்கையையும் என்னென்பது? 'இந்தக் கடல், குறுமுனிவர் (அகஸ்தியர்) குடித்தது தானே! இதைத் தாண்டுவதும் ஒரு பெருமையா, திறமையா?' என்று அப்பேருருவம் இகழ்வது போலத் தோன்றியதாம். எனவே ஹனுமானுடனிருந்த ஜாம்பவான் முதலிய நண்பர்கள், 'நீ அப்படி அலட்சியம் செய்துவிடலாகாது. ராம காரியம் பெரிதல்லவா? கருத்துடன் சென்று காரியத்தைப் பார்' என்று எச்சரிக்கை செய்தார்கள். அந்த எச்சரிக்கையையும் பயன்படுத்திக் கொண்டு ஜாக்கிரதையாகக் காரியசித்தி பெற்று வரவேண்டும் என்று சங்கல்பம் செய்து கொண்டான் ஹனுமான்.

வானவீதியிலோ, தேவர்களில் சிலர், 'இந்த உருவத்தையும் தோற்றத்தையும் பார்த்தால் இவன் இலங்கை வரையில்தான் போவான் என்று சொல்வதற்கு இடமில்லையே; அப்பாலும் போய் வேறு எங்கேயாவது தொப்பென்று குதித்துவிடுவானோ, என்னவோ! யார் கண்டார்?' என்றுகூடக் கவலைப்பட்டார்களாம். வேறு சில தேவர்களோ, 'அப்படி ஒன்றும் விலகிப் போய்விட மாட்டான்!' என்று சமாதானம் சொன்னார்களாம்.

இப்படி யெல்லாம் அதிசயமான வாதப் பிரதிவாதங்கள் நடைபெறும் போதே, ஹனுமான் மாலை சூட்டிய மார்பை முன்புறமாகச் சாய்த்து ஒடுக்கி,

தோள்கள் பூரிக்கும்படி கழுத்தைச் சுருக்கி, வாலை உயரத் தூக்கி, கால்களை மடக்கி, இரண்டு கைகளையும் பாய்ச்சலுக்கு உதவியாக முன்னே நீட்டிக்கொண்டு, மேலே எழும்பிவிடுகிறான் படுவேகமாக :

வால்விசைத்(து) எடுத்து,
வன்தாள் மடக்கி,மார்(பு)
ஒடுக்கி, மானத்

தோள்விசைத் துணைகள்
பொங்கக் கழுத்தினைச்
சுருக்கித் தூண்டிக்,

கால்விசைத் தடக்கை
நீட்டிக், கட்புலம்
கதுவா வண்ணம்

மேல்விசைத்(து) எழுந்தான்
உச்சி விரிஞ்சனா(டு)
உரிஞ்ச வீரன்.

[விசைத்து - வேகமாக. வல் தாள் - வலிமையுள்ள கால்கள். மானத் தோள் விசைத் துணைகள் - பெரிய விரைவுள்ள இரு தோள்கள். கால் - காற்று. தடக்கை - பெரிய கை. கட்புலம் - கண்கள். கதுவா வண்ணம் - பற்றமுடியாதவாறு. உச்சி - தலையுச்சி. விரிஞ்சன் நாடு - பிரம்ம லோகம். உரிஞ்ச - உராய; உரச.]

'தலையுச்சி பிரம்ம லோகத்திலே முட்டி விட்டது!' என்று சொல்லும்படி அவ்வளவு உயரமாக எழும்பி, அப்படியே இலங்கையைக் குறியாகக் கொண்டு சாய்வாக இறங்கிவிட வேண்டும் என்பது ஹநுமானுடைய திட்டம்போலும்.

அந்த விசையிலே மலையிலுள்ள மரங்களும், பெருங் கற்களும், யானை முதலியனவும் ஹனுமானைத் தொடர்ந்து சென்றனவாம்,—வேகமாய்ப் போகும் மோட்டார்காரைத் தொடரும் தூசி தும்புகள் போலே. ஆனால், அவை போய்ப் போய் அப்படி அப்படியே தெற்குக் கடலில் விழுந்துவிட்டன. அவை கடலைப் போர்த்து விழுந்த அந்தக் காட்சியும் ஒரு சேதுபந்தனம் போலவே தோன்றியதாம்,— 'ராமன் சேதுபந்தனம் செய்வதற்கு முன்னமே ஒரு சேதுபந்தனமா ?' என்று அதிசயிக்கும்படி :

மாவொடு மரனும்
கல்லும் வல்லியும்
யாவும் மற்றும்,

போவது புரிந்த
வீரன் விசையினால்
புணரி போர்ப்பத்

தூவின, கீழும்
மேலும் தூர்த்தன,
சுடுதீ அன்ன

சேவகன் சீறு
முன்னம் சேதுவும்
இயன்ற மாதோ !

[மா - மிருகம். மரன் - மரம். வல்லி - கொடி. புணரி - கடல். போர்க்க - போர்க்கும்படி. சுடு தீ - சுடுகின்ற தீ. அன்ன - போன்ற. சேவகன் - வீரன். சீறு முன்னம் - சீறுவதற்கு முன்பே.]

ஆக்நேயாஸ்திரத்தால் (அக்கினி - அஸ்திரத்தால்) ராமன் கடலை எரிக்க முயன்று, அஞ்சிச் சரண

மடைந்த சமுத்திர ராஜாவாகிய வருணன் சொல்லிய படி வானரங்களால் மலைகளைக் கொணர்ந்து சேது பந்தனம் செய்யப்போகிறான் என்பது ராமாயணக் கதை. கம்பனோ, ராமனையே ' சுடு தீ 'யைப் போன்ற வீரன் என்கிறான். ராமனுடைய வீர தர்மம் என்ற அந்த ஆவேசத் தீயே கடலை வெதுப்பிவிட்டது என்பது குறிப்பு.

ஹநுமான் பாய்கிற விசையினாலே கடல் கிழி பட்டுப் பாதாளமே வெளிப்படுவது போலிருந்ததாம். ஊழிக் காற்றுப் போலச் செல்லும் அந்த விசையைப் பொறுக்க முடியாமல் சுறா முதலிய கடல் மீன்கள் தத்தளித்தன, இறந்துபட்டன. கடல் அலைகள் வீசி அடித்து ஹநுமானுக்கும் முற்பட்டு இலங்கையில் போய் மோதின. (ஆனால், அரக்கர்கள் புயல் - காற்று முதலான ஏதேதோ இயற்கைக் காரணங்களினாலேயே கடல் அந்தப் பாடு படுகிறது என்று கருதியிருப்பார்கள் !)

சுவேத வானரமாகிய ஹநுமான் போகும் அந்தப் போக்கு வான வீதியிலே ஒரு வெள்ளி மலை பாய்ந்து போவதுபோலக் காண்கிறது. ஆம், கயிலையங்கிரி ஆகாச யாத்திரை செய்வதுபோலவே தோன்றுகிறது. ராவணன் மேல் அதற்கு ஓர் அடமும் உண்டல்லவா ? முன்னொருகால் தன்னைப் பெயர்த்தெடுத்த ராவணனை அந்நாளில் ஓர் அமுக்கு அமுக்கிவிட்ட கயிலை இன்னமும் அமுக்க வேண்டுமென்று வயிரம் கொண்டு போவதுபோல் இருக்கிறதாம் :

' அண்ணல்வாள் அரக்கன்
தன்னை அமுக்குவாம்
இன்னம் ' என்னாக்

**கண்ணுதல் ஒழியச்**
**செல்லும் கயிலைஅங்**
**கிரியும் ஒத்தான்.**

[அண்ணல் வாள் அரக்கன் - பெருமையில் சிறந்த கொடிய ராவணன். அமுக்குவாம் - அமுக்குவோம். கண்ணுதல் - சிவபெருமான்.]

சிவபெருமான் இல்லாமல் தனியே செல்லுகிற தாம் கயிலையங்கிரி. சாமகானம் செய்ததற்காக ராவணனுக்கும் இரங்கி அவனை மன்னித்து வாளும் கொடுத்தார் சிவபெருமான். எனவே, இப்போது அவர் இன்றித் தனியே போனால் நன்றாக அமுக்கி விடலாம் என்பது கருத்து.

ஹனுமானுடைய இந்திரிய ஜயமும், சுத்தமான அறிவும், ஸத்வ குணமும், தர்மக் காதலும் இவனுக்கு அளித்திருக்கும் தேஜஸே வெள்ளியங்கிரி போலத் தோற்றமளிக்கத் தக்கதுதானே !

**மாணியாம் வேடம்**
**தாங்கி, மலர்அயற்(கு)**
**அறிவு மாண்(டு),ஓர்**
**ஆணியாய் உலகுக்(கு)**
**எல்லாம் அறம்பொருள்**
**நிரப்பும் அண்ணல் —**

[மாணி - பிரம்மசாரி. வேடம் - வேஷம் ; (இங்கே) வடிவம். மலர் அயற்கு - தாமரை மீதுள்ள பிரம்ம தேவனைக் காட்டிலும். மாண்டு - மேம்பட்டு. ஆணி - அச்சாணி ; கடையாணி ; ஆதாரம்.]

**என்று வர்ணிக்கப்படுகிறானல்லவா ஹனுமான் ?**

எப்போதும் பிரம்மசாரியாக இருந்து படித்துக் கொண்டே யிருப்பானும். இந்திரிய ஜயத்துடன் படிக்கும் படிப்பல்லவா? பிரம்மா நாவிலே அறிவுத் தெய்வத்தைத் தரித்தவன் என்றால், ஹனுமானுக்கு உடம்பெல்லாம் அறிவு மயம்தான்; ஆகவே பிரம்ம தேவனைக் காட்டிலும் அறிவிலே தன்னை முழுக்க இழந்துவிட்டான் என்று சொல்லலாம். மேலும், நவ வியாகரண பண்டிதனுகிய ஹனுமானுடைய அறிவு சிறந்த பயன் தரத்தக்கதாகவும் இருக்கிறதாம். ஆகவே இவனுடைய அறிவு உலகப் பணியாக மலர்ச்சி பெற்றிருக்கிறது.

இத்தகைய ஹனுமானை 'அறம் பொருள் நிரப்பும் அண்ணல்' என்று குறிப்பிடுவது கூர்ந்து கவனிக்கத் தக்கது. ராவணன் ஆட்சியால் அறம் அர்த்தமற்ற வெறும் சொல்லாகிவிட்டது. அந்தச் சொல்லிலே பொருளை மறுபடியும் கொணர்ந்து சேர்த்தவன் ஹனுமான் என்றுகூடச் சொல்லாமல், பொருளை நிரம்பச் செய்தவன், அறம் என்ற சொல்லை அர்த்த புஷ்டியுள்ள சொல்லாக்கியவன் என்று குறிப்பிடுகிறுன் கவிஞன். ஹனுமானுடைய குண விமர்சனத்திற்கு இக்குறிப்பை ஒரு திறவுகோலாகக் கொள்ளலாம்.

ஹனுமான் செல்லும் வேகம் அதிகரிக்கிறது. கடல் மறிந்து பாய, வானம் குழைய, திசைகள் கிழிய, மகாமேரு மலையும் குலுங்கச் செல்லும் அந்தச் சண்டப் பிரசண்ட வேகம் கருடனுடைய வேகத்தை நினைப்பூட்டுகிறது.

ஹனுமானோடு வாலும் போகிறதாம், அரக்கர்களைத் தண்டிக்கப் போகும் கால பாசம்போல. இந்த

வாலுக்குக் கவிஞன் கொடுக்கும் பெருமை பக்தர்களையும் மருளச் செய்கிறது :

காலினால் அளந்த
வான முகட்டையும்
கடக்கக் கால

வாலினால் அளந்தான்
என்று வானவர்
மருளச் சென்றான்.

[முகடு - உச்சி. கால வால - கால பாசத்தை ஒத்த வால். மருள - மயங்க.]

'மகாவிஷ்ணு திருவடிகளால் அளந்த அண்ட கடாகத்தை ஹனுமான் திருவாலினால் அளந்துவிட்டானே!' என்று மருண்டு போகிறார்கள் தேவர்களும்.

ஆம், நாமும் மருண்டு போகிறோம் ; கடல் தாவும் ஹனுமானையும் அந்த வாலையும், கவிஞன் கற்பனைக் கண்ணால் கண்டபடியே நாமும் கண்டு மருள்கிறோம். அந்த லட்சிய மகிமையோ நமது உள்ளத்திற்கும் உத்ஸாக மூட்டுகிறது.

## 2. மூன்று இடையூறுகள்

எந்த மகத்தான காரியத்திற்கும் மூன்றுவித இடையூறுகள் ஏற்படுவதுண்டு. முதலாவது இடையூறு உறவினர், நண்பர்களால் வருவது. நம்மிடத்தில் கொண்டுள்ள அன்பினாலேயே, லட்சியத்தை நோக்கிச் செல்லவிடாமல் நம்மை அவர்கள் தடுக்கப் பார்க்கிறார்கள். இரண்டாவது இடையூறு ஈச்வர சோதனையாக ஏற்படுவது. இந்த இரண்டு இடையூறுகளையும் தாண்டிவிட்டால், சத்துருவால் வரும் இடையூறு குறுக்கிடுகிறது. இத்தகைய மூன்று இடையூறுகளும் கடல் தாவிச் செல்லும ஹனுமானுக்கும் ஏற்படுகின்றன. இந்த இடையூறுகளையெல்லாம் ஜயிப்பவர்களே செயற்கருஞ் செயல் செய்யும வீரர்களாவர்.

வான வீதியில் சென்றுகொண்டிருக்கும் தேவ விமானங்கள் ஒன்றோடொன்று தாக்கிக் கடலில் விழும்படி அவ்வளவு படுவேகத்துடன் செல்லும் ஹனுமானைக் காணவேண்டுமென்று கடலுக்குள்ளே கிடந்த மைநாகமலை வெளித்தோன்றுகிறது. ஹனுமானது தந்தையாகிய வாயுதேவன் ஒரு காலத்தில் மைநாக மலைக்கு உதவி செய்திருந்தான். எனவே நன்றியறிவுடன் ஹனுமானை உபசரிப்பதற்காக,

மைந்நாகம் என்னும்
மலை,வானுற வந்ததன்றே.

[வானுற - வான வீதியில் பொருந்தும்படி.]

ஹனுமானுக்கு எதிரே முதல் முதல் ஆயிரம் சிகரங்களுடன் திடீரென்று வெளிப்பட்டு, கடல் மட்டமும் வான வீதியும் ஒருசேரப் படர்ந்து நின்றது மைநாகம். பிறகு, ஹனுமான் தான் வந்துகொண்டிருந்த அந்த வேகத்துடனேயே அம்மலையைத் தலைகீழாக விழும்படி தள்ளிவிட்டு மேலே செல்லத் தொடங்கியதும், மைநாகம் மானிட வடிவம் தாங்கி வந்தது: 'எனது நண்பனாகிய வாயுபகவானுடைய மகனல்லவா நீ? அந்தச் சிநேக முறையில் என் சிகரத்தின்மேலே சிறிது போது தங்கி இளைப்பாறிப் போவாயாக!' என்று வேண்டிக்கொண்டது.

அப்போது லட்சிய மயமாகவே யிருக்கும் ஹனுமான் என்ன பதில் சொல்லுகிறான் பாருங்கள் :

'வருந்தேன்,அது என் துணை
வானவன் வைத்த
காதல் ;
அருந்தேன் இனி யாதும்என்
ஆசை நிரப்பி
அல்லால் ;
பெருந்தேன்பிழி சாலும்நின்
அன்பு பிணித்த
போதே,
இருந்தேன் ! நுகர்ந்தேன் !
இதன்மேல்இனி ஈவ(து)
என்னோ ? '

[என் துணை - என் அளவும். வானவன் - மேலானவனாகிய ராமன். வைத்த - (இங்கே) தாழவிட்ட. அருந்தேன் - உண்ணமாட்டேன். தேன்பிழி சாலும் - தேன்

பிழிந்ததை ஒத்த. பிணித்தபோதே - கட்டியபோதே. நுகர்ந்தேன் - விருந்து சாப்பிட்டவன் ஆனேன். ஈவது என்னே - கொடுக்கக்கூடியது என்னதான் இருக்கிறது.]

ஹனுமான் சொல்லுகிறான் : 'எனக்கு வருத்தம் என்பதே தெரியவில்லை. அதற்குக் காரணம் ராமன் என்னளவும் தாழவிட்ட காதலே யாகும். எனவே எனக்கு இளைப்பாற வேண்டிய அவசியமில்லை. களைப்பு இல்லாமல் இருப்பதுபோல், அவனது பேரன்பிற்குப் பாத்திரனாக இருக்கும் எனக்கு ராம காரியமாகிய கைங்கரியத்திலே பசி தாகங்களும் ஏற்படவில்லை. ஆசை நிரப்பினாலொழிய, வயிற்றை நிரப்பப் போவதில்லை. இதுதான் நான் கொண்டிருக்கும் உண்ணாவிரதத்தின் இரகசியம். ஆனால் உன்னுடைய அன்பை என்னென்பது? பிழிந்த தேன்போல் அவ்வளவு இனிமையாக இருக்கிறது. அந்த அன்புதான், எவ்வளவோ விசையாகச் சென்று கொண்டிருக்கும் என்னைக் கட்டி நிறுத்திவிட்டது! இத்தகைய அன்பைக் காட்டிலும் சிறந்த விருந்தும் உண்டோ? நான் தங்கினேன், விருந்துண்டேன் என்றே பாவித்துக் கொள்ள வேண்டும்.'

இப்படி ஹனுமான் அதிஉசிதமாக, வெகு விநயமாகப் பேசுகிறான். வாழ்க்கை அன்பு மயமாக இருக்கும்போது கைங்கரியம் இன்ப மயமாகத்தானே இருக்கும்! இப்படி அன்பு மயமாகவே இருப்பவன்,

> 'அன்பில் சிறந்தாயதோர்
> பூசனை யார்கண்
> உண்டே?'

[அன்பில் - அன்பைக் காட்டிலும். சிறந்து ஆயது - சிறந்து இருப்பதாகிய. ஓர் பூசனை - ஒரு பூஜை. யார் கண் உண்டே - யாரிடத்திலேதான் உண்டோ.]

என்று மைநாக மலையை நோக்கிக் கேட்பது பொருத்தம்தானே!

மைநாகத்தின் உபசாரம் கேவலம் வாயுபசாரம் அன்று; ஹிருதயத்திலிருந்து நேராக வந்த அன்புப் பூஜை. இதுதானே அதிதி உபசாரத்தின் ஸாராம்சம்? எனினும் அன்பு - விருந்தோடு விருந்துச் சாப்பாடும் அவசியம்தான் என்று கருதும் ஹனுமான், 'ராம காரியத்தை முடித்துத் திரும்பி வரும்படியான சக்தி எனக்கிருந்தால், வரும் வழியில் உன்னோடு விருந்து சாப்பிடுவேன்' என்று மைநாக மலைக்குச் சமாதானம் சொல்லிவிட்டு அப்பால் போகிறான்.

உறவினர் நண்பர்களால் ஏற்படும் முதலாவது தடையைச் சாதுரியமாகத் தாண்டிவிடுகிறான். இனி இவனுக்குத் தேவ சோதனையான வேறோர் இடையூறு ஏற்படுகிறது.

ஹனுமானுடைய வேகம் அதிகரிக்கிறது. இவனுடைய பலத்தை இந்நிலையில் தேவர்கள் சோதித்துப் பார்க்க விரும்புகிறார்கள். அவர்கள் ஹனுமானுடைய பேருருவத்தையும், தாவி வரும் பெருவேகத்தையும், மைநாக மலையைத் தலை கீழாய்த் தள்ளிவிட்டு விருந்தையும் மறுத்து வரும் ஒருமை உள்ளத்தையும கண்கூடாகக் கண்டிருந்தும், 'நமது காரியம் பலிக்குமா? பின்னால் ஒரு கொடிய அரக்கி தோன்றி இவனை விழுங்கப் பார்ப்பாளே! அந்தப் பரீட்சையில் இவன் தேறவேண்டுமே!' என்ற அதிசங்கையினால், சுரசை என்பவளை ஏவுகிறார்கள்.

அவள் அரக்கி - வடிவம் கொண்டு, பிளந்த வாயோடு வானுற ஓங்கி நின்று, 'கொழுத்த குரங்கே! எனக்கு இரையாக வருகிறாயோ நீ?' என்று ஒரு கணம் அதட்டுகிறாள். அடுத்த நிமிஷத்தில் அவள் இன்னும் அதிசயமான கொடுமையோடு, 'வள்ளலே! பசி தீயைப்போலிருக்கிறது. நீயே இனி வந்து கோரப் பற்களோடு கூடிய என் வாய்க்குள்ளே புகுந்துவிடு—வேறு வழியில்லை!' என்று பரிகசிக்கிறாள்:

'தீயே எனலாய
பசிப்பிணி தீர்த்தல்
செய்வாய்

ஆயே, விரைவுற்(று)எனை
அண்மினை, வண்மை
யாள!

நீயேஇனி வந்(து)என்
நிணம்கொள் பிணங்(கு)எ-
யிற்றின்

வாயே புகுவாய்,
வழிமற்றிலை வானின்!'
என்றாள்.

[ஆயே - ஆகியே. அண்மினை - நெருங்கிவிட்டாய். நிணம் - மாமிசம. பிணங்கு - வளைந்த. எயிற்றின் - பற்களையுடைய. மற்றிலை - வேறே இல்லை.]

கோரப் பற்களோடு கூடிய வாயைத் திறந்து கொண்டு 'வண்மையாள!' என்று அழைத்து, 'மரியாதையாக வாய்க்குள்ளே போய்விடு!' என்று கொஞ்சும் கொடுமையை என்னென்பது? ஆனால்,

அந்தப் பரிகாசத்தையாவது அதட்டலையாவது ஹனு மான் கொஞ்சமும் லட்சியம் செய்யவில்லை. அவனும் பரிகாசத்திற்குப் பரிகாசம் பரிமாறுகிறான்.

'பெண்ணே! உன் கடும் பசிக்குப் பெரிதும் இரக்கப்படுகிறேன். என் உடம்பை உன் பசிக்கு உதவ நான் பின்வாங்கவில்லை. ஆனால் நீ கொஞ்சம் பொறுமையோடு இருக்கவேண்டும்' என்கிறான்:

'பெண்பால்ஒரு நீபசிப்
பீழை ஒறுக்க
நொந்தாய்;
உண்பாய்என(து) ஆக்கையை;
யான்உத வற்கு
நேர்வல்,
விண்பாலவர் நாயகன்
ஏவல் இழைத்து
மீண்டால்,
நண்பால்!' எனச்சொல்லிய
நல்அறி வாளன்
நக்கான்.

[பீழை - துன்பம். ஒறுக்க - வருத்த. ஆக்கை - உடம்பு. உதவற்கு - உதவுவதற்கு. நேர்வல் - உடன் படுவேன். விண்பாலவர் - மேல் உலகத்தில் உள்ளவர் கள். நாயகன் - தலைவன்; (இங்கே) ராமன். நண்பு - நட்பு. சொல்லிய - சொல்லி. நக்கான் - சிரித்தான்.]

'ராம காரியத்தை முடித்து நான் திரும்பி வந் தால், என் உடம்பை உனக்கு உண்ணக் கொடுப் பேன்' என்று சகஜமாய்ப் பதில் சொல்லும்போதே

ஹனுமானுக்குச் சிரிப்பு வந்துவிடுகிறது. ஏன்? தான் உணவாக விரும்பினாலும் அவளுக்கு ஜீரண சக்தி வேண்டுமல்லவா? அவளுக்கோ பொறுமைகூட இல்லை.

அவசரமாக அவள், 'உன் உடம்பை ருசிபார்த்து மென்று தின்று பசியைப் போக்கிக்கொள்வேன்' என்று அவன்மேல் ஆணையிடுகிறாள். 'அப்படியானால் தின்று பார்!' என்று அலட்சியமாகச் சொல்லிக்கொண்டே, ஹனுமான் என்ன செய்கிறான்? 'காலதாமத மாகிறதே அநாவசியமாக!' என்ற ஆத்திரத்துடன் அவளை வதம் செய்யப் பார்க்கிறானா? அடித்துத் தள்ளிவிட்டுத் தான் அப்பால் போக முயல் கிறானா?

அப்படி ஒன்றும் செய்துவிடவில்லை. தன் உடம்பை மிகச் சிறிதாகச் சுருக்கிக்கொண்டு அவள் வாய்க்குள் நுழைந்து, ஒருமுறை மூச்சு விடுவதற்கு முன் வெளியே வந்துவிடுகிறான். 'மனத்தில் குற்ற மில்லாதவள் இவள்!' ('சுரசைப் பெயர்ச் சிந்தை தூயாள்') என்பதை ஹனுமான் சம்பாஷணையின் பிற்பகுதியில் ஊகித்துக்கொண்டுவிட்டான். ஆகவே அநாவசிய ஹிம்ஸையாவது வதமாவது செய்யாமலே தேவ பரீட்சையில் தேறி அப்பால் போகிறான்.

பின்னால் ஒரு கொடிய அரக்கியால் நேரப்போகும் ஆபத்திலிருந்து ஹனுமான் தப்பிப் பிழைக்கவேண்டுமே என்பதற்காகச் செய்த பரீட்சையும் ஒத்திகையும் தான் சுரசை செய்த காரியம். அந்த அரக்கி எப்படிப் பயமுறுத்தக் கூடுமோ, அப்படியே சுரசையும் ஹனுமானைப் பயமுறுத்திப் பார்த்தாள். இந்த ஒத்திகையின் பயனாக அந்தப் பயங்கர நாடகத்திலே வெற்றிபெற

நடித்து இலங்கைக்கு க்ஷேமமாய்ப் போய்ச் சேர வேண்டும் என்பது சுரசையின் தூய உள்ளக் குறிப்பு.

ஹனுமானுடைய சமயோசித சாமர்த்தியத்தைக் கண்டதும் தேவர்கள் பூச்சொரிந்து ஆசி கூறுகிறார்கள். சுரசையும் உண்மை வடிவத்துடன் ஹனுமானை வாழ்த்திப் போகிறாள். இந்த ஆசிகளை அணிகலமாகப் புனைந்துகொண்டு போகிறானும் ஹனுமான் :

பொன்மே னியனும்
நெடி(து)ஆசி புனைந்து
போனான்.

[பொன் மேனியன் - அருமையான தேஜஸோடு கூடிய உடம்பையுடைய ஹனுமானும். நெடிது ஆசி - மிகுந்த ஆசீர்வாதம்.]

இவ்விதமாக இரண்டாவது இடையூறு கழிந்து போகிறது.

ஹனுமான் மீண்டும் தன் ஆகாச யாத்திரையைத் தொடர்ந்து நடத்துகிறான. அப்போது தேவலோகத்துத் தென்றல் அந்தத் தெய்வ மலர்களின் மணத்தோடு வீசுகிறது. முகத்தில் உள்ள வேர்வைத் துளிகள் சிதைய விசிறி கொண்டு வீசுவதுபோல் வீசுகிறது. வித்தியாதர லோகத்திலிருந்து வீணைகானமும் காதில் வந்து விழுகிறது.

இப்போது ஒரு ரஸமான கேள்வி. ஹனுமான்—படுவேகத்தில் ஒரே நோக்கத்துடன் போய்க்கொண்டிருக்கும் ஹனுமான் — வீணை கானத்தை ரஸித்துக் கேட்கிறானா, இல்லையா ?

யுலிஸிஸ் என்ற கிரேக்க வீரன் ஊரை நோக்கிப் போகும்போது, கடல் - கன்னிகைகளின் கீதத்திலே உள்ளத்தைப் பறிகொடுத்து விடாமலிருப்பதற்காகக் காதை அடைத்துக்கொண்டு போகுமாறு தன்னைச் சேர்ந்தவர்களை ஏவினன் என்று கேட்டிருக்கிறோம். ரஷ்யப் புரட்சித் தலைவனான லெனின், உள்ளத்தி லுள்ள புரட்சிவேகம் குன்றாமலிருப்பதற்காக, சங்கீ தத்தைக் கேட்டதும் காதைப் பொத்திக்கொள்வ துண்டு என்றும் கேள்விப்பட்டிருக்கிறோம்.

ஆனால், ஒருமை உள்ளத்திலும் லட்சிய ஈடுபாட்டி லும் வேறொருவருக்கும் சிறிதும் பின் வாங்காத ஹநுமான் வீணைகானத்திற்குக் கொஞ்சமும் அஞ்ச வில்லை. வித்தியாதர லோகத்திலிருந்து வந்த வீணை கானத்தைப் பருகிக்கொண்டே போகிறான் :

மந்தாரம் உந்து
மகரந்தம் மணந்த
வாடை,
செந்தா மரைவாள்
முகத்தில் செறிவேர்
சிதைப்பத்,
தந்தாம் உலகத்
திடைவிஞ்சையர் பாணி
தள்ளும்
கந்தார வீணைக்களி
செஞ்செவிக் காது
நுங்க—

[மந்தாரம்-(இங்கே) தேவலோகத்து மந்தார மலர் களின் மணம். உந்து - வீசுகிற. மகரந்தம் - மகரந்

தப் பொடி. வாடை - (இங்கே) தென்றல். வாள் முகம் - ஒளியுள்ள முகம். செறி - அதிகமாய்த் தோன்றிய. வேர் - வேர்வை. சிதைப்ப - சிதைக்க. தந்தாம் - தங்கள் தங்களுடைய. விஞ்சையர் - வித்யாதரர். பாணி - தாளம். தள்ளும் - காலம் தள்ளிப் பாடும். கந்தாரம் - காந்தாரம் என்னும் இசைப் பாட்டு. களி - மது. செஞ்செவிக் காது - செம்மையாகப் பண்பட்ட காது. நுங்க - ஆவலோடு பருக.]

ஹனுமான் வான வீதியில் பாய்ந்து போய்க்கொண்டிருக்கிறான். தென்றல் விசிறக் களைப்பின்றி, வீணை கானம் என்ற மதுவைப் பருகிக்கொண்டே, மேலும் உத்ஸாகமாய்ச் செல்கிறான் லட்சியத்தை நோக்கி. வாழ்க்கையின் லட்சியத்தை அடைவதற்குச் சிறந்த சாதனம் அல்லவா கலைகள் ?

இப்படிப் போகும்போது மூன்றாவது இடையூறு ஏற்படுகிறது. பொங்கிக் கொண்டிருக்கும் தென் சமுத்திரம் வேறொரு சமுத்திரத்தைப் பிரசவித்து விட்டது போலத் தோன்றுகிறது. ஆம், அதிபயங்கரமான கருநிறம் வாய்ந்த புதிய சமுத்திரம் ஒன்று பழைய சமுத்திரத்தின் மேலே தோன்றுகிறது; தோன்றி, ' இங்கே யார் என்னைத் தாண்டிப் போகிறவர் ?' என்று கோஷிக்கிறது :

வெங்கார் நிறப்புணரி
வேறேயும் ஒன்று,
பொங்கார் கலிப்புனல்
தரப்பொலிவ தேபோல்

'இங்(கு)ஆர் கடத்திர்எனே ?'
என்று, எழுந்தாள்,
அங்கார தாரைபிறி(து)
ஆலாலம் அன்னாள்.

[வெங்கார் நிறப் புணரி - (பார்க்க) அச்சம் தரும் கருநிறமான சமுத்திரம். பொங்கு ஆர்கலிப் புனல் - பொங்குகிற சமுத்திர நீர். தர - பெற்றுவிட. இங்கு ஆர் கடத்திர் - இங்கு யார் கடந்துபோகிறீர். என்று - என்று கோஷித்துக்கொண்டு. பிறிது - வேறோர். ஆலாலம் - ஆலகால விஷம்.]

'இது புதியதொரு கருங்கடலா? அல்லது வேறோர் ஆலகால விஷந்தானோ?' என்று ஹனுமானும் பிரமித்துப் போகிறான். ஆனால், விரைவிலேயே பிரமிப்பைச் சமாளித்துக்கொண்டு, 'ஓஹோ! கடலு மில்லை, விஷமுமில்லை; விஷ கண்டகியான ராட்சஸி தான்!' என்று தெரிந்து கொள்கிறான்.

அன்(று)ஆய் திறத்தவன்,
'அறத்தை அருளோடும்
தின்றாள் ஒருத்திஇவள்!'
என்பது தெரிந்தான்.

[அன்று - அப்போது. ஆய்திறத்தவன் - ஆராயும் திறமுள்ள ஹனுமான்.]

'தருமத்தை வேரோடு பலகாரம் செய்தவள் இந்தப் பேர்வழி!' என்று தெரிந்து கொண்டதும், இவன் அவளைப் பார்த்து,

'வாயால் அளந்துநெடு
வான்வழி அடைத்தாய்!

நீயாரை ? என்னை இவண்
நின்றநிலை ?' என்றான்.

[யாரை - யார். இவண் - இங்கு. என்னை - என்ன ?]

அந்த அரக்கி அதட்டிக்கொண்டே எழுந்து வாயைத் திறந்து வழியை அடைத்துக்கொண்டு நிற்கிறாள். அந்த நிலையையும் அதட்டலையும் ஹனுமான் பரிகசித்துக் கேள்விகளைத் தொடுத்ததும், 'ஐயோ ! என்னைப் பெண்ணாக அல்லவா மதித்து விட்டான் ?' என்று அவள் வெட்கப்படுகிறாள், வருந்துகிறாள். அந்த அவமதிப்பைக் கண்டித்து ஆர்ப்பாட்டம் செய்கிறாள்.

உடனே கோரப் பற்களோடு கூடிய வாயைப் பெரிதாகத் திறக்கிறாள் ; திறந்து இவனை விழுங்க எத்தனிக்கிறாள். இவனோ அவளுக்குமேல் ஆத்திரமாக அந்தப் பற்களினிடையே நுழைந்துவிடுகிறான்.

இந்தப் பயங்கரமான காட்சி எவ்வளவு ஆச்சரியமாகச் சித்திரிக்கப்படுகிறது, பாருங்கள் !

திறந்தாள் எயிற்றை அவள்,
அண்ணல் இடை சென்றான் ;
அறம்தான் அரற்றிய(து) !
அயர்த்(து) அமரர் எய்த்தார்,
இறந்தான் எனக்கொ(டு), ஓர்
இமைப்பதனின் முன்னம்
பிறந்தான் எனப்பெரிய
கோளரி பெயர்ந்தான் !

[எயிற்றை-கோரப் பற்களை. அண்ணல் - பெருமையில் சிறந்த ஹனுமான். அரற்றியது - புலம்பியது ;

அலறியது. அயர்த்து - வருந்தி. அமரர் - தேவர். எய்த்தார் - இளைத்தார். கொடு - கொண்டு. ஓர் இமைப்பதனின் முன்னம் - ஒருமுறை கண் இமைப்பதற்கு முன். கோளரி - (இங்கே) சிங்கம் போன்ற ஹனுமான். பெயர்ந்தான் - வெளிப்பட்டான்.]

அங்காரதாரை வாயைத் திறந்தாள் என்றுகூடச் சொல்லாமல், கோரப் பற்களைத் திறந்து காட்டினாள் என்று கூறுவது அந்தக் காட்சியை எவ்வளவோ பயங்கரமாகக் காட்டுகிறது! அந்தப் பல்வரிசைகளுக்கு இடையே ஹனுமான் நுழைந்ததும், 'ஐயோ, தொலைந்தான்! தொலைந்தே போனான்!' என்று தர்மமே அலறிவிட்டதாம்! தேவர்களோ, வாய்விட்டுக் கதறவும் சக்தியில்லாமல் புழுங்கிக்கொண்டிருந்தார்கள், பொருமிக்கொண்டிருந்தார்கள். ஆனால், 'செத்தான் ஹனுமான்!' என்று சித்தாந்தம் செய்ததுதான் தாமதம், 'அதோ இறந்தவன் மீண்டும் பிறந்துவிட்டான்!' என்று மறுபடியும் பிரமிக்கும்படி வெளிப்படுகிறான் ஹனுமான்.

இப்போது அரக்கி கதற அவள் வயிற்றைப் பீறிக்கொண்டு வெளிப்படுகிறான் :

கள்வாய் அரக்கிகத
றக்குடல் கணத்தின்
கொள்வார் தடக்கையின்
விசும்பின்மிசை கொண்டான் ;
முள்வாய் பொருப்பின்முழை
எய்திமிக நொய்தின்
உள்வாழ் அரக்கொ(டு)எழு
திண்கலுழன் ஒத்தான்.

[கணத்தின் - ஒரு க்ஷணத்தில். கொள் - பறித்துக் கொண்ட. வார் தடக்கையின் - நீண்ட பெரிய கைக ளோடு. விசும்பின் மிசை - ஆகாயத்தின்மீது. கொண் டான் - தோன்றினன். முள்வாய் - முட் செடிகள் பொருந்தியுள்ள. பொருப்பின் முழை - மலையின் குகை. எய்தி - புகுந்து. நொய்தின் - விரைவாக; லாகவமாக. உள் வாழ் - உள்ளே வாழும். அரக்கொடு - பாம்புகளை எடுத்துக்கொண்டு. திண் - வலிய. கலுழன் - கருடன்.]

அந்தக் கோரப் பற்களுக்கிடையே புகுந்து, குகை போன்ற அந்த வயிற்றுக்குள் இருந்த குடல்களைப் பறித்துக்கொண்டு ஹனுமான் மேலே தோன்றுவது எப்படி இருக்கிறது? ஒரு மலைக் குகை; அதன் வாச லுக்குக் காவலாக அமைந்திருக்கின்றன முட் செடி கள். அத்தகைய குகைக்குள்ளே நிர்ப்பயமாக வாழ் கின்றன கொழுத்த கொடிய பாம்புகள். அப்படி யிருக்க, ஒரு பொல்லாத கருடன், சிறகை முள் கிழித்துவிடாமல் விரைவாகவும் சாமர்த்தியமாகவும் குகைக்குள்ளே புகுந்து அந்தக் கொழுத்த பாம்பு களைத் தூக்கிக்கொண்டு வெளிப்பட்டு மேலே பறப் பதுபோல் இருக்கிறது ஹனுமான் மேலெழுந்த தோற்றம்.

நண்பரால் வந்த இடையூறு, தேவ சோதனையால் வந்த இடையூறு என்ற இரண்டையும் தாண்டிய ஹனுமான், சத்துருவால் விளைந்த இந்த மூன்ருவது இடையூற்றுக்கும் அஞ்சாமல் வெற்றி சூடுகிருன்.

இன்னும் ஆகாச யாத்திரை பூர்த்தியாகிவிட்ட தென்று ஹனுமானுக்குத் தோன்றவில்லை. கீழே, கடலும் முடிவற்றதோ என்று தோன்றுகிறது. மேலே

ஆகாய வீதியும் வரம்பின்றி விரிந்துகொண்டே போகிறது. இடையூறுகளும் அலைமேல் அலையாகப் பொங்கிக்கொண் டிருக்கின்றன. ஒன்று, இரண்டு, மூன்று - இன்னும் எத்தனையோ? இந்த இடையூற் றுக் கடலைத் தாண்டிக் கரையேறுவது எப்படி?

இவ்விதமாக நினைக்கும் ஹனுமான், ராம நாமமே எல்லாத் துன்பங்களுக்கும் ஒரு சஞ்சீவி என்று மதிக்கிறான்:

'ஊறுகடி(து) ஊறுவன,
ஊறில்அறம் உன்னுத்
தேறலில் அரக்கர்புரி
தீமைஅவை தீர,
ஏறும்வகை எங்குள?
இராமஎன எல்லாம்
மாறும்,அதில் மாறுபிறி(து)
இல்'என மதித்தான்.

[ஊறு - இடையூறுகள். கடிது - விரைவில். ஊறில்-கெடுதலில்லாத. உன்னு - நினையாத. தேறலில் - தெளிந்த அறிவில்லாத. புரி-செய்கின்ற. ஏறும் வகை - கரையேறும் விதம். உள - உள்ளன. அதில் மாறு பிறிதுஇல் - அதைக் காட்டிலும் வேறான உபாயம் ஒன்றுமில்லை.]

ராம நாமத்தைச் சொன்னதுதான் தாமதம், உடனே இலங்கை தோன்றிவிடுகிறது. பசுமையான சோலைகளையுடைய ஒரு பவள மலைமீது பாய்ந்து விடுகிறான் ஹனுமான்.

## 3. பொருள், அதிகாரம், போகம்

சூரியன் அஸ்தமிக்கும் சமயம். ஹனுமான் பாய்ந்த மலைமீதுள்ள சோலை, அந்தச் செங்கதிர்ச் செல்வத்திலே, பசுஞ்சுடர்ச் சோலையாகக் காண்கிறது. மாளிகைகளும் மேல்மாடங்களும், இரத்தின மயமான சுவர்களும் மதில்களும், தேர்ச்சாலை குதிரைச் சாலை யானைச்சாலைகளும், இடையிடையே பூங்காவனங்களும், கோபுரங்களும் விமான சிகரங்களும், நடன மண்டபங்களும் பிறவும், அந்தப் பொன்னிறக் கதிர்களில் மூழ்கித் தகதகவென்று ஒரே அழகுக் கடலாக ஜொலிக்கின்றன. ஹா, என்ன காட்சி!

சுவர்க்க லோகமாகிய பெண்மணி, இங்கே ஒரு பெரிய நிலைக்கண்ணாடி வைத்துத் தன் பொன் மேனியை ஆசைதீரப் பார்த்துக்கொண்டிருக்கிறாளோ? ஹனுமான்,

> விண்ணிடை உலகம்
> என்னும் மெல்லியல்,
> மேனி நோக்கக்
>
> கண்ணடி வைத்த(து)
> அன்ன, இலங்கையைத்
> தெரியக் கண்டான்.

[விண்ணிடை உலகம் என்னும் மெல்லியல் - விண்ணுலகமாகிய பெண். கண்ணடி - கண்ணாடி. வைத்தது அன்ன - வைத்ததுபோல் இருக்கிற.]

உடனேயே ஹனுமான், ‘இல்லை, இல்லை; சுவர்க்கம் இந்நகரத்தை ஒத்திருக்கும் என்று நினைப்பதும் அறிவீனம்’ என்கிறான், தனக்குள் தானே:

‘பொன்னகர் இதனை
ஒக்கும் என்பது
புல்லி(து) அம்மா!’

[புல்லிது - அறிவீனமாகும். அம்மா - ஆச்சரியம்.]

‘உண்மையில், அது போகபூமி யன்று; இது தான் போகஸ்தானமாகிய சுவர்க்கமாய் இருக்க வேண்டும். ஆஹா! இந்தக் காட்சி யின்பத்திற்கு எல்லையே இல்லையா?’ என்று பிரமிக்கிறான்.

பவளமலையில் நின்றுகொண்டிருக்கும் ஹனுமான், மோகனமான அந்த மாலை வேளையில், இலங்காபுரியின் சிறப்புச் செல்வமாகிய மாடமாளிகைகளை நோக்கி அப்படியே திகைத்துப் போகிறான். சில மாளிகைகளைப் பார்த்து, ‘பொன்னைக் கொண்டு இழைத்தவை இவை!’ என்று தனக்குள் தானே சொல்லிக் கொள்கிறான். வேறு சில மாளிகைகளை நோக்கி, ‘அவை இரத்தினங்களைக் கொண்டு பொதிந்திருக்கின்றன!’ என்று தீர்மானிக்கிறான். “அதோ, கண்ணைப் பறிக்கும் அழகுவாய்ந்த அம்மாளிகைகள் பொன்னாலும் மணியாலும் அமைந்தனவல்ல; மின்னலைக் கொண்டே அமைக்கப்பட்டிருக்க வேண்டும்!’ என்று அதிசயிக்கிறான். வேறு சில மாளிகைகளைக் கண் குளிர நோக்கி, ‘இவை இந்த மாலை வெயிலின் மத்தாப்பு வெளிச்சத்தைக் கொண்டே செய்யப்பட்டிருக்க வேண்டும்!’ என்று மயங்குகிறான். இன்னும்

சில வீடுகளும் உபரிகைகளும் எதைக்கொண்டு எவ்விதமாகச் செய்யப்பட்டிருக்க வேண்டும் என்றே தெரியவில்லையாம் :

‘ பொன்கொண்(டு) இழைத்த,
மணியைக்கொடு பொதிந்த ;
மின்கொண்(டு) அமைத்த !
வெயிலைக்கொடு சமைத்த !
என்கொண்(டு) இயற்றிய
எனத்தெரி கிலாத !
வன்கொண்டல் விட்டுமதி
முட்டுவன மாடம். ’

[மணி - இரத்தினம். கொடு - கொண்டு. மின் - மின்னல். வெயில் - மாலை வெயில். தெரிகிலாத - தெரியமுடியாமல் இருக்கின்றன. வன் கொண்டல் - வலிய மேகங்கள் ; (இங்கே) மேக மண்டலம். மதி - சந்திரன் ; சந்திர மண்டலம். மாடம் - மாட மாளிகைகள்.]

இந்தவிதமாகப் பிரமித்துக்கொண் டிருக்கும் ஹனுமான், அந்த மாளிகைகளில், அழகையே தொட்டுத் தொட்டு இழைத்துவைத்தவை போன்ற வேலைப்பாடுகளையும், செல்வச் செருக்கையும், ஆடம்பரத் திமிரையும், தெய்வப் பெண்கள் குப்பை கூட்டி நீர் தெளித்துப் பணிவிடை செய்துகொண் டிருப்பதையும், அரக்கிமார் மேல் மாடங்களில் உல்லாசமாக உலாவிக் கொண்டிருப்பதையும் பார்க்கிறான்.

அந்த் ராட்சஸ மாதர்களிலும் எத்தனை அழகிகள் ! அவர்களில் சிலர், தாம் வளர்க்கும் கிளிப் பிள்ளைகளுக்கு எவ்வளவு அன்போடு கொஞ்சும்

குரலில் பாடம் கற்பிக்கிறார்கள்! என்ன பாடம்! ஆ, எப்படிப்பட்ட குரு!

குழலும் வீணையும்
யாழும்என்(று) இனையன
குழைய,

மழலை மென்மொழி
கிளிக்(கு)இருந்(து) அளிக்கின்ற
மகளிர்

[குழல் - புல்லாங்குழல். இனையன - இப்படிப் பட்ட இன்னிசைக் கருவிகள். குழைய - தோற்கும்படி மழலை மென் மொழி - மிகவும் இனிமையான தங்கள் மழலைச் சொற்களை. அளிக்கின்ற - அன்போடு கற்றுக் கொடுக்கிற. மகளிர் - பெண்கள்.]

என்று மகா ரஸிகனான ஹனுமானே அவர்களுடைய சாரீர சம்பத்தையும், ரூப சம்பத்தையும்கூடப் பாராட்டுகிறான். அவர்களுடைய சொல்லுக்கே புல்லாங்குழல் வீணை முதலான இன்னிசைக் கருவிகள் தோற்றுப் போகும் என்றால், அவர்கள் பாடும் சங்கீதம் எப்படி இருக்கவேண்டும்!

இந் நகரத்தில் இசை பாடுகிறவர்கள் பலர் என்றால், அவர்களைக் காட்டிலும் பலர் பரத நாட்டியம் செய்கிறவர்கள். ராட்சஸ மாதர்களில் சிலர் அதிவிசித்திரமான நாட்டியத் திறம் வாய்ந்தவர்கள் என்பது ஹனுமானது அபிப்பிராயம். நடனத் திற்கென்றே பிறந்தவர்களைப்போல், பின்னி அலங் கரித்த கூந்தலோடு அந்த ராட்சஸ குல சுந்தரிகள் ஆடும்போது, அங்கே உள்ள மற்றப் பெண்களெல்

லாம் வைத்த கண் வாங்காமலே வியந்துகொண்டிருக்கிறார்களாம்.

ஆடல் பாடல்களிலே சில ராட்சஸ மாதர்கள் நிகரற்று விளங்கிய போதிலும், அரக்கர்கள் சிறையிலிருந்து விடுதலை பெற்ற தேவர்களையும் கூத்தாடச் செய்து வேடிக்கை பார்ப்பதுண்டு. எஜமானர்கள் இஷ்டப்படியே கூத்தாட வேண்டியது அடிமைகளின் கடமைதானே? ராவண ராஜ்யத்திலே தயாராகும் அகராதியில் 'தேவர்' என்ற சொல்லுக்கு 'அடிமை' என்றே பொருள் :

தேவர் என்பவர்
யாவரும், திருநகர்க்(கு)
இறைவற்(கு)
ஏவல் செய்பவர் !

[திருநகர்க்கு இறைவன் - இலங்கைக்குத் தலைவனை இராவணன். இறைவற்கு - இறைவனுக்கு.]

ராவணனுக்கு அடிமைகள் என்றால், ராவணாதி ராட்சஸர்களுக் கெல்லாம் அடிமைகள் என்றுதான் சொல்லவேண்டும். தங்கள் தேவிமாரோடு அடிமைத் தொழில் செய்து வாழும் தேவர்களை ஹனுமான், 'வாழ்கிறார்கள்' என்று எண்ணவே யில்லை. அடிமைகளுக்கு வாழ்வு ஏது?

உரம்அ டங்கிவந்(து)
உழையராய் உழல்பவர்—

[உரம் - வலிமை. உழையர் - எப்போதும் அருகில் இருந்து எஜமானர்க்குக் குற்றேவல் செய்துவரும் அடிமைகள். உழல்பவர் - ஓடியாடித் திரிபவர்.]

அதாவது, 'தேவர்கள் வாழ்கின்றாரில்லை ; உழல்கின்றார், ஓடியாடித் திரியும் யந்திரங்களாக உழைக்கின்றார் !' என்பது ஹனுமான் சித்தாந்தம்.

அடிமைத் தேவர்களின் பரிதாப நிலையோடு எவ்வளவு மாறுபட்டிருக்கிறது அரக்கர்களின் அதிகார ஆடம்பர வைபவம் !

கழல்உலாம் காலும்,
காலவேல்உலாம்
கையும், காந்தும்
அழல்உலாம் கண்ணும்
இல்லா ஆடவர்
இல்லை ......

[கழல் - வீரக் கழல். உலாம் - உலாவும். காலவேல் - எமன் போன்ற வேல். காந்தும் அழல் - எரியும் அனல்.]

வீரக் கழல் உலாவுகின்றதாம் கால்களில். (வீரக் கழல் அதிர இறுமாப்போடு அங்கும் இங்கும் பரபரப்பாக உலாவிக்கொண்டிருக்கிறார்கள் ராட்சஸ வீரர்கள்.) பயங்கரமான வேல்கள் கைகளில் உலாவுகின்றனவாம். (அவர்களால் அந்த வேல்களைக் கைகளில் சும்மா வைத்திருக்க முடியவில்லை; அவற்றை யார் மீதேனும் பாய்ச்சிவிடலாமா என்று கைகள் துடித்துக் கொண்டிருக்கின்றன !) கண்களிலோ நெருப்பு உலாவுகிறதாம். (போர்ச்சினம், போர் பெறாத சினம் எல்லாம் பற்றி எரிகின்றன !)

இத்தகைய ராட்சஸ மகாராஜ்யம் ஒப்புயர்வற்ற ராணுவ ராஜ்யமா யிருக்கிறது. ஆகாயம் அஞ்சும் படி வீசும் பிரசண்ட மாருதமும், இலங்கைக்கு வரும்

போது, ராவண பயத்தால் அடங்கி ஒடுங்கித் தென்ற லாகித் தவழ்ந்துதான் வரவேண்டுமாம் :

> ஆகாயம் அஞ்ச,அகல்
> மேருவை அனுக்கும்
> மாகால், வழங்குசிறு
> தென்றல்வர நின்ற !

[அகல் மேரு - அகன்ற மேரு மலையையும். அனுக் கும் - வருத்துகிற. மாகால் - பெருங் காற்று ; பிரசண்ட மாருதம். வழங்கு சிறு தென்றல் - இனிதாக வழங்கும் இளந் தென்றல். தென்றல் வர - தென்றலாகி வரும்படி. நின்ற - (மாளிகைகள்) நின்றன.]

மதிலின் உயர்ச்சியையும் வலிமையையும் கொண் டாடும் ஹனுமான், 'தர்மமும் உள்ளே புகமுடியாத படி மதில் கட்டிவிட்டானே !' என்று நினைக்கிறான் :

> 'அறம்பு கா( து ),இந்த
> அணிமதில் - கிடக்கைநின்( று),
> அகத்தின் !'

[அறம் புகாது - தர்மமும் பிரவேசிக்க முடியாது. அணி மதில் - அழகிய மதில். கிடக்கை நின்று - எல்லை யைக் கடந்து. அகத்தின் - இந்த நகரத்திற்குள்ளே.]

'இப்படிப்பட்ட ராஜதானியில் உலகம் மூன் றிலுமுள்ள சிறந்த பொருள்களெல்லாம் காணப் படுகின்றன' என்று கருதுகிறான் ஹனுமான். தேர் குதிரைகளில் சூரிய பகவானுடைய தேரும் குதிரை களுமே இலங்கையில் கொண்டுவந்து சேர்க்கப்பட வில்லையாம். யானைகளில் 'பிள்ளையார் - யானை'

(யானை முகக் கடவுள்) தவிர வேறு சிறந்த யானை களை எல்லாம் அரக்கர்கள் பிடித்துக் கொண்டுவந்து விட்டார்களாம். இப்படி ஹனுமான் கருதுகின்ற இலங்கையில் இல்லாத பொருள்தான் என்ன? அந்த ஒரே பொருள் இரக்கம்தான்! — என்று தண்ட காரண்ய முனிவர்கள் ராமனிடம் ஏற்கெனவே சொல்லியிருந்தார்கள்.

இரக்க மில்லாத அரக்கர்கள் போர் வெறி கொண்டு தேவர்கள் முதலான எதிரிகளை யெல்லாம் அடிமைகளாக்கிக் கொண்டு இப்பொழுது போகத் திலே அமிழ்ந்து கிடக்கிறார்கள் :

'பளிக்கு மாளிகைத்
தலம்தொறும் இடம்தொறும்
பசுந்தேன்

துளிக்கும் கற்பகத்
தண்ணறுஞ் சோலைகள்
தோறும்,

அளிக்கும் தேறல்உண்(டு)
ஆடுநர் பாடுநர்
ஆகிக்

களிக்கின் றா(ர்)அலால்,
கவல்கின்றார் ஒருவரைக்
காணேன்!'

[பளிக்கு மாளிகை - பளிங்கு மாளிகை. தலம் - ஸ்தலம்; (இங்கே) கட்டடம். இடம் - திறந்த இடங் கள். பசுந் தேன் - புதிய தேன். கற்பகத் தண்ணறுஞ் சோலைகள் - கல்பக விருட்சங்களையுடைய குளிர்ச்சி யான, வாசனையுள்ள, சோலைகள். அளிக்கும் - (வேலைக்

காரர்) கொண்டுவந்து கொடுக்கும். தேறல் - மது. ஆடுநர் - ஆடுகிறவர்கள். பாடுநர் - பாடுகிறவர்கள். கவல்கின்றார் - கவலைப்படுகின்றவர்.]

என்று ஹனுமான் தனக்குள் தானே சொல்லிக் கொள்கிறான்.

பளிங்குக் கற்களால் அமைந்த மாளிகைகளில் எல்லாம் மதுபானம் செய்து ஆடிப் பாடுகிறவர்களின் கூட்டம்தான். கட்டடத்திற்கு உள்ளேயும் இப்படி, திறந்த இடங்களிலும் இப்படியே. தோட்ட விருந்துகளும் மதுபான விருந்துகளே. இப்படியெல்லாம் குடித்துக் கூத்தாடும் அரக்கர்களைப் பார்த்ததும், 'இவர்களுக்கு வாழ்க்கையே ஒரு களியாட்டம்தான்!' என்று கண்டுகொள்கிறான் ஹனுமான்.

அயோத்தி வாசிகளுக்கு வாழ்க்கை ஒரு கலைக் கூத்து; இலங்கை அரக்கர்களுக்கோ களிக் கூத்து! வாழ்க்கையிலே உயர்ந்த நோக்கம் ஒன்றும் இவர்களுக்கு இல்லை. ஆடம்பர வாழ்வும் அதிகாரத் திமிரும் உடையவராய்ப் பலவேறு போக வகைகளையும் நுகர்ந்து நுகர்ந்து மதங்கொண்டு மதிமயங்கி இருப்பவர்களுக்கு உயர்தர வாழ்க்கை ஏது?

சீதையைத் தேடி இலங்கைக்கு வந்த ஹனுமான்—

> 'களிக்கின் றா(ர்)அலால்,
> கவல்கின்றார் ஒருவரைக்
> காணேன்!'

என்று வருந்தும் ஹனுமான் — கவலை தோய்ந்த அந்த ஒரு முகத்தை அல்லவா போகத்தின் நிலையமாகிய இந்த நகரத்திலே தேடிக்கொண்டிருக்கிறான்?

சூரியன் தன் கிரணங்களைச் சுருக்கிக்கொண்டு மேல் கடலில் மறைகிறுன். தங்கம் உருகிப் பாய்வது போலிருக்கிறது இலங்கையைச் சூழ்ந்திருக்கும் கடலிலே ஹனுமானும் தன் பெரு வடிவத்தைச் சுருக்கிக்கொண்டு, மங்கிவரும் கதிரொளியின் அந்த வர்ண விசித்திரங்களிலே மூழ்கிக் களிக்கும் ராட்சஸ ராஜதானியை உற்று நோக்கிய வண்ணமாய் இருக்கிறுன் :

தன்தகை அனைய
மேனி சுருக்கி,அச்
சரளச் சாரல் -

குன்றிடை இருந்தான் :
வெய்யோன் குரைகடல்
குளிப்ப தாஞன்.

[தன்தகை அனைய மேனி - தன் தகுதிக்கு ஏற்ற அந்த விச்வரூபம. சரளச் சாரல் - அழகிய மலைச்சாரல். குன்றிடை - குன்றிலே. குரை கடல் - ஒலிக்கின்ற கடல்.]

'கொடிய ராட்சஸர்கள், நான் இங்கே இருப்பதைக் கண்டுபிடிக்கக் கூடும் ; கண்டுபிடித்து என்னை எதிர்த்தாலும் எதிர்ப்பார்கள்' என்று நினைத்து ஹனுமான் தன் குணப பெருமைக்கு இசைந்த பெரு வடிவத்தைச் சுருக்கிக் கொள்ளும் போதே, சூரிய அஸ்தமனம் ஆகிவிட்டது. அந்தி மாலை காட்டும் இந்திரஜாலங்களும் மறைந்து, இலங்கை மாநகரை இருள் சூழ்ந்து கொள்கிறது.

# 4. இருளிலும் நிலவிலும்

ஒருவன் தன் மனம் போனபடியே போய்ப் பெருஞ் செல்வம் சேர்க்கிறான். ஆ, எத்தனை ஏழைகளை அழித்துச் செல்வம் பெருகுகிறது! எத்தனை ஏழை மக்களின் இரத்தம் இரத்தினமாகிறது, பொன்னாகிறது! 'இது தகுமா? இது தருமம்தானா?' என்ற ஆராய்ச்சி அந்த மனத்தில் பிறக்கவில்லை. நெருப்பில் நெய் பொழிவதுபோல், ஆசைத் தீயிலே போகத்தைப் பெய்துவருவோன் தானும் அறியான்; தகுந்த அறிஞர் சொல்லும் கேளான். 'இவ்வழி தீராத் துன்பத்திலும் மரணத்திலும் முடியும்' என்பதை அவன் நினைத்துப் பார்ப்பதே யில்லை — புதரிலே கண்ணைப் புதைத்துக்கொண்டு தனக்கு வரும் ஆபத்தைப் பார்க்க மறுக்கும் தீக்கோழி போலே. இத்தகைய நெஞ்சில் உண்மையொளி வீசுவது உண்டோ? 'இது என்ன பிரசங்கம்? முதலாளித்துவத்தைப் பழிக்கும் ஏதோ பொது உடைமை வேதாந்தம் போலிருக்கிறதே!' என்கிறீர்களா?

அத்தகைய ஒருவனது தீவினைபோல் இருள் அடர்ந்து திரண்டு இலங்கையைப் போர்த்துக் கொள்கிறது என்கிறான் கவிஞன்:

ஏய்வினை இறுதியின்
　　செல்வம் எய்தினான்,
ஆய்வினை மனத்திலான்,
　　அறிஞர் சொற்கொளான்,

வீவினை நினைக்கிலான்,
ஒருவன் மெய்யிலான்,
தீவினை எனஇருள்
செறிந்த(து) எங்குமே.

[ஏய் வினை-(கொடிய மனத்துக்கு) இசைந்த கொடுஞ் செயல்கள்; வஞ்சகம், கள்ளம், பலாத்காரம் முதலியன. இறுதியின் - (பிறருக்கு) இறுதி அல்லது அழிவை விளைப் பதால். ஆய் வினை - ஆராயும் தொழில். வீவினை - கேட்டை அல்லது மரணத்தை. செறிந்தது - அடர்ந் தது.]

யாரை நினைத்துப் பேசுகிறான் கமபன், தெரி கிறதா? தற்கால முதலாளி ஒருவனையும் குறித்துப் பேசவில்லை என்பது திண்ணம். விசேஷமாக, ராவணனையே நினைத்துக் கொண்டிருக்கவேண்டும். அவன்தான் ராமாயண காலத்திலே மூன்று லோகத் திற்கும் ஒரு முதலாளி!

அவன் செய்த தீவினையின் சிகரம் சீதையைச் சிறை வைத்தது.

வண்மைநீங் காநெடு
மரபின் வந்தஅப்
பெண்மைநீங் காதகற்
புடைய பேதையைத்
திண்மைநீங் காதவன்
சிறைவைத் தான்எனும்
வெண்மைநீங் கியபுகழ்
விரிந்த(து) என்னவே—

இருள் விரிந்துவிடுகிறதாம்.

[நெடு மரபு - சிறந்த குலம். பேதை - சீதைப் பெண். திண்மை - வலிமை.]

பொருளையும் ஞானத்தையும் வாரி வழங்கி வந்த ஜனக குலத்திலே உதித்த கற்புச் சுடரை, வலிமையே உரிமையாகக் கொண்டு சிறை வைத்தானல்லவா ? அந்தச் செய்கையால், ராவண கீர்த்தியில் — மூவுலகை யும் சுரண்டிப் பிழைத்த 'புகழி'ல் — அற்ப சொற்ப மாக மிஞ்சியிருந்த வெண்மையும் நீங்கி, அது ஒரே கருமை யாகிவிட்டதாம். இத்தகைய ராவண கீர்த்தி (அபகீர்த்தி) விரிந்து பரவியது போல இருள் பரவி யிருக்கிறதாம்.

இந்த இருளிலே அரக்கர்கள் மிகவும் சுறுசுறுப் பாய்க் காணப்படுகிறார்கள். இருட்டு இருட்டை மிதித்துப் போவதுபோல், பல திசைகளிலும் அவர்கள் திரிந்து கொண்டிருக்கிறார்கள் :

> வெவ்வழி இருள்தர
> மிதித்து மீச்செல்வார் !

[வெவ் வழி-கொடிய வழி. மீச் செல்வார் - மேலே செல்கிறார்கள்.]

கருங்கற் படிகளின்மீது கால் வைத்து ஏறுகிற மாதிரி, செறிந்து திரண்ட கும்மிருட்டின்மீது கால் வைத்து ஏறி மேலே சென்று, இந்திர லோகத்திற்கும், சந்திர லோகத்திற்கும், வேறு லோகங்களுக்கும் போகிறார்களாம் :

> இந்திரன் வளநகர்க்(கு)
> ஏகுவார், இகல் -
> சந்திரன் உலகினைச்
> சார்குவார், கலித்(து)

அந்தகன் உறையுளை
அணுகு வார், அயில் -
வெந்தொழில் அரக்கன(து)
ஏவல் மேயினர்.

[வள நகர் - வளம் நிறைந்த அமராவதி நகரம். ஏகுவார் - போவார். இகல் - பகை. சார்குவார் - சேர்வார். கலித்து - ஆரவாரஞ் செய்து. அந்தகன் - யமன். உறையுள் - இருப்பிடம். அணுகுவார் - சமீபிப்பார்; அடைவார். அயில் - வேல். வெந் தொழில் - கொடுந் தொழில. ஏவல் மேயினர் - கட்டளையில் பொருந்தியவர்கள்.]

காதல்-நோயால் வருந்தும் ராவணனை இப்போது பகைத்துக்கொண்ட சந்திரனுக்கு ஒரு நல்ல பாடம் கற்பிக்கவேண்டும் என்பது சந்திரலோக யாத்திரை செய்யும் அரக்கர்களின் கருத்தாக இருக்கலாம். வேறு சிலர் 'ஹா, ஹோ!' என்று இரைந்து யமனை அதட்டிக்கொண்டே அவனுடைய லோகத்துக்குச் சமீபமாகச் செல்கிறார்களாம். யமனூருக்கே போய் அவனை மிரட்டக்கூடிய ஆசாமிகளை அவன் எப்படி அணுகத் துணிவான்? ஈச்வரனது அதிகார முத்திரை தரித்த யமராஜாவும் ராவணேச்வரனது ஏவல்பூண்ட அரக்கர்களுக்கு அஞ்சி ஒதுங்கி ஒடுங்கிக்கிடக்கிறானும்.

ஒருபுறம், ராவணேச்வரனுக்குக் குற்றேவல் செய்யும்பொருட்டு, வானவீதியில் மின்னற்கொடிகள் நெருங்கிப் போவது போல வேகமாய்ப் போகும் தேவ மாதர்களையும், வித்தியாதர ஸ்திரீகளையும், நாக கன்னிகைகளையும், யக்ஷகுல சுந்தரிகளையும் பார்க்

கிறுன் ஹனுமான். ஒருபுறம் தேவஜாதி ஆடவர்கள் அரக்கர்களுக்குத் தொண்டு செய்ய விரைந்து கொண்டிருப்பதையும் பார்க்கிறுன்.

இதோ அவசரமாகத் தேவர்கள் உத்தியோகம் பார்க்க ஓடும் ஒரு காட்சியைப் பாருங்கள் :

> சித்திரப் பத்தியின்
> தேவர் சென்றனர் ;
> ' இத்துணை தாழ்ந்தனம்,
> முனியும் !' என்றுதம்
> முத்தி(ன்)ஆ ரங்களும்,
> முடியும், மாலையும்,
> உத்தரீ யங்களும்
> சரிய ஓடுவார் !

[பத்தி - வரிசை : அணிவகுப்பு. இத்துணை - இவ்வளவு (நேரம்). தாழ்ந்தனம் - தாமதித்து விட்டோமே. முனியும் - கோபித்துக்கொள்வானே. சரிய - சரிந்து கீழே விழும்படி.]

ராஜ்யம் ராணுவ ராஜ்யமா யிருப்பதால், அதன் கட்டுப்பாடுகளுக்கு அடங்கி அடிமைத் தேவர்களும் கைதிகளைப் போலவும், கூலிச் சிப்பாய்களைப் போலவும் வரிசை வரிசையாகப் போகவேண்டும். இப்படிப் போய்க் கொண்டிருக்கும்போது, 'இவ்வளவு தாமதித்து விட்டோமே; ஐயோ, எஜமான் கோபிக்குமே!' என்ற எண்ணம் உண்டாகிறதாம். இப்படி எண்ணியதும், நடை ஓட்டமாகிறது. அவர்கள் முன்னுக்கி ஓட, உத்தரீயங்கள் பின்னே சாய்ந்து ஓடுகின்றனவாம் ; சரிந்து விழுகின்றனவாம்.

'மார்பிலே மேலாடை தாங்குவது அடியார்களுக்கு வழக்கம் இல்லையே!' என்று அதிசயித்து, 'ஆம், இவர்கள் கௌரவிக்கப்பெற்ற அடிமைகளாக இருக்க வேண்டும்!' என்று ஊகிக்கிறோம். உத்தரீயங்களோடு முத்து மாலைகளும் அணிந்திருக்கிறார்கள்: ஆகவே விசேஷ கௌரவம் பெற்ற அடிமைகளாக இருக்க வேண்டும்! ஆஹா, தலையில் சும்மாடுபோல் கிரீடத்தையும் சுமக்கிறார்களே! சரி சரி, இவர்கள் தேவ ஜாதியைச் சேர்ந்த சிற்றரசர்கள். இந்தப் பொம்மையரசர்கள் கிரீடங்களிலே மாலைகளையும் சுற்றிக் கொண்டிருக்கிறார்கள். அரசர்களிலும் சாமானியர்களல்லர்; பட்டமும் பதவியும் பெற்றவர்கள்தான்!

இந்த அடிமை யரசர்கள் ஓடும்போது, உத்தரீயங்களைப்போல் முத்தாரங்களும் சரிந்து ஓடுகின்றன. ஓஹோ—கவனியுங்கள்—இவர்கள் ஓடும் வேகத்திலே கிரீடங்களும் இப்போது சரிந்து விழுந்து உருளத் தொடங்குகின்றன 'கிரீடங்களும் கிரீட மாலைகளும பாதையில் பின்னால் ஓடி வந்துகொண்டிருக்கின்றன; விரைவில் வந்து சேரும்!' என்று இவர்கள் எஜமானிடம் விண்ணப்பஞ் செய்துகொள்ளக்கூடும்!

இப்படி அரைகுலையத் தலைகுலைய நிலைகுலைந்து ஓடும்போதும் — அடடா, என்ன ஒழுங்கு! — ஆடை ஆபரணங்கள் எல்லாம் அலங்கோலம் என்றாலும், அந்த அலங்கார வரிசை குலையாமல் போகிறார்களே! இவ்வளவு வேகத்திலும்,

சித்திரப் பத்தியின்
தேவர் சென்றனர்!

—சபாஷ்!

இப்படிப்பட்ட காட்சிகளைப் பார்த்ததும், 'இந்த ராஜ்யத்திலே ராணுவ தர்மமாகிய ஒழுங்கும் கட்டுப் பாடும் இருக்கமுடியும்; ஆனால் தர்மம் இருக்க முடி யுமா? இருந்தாலும், தீந்து கரிந்து போய்த்தான் இருக்கவேண்டும்!' என்று கருதுகிறோம். ஆனால், சந்திரோதயத்தோடு நமக்கும் கொஞ்சம் நம்பிக்கை உதயமாகிறது :

தீண்டருந் தீவினை
தீக்கத் தீந்துபோய்
மாண்(டு)அற உலர்ந்தது,
மாருதிப்பெயர் -
ஆண்தகை மாரிவந்(து)
அளிக்க, ஆயிடை
ஈண்(டு)அறம் முளைத்தென
முளைத்த(து) இந்துவே.

[தீண்டரு - தீண்டத் தகாத. தீக்க - எரித்தலால். அற - மிகவும். மாருதி - ஹனுமான். ஆண்தகை மாரி - வீரனாகிய மழை. அளிக்க - உதவிக் காப்பாற்ற. ஆயிடை - அப்பொழுது. ஈண்டு - இவ்விடத்தில். முளைத்தென - முளைத்தாற்போல. இந்து - சந்திரன்.]

உண்மையை அடிநிலமாகவும், அருளை வேராக வும் கொண்டு வளரும் அருமையான மூலிகைப் பூண்டு தர்மம் என்பது. இந்தப் பூண்டு எந்தச் சீதோஷ்ண நிலையிலும் எந்தப் பிரதேசத்திலும் பயிராகி வளர்ந் தோங்கக் கூடியது. தீவினை என்ற கோடைதான் இதை எரித்துத் தீந்துபோகச் செய்யும். இலங்கையில் இந்த மூலிகை அபூர்வமாகி ராவணாதி ராட்சஸர்களின்

தீவினையால் தீந்து மாண்டு அறவே உலர்ந்துபோய் விட்டதாம. ஆனால் ஆணிவேர் இருக்கிறது, விபீஷணன் இருப்பதால். ஆகவே, ஒரு மழை விழுந்தால் மறுபடியும முளைக்கும், தளிர்க்கும், தழைக்கும், பிழைக்கும். அந்த மழை ஹனுமான் என்ற பெயருடன், ஓர் ஆண்தகை-வடிவதிலே வந்திறங்கிவிட்டதாம. இங்கிலையில் அறம் மீளவும் முளைத்தாற்போல, இருளிடையே முளைக்கிறதாம் சந்திரன்.

இப்பாட்டில் 'தீண்டருந் தீவினை' என்று தீச்செயல்களைக் குறிப்பிடுவது கவனிக்கத் தக்கது. தீண்டத் தகாதது தீச்செயல்தான், வேறு தீண்டாமை கிடையாது!-என்பது குறிப்பு. தீவினையாளரையும் தீண்டித் திருத்த முயல்வதே நலலறிவாளர் செயல்.

சந்திரனின் பொலிவையும் வெண்ணிலவின தண்ணொளியையும், அந்த நிலவில வெண்சாமரை வீசுவதுபோலச் சுழன்று வீசும் கடல்-அலைகளின் நுரைத்த வெண்ணிற அழகையும கண்டு உள்ளம சிறிது சாந்தி அடைகிறது.

சந்திரனாகிய வெள்ளிக் குடத்தைக் கொண்டு வானம, பாற்கடலின் பாலை மேலே யிருந்து மொண்டெடுத்து எங்கும் வழிந்தோடச் சொரிவதுபோல் இருக்கிறது மேலும் கீழும் பொங்கிப் பரவும் சந்திரிகை :

> தெரிந்(து)ஒளிர் திங்கள்வெண்
> குடத்தி னால்,திரை
> முரிந்(து)உயர் பாற்கடல்
> முகந்து, மூரிவான்
> சொரிந்ததே யா(ம்)எனத்,
> துள்ளி மீறெடும்,
> விரிந்தது வெண்ணிலா
> மேலும் கீழுமே.

[தெரிந்து ஒளிர் - தோன்றி விளங்குகிற. திங்கள் வெண்குடம் - சந்திரன் என்ற வெள்ளிக் குடம். திரை - அலைகள். முரிந்து உயர் - மடிந்து உயரும். முகந்து - மொண்டு. மூரி வான் - பெரிய வானம்.]

பால்நிலவைப் பாற்கடலின் பாலுக்கு ஒப்பிடுகிறான் கவிஞன்: அந்தப் பாலைக் குடங் குடமாக மொண்டு சொரியும்போது அந்தக் கடலின் மீன்களும் பாலோடு வந்து துள்ளுவதுபோல மிளிர்கின்றனவாம் விண்மீன்களாகிய நட்சத்திரங்கள்.

அந்தச் சந்திரிகையில் ஹனுமான், இலங்கைக்குள் 'எந்த வழியாகப் போகலாம்' என்று ஆலோசித்து, இலங்கையின் வட்ட மதிலை நெருங்குகிறான். தன்னந் தனியனாக வரும் ஹனுமான் எவ்வளவு நிர்ப்பயமாக, எவ்வளவு கம்பீரமாக அடியிட்டு வருகிறான்!

> மடங்கல்அரி ஏறு,மத
> மால்களிறு நாண,
> நடந்துதனி யேபுகுதும்
> நம்பி,நனி மூதூர்
> அடங்கரிய தானை-அயில்
> அந்தகன(து) ஆணைக்
> கடுந்திறலின் வாய்அனைய
> வாயில்எதிர் கண்டான்.

[மடங்கல் அரி ஏறு - மடங்கும் பிடரி ரோமத்தோடு கூடிய ஆண் சிங்கம். மத மால் களிறு - பெரிய மத யானை. புகுதும் - செல்கிற. நம்பி - ஆடவரில் சிறந்தவன்; (இங்கே) ஹனுமான். நனி மூதூர் - பழமையான பெரிய அவ்வூரில். அடங்கரியதானை - அடங்காத ராட்சஸ சேனை. அயில் அந்தகன் - சூலாயுதம் ஏந்திய

யமன். கடுந் திறல் - கொடிய வலிமை. வாய் அனைய - வாய் போன்ற. வாயில் - வாசல்.]

ஹனுமானுடைய நடையிலேயே அபாரமான தன்னம்பிக்கை புலனாகிறது. இத்தகைய ஹனுமான், ராட்சஸ சேனையால் காவல் செய்யப்படுவதும், யமனது ஆக்ஞைக்கு இணங்க எல்லாரையும் கொன்று தின்னத் திறந்த வாய்போல் இருப்பதுமான கோட்டை வாசலை எதிரே காண்கிறான்.

மலையை நிறுத்திப் பெரியதோர் இடைவெளியைக் குடைந்திருப்பதோ எனத் தோன்றிய அக்கோட்டை வாசலின் இரு பக்கங்களிலும் ஆயுதபாணிகளான காவலாளர்களைப் பார்க்கிறான் :

வெள்ள(ம்)ஒரு நூறொடு(டு)ஒரு
 நூறும்உடை வீரக்
கள்ளவினை வெவ்வலி
 அரக்கர்,இரு கையும்
முள்எயிறும் வாளும்உற
 முன்னம்முறை நின்றார்,
எள்அரிய காவலினை
 அண்ணலும் எதிர்ந்தான்.

[வெள்ளம் ஒரு நூறொடு ஒரு நூறும் உடை - இரு நூறு வெள்ளம் என்னும் தொகையுடைய. வீரக் கள்ள வினை வெவ்வலி அரக்கர் - வீரமும் வஞ்சனையும கொடுமையும் உடைய அரக்கர்கள். இரு கையும் - (கோட்டை வாசலின்) இரண்டு பக்கங்களிலும். முள் எயிறு - முள்ளுப்போல் கூரிய கோரப் பற்கள். உற - பொருந்த. முன்னம் முறை - முன்னிடத்திலே முறைப்படி. எள்ளரிய - (சிறிதும்) அசட்டை யில்லாத. அண்ணல் -

பெருமையில் சிறந்த ஹனுமான். எதிர்ந்தான் - எதிரே கண்டான்.]

அவர்கள் கையில் வாள்கள் மட்டுமா? சூலம், மழு, வேல், ஈட்டி, இருப்புலக்கை, வில், தடி, வளை தடி, உடைவாள், கவண், பாசம் முதலான கொடிய ஆயுதங்களெல்லாம் காணப்படுகின்றன. இரத்தம்போல் அடர்ந்த செம்பட்டை மயிரோடு கோபாக்கினியால் சிவந்த கண்களும் முகங்களும்— ஆஹா, என்ன கோரம்! அந்தக் காவலாளரைக் கண்ட ஹனுமான்,

'தெவ்வர்இவர்! சேமம்இது!
சேவகனும் நாமும்
வெவ்வமர்தொ டங்கிடின்,எ(ன்)
ஆய்விளையும்?' என்றான்.

[தெவ்வர் - பகைவர். சேமம் - பாதுகாவல். சேவகன் - வீரனாகிய ராமன். வெவ்வமர் - கொடிய போர். என் ஆய் - என்ன ஆகி.]

'இந்தக் காவலைக் கடந்து செல்வது எப்படி?' என்ற கவலை இப்போதுதான் ஏற்படுகிறது:

'கருங்கடல் கடத்தல்அரி(து)
அன்(று);இ(ந்)நகர் காவல் -
பெருங்கடல் கடப்ப(து)அரி(து)!
எண்ணம்இறை பேரின்,
அருங்கடன் முடிப்ப(து)அரி(து)
ஆம்: அமர் கிடைக்கின்
நெருங்(கு)அமர் கிடக்கும்நெடு
நாள்!'என நினைந்தான்.

[காவற் பெருங் கடல் - காவலாகிய பெருங் கடல். இறை பேரின் - சிறிது பிறழ்ந்தால். அருங் கடன் - அருமையாகிய கடமை. அமர் - போர். கிடைக்கின் - கிடைத்தால். நெருங்கு அமர் - நெருங்கிய அப்போர். கிடக்கும் - நீடிக்கும்.]

கருங்கடலாகிய தென் சமுத்திரத்தைக் கடந்து வந்தது பெரிதாகத் தோன்றவில்லை. இந்தக் காவல் என்ற பெருங்கடலைக் கடப்பது அரிது என்றே தோன்றுகிறது. மனவுறுதி சிறிது தவறினாலும் சீதை யைத் தேடும் கடமையைச் செய்துமுடிப்பதே அரிதாகி விடும் என்று நினைக்கும் ஹனுமான், பளிச்சென்று பகை வீரர்களோடு போராடலாமா என்று ஒரு கணம் ஆலோசிக்கிறான். அப்போது போர் தொடங்கி னால் அது பல நாளாக நீடித்துக்கொண்டு போனாலும் போகலாமே!

ஆகையால் கோட்டைவாசல் வழியாகப் போக வேண்டாம் என்று தீர்மானிக்கிறான். 'மேலும் அவர்கள் வகுத்த வழியே நாம் ஏன் போகவேண்டும்? அது வல்லமைக்கு அழகன்று. வல்லான் வகுத்ததே வழி!' என்று தன் உள்ளத்தைச் சமாதானப்படுத் திக்கொண்டு, வாசல் வழியே போகாமல் மதிலைத் தாண்டிப் போகலாம் என்று ஒரு பக்கமாய் ஒதுங்கிப் போகிறான்.

ஒதுங்கிப் போனதும், ஆஹா, அங்கே என்ன, கோரத்திற்குமேல் கோரம்! பயங்கரத்திற்குமேல் பயங்கரம்!

## 5. ஐயோ லங்கிணி!

பாம்பு போலச் சீறிக் கோபாக்கினி கக்கும் அந்தக் கண்கள் மதிற்புறத்திலிருந்து தன்னை நோக்கின என்பதை அவன் எப்படி அறிவான்? ஹனுமான் போகும் வழி மறித்துக் குன்றுபோல நின்றது அந்தக் கோர சொரூபம்:

எட்டுத் தோளாள்,
நாலு முகத்தாள்,
உல(கு)ஏழும்

தொட்டுப் பேரும்
சோதி நிறத்தாள்,
சுழல்கண்ணாள்,

முட்டிப் பேரின்
மூஉலகத்தை
முதலோடும்

கட்டிச் சீறும்
காவல் வலத்தாள்,
கமைஇல்லாள்!

[பேரும் - மீளும், திரும்பும். முட்டிப் பேரின் - பகைத்துத் தாக்கினால். முதலோடும் - அடியோடும். வலம் - வலிமை. கமை - பொறுமை.]

அவளுடைய அந்த எட்டுக் கைகளும் பிடித்திருக்கும் ஆயுதங்கள், இலங்கை வாசிகளான அரக்கர்

படைகளே! அந்தக் கோரப் பற்களும், அறிவைப் புகைக்கும் கோபாக்கினியும் அரக்கர் தோற்றமே :

வேல்,வாள், சூலம்,
வெங்கதை, பாசம்,
விளிசங்கம்,

கோல்,வாள் குந்தம்
கொண்ட கரத்தாள்,
வடகுன்றம்

போல்வாள், திங்கள் -
போழின் எயிற்றாள்,
புகைவாயின்

கால்வாள், காணின்
காலனும் உட்கும்
கத(ம்)மிக்காள்.

[வெம் கதை - கொடிய கதாயுதம். பாசம் - பாசக் கயிறு. விளி சங்கம் - முழங்குகிற சங்கு. கோல் - தடி. வாள் குந்தம் - ஒளி பொருந்திய ஈட்டி. வட குன்றம் - வடக்கே உள்ள மேரு மலை. திங்கள்-சந்திரன். போழின் - பிளந்த துண்டுகள் போன்ற. எயிற்றாள் - கோரப் பற்களை உடையவள். கால்வாள் - கக்குபவள். உட்கும் - அஞ்சுகிற. கதம் - கோபம்.]

இலங்கையின் பொருள் வளத்தைக் குறிக்கும் அவளுடைய அலங்காரங்களும் பயங்கரங்களே. அவளது கருமேனியில் பரிமளிக்கும் செஞ்சந்தனக் குழம்பு, சுயநல இன்பச் சேற்றில் உழலும் இலங்கையின் போக விருப்பத்திற்கு அறிகுறியாகி, பயங்கரத்தை அதிபயங்கரமாகக் காட்டுகிறது. எனினும்

பயங்கரங்கள் எல்லாம் ஒன்ருகத் திரண்டிருப்பது சீறிச் சுழன்று ஜொலிக்கும் அந்தக் கண்களிலேதான்! அப்படிப்பட்ட கண்களாகிய உறையில் வைத்துக் கண்மணியான இலங்காபுரியைக் காவல் செய்கிறது அந்தக் காவல் - தெய்வம்.

'ஐயோ லங்கிணி!' என்று அலறத் தோன்றுகிறது. ஆம், திக்கொடு திக்கின் அந்தங்களையும் முட்டி வென்று கட்டியாளும் இலங்கை மாநகரின் உக்கிர சொரூபமே லங்கிணி என்ற அதிதேவதை.

ஆலோசனையில் மூழ்கிச் செல்லும் ஹனுமான் முதன் முதல் லங்கிணியைப் பார்க்கவில்லை. காவலிலே கண்ணும் கருத்துமாக இருக்கும் அவளே இவனைப் பார்த்துவிடுகிருள் :

பாரா நின்ருள்
எண்திசை தோறும்,
'பலர்அப்பால்
வாரா நின்ரு
ரோ?' என, மாரி
மழையேபோல்
ஆரா நின்ருள்,
நூபுரம் அச்சம்
தருதாளாள்,
வேரா மெய்யாள்,
மின்னின் இமைக்கும்
மிளிர்பூணுள்.

[பாரா நின்ருள் - பார்த்து நின்ருள். வாரா நின்ருரோ - வருகிருர்களோ. மாரி மழை - மழை பொழி

யும் மேகம். ஆரா நின்றாள் - ஆரவாரம் செய்கின்றாள். நூபுரம் - காலின் - சிலம்பு ; பாதசரம், தாளாள் - கால்களை உடையவள். வேரா மெய்யாள் - வேர்வை உண்டாகும் உடம்பை உடையவள். மின்னின் - மின்னல் போல. மிளிர் - ஒளி செய்கின்ற. பூண் - ஆபரணங்கள்.]

ஹனுமான் ஒருவன் வரக்கண்டதும், 'பின்பலமாகப் பட்டாளம் பட்டாளமாய்ப் பலர் அப்பால் வந்து கொண்டிருக்கிறார்களோ ?' என்று லங்காதேவி தூரத்தில் பார்வையைச் செலுத்திப் பார்க்கிறாள்,— இடிபோலத் தொண்டையைக் கனைத்துக்கொண்டு. அப்படியும் இப்படியும் திரும்பும்போது 'கலீர் கலீர்' என்று முழங்குகின்றன கால் - சிலம்புகள்,—அஞ்சா நெஞ்சுகளும் அதிர்ந்து குலுங்கும்படி. உடம்பு வேர்க்கிறது ; அந்த உடம்பிலே மிளிரும் ஆபரணங்கள் கண் கூசும்படி மின்வெட்டுகின்றன பளிச்சுப் பளிச்சென்று.

இத்தகைய ஆபரண - ஆயுதப் பகட்டோடும் படாடோபங்களோடும் லங்கிணி அம்மாள், இலங்கை மாநகரின் பொருள், போகம், வேகம் என்ற மும்மூர்த்திகளின் ஓர் உருவமாய் அமைந்து வருவதுபோல் ஹனுமானை எதிர்நோக்கி வருகிறாள் :

'நில்லாய் ! நில்லாய் !'
என்(று)உரை நேர்வாள்,
நினையாமுன்,

வல்லே சென்றாள் ;
மாருதி கண்டான்,
'வருக !' என்றான்.

[நேர்வாள் - எதிராக உரைப்பாள். நினையா முன் - நினைத்துப் பார்க்கும் முன்பே. வல்லே - விரைவாக. மாருதி - ஹனுமான்.]

ஒருகணம் 'நில்லடா, நில்லு!' என்ற எச்சரிக்கை; அடுத்த கணத்தில், அவன் சிந்தனை கலைந்து 'இது என்ன கோஷம்!' என்று நினைப்பதற்கு முன் — கண்ணெதிரே திடீரென்று வந்துவிடுகிறது அந்த உக்கிர சொரூபம். ஆனால், ஹனுமான் திடுக்கிடவில்லை. திகைப்பையும் பளிச்சென்று உள்ளடக்கி வாய் திறந்து 'வருக!' என்று சுருங்கச் சொல்லுகிறான்.

சாந்தமான அந்த வரவேற்பும், அந்தச் சாதுரியப் பார்வையும் அவளுக்குப் பிடிக்கவில்லை. அந்த அஞ்சாமையை அறியாமை என்று இகழ்கிருள். அதற்குக் காரணம் ஹனுமான் உட்கொள்ளும் 'சைவ சுத்த போஜனம்'தான் என்று ஊகிக்கிருள்:

'ஆகா செய்தாய்;
அஞ்சலை போலும்,
அறிவில்லாய்!

சாகா மூலம்
தின்(று)உழல் வார்பால்
சலம்என்னும்?

பாகார் இஞ்சிப்
பொன்மதில் தாவிப்
பதையாதே,

போகாய்!' என்ருள்
பொங்(கு)அழல் 'என்னப்
புகைகண்ணுள்.

[ஆகா செய்தாய் - ஆகாத காரியங்களைச் செய்தாய். சாகா மூலம் - இலைகளும் கிழங்குகளுமான மரக்கறி உணவு : 'சாக - மூலம்' என்பது வடமொழி. உழல் வார்பால் - திரிபவர் இடத்தில். சலம் - கோபம். என்னும் - எதற்காக. பாகு ஆர் - அழகு அமைந்த. இஞ்சிப் பொன் மதில் - பொன் மயமான இம்மதில். பொங்கு அழல் - பொங்கி எரியும் நெருப்பு. புகை கண்ணுள் - புகைகின்ற கண்களை உடையவள்.]

நர மாமிசமும் ஜீர்ணிக்கும் குடல்வலிமை வாய்ந்த அரக்கர்களோடு உறவாடுகிறவள் அல்லவா? 'இந்த மரக்கறி-போஜனக்காரனிடம் கோபம் என்ன வேண்டி யிருக்கிறது!' என்று தன்னைத்தானே ஒரு கணம் நொந்துகொள்கிருள். அப்படிச் சொல்லும் போதே, கோபம் உக்கிர கோபமாகிறது. 'உடல் வளமின்றி உயிர் சுமந்து உழலும் அற்பக் குரங்கே! உனக்குத்தான் எவ்வளவு அசட்டுத் துணிவு! ஓடிப் போ!' என்று அதட்டுகிருள்.

ஹனுமானுக்கும் கோபம் வராமல் இல்லை ; ஆனல் அவன் அதை உள்ளடக்கிக்கொண்டு, வினய மாய், 'அம்மா! உன் தயவால் இந்த ஊரைப் பார்க்க ஆசைப்பட்டு வந்திருக்கிறேன்' என்று பதில் சொல் லத் தொடங்கி,

'எளியேன் உற்ருல்
யாவ(து) உனக்(கு)இங்(கு)
இழவு?' என்ருன்.

[உற்ருல் - (ஊருக்குள்) போனல்.]

'நான் "போ!" என்று சொல்லியும் போகாமல் எதிர்வார்த்தை யாடுகிறாயே! யாரடா நீ?' என்று, பொங்குகிறது ஒரு பேய்ச் சிரிப்பு. அப்போது ஹனுமானுக்கும் உள்ளுக்குள்ளே ஒரு சிரிப்பு வந்து விடுகிறது. அவள், 'அலட்சியமாகச் சிரித்தவனே, நீ யார்? உயிர் போய்விட்டால் ஆவது என்ன? ஐயோ, இன்னும் ஓடவில்லையே!' என்று அவசரப் படுத்துகிறாள். அவனோ, கொஞ்சமும் அவசரப் படாமல், 'இனி இந்த ஊருக்குள்ளே போய்ப் பாரா மல் நான் திரும்பப் போவதில்லை!' என்று அமைதி யாகச் சொல்லுகிறான்.

இருவருக்கும் போர் நடக்கிறது. அந்தப் போரில் ஹனுமான் எளிதாக வெற்றியடைகிறான். தோல்வி யுற்ற லங்கிணி தன்னை இன்னாளென்று தெரிவித்துக் கொள்கிறாள் :

'ஐய,கேள்! வையம்
நல்கும் அயன்அருள்
அமைதி யாக,

எய்தி இம் மூதூர்
காப்பென் ; இலங்கைமா
தேவி என்பேர் ;

செய்தொழில் இழுக்கி
உள்ளம் திகைத்(து)இந்தச்
சிறுமை செய்தேன் ;

"உய்தி "என்(று) அளித்தி
ஆயின், உணர்த்துவல்
உண்மை' என்றாள்.

[வையம் - உலகம். நல்கும் - படைக்கிற. அயன் அருள் அமைதியாக - பிரம்மாவின் கட்டளை காரணமாக. இம்மூதூர் காப்பென் - இப்பழமையான ஊரைக் காத்து வருகிறேன். இழுக்கி - தவறி. உய்தி - உயிர் வாழ்வாய். அளித்தி ஆயின் - அருள்செய்வாயானால். உணர்த்துவல் - தெரிவிப்பேன்.]

'"எத்தனை காலம்
காப்பல் யான்இந்த
மூதூர்?" என்று
முத்தனை வினவி
னேற்கு, "முரண்வலிக்
குரங்(கு)ஒன்று உன்னைக்
கைத்தலம் அதனால்
தீண்டிக் காய்ந்தஅன்(று)
என்னைக் காண்டி;
சித்திர நகரம்
பின்னைச் சிதைவது
திண்ணம்" என்றான்.'

[காப்பல் - காப்பேன். முத்தன் - (இங்கே) பிரம்மதேவன். வினவினேற்கு - வினவின எனக்கு. முரண் வலி - மிக்க வலிமை. காய்ந்த அன்று - வருத்திய அந்நாளில். காண்டி - காண்பாய். சித்திர நகரம் - அழகிய இலங்கை.]

'என்னை உயிர் தப்பிப் போகும்படி அருள் செய்வாயானால், நான் உனக்கு ஓர் உண்மையைத் தெரிவிப்பேன்' என்று சொல்லி நிறுத்திய லங்கிணி, ஹனுமானுடைய மௌனத்தை அனுக்கிரகமாகக் கொண்டு மேலும் பேசுகிறாள்.

'ஒரு முரட்டுக் குரங்கு உன்னைத் தோல்வி யடையச் செய்யும்' என்று ஹநுமானிடம் லங்கிணி சொல்வதில், பிரம்மா சொன்னதை நாசூக்காய்ச் சொல்லாமல், அப்படியே, உள்ளது உள்ளபடியே, வெளியிடும் பாவம் தொனிக்கிறது.

கடைசியாக ஹநுமானைப் புகழ்ந்து உத்ஸாகப் படுத்தி விடையளித்துத் தானும் விடை பெற்றுக் கொள்கிருள் :

' அன்னதே முடிந்த(து),
ஐய! " அறம்வெல்லும்
பாவம் தோற்கும் "

என்னும்ஈ(து) இயம்ப
வேண்டும் தகையதோ ?
இனிமற்(று) உன்னல்

உன்னிய எல்லாம்
முற்றும் ; உனக்குமுற்
ருத(து) உண்டோ ?

பொன்னகர் புகுதி !'
என்னுப் புகழ்ந்(து)அவள்
இறைஞ்சிப் போனுள்.

[அன்னதே - அதுவே; பிரமன் சொனன படியே. ஈது - இது ; இவ்வுண்மை. தகை - தன்மை. உன்னிய எல்லாம் - நினைக்கப்பட்ட காரியம் எல்லாம். முற்றும் - முற்றுப்பெறும். புகுதி - போவாய். என்னு - என்று சொல்லி. இறைஞ்சி - வணங்கி.]

ஹநுமான் அவள் சொன்னதை ஒரு குரு உப தேசம்போல் ஏற்றுக்கொண்டு, ராமன் - திருவடிகளை

மானஸீகமாக வணங்கிவிட்டு, அந்த மதிலைத் தாண்டி ஊருக்குள் குதித்துவிடுகிறான்.

* * * *

இலங்கைமா தேவியின் வீழ்ச்சி இலங்கை மாநகரின் வீழ்ச்சிக்கு ஒரு முற்குறி. ராவண ராஜ்யத்தின் ஆடம்பர வைபவங்களையும் கட்டுக் காவலையும் கண்டு ஒருவாறு திகைத்துப்போன உள்ளத்திற்கு லங்கிணியின் போர் ஒரு சமய சஞ்சீவி யாகவும் உதவுகிறது. அவளே தக்க சமயத்தில் 'அறம் வெல்லும், பாவம் தோற்கும்' என்னும் இயற்கை - மர்மத்தையும் நினைப்பூட்டுகிறாள். இலங் கைக்குள்ளே பிரவேசிக்கும் ஹனுமானுக்கு இன்னும் இடையிடையே மயக்கம் விளையப் போகிறது. எனினும் லங்காதேவி உபதேசித்த 'அறம் வெல்லும், பாவம தோற்கும்' என்ற உண்மை ஒரு மகாமந்திர மாக ஹனுமானுடைய உள்மனத்தில் பதிந்து ஜீவ நாதமாக ஒலிசெய்யத் தொடங்குகிறது.

## 6. நகர சஞ்சாரம்

தன்னைத் தண்டனிட்டு லங்கிணி போனபின்பு, ஹனுமான் ராமனுடைய அடிமலர்களை மானஸீகமாய்த் தண்டனிட்டு வணங்கித் 'தர்மமே ஜயம்' என்ற நம்பிக்கையுடன் மதிலைத் தாவிப் போனான். சிறு வடிவத்துடன் ஹனுமான் தாவிப் புகுந்ததும், அந்த இலங்கைத் தீவு முழுதும், மோர்ப் பிரை தெறித்துத் திரிந்துபோகும் ஒரு பாற்கடல்போல் சூட்சுமமான ஒரு மாறுதலை அடையத் தொடங்கிவிட்டது.

மதிலுக்கு வெளியே யிருந்து இலங்கையைப் பார்த்துப் பிரமித்த ஹனுமானுக்கு உள்ளே புகுந்ததும் பிரமிப்பு இன்னும் அதிகமாயிற்று. 'சூரியோதயம் ஆகிவிட்டதோ?' என்றுகூடப் பிரமித்துப் போனான். சீதையைத் தேடிக் காண இரவல்லவோ ஏற்ற சமயம்? 'அந்த இரவு இவ்வளவு விரைவிலா......?' என்று திடுக்கிட்டவன், பளிச்சென்று அந்த மயக்கத்தின் காரணத்தையும் அறிந்துகொள்கிறான் :

> வான்தொடர் மணியின் செய்த
> மையறு மாட கோடி
> ஆன்றபேர் இருளைச் சீத்துப்
> பகல்செய்த அழகை நோக்கி,
> 'ஊன்றிய உதயத்(து) உச்சி
> ஒற்றைவான் உருளைத் தேரோன்
> தோன்றினன் கொல்லோ?' என்னா,
> அறிவனும் துணுக்கம் கொண்டான்.

[வான் தொடர் - வானளாவிய. மணி - இரத்தினங்கள். மையறு - குற்றமற்ற. மாடம் - உப்பரிகை வீடுகள். கோடி - வரிசை. ஆன்ற - பரவிய. பேரிருள் - மிகுதியான இருள். சீத்து - ஒழித்து. உதயத்து - உதயகிரியின். ஒற்றைவான் உருளைத் தேரோன் - பெரிய ஒற்றைச் சக்கரமுள்ள தேரில் செல்லும் சூரியன். தோன்றினன் கொல்லோ - தோன்றி விட்டானோ. என்னு - என்று எண்ணி. துணுக்கம் கொண்டான் - திடுக்கிட்டான்.]

கூர்ந்து பார்த்து, 'ஓஹோ! சூரியோதயம் இல்லை, மாடமாளிகைகளின் இரத்தின காந்திதான்!— சிகர கலசங்களின் ஜோதிதான்!' என்று தெளிகிறான். இப்படி இரவைப் பகல் செய்த அந்த அழகைக் கொண்டாடி, 'இத்தகைய வெளிச்சத்திலே வீதிகளின் நடுவில் தான் சென்றால் யாராவது கவனித்துப் பார்க்கக்கூடும் என்று எண்ணி, அப்படிப் போகாமல், வீடுகளின் நிழல் சாய்ந்திருக்கும் ஓரமாகவே ஒதுங்கிச் சென்றான். சென்று, சீதையைப் பல இடங்களிலும் தேடிப் பார்க்கிறான் :

ஆத்துறு சாலை தோறும்,
　　ஆனையின் கூடம் தோறும்,
மாத்துறு மாடம் தோறும்,
　　வாசியின் பந்தி தோறும்,
காத்துறு கடைகள் தோறும்,
　　கருங்கடல் கடந்த காலால்,
பூத்தொறும் வாவிச் செல்லும்
　　பொறிவரி வண்டிற் போனான்.

[ஆத்துறு சாலை - பசுக்கள் கட்டியிருக்கும் தொழுவங்கள். மாத்துறு மாடம் தோறும் - திருமகள் பொருந்தி வசிக்கும் மாளிகைகள்; அதாவது அழகும் செல்வமுட் நிரம்பிய மாளிகைகள். வாசியின் பந்தி - குதிரைகள் கட்டுகிற லாயங்கள். காத்துறு - காவல் அமைந்த. வாலி - தாவி. பொறி - புள்ளி. வண்டின் - வண்டுபோல.]

ஹனுமான் வெள்ளை-வானரம் என்பது ராமாயணக் கதை. ஆனால், இப்போது ஒருகணம் கரியனாகவும், மறுகணம் வெள்ளையனாகவும், அடுத்த கணத்தில் சிவப்பனாகவும் வர்ண பேதங்களுடன் காட்சியளிக்கிறான் :

> கரியனாய் வெளிய னாகிச்
> செய்யனாய்க் காட்டும் !—காண்டற்(கு)
> அரியனாய் எளிய னாய்த்தன்
> அகத்துறை அழக னேபோல்.

[வெளியன் - வெள்ளையன். செய்யன் - செந்நிறமுடையவன். அகத்து உறை - உள்ளத்திலே வசிக்கிற.]

ஹனுமான் தன் அகத்திலே பிரதிஷ்டை செய்து கொண்டிருக்கும் அழகன் ஸ்ரீராமன்தான். அந்த ராமசந்திரமூர்த்தி, அன்பிலார்க்கு அரியனாய், அன்பர்க்கு எளியனாய், அவரவர் உகந்த உருவ - நிற பேதங்களுடன் காட்சியளிக்கிறான். சார்ந்ததின் வண்ணம் ஆகிறான் பரமாத்மாவாகிய பகவான் எனலாம். அந்த மூர்த்தியைப்போல், ஹனுமானும், இலங்கை மாளிகைகளின் ஓரமாய்ச் செல்லும்போது, நீலம், முத்து, வைரம், பவளம், மாணிக்கம் முதலிய இரத்தின

வகைகளின் பலவேறு நிறங்களையும் பிரதிபலிக்கிறான்.

அதோ அந்தப் பூஞ்சோலையில், மழை பெய்யக் களிக்கும் மயில்களைப்போல் காணப்படுகிறார்களே, அவர்கள் யார்? என்ன சாயல், என்ன குதூகலம், என்ன நடையழகு! தேவ மாதர்கள் அந்த ராட்சஸ மாதர்களை நீராட்டி வைக்கிறார்கள். நீராடும்போது, ராட்சஸப் பெண்கள் அகமகிழ்ந்து முகமலர்ந்து மயில்களையும் அன்னங்களையும்போல விளங்குகிறார்கள். சீதையைத் தேடும் ஹனுமான் பார்த்துக் கொண்டு போகிறான் :

கானக மயில்கள் என்னக்,
களிமட அன்னம் என்ன,
ஆனன கமலப் போது
பொலிதர, அரக்கர் மாதர்,
தேன்உகு சரளச் சோலை,
தெய்வநீர் ஆற்றில் தெண்ணீர்
வானவர் மகளிர் ஆட்ட,
மஞ்சனம் ஆடு வாரை.

[கானக மயில்கள் என்ன - காட்டிலுள்ள மயில்கள் போலவும், களிமட அன்னம் - களிப்பையுடைய இளமையான அன்னப் பேடைகள். ஆனன கமலப் போது - முகமாகிய செந்தாமரைப்பூ. பொலிதர - பொலிவுபெற; விளக்கமடைய. தேனுகு சரளச் சோலை- தேன் சிந்தும் இனிமையான பூஞ்சோலைகள். தெண்ணீர் - தெளிந்த நீர். வானவர் மகளிர் - தேவ மாதர்கள். மஞ்சனம் ஆடுவார் - நீராடுவார்.]

அதோ ஒரு நாட்டியக் கச்சேரி ! பொன் மயமான அந்த நடனசாலை பூம்பந்தல் வேய்ந்து அலங்கரிக்கப் பெற்றிருக்கிறது. அந்த நடனசாலையில் தெய்வமணி விளக்கு ஜில்லென்று ஒளி வீசுகிறது. அந்த ஒளியில் மெத்தென்ற படுக்கைமீது சாய்ந்தபடியே அரக்கரும் அரக்கியரும் கந்தர்வப் பெண்கள் ஆடுகிற நாட்டியங் களைப் பார்த்துக்கொண் டிருக்கிறார்கள். அந்த மணி விளக்கு தேவலோகத்துச் சிந்தாமணி என்ற இரத் தின தீபம் ; ஆதலால், நாட்டியம் பார்க்கிறவர்கள் எந்த எந்த விதமான போகப் பொருள்கள் வேண்டு மென்று சிந்திக்கிறார்களோ, அவற்றை அது அவ்வப் போது கொடுத்துக்கொண்டே யிருக்கிறது.

இவ்வளவு போக வசதிகளுடன் நாட்டியக் கலையை ரஸித்துக்கொண் டிருப்பவர்களையும் ஹனு மான் பார்த்துக்கொண்டே போகிறான் :

> சந்தப்பூம் பந்தர் வேய்ந்த
> தமனிய அரங்கில், தத்தம்
> சிந்தித்த(து) உதவும் தெய்வ
> மணிவிளக்(கு) ஒளிரும் சேக்கை
> வந்துற்ற நிருத மாக்கள்,
> விளம்பின நெறிவ ழாமை
> கந்தர்ப்ப மகளிர் ஆடும்
> நாடகம் காண்கின் றாரை.

[சந்தம் - அழகு. வேய்ந்த - மேலே இட்டு அலங் கரித்த. தமனிய அரங்கு - பொன் மயமான நடன சாலை. தத்தம் - தம்தம். சேக்கை - படுக்கை. நிருத மாக்கள் - ராட்சஸ ஜனங்கள். விளம்பின நெறி வழாமை - பாராட்டிச் சொல்லப்படும் தாள அடைவு

முதலியன தவருமல். கந்தர்ப்ப மகளிர் - கந்தர்வப் பெண்கள்.]

ராட்சஸ குல சுந்தரிகளில் சிலர் தங்கள் கணவருடன் பிணங்கிப் பிரிந்திருக்கிறார்கள். இந்தப் பிரிவுத் துயரத்தைப் பொறுக்க முடியாமல்,

மலர்மிசை மலர்பூத் தென்ன,
மலர்க்கையால் வதனம் தாங்கி,—

[மலர்மிசை - மலரின்மேல். பூத்தென்ன - பூத்தாற் போல.]

—அப்படியே நெடும்பொழுது பெருமூச்சு விட்டுக் கொண்டிருக்கிறவர்களையும் ஹனுமான் பார்த்துப் போகிறான்.

வேறொரு காதல் காட்சி. சித்திரப் பதுமைபோலிருக்கும் அந்தப் பெண் எவ்வளவு களைப்போடிருக்கிறாள்! குறும்பாகச் சண்டையிட்டுக் காதலனை வெளியே துரத்திவிட்டாள். ஆனால், அவனோடு அவளுடைய உணர்வும், மனமும், அந்தக்கரணங்களும் போய்விட்டன என்றே தோன்றுகிறது. உயிர்தான் இப்போது மிஞ்சியிருக்கிறது.

காதலன் வெளியே போனதும், அவள் கோபத்தோடு விரைவாகக் கதவை அடைத்துத் தாளிடப் போகிறாள். ஆனால் மின்னற் கொடிபோல், உடம்பு துவண்டு தள்ளாடுகிறது; நடை மந்தமாகத்தான் இருக்கிறது. கதவை மூடுவதற்கும் சக்தியில்லை. சிரமப்பட்டு மெள்ள மெள்ள அடைக்க முடியாமல் அடைக்கிறாள்.

காதலனோடு தன் உணர்வு முதலியவற்றையும் பறிகொடுத்துவிட்ட இப்பெண்மணியின் பரிதாப நிலையை என்னென்று சொல்வது? ஹனுமானோடு நாமும் இக்காட்சியைப் பார்க்கிறோம்:

ஓவியம் அனைய மாதர்
ஊடினர், உணர்வோ(டு) உள்ளம்
மேவிய கரணம் மற்றும்
கொழுநரோ(டு) ஒழிய, யாணர்த்
தூவியம் பேடை என்ன,
மின்எனத் துவள ஏகி,
ஆவியும் தாமு மேசென்(று)
அருங்கத(வு) அடைக்கின் றூரை,—

[அனைய - போன்ற. ஊடினர் - ஊடல் கொண்டவர்களாய். மேவிய - பொருந்திய. கரணம் - அந்தக் கரணங்கள். கொழுநரோடு ஒழிய - கணவரோடு போய்விட. யாணர் - அழகிய. தூவி - இறகு. அம் பேடை - அழகிய அன்னப்பேடை. மின் என-மின்னற் கொடிபோல. ஏகி - போய்; (இங்கே) நடந்து.]

இத்தகைய காதற் காட்சிகளோடு, ஊர்கோலங்களையும், புதுமனைக்குப் போகிறவர்களையும், புது மணம் செய்துகொள்கிறவர்களையும் பார்க்கிறான் ஹனுமான். அந்தப் புதுமண வைபவத்தைத்தான் என்னென்பது? ஹனுமான் பார்த்துத் திகைத்துப் போயிருக்கவேண்டும்:

கோவையும் குழையும் மின்னக்,
கொண்டலின் முரசம் ஆர்ப்பத்,
தேவர்வந்(து) ஆசி கூற,
முனிவர்சோ பனங்கள் செப்பப்,

பாவையர் குழாங்கள் சூழப்,
பாட்டொடு வான நாட்டுப்
பூவையர் பலாண்டு கூறப்,
புதுமணம் புணர்கின் றாரை,—

[கோவை - கழுத்தில் அணியும் ஹாரங்கள். குழை— காதில் அணிவது. கொண்டலின் - மேகம்போல ; இங்கே மேக கர்ஜனையாகிய இடி முழக்கம்போல. ஆர்ப்ப - ஆரவாரிக்க. பாவையர் - (இங்கே) ரிஷி பத்தினிகள். பூவையர் - கிளி அல்லது நாகணவாய்ப் பறவைபோல் கொஞ்சிப் பேசும் பெண்கள். பலாண்டு - பல்லாண்டு. மணம் புணர்கின்றாரை - மணஞ் செய்து கொள்கிறவர்களை.]

ஹநுமானுக்குத்தான் இப்போது என்ன திகைப்பு! அந்த விவாக விமரிசைகளைக் கண்ட திகைப்பல்ல, அந்த வைதிகச் சடங்குகளைக் குறித்த திகைப்பும் அல்ல ; அடிமைத் தேவர்கள் ஆசீர்வாதம் செய்வதற்கும், முனிவர்கள் சோபனம் சொல்வதற்கும், முனி பத்தினிகள் பாடிப் புகழ்வதற்கும், தெய்வப் பெண்கள் பல்லாண்டு பாடி வாழ்த்துதற்கும் காரணமான 'ராஜபக்தி'யால் ஏற்பட்ட திகைப்புத்தான் !

இத்தகைய எத்தனையோ காட்சிகளுக்கிடையே கந்தர்வ ஸ்திரீகள், அரக்கிமார்கள், நாககன்னிகைகள், வித்தியாதர மாதர்கள் முதலானவர்களை யெல்லாம் ஹநுமான் சந்தேகமில்லாதபடி, மயக்கமில்லாதபடி, நன்றாய்க் கவனித்துக்கொண்டே போகிறான்.

அப்படிப் போய்க்கொண்டிருக்கும் வழியில்— என்ன விபரீதம் ! என்ன ஆச்சரியம் !—ஏதோ ஒரு சக்தி ஹநுமானையும் அப்பால் செல்லவொட்டாமல்

ஒரு மண்டபத்து வாசலில் நிறுத்திவிடுகிறது. காரணம் என்ன என்று ஆலோசிப்பதற்குள், ஏதோ ஒரு சண்டமாருதம் இவனை வலிய இழுத்துப் போகிறது!

அந்த மண்டபத்தின் நடுவிலே படுத்துக்கிடப்பது யார்? ஆயிரம் தலை ஆதிசேஷனு? அப்படிக் கிடப்பது கருங்கடல்தானு? உலகத்திலுள்ள இருட்டெல்லாம் ஒரே இடத்தில் சேர்ந்து செறிந்து கிடக்கிறதா? தீவினைதான் திரண்டு அப்படி உருக்கொண்டதோ?

அந்தப் பேர்வழியின் மூக்குவரையில் ஹனுமானை இழுத்துவந்துவிட்டது சண்டமாருதம். மகா வீரனுகிய அவனுக்குக்கூடக் கைகள் நடுங்குகின்றன. எனினும், வெகு சாமர்த்தியமாக விலகி அப்பால் குதித்துவிடுகிறுன்:

> மூசிய உயிர்ப்(பு)எனும்
> முடுகு வாதமும்,
> வாசலின் புறத்திடை
> நிறுவி, வன்மையால்
> நாசியின் அளவையின்
> நடத்தக் கண்டவன்
> கூசினன், குதித்தனன்,
> விதிர்த்த கையினுன்!

[மூசிய - (ஒன்றன் பின் ஒன்ருக) நெருங்கி வரும். உயிர்ப்பு - சுவாசம். முடுகு வாதம் - விரைந்து வரும் காற்று. புறத்திடை - வெளிப்புறத்தில். நிறுவி - நிறுத்தி. வன்மையால் - வலிய. நாசியின் அளவை

யின் - மூக்கு வரையில். கண்டவன் - கண்ட ஹனுமான். விதிர்த்த - நடுங்கிய.]

இவ்விதமாகத் தப்பிய ஹனுமான், 'ராம ராம! தலை பிழைத்தது தம்பிரான் புண்ணியம்!' என்று போய்விடாமல், பெருங் கோபத்துடன் அந்த மலை போலக் கிடக்கும் மேனியை நோக்கி, 'இவன்தான் ராட்சஸ சக்கரவர்த்தியான ராவணனோ?' என்று சந்தேகிக்கிறான் ஒரு கணம். கும்பகர்ணனுடைய பிரம்மாண்டமான அந்த ஒரு தலையே பத்துத் தலைகளைப்போல் தோன்றி யிருக்கவேண்டும்!

மீண்டும் மூச்சுக் காற்றுக்குள் அகப்பட்டுக் கொள்ளாமல், ஜாக்கிரதையாக அருகில் சென்று பார்த்து, 'இந்த ஆசாமிக்குத் தலைகள் பத்து இல்லை, கைகளும் இருபது இல்லை!' என்று கண்டுபிடிக்கிறான். அதனால் கோபத் தீயை அவித்துக்கொள்கிறான்.

அப்போது அந்த 'உறங்கும் மலை'யை நோக்கி அவன் ஏதோ சொல்கிறானே! அப்பால் என்ன செய்கிறான்?

அவித்து நின்(று),' எவன்
ஆயினும் ஆக!' என்(று)
அங்கை
கவித்து, 'நீங்கிடச்
சிலபகல்!' என்பது
கருதாச்,
செவிக்குத் தேன்என
இராகவன் புகழினைத்
திருத்தும்

கவிக்கு நாயகன்,
அனையவன் உறையுளைக்
கடந்தான்.

[அங்கை கவித்து-அழகிய கையை அபயங் கொடுப்பதுபோல் (கேலியாகவும் உபேட்சையாகவும்) காட்டிக் கொண்டே. சில பகல் - சில தினங்கள். கருதா - கருதி. கவிக்கு நாயகன் - வானரர்களின் தலைவனாகிய ஹனுமான். அனையவன் உறையுளை - அந்தக் கும்ப கர்ணனது இருப்பிடத்தை.]

'அடா, ராட்சஸா ! நீ யாராயிருந்தாலும் சரி ; சில தினங்களில் உன் ஜாதகக் குறிப்பு லேசாய்க் கிழிபட்டுப் போகும் !' என்று உதாசீனமாகச் சொல்லிவிட்டு அப்பால் போகிறான் ஹனுமான்.

'செவிக்குத் தேன் என இராகவன் புகழினைத் திருத்தும் கவிக்கு நாயகன்' என்று ஹனுமானை எவ்வளவு அருமையாகப் பாராட்டுகிறான் கவிஞன் ! தமிழர்களின் 'செவிக்குத் தேன் என இராகவன் புகழினைத் திருத்தி'க் கொடுத்தவன் என்று இக்கவிஞனையும் நாம் பாராட்டுகிறோம்.

கும்பகர்ணன் உறங்கிக் கிடந்த மண்டபத்தை விட்டுப் புறப்பட்டதும், ஹனுமான், இன்னும் எத்தனையோ கூடங்கள், மாளிகை வரிசைகள், நர்த்தன சாலைகள், அரக்கர்கள் ஜாதிக்கூட்டம் போடும் அம்பலங்கள், பிறரை ஹிம்ஸிக்கும் அவர்களும் காரியஸித்திக்காகப் பிரார்த்தனை செய்துகொள்ளும் தேவாலயங்கள், சங்கீத மஹல்கள், சரஸ்வதி மஹல்களான பட்டி மண்டபங்கள் முதலான இடங்களில் எல்லாம் சீதையைத் தேடிப் பார்க்கிறான். இவன்

புகுந்து பாராத வாசலில்லை! ஜன்னல் வழியாகவும் நுழைந்து போவான்; சில சமயங்களில், காற்றுப் போலவும் புகைபோலவும் போவான்; அவசியத்திற்கு ஏற்றபடி உருவத்தைப் பெரிதாக்கிக்கொள்ளவும் செய்வான் :

நுணுகும், வீங்கும்,மற்(று)
அவன்நிலை யாவரே
நுவல்வார் ?
அணுவின், மேருவின்,
ஆழியான் எனச்செலும்
அனுமன்.

[நுணுகும் - தன்னை நுட்பமாக்கிக் கொள்வான். வீங்கும் - பெரிதாக்கிக் கொள்வான். நுவல்வுார் - சொல்வார். அணுவின் - அணுவைப் போலவும். மேரு வின் - மேரு மலையைப் போலவும். ஆழியான் என - மகா விஷ்ணுபோல. செலும் - செல்கிறான்.]

ஹனுமான் அணுவைப்போல நுணுகியும், மேரு போல வீங்கியும் சென்று நோக்கினன் என்பது இக் கவிஞன் மனோபாவத்திற்கும் உபலட்சணமாய்க் கொள்ளத் தக்கது. இம்மனோபாவமும், அணுவின் நுணுகி, மேருவின் வீங்கிச் செல்லும் நிலையை யாவரே நுவல்வார் ?

இப்படி ஹனுமான் சென்றுகொண்டிருக்கும் வழியிலே, கற்பகத் தருக்கள் அடர்ந்து பந்தலா யிருக்கிறது. ஓரிடத்தில் பளிங்குக் கற்களால் அமைந்த மேடைகளோடு கூடிய பவள மயமான ஒரு மாளிகை காணப்படுகிறது. அந்த இடத்திற்கு வந்த

தும், ஹனுமானுக்கு, கும்பகர்ணனைப் பார்த்ததால் ஏற்பட்ட கோபம் தணிந்துவிடுகிறது.

அந்த மாளிகைக்குள்ளே புகுந்து ஹனுமான்,

பளிக்கு வேதிகைப்
பவளத்தின் கூடத்தில்,
பசுந்தேன்
துளிக்கும் கற்பகப்
பந்தலில், கருநிறத்
தோரை
வெளித்து வைகுவது
அரிதென அவர்உரு
மேவி
ஒளித்து வாழ்கின்ற
தருமம்அன் னான்தனை
உற்ருன்.

[பளிக்கு வேதிகை - பளிங்கு வேதிகை - ஸ்படிகக் கற்களினுல் ஆகிய மேடைகள். பவளத்தின் கூடத்தில்- பவளமயமான அந்த மாளிகையில். வெளித்து - வெளிப் படையாய் வெண்ணிற வடிவம் கொண்டு. வைகுவது - தங்குவது. அரிதென - கூடாதென்று கருதி. அன்னுன் - போன்றவன். உற்ருன் - சமீபித்தான்.]

திவ்யமான கற்பகச்சோலை சூழ்ந்த பவளமாளிகை யில் பளிங்கு மேடைமீது கற்பகப் பூம்பந்தலின் கீழே, தர்மாத்மாவான விபீஷணன் படுத்திருக்கிருன். ஸாக்ஷாத் தர்ம தேவதையே அப்படிப் பள்ளிகொண் டிருக்கிறது என்று சொல்லவேண்டும்.

ஆனல், 'அந்தத் தேவதை'யைத் தூய்மைக்கு அறிகுறியான வெண்ணிறம் வாய்ந்ததென்று புரா

ணம் சொல்கிறதே, இவன் தோல் கறுப்பல்லவா ?' என்று ஒரு சந்தேகம் தோன்றக்கூடும். அதற்குச் சமாதானமாகத்தான் கவிஞன் சொல்கிறான் : 'கருநிற முள்ள அரக்கர்களோடு தர்மம் வெண்ணிறத்துடன் வாழ முடியாதல்லவா ? அதனால்தான் தர்மம் அவர் களுக்கு உரிய கருநிற வடிவத்தைத் தானும் தரித்துக் கொண்டு ஒளித்து வாழ்கிறது விபீஷணனாக.'

இந்த மாளிகையிலே விபீஷணன் உறங்கிக் கொண்டிருந்த போதிலும், ஹனுமான் உணர்வும விபீஷணன் உணர்வும் சந்திக்கின்றன :

> உற்று நின்(று),அவன்
> உணர்வைத்தன் உணர்வினால்
> உணர்ந்தான்.

உணர்வு உணர்வை உணர்ந்துகொள்கிறது. இனம் இனத்தைக் கண்டுபிடிக்கிறது. 'இவன் மகாத்மா!' என்று விபீஷணனை உணர்ந்துகொள்கிறான் ஹனு மான். கோபமும் பகையுணர்வும் கரைந்துபோக, ஹனுமான் அப்பால் போகிறான்.

குன்றுபோன்ற பல மாளிகைகளிலும் தேடிப் பார்த்த பிறகு, வேறொரு மாளிகை ஹனுமானது கவனத்திற்கு இலக்காகிறது. மகா பலசாலிகளும் ஆயுதபாணிகளுமான காவலர்கள் எவ்வளவு ஜாக் கிரதையாக அந்த வாசலில் காவல் செய்துகொண் டிருக்கிறார்கள் !

> ஏதி ஏந்திய
> தடக்கையர், பிறைஎயி(று)
> இலங்க

மூது ரைப்பெருங்
கதைகளும் பிதிர்களும்
மொழிவார்,

ஓதில் ஆயிரம்
ஆயிரம் உறுவலி
அரக்கர்

காது வெஞ்சினக்
களியினர் காவலைக்
கடந்தான்.

[ஏதி - ஆயுதங்கள். தடக்கை - பெரிய கை. பிறை எயிறு - பிறைச் சந்திரன் போன்ற கோரப் பற்கள். மூதுரை - பழமொழிகளோடு கூடிய. ஓதில் - அளவு சொல்லும்போது. உறுவலி - மிக்க வலிமை வாய்ந்த. காது - (எதிரிகளை) அழிக்கவல்ல. களி - (இங்கே) போர் வெறி.]

அவர்களில் சிலர் உறக்கம் வராமலிருப்பதற்காகப் பழைய திக்விஜய காலத்துக் கதைகளைச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். சிலர் விநோதமாகப் பிதிர் போட்டுப் பொழுது போக்குகிறார்கள். அந்தப் பழைய யுத்த சமாசாரங்களைப் பேசும்போதும், அவர்களுக்கு என்ன போர் வெறி! என்ன கோபாவேசம!

புகை புகாத வழியிலும் புகுந்து செல்லக்கூடிய ஹனுமான், மேலே சொன்ன கட்டுக்காவலையும் கடந்து, அந்த மாளிகைக்குள் பிரவேசிக்கிறான். அங்கு, மலைக் குகைக்குள் கவலையில்லாமல் உறங்கும் சிங்கம்போல் உறங்கிக்கொண்டிருக்கும் ஒருவனது உருவத் தோற்றத்தைக் கண்டு, 'இவன்தான் ராவணனா? அல்லது ஸாக்ஷாத் முருகக் கடவுளா?' என்று ஆச்சரியப்படுகிறான் :

'இளைய வீரனும்,
ஏந்தலும், இருவரும்
பலநாள்
உளைய உள்ளபோர்
இவனொடும் உள(து)' என
உணர்ந்தான்.

[ஏந்தல் - தலைவன்; (இங்கே) ராமன். உளைய - உள்ளத்திலே உளைச்சல் ஏற்படும்படி.]

முதல் முதல் லட்சுமணன் சிரமப்படுவான் என்று சொல்லி, பிறகு ராமனும் சிரமப்படுவான் என்கிறான். கடைசியாக, 'ராம லட்சுமணர் இருவரும் சேர்ந்து எதிர்த்தாலும் இவனோடு ஏற்படும் போரில் பல நாள் சிரமப்படவேண்டி யிருக்குமே!' என்று கவலைப்படுகிறான் ஹனுமான். (இந்திரஜித்தன் ஹனுமானையும் ராம லட்சுமணர்களையுங்கூட எவ்வளவு கவலைக்கு உட்படுத்தப்போகிறான், தன் போர்த் திறமையாலும் தந்திரங்களாலும்! அந்த நிகழ்ச்சிகளுக்கெல்லாம் ஹனுமானுடைய இந்தச் சிந்தனை இதிகாசப் போக்கிற்கு இசைந்த ஒரு ரஸமான பீடிகையாக விளங்குகிறது.)

ஹனுமான் கையை மடக்கித் தாடையில் வைத்துக்கொண்டு, 'இப்படிப்பட்ட மகா வீரபுருஷனைப் போர்த் துணையாகக் கொண்ட ராவணன் மூன்று லோகங்களையும் வென்றதில்தான் என்ன ஆச்சரியமிருக்கிறது!' என்று மறுபடியும் ஆச்சரியப்படுகிறான். கடைசியாக, 'இனி இங்கு வீணே பொழுது போக்குவது சரியன்று' என்று இந்திரஜித்தின் மாளிகையினின்று வெளியேறுகிறான்.

அட்சகுமாரன், அதிகாயன் முதலான போர் வீரர்களுடைய வீடுகளிலும், மந்திரி-பிரதானிகள் முதலானவர்களுடைய மாளிகைகளிலும் தாவிப் புகுந்து தேடிவிட்டு, ராவணனது அரண்மனையைச் சூழ்ந்திருக்கும் அகழியை அடைகிறான்.

அகழி நீர் பளிங்குபோலத் தெளிந்திருக்கிறது. சந்திரிகையில், கரையில் பளிங்குக் கல் பதித்த இடத்திற்கும் அகழி நீருக்கும் வேற்றுமை தெரியவில்லை. அத்தகைய அகழியில் வாழும் நாரை, குருகு, உள்ளான், அன்னம் முதலிய பலவகை நீர்ப்பறவைகளும் கலகலவென்று சிலம்பிக்கொண்டிருக்கின்றன. 'அரக்கர்களைப்போலச் செருக்கிக் களித்திருக்கின்றன!' என்றுதான் எண்ணத் தோன்றுகிறது. இலங்கையின் போகசக்தி பகுத்தறிவில்லாத பிராணிகளையும் வசீகரித்திருப்பதுபோலக் காண்கிறது.

மங்கிவரும் மாலை வெளிச்சத்திலும், பொங்கிப் பெருகும் சந்திரிகையிலும், ஹனுமான் இலங்கையை ஓர் அதிசயமான போகபூமியாகவே காண்கிறான். இயற்கையும் களிப்பில் மூழ்கி விளையாடிக்கொண்டிருக்கிறது. இலங்கையில் இயற்கைக்கும் அரக்கர்களுக்கும்கூட எவ்வளவு பொருத்தம்!—என்ன உறவு!

சிறைவாசம் செய்யும் சீதையிடம் அரக்கர்களுக்குத்தான் இரக்கமில்லை, இயற்கைக்கும்கூட இரக்கமில்லையா? அந்த அகழியின் துறைகளில் இயல்பாக மூடியிருக்கும் செந்தாமரைப் பூக்களை ஹனுமான் இப்போது பார்க்கிறான்; கொஞ்சம் ஆறுதல் ஏற்படுகிறது:

நறவு நாறிய
நாள்நறுந் தாமரை,
துறைகள் தோறும்
முகிழ்த்தன தோன்றுமால் ;
சிறையின் எய்திய
செல்வி முகத்தினோ(டு)
உறவு தாம்உடை
யார்ஒடுங் கார்களோ ?

[நறவு நாறிய - தேனோடு நறுமணம் கமழ்கிற. நாள் - அன்று மலர்ந்த. நறுந் தாமரை - நல்ல தாமரைப் பூக்கள். முகிழ்த்தன - மூடிக் குவிந்தனவாய் ]

‘இலங்கை முழுமையும் கவலையின்றிப் போகத்தில் மூழ்கிக் கிடக்கிறது. இந்தச் செந்தாமரைப் பூக்கள் மாத்திரம் மலர்ச்சி ஒடுங்கிக் கூம்பிக் குவிந்திருக்கின்றன. சிறைவாசம் செய்யும் சீதையின் முகத்திற்கு உறவினம் ஆதலால், அந்தத் திருமுகத்தைப்போல் இந்த மலர்களும் ஒடுங்கியிருக்கின்றன !’ என்று எண்ணும்போதுதான்,

‘களிக்கின் றாரலால்
கவல்கின்றார் ஒருவரைக்
காணேன் !’

என்று கலங்கிய உள்ளம், கொஞ்சம் தெளிவடைகிறது.

வாழ்க்கையைக் களியாட்டமாக்கிக் கொண்ட போகபூமியின் கோலாகலங்களுக்கிடையே, எவ்வளவு சாதுரியமாகக் கவிஞன் சிறைபுகுந்த செல்வியின் நினைவை வாசகர்களுக்கு உண்டாக்குகிறான் !

## 7. இலங்கையில் நடுநிசி

ஹனுமான் அகழியைக் கடந்து நடுநகரில் பிரவேசிக்கும்போது நடுநிசியாகிவிட்டது. மதுபான விருந்துகள் ஓய்ந்து, கடல்போல் கோஷித்துக்கொண்டிருந்த அரக்கர்களின் ஆர்ப்பாட்டங்களும் ஓய்ந்து போகின்றன. தொழிலாளிகள் தத்தம் தொழில்களிலிருந்து ஓய்வுபெற்று உறங்குகிறார்கள். சங்கீதக் கச்சேரிகளும் கோலாகலங்களும் அடங்கிவிடுகின்றன. சில அரக்கர்கள், அப்போதுதான் சஞ்சாரம் ஓய்ந்து, குதிரைகளிலிருந்து இறங்கி உறங்கப் போகிறார்கள். லாயங்களில் குதிரைகளும் தலைசாய்ந்து உறங்கத் தொடங்குகின்றன. வாசற் கதவுகளெல்லாம் மூடியிருக்கின்றன; பல வீடுகளில் விளக்குகளும் அணைந்துவிடுகின்றன.

இத்தகைய நடுராத்திரிப் பொழுதில்,

> நித்தநிய மத்தொழில
>     ராய்நிறையும் ஞானத்(து)
> உத்தமர் உறங்கினர்கள் ;
>     யோகியர் துயின்றார் ;
> மத்தமத வெங்களி(று)
>     உறங்கின : உறங்காப்
> பித்தரும் உறங்கினர் ;
>     இனிப்பிறர் கள்ளென்னும் ?

[நித்தம் நியமத் தொழிலராய் - நாள்தோறும் முறை தவறாமல் செய்யும் தொழில்களை உடையவர்களாய்-

மத்தம் - மயக்கம். மத வெங்களிறு - கொடிய மதம் பிடித்த யானைகள். என்னும் - என்ன ஆகும்.]

அழகும் போகமும் கொடுமையும் கலந்து வீதியும் வீடுமாகச் சமைந்த இந்த ராட்சஸ ராஜதானியில், இந்த நடுநிசியிலே, காலனும் துணிந்து வரமாட்டான்; வர நேர்ந்தால், வந்த காரியத்தைப் பாராமலே அஞ்சி ஓடிப்போய்விடுவான். எனினும், ஹனுமான், தன்னந்தனியே, இந்த ஊரிலே, இந்த வேளையிலே, சீதையைத் தேடித் திரிகிருன்!

கரிய நாழிகை
பாதியில், காலனும்
வெருவி ஓடும்
அரக்கர்தம் வெம்பதி,
ஒருவனே, ஒரு
பன்னிரு யோசனைத்
தெருவு மும்மை நூ
ருயிரம் தேடினன்.

[கரிய நாழிகை பாதியில்-நடுராத்திரிப் பொழுதில். வெருவி - அஞ்சி. வெம் பதி - கொடிய நகர். தெரு மும்மை நூருயிரம் - மூன்று லட்சம் தெருக்களில்.]

நகரத்தின் ஹிருதய ஸ்தானமாயிருப்பது ராவணனுடைய அரண்மனை. அதை அடுத்துச் சூழ்ந்துள்ள பல மாளிகைகளும், பூர்ணசந்திரனைச் சுற்றி மினிரும் நட்சத்திரக் கூட்டம்போல் அமைந்திருக்கின்றன. பல ஜாதிகளிலிருந்தும் ராவணன் கல்யாணம் செய்து கொண்டிருந்த மனைவியர்களின் மாளிகைகள் இவை. இவர்களில் யட்ச ஸ்திரீகள் உண்டு; ஸித்த ஜாதி

ஸ்திரீகளும், வித்தியாதர மாதர்களும் உண்டு; ராட்சஸ குல சுந்தரிகளும் உண்டு.

ஹனுமான் முதன்முதல் யட்ச ஸ்திரீகள் வசிக்கும் வீதிகளில் தேடிப் பார்க்கிறான். பூட்டப்பெற்ற இடங்களிலும் திறவுகோல் செல்லும் வழியாக நுழைந்து செல்கிறான் அதிநுட்பமான வடிவத்தோடு.

ராவணனை அவனுடைய மனைவியர் பலரும் உண்மையாகவே காதலிக்கிறார்கள். ஆனால், சீதையிடத்துக் காதல் ஏற்பட்ட காலம் முதல் அவன் வேறு ஒருத்தியையும் நினைப்பதில்லை. அந்நிலையில் யட்சகுல மனைவியர் சிலர் அவன் வரவை எதிர்பார்த்து எதிர் பார்த்து விரக வேதனைகளை அனுபவிக்கிறார்கள்.

அம்மாதர்கள், முன்பு அழகில் மாத்திரம் சித்திரப் பாவைபோல் இருந்தார்கள். இப்போதோ, ராவணனுடைய வீர சௌந்தரியத்திலே ஈடுபட்ட சிந்தையோடு, கண் இமைத்தலும் இல்லாமல், அப்படியே அசைவற்று இருக்கிறார்கள். 'இவர்கள் பெண்களல்லர், பெண்களின் சித்திரங்களே!' என்று ஹனுமான் கூட ஒருகணம பிரமித்துப்போவதாகத் தோன்றுகிறது:

பத்தி ரம்புரை
நாட்டம் பதைப்பறச்,

சித்தி ரங்கள்
எனஇருந் தார்சிலர்.

[பத்திரம் - (இங்கே) சிறு வாள். புரை - ஒத்த. நாட்டம் - கண்கள். பதைப்பற - இமைத்தல் இல்லாமல்.]

சில யட்ச மங்கையர், உறக்கம் வராமலிருக்கும் போதே கண்ணை மூடிக்கொண்டு உறங்குவார்போலக் கிடக்கிறார்களாம். இரவில் நெடுநேரம் ஆகிவிட்டதால் களைத்துப்போய்த் தூங்குகிறார்களா? இல்லை; இவர்கள் பொய்யுறக்கம் உறங்குகிறார்கள். இது என்ன கள்ளத்தனமோ?

மன்மதன் வரையறையில்லாமல் மேலும் மேலும் கொடிய கொடிய அம்புகளைப் பிரயோகிக்கிறான்; உறங்குவது போலிருந்தால் தர்மயுத்த முறைப்படி அம்புபோட்டுக் கொல்லமாட்டான் என்பது இவர்கள் எண்ணமா யிருக்கலாம். ஐயோ, பாவம்! தனித்திருக்கும் பெண்களை மரண வேதனைப் படுத்தும் 'வீர'னுக்குத் தர்ம யுத்தமும் தெரியுமா? இவர்களும் அவ்வளவு பைத்தியக்காரிகளா? கண்முன்னே ராவணன் வராததால், 'கண்ணை மூடிக்கொள்வோம்; கனவிலாவது ஒருவேளை வருவானா, பார்ப்போம்!' என்று எண்ணியிருக்கக் கூடும்.

இவர்களுடைய நோக்கம் எப்படி யிருந்தபோதிலும் தூக்கம கள்ளத்தூக்கமதான், வேதனையும் மரண வேதனை தான் என்பதில் சந்தேகமில்லை:

அள்ளல் வெஞ்சர
மாரனை அஞ்சியோ?
மெள்ள வேகன
வின்பயன் வேண்டியோ?
கள்ளம் என்கொல்?
அறிந்திலம்: கண்முகிழ்த்(து)
உள்ளம் இன்றி
உறங்குகின் றார்சிலர்.

[அள்ளல் வெஞ்சர மாரன் - அள்ளி யிறைக்கும் கொடிய அம்புகளை யுடைய மன்மதன். என்கொல் - யாதோ. அறிந்திலம் - அறியோம். முகிழ்த்து - மூடிக் கொண்டு.]

சில யட்ச ஸ்திரீகள், அழுதுகொண்டிருப்பதால் பயனில்லை யென்று, ராவண சக்ரவர்த்தியின் கம்பீர வடிவத்தைச் சித்திரத்திலாவது எழுதிப் பார்க்கச் சிந்தித்துக்கொண் டிருக்கிறார்கள் :

' அழுது செய்வதென் ?
ஆணை அரக்கனை
எழுதல் ஆங்கொல் ?' என்(று)
எண்ணுகின் றார்சிலர்.

[ஆணை - அதிகார தோரணைகளோடு கூடிய. அரக்கனை - (இங்கே) ராவணனை. ஆங்கொல் - ஆகுமோ.]

இதோ, பட்சிகளோடு சித்திரப் பதுமைகள் பேசுவது போன்ற ஒரு காட்சியைப் பாருங்கள் :

' ஆவ தொன்(று)அரு
ளாய் !என(து) ஆவியைக்
கூவு கின்றிலை !
கூறலை சென்(று) !' எனுப்
பாவை பேசுவ
போல்,கண் பனிப்புறப்
பூவை யோடும்
புலம்புகின் றார்சிலர்.

[அருளாய் - அருளோடு சொல்லாம லிருக்கிறாய். ஆவி - உயிரான காதலன். கூவுகின்றிலை - (போய்)

அழைக்கின்றாய் இல்லை. கூறலை - சொல்லவில்லை. எனா - என்று. பாவை - சித்திரப் பதுமை. பனிப்பு - நீர் துளித்தல். உற - மிக. பூவை - மைனா.]

தாம் வளர்க்கும் மைனா என்ற நாகணவாய்ப் பட்சிகளோடு சித்திரப் பிரதிமைகள் கொஞ்சுவது போல உரையாடிக்கொண்டிருக்கும் இந்தப் பெண்கள் என்னதான் பேசுகிறார்களோ? உண்மையில், அவர்கள் பேசுகின்றார் இல்லை, புலம்புகின்றார். அந்தப் பட்சிகளை நோக்கிக் குறைசொல்லி அழுகின்றார். 'அன்புமிக்க மைனாவே! உனக்கும் என்னிடம் இரக்கம் இல்லையா? ஆகக்கூடிய உதவி ஒன்றையும் செய்யாம விருக்கிறாயே! என் பிராணநாயகனைப் பிரிந்திருக்கும் நான் பிராணனையே பிரிந்தவளைப்போ லிருக்கிறேன். அந்தப் பிராணனை நீ கூவி அழைத்துக்கொண்டு வரலாகாதா? இந்த நிலைமையை நீ போய்ச் சொல்லவும இல்லையே!' என்று அந்தப் பெண்கள் புலம்பிக்கொண்டிருக்கும்போதே, கண்களில் இடைவிடாது நீர் துளித்துப் பெருகிக்கொண்டிருக்கிறது.

தென்றல் தம்மீது வீசவும், சிலர் ராவணனுடைய வீரத் தோள்களை நினைத்து உயிர் சோரத் துடிக்கிறார்கள்:

> ஈரத் தென்றல்
> இழுக, மெலிந்து,தம்
> பாரக் கொங்கையைப்
> பார்த்தனர், பாதகன்
> வீரத் தோள்களின்
> வீக்கம் நினைந்(து),உயிர்
> சோரச் சோரத்
> துளங்குகின் றார்சிலர்.

[ஈரத் தென்றல் - குளிர்ந்த தென்றல். இழுக - உராய்ந்து செல்ல. பாதகன் - (இங்கே) ராவணன். வீக்கம் - பருமை. துளங்குகின்றார் - துடிக்கிறார்கள்.]

சிலர் தூங்குமஞ்சத்தில் அமர்ந்து ஆடிக்கொண்டிருக்கும்போதே தேள் கொட்டினாற்போல் துடிக்கிறார்கள். இவர்களைக் கொட்டின அந்தத் தேள் எது தெரியுமா? வீணைகானம்தான் என்று திகைத்துப் போகிறார்களாம். இன்னும் சிலர் ராவணனுடைய புகழைப் பாடிப் பாடிப் பொழுதுபோக்கிக்கொண்டிருக்கிறார்கள்.

இத்தகைய யட்சகுல தேவியரின் வீதியைக் கடந்து ஹனுமான் ராவணனுடைய ராட்சஸ மனைவியர் வசிக்கும் இடங்களிலும் தேடுகிறான். இவர்களில் சிலர் ஆசையும் தாழமேயாகத் தனித்திருக்கிறார்கள். தங்களை உபேட்சித்திருக்கும் அந்த ராவணனிடத்தே பேதை மனம் பறந்து ஓடுகிறது. 'நெஞ்சே! உனக்குத்தான் என்ன பைத்தியம்?' என்று இவர்கள் மனத்தோடு பிணங்குகிறார்கள்.

சில ராட்சஸ ஸ்திரீகள் பிரிவாற்றாமைத் துன்பத்தால் உறக்கமில்லாதவர்களாய், முன்பு ராவணன் நாக ராஜாக்களிட மிருந்தும், வித்தியாதர ராஜாக்களிடமிருந்தும் பலாத்காரமாய்க் கவர்ந்துகொண்டு வந்து இவர்களுக்குப் பரிசாக அளித்திருந்த நாகரத்தினம் கிரீடம் முதலியவற்றைப் பந்தயம் வைத்துச் சூதாடிக்கொண்டிருக்கிறார்கள். வேறு சில அரக்கியர், சித்த கன்னிகைகள் பாடவும், நாக கன்னிகைகள் மத்தளம் கொட்டவும், முத்துப் பந்தலில் அப்ஸர ஸ்திரீகளை நாட்டியம் ஆடச்செய்து, அந்த ஆட்டத்தி

லும் அபிநயங்களிலும் தங்கள் துன்பத்தை மறக்க முயல்கிறார்கள்.

நகரம் ஓய்ந்திருந்தபோதிலும் இவர்களுக்கு ஓய்வுமில்லை, உறக்கமுமில்லை. இவர்களில் சிலர், 'குடியாத பொழுது விடியாது!' எனக் கருதியவர் போல், குடித்ததெல்லாம் போதாதென்று பின்னும ஒருமுறை கள்ளை உள்ளே தள்ளி அறிவை வெளியே தள்ளுகிறார்கள். ஏன்—உள்ளே தள்ளிய கள்ளரக்கனே அறிவைப் பிடித்து வெளியே தள்ளிவிடுகிறான்! கள்ளும் அறிவும் காதலிப்பதில்லையே! இரண்டும் ஒத்துழைப்பது இயலாத காரியமல்லவா? இப்படிப் பட்ட 'ஒத்துழையாமை'யோடு, 'என்மேல் தெய்வம் ஆவேசித்துவிட்டது பாருங்கள்!' என்று அட்டகாசம் செய்து பெருமூச்சு விட்டு இரண்டு கைகளையும் குவித்துத் தலையுச்சிமேல் உயர நீட்டுகிறார்கள்.

இந்நிலையில் இவர்கள் உடல்கூசி ரோமம் சிலிர்க்க ஒருதரம் வாய்திறந்து 'ஓ'வென்று அலறிப் பின்பு 'அக்கடா' வென்று ஒடுங்கி ஓய்ந்துகிடக்கிறார்கள் :

தயிர்நிறத்(து) உறுகள்,
உள்ளம் தள்ளுற
அறிவு தள்ளிப்,

பயிர்வுறத் 'தெய்வம்
என்மேல் படிந்தது
பார்மின்!' என்று,

உயிர்உயிர்த்(து) இரண்டு
கையும் உச்சிமேல்
உயர நீட்டி

மயிர்சிலிர்த்(து) உடலும்
கூசி வாய்விரித்(து)
ஒடுங்கு வாரும் —

[நிறத்து உறு கள்-நிறம் பொருந்திய கள். பயிர்வு-ஆரவாரம். பார்மின் - பாருங்கள். என்ரு - என்று சொல்லிக்கொண்டு. உயிர் உயிர்த்து - பெருமூச்சு விட்டு.]

இவர்களும் ஹனுமான் கண்ணில் படுகிருர்கள்.

இத்தகைய காட்சிகளை அரக்கியர் வீதியில் கண்ட ஹனுமான் அந்த அர்த்தராத்திரியிலே வித்தியாதர மாதர்கள் வசிக்கும் வீதியை அடைகிருன். இவர்களும் ராவண விரகத்தால் தவித்துக்கொண்டிருக்கிருர்கள். இவர்களுக்குச் சொற்ப காலமும் யுகங்கள் போல நீண்டு செல்கிறது. இவர்கள் நிலை,

சிறுகு காலங்கள்
ஊழிகள் ஆம்வகை
திரிந்துசிந் தனைசிந்த,

முறுகு காதலின்
வேதனை...

[சிறுகு காலங்கள் - சொற்ப காலங்கள். முறுகு - முதிர்ந்த.]

வித்தியாதர மாதர்களின் வீதியைக் கடந்து போகும் ஹனுமான் தனியாக அமைந்திருக்கும் ஒரு மாளிகையைக் கவனிக்கிருன். அம் மாளிகையின் சிறப்பையும், அதிலேயுள்ள இரத்தின தீபங்கள் மங்கும்படி பிரகாசிக்கும் ஒரு ஸ்திரீரத்தினத்தின் தேக

காந்தியையும் கண்டு, எவ்வளவு கோபமும் துயரமும் கொள்கிறான் பாருங்கள்!

என்ன மயக்கம்! கண்ணுக்கும் கருத்துக்கும் கேள்வி போடுகிறான்: 'கண்ணே! நீ சரியாகத்தான் பார்க்கிறாயா? கருத்தே! நீ கருதுவது சரிதானா?'

திவ்யமான அந்த மாளிகையில் மகாசம்பிரமத்தோடு தூங்கிக்கொண்டிருக்கும் அந்தப் பெண்ணரசைச் சீதாதேவி யென்றே சந்தேகிக்கிறான்:

இன்ன தன்மையின்,
எரிமணி விளக்கங்கள்
எழில்கெடப் பொலிகின்ற
தன்ன(து) இன்னொளி
தழைப்புறத், துயில்வுறு
தையலைத் தகைவில்லான்,
அன்னள் ஆகிய
சானகி இவள்'என
அயிர்த்(து),அகத்து எழுவெந்தீத்
துன்னும் ஆருயிர்
உடலொடு சுடுவதோர்
துயர்உழந்(து) இவைசொன்னான்.

[இன்ன தன்மையின்-இப்படிப்பட்ட தன்மையுடன். எரிமணி விளக்கங்கள் - பிரகாசிக்கின்ற ரத்தினமயமான விளக்குகள். எழில் - அழகு. தன்னது இன்னொளி - தனது இனிமையான தேக காந்தி. தழைப்பு உற - மிகவும் தழைக்க. துயில்வு உறு - தூங்கிக்கொண்டிருக்கிற. தையல் - அழகிய பெண். தகைவு இல்லான் - தடையின்றிச் செல்கின்ற ஹனுமான். அன்னள் - அத்தன்மை வாய்ந்தவள். அயிர்த்து - சந்தேகித்து. அகத்து-

உள்ளத்தில். வெந்தீ - கொடிய தீ. துன்னும் - பொருந்திய. துயர் உழந்து - துயரத்தால் வருந்தி.]

'இனி ராமனுடைய புகழும் பொலிவும், நானும், இந்த இலங்கையும், அரக்கரும் இன்றே நாசமாய்ப் போகவேண்டியதுதான்!' என்று தனக்குள் தானே சொல்லிக்கொள்கிறான் ஹனுமான :

'கற்பு நீங்கிய
கனங்குழை இவள்எனின்,
காகுத்தன் புகழோடும்
பொற்பும், யானும்,இவ்
இலங்கையும், அரக்கரும்
பொன்றுதும் இன்(று)!'என்றான்.

[கனங்குழை - பெண்;(இங்கே) சீதை. காகுத்தன் - ராமன். பொற்பு - பொலிவு. பொன்றுதும்-அழிவோம்.]

ஆனால், அடுத்த நிமிஷத்திலேயே சந்தேகம் தெளிந்துவிடுகிறது. 'ராமனை நோக்கிய காதல், வேறுமுகமாகவும் திரும்புமோ? நான் நினைத்தது தவறு' என்று தீர்மானிக்கிறான் :

'கானு யர்த்ததார்
இராமன்மேல் நோக்கிய
காதல்,கா ரிகையார்க்கு
மீனு யர்த்தவன்
மருங்குதான் மீளுமோ?
நினைந்தது மிகை' என்றான்.

[கான் உயர்த்த தார் - நறுமணம் சிறந்த பூமாலை. காரிகையார்க்கு - பெண்களுக்கு. மீனுயர்த்தவன்

மருங்குதான் - மீனக் கொடியை உயர்த்தியவனுகிய மன்மதனிடத்திலேதான். மிகை - குற்றம்.]

உண்மையில், இவள் ராவணனது பட்ட மகிஷியான மந்தோதரியாவள். 'இவள் சீதையில்லை' என்று ஊகித்துக்கொண்டு ஹனுமான் ராவணன் மாளிகைக்குள் பிரவேசிக்கிருன். பிரவேசித்ததும், நிமித்தங்களை (உற்பாதங்களை)க் காண்கிருன். அவை லங்கைக்குத்தான், லங்கேசனுக்குத்தான்; எனினும் பண்பட்ட இவனது உள்ளம் நெகிழ்ந்து உருகுகிறது— 'ஆஹா, என்ன ஹிருதய சம்பத்து!' என்று அதிசயிக்கும்படி:

புக்கு நின்று, தன்
புலன்கொடு நோக்கினன்,
பொருவருந் திருவுள்ளம்

நெக்கு நின்றனன்,—
'நீங்கும்அந் தோஇந்த
நெடுநகர்த் திரு!' என்ன...

[புக்கு நின்று - போய் நின்று. புலன் - கண்; அறிவு. கொடு - கொண்டு. பொருவருந் திருவுள்ளம்- ஒப்பற்ற சிறந்த உள்ளம். நெக்கு நின்றனன்-நெகிழ்ந்து நின்றவனுய். திரு - செல்வச் சிறப்பு: (சிறப்பச் செல்வம் முதலான) பலவகை ஐசுவரியங்களும். என்ன - என்று; (தனக்குள்) சொல்லிக்கொண்டு.]

இப்படி ஆலோசனையில் ஆழ்ந்திருக்கும் இந்த ராமதூதனுடைய ஹிருதயப் பண்பைப் பாருங்கள். 'நீங்கும் அந்தோ இந்த நெடுநகர்த் திரு!' என்று

இரக்கமிலா அரக்கர் பேரூரைக் குறித்தும் இரங்கும் உள்ளம் 'பொருவருந் திருவுள்ளம்' அல்லவா?

பிறகு, வேல்வீரர் பலர் திரண்டு உலாவிக் கொண்டே காவல் செய்யும் அரண்மனையில், விசால மான வெண்மலர்ப் பள்ளியில், பாற்கடல்மீது ஒரு கருங்கடல் கிடந்தாற்போல் படுத்திருக்கும் ராவண னைப் பார்க்கிறான்.

குழவி ஞாயிறு
குன்(று)இவர்ந்(து) அனையன
குருமணி நெடுமோலி,
இழைக ளோடுநின்(று).
இளவெயில் எறித்திட,
இரவெனும் பொருள்விய, -

[குழவி ஞாயிறு - இளஞ் சூரியன். குன்று-(இங்கே) உதயகிரி. இவர்ந்து அனையன - ஏறி இருப்பது போன் றன. குருமணி - பெரிய ரத்தினங்கள். நெடுமோலி - நீண்ட கிரீடங்கள். இழைகள் - ஆபரணங்கள். வீய- அழிய.]

—படுக்கையில் இருக்கும் ராவணன், உண்மையில் உறங்கிக்கொண்டிருக்கவில்லை. சீதையை எண்ணி எண்ணி அவஸ்தைப்பட்டுக்கொண்டிருக்கிறான். கைலாச மலையைக் குலுக்கித் திசையானைகளின் தந் தங்களை ஒடித்த தோள்கள் இப்போது மன்மத பாணங்களால் துளைக்கப்படுகின்றன.

அந்த இருபது தோள்களையும் பத்துத் தலையை யும் கண்ட ஹனுமானுடைய கண்கள் நெருப்பைக் கக்குகின்றன. அப்படியே உதைத்து உருட்டி அவனை

அழித்துவிடலாமா என்று ஒரு நிமிஷம் பல்லைக் கடித்துக் கைகளைப் பிசைகிறான் :

‘ தோள்ஆற்றல் என்ஆகும் ?
  மேல்நிற்கும் சொல்என்னும் ?
வாள்ஆற்று கண்ணாளை
  வஞ்சித்தான் மணிமுடி,என்
தாள்ஆற்ற லால்இடித்துத்
  தலைபத்தும் தகர்த்(து)என்தன்
ஆள்ஆற்றல் காட்டேனல்,
  அடியேனாய் முடியேனே !’

[வாள் ஆற்று கண்ணாள் - வாளாயுதம் போன்ற கண்களையுடைய சீதை. தாள் ஆற்றல் - கால்களின் வலிமை. ஆள் ஆற்றல் - ஆண்மைத்திறம். காட்டேனல்- காட்டாமற்போனால்.]

— என்று வரும் கோபம் மேலும் பொங்குகிறது.

பல்லைக் கடித்துக்கொண்டு ஹனுமான் தனக்குள் தானே சொல்லிக்கொள்ளும் வார்த்தைகள் அப்படியே நம் காதில் வந்து விழுகின்றன :

‘ நடித்துவாழ் தகைமையதோ
  அடிமைதான் ? நன்னுதலைப்
பிடித்தவாள் அரக்கனார்
  யான்கண்டும் பிழைப்பரோ ?
ஒடித்துவான் தோள்அனைத்தும்,
  தலைபத்தும் உதைத்(து)உருட்டி
முடித்(து),இவ்வூர் முடித்தால்,மேல்
  முடிவதெலாம் முடிந்தொழிக !’

[தகைமை - தன்மை. அடிமை - 'நான் ராம தாஸன்' என்ற அடிமைத்திறம். நன்னுதல் - அழகிய நெற்றியையுடைய சீதை. வான் தோள் - பெரிய தோள்கள். முடிவதெலாம் முடிந்தொழிக - நடப்பதெல்லாம் நடந்து தீர்க.]

உடனே கோபத்தை அடக்கிக்கொண்டு, 'அது எஜமானன் பணி அன்று' என்றும், 'ஒன்றை முயன்று வேறொன்று செய்வது அறிவுடைமைக்கு உரிய செயலாகாது' என்றும் தீர்மானிக்கிறான். 'ராவணன் காமத்தால் தவிக்கிற இந்த நிலைமையே சீதாபிராட்டி நல்ல நிலையிலிருக்கிறாள் என்ற செய்தியைத் தெரிவிக்கிறது' என்றும் ஊகஞ் செய்கிறான்.

எனினும் ஆறுதல் ஏற்படவில்லை. 'எங்கும் தேடியும் சீதையைக் காணவில்லையே! ஒருவேளை ராவணன் அவளைக் கொன்றுவிட்டானோ? கொல்லாமலிருந்தால் வேறு எங்கேனும் இந்த லங்கைக்கு அப்பால் கொண்டுபோய்ச் சிறை வைத்திருக்கிறானோ? நடந்தது இன்னதென்று தெரியவில்லையே! இனி நான் மீண்டுபோய் ராமனிடம் என்ன சொல்லப்போகிறேன்? இனி எனக்கு மரணமே கதி!' என்று பலவாறு சிந்தித்துத் துக்கம் அடைகிறான்:

'கண்டுவரும் என்றிருக்கும்
காகுத்தன், கவிகுலக்கோன்
கொண்டுவரும் என்றிருக்கும்;
யான்இழைத்த கோள்இதுவால்!'

[காகுத்தன் - ராமன். கவிகுலக்கோன் - வானர மகாராஜாவான சுக்கிரீவன். கோள் - செய்கை. ஆல் - அசை.]

'ராம சுக்ரீவர் எதிர்பார்ப்பதென்ன? நடந்ததென்ன? நான் வந்து சாதித்த காரியமோ இது. ராமரோ 'கண்டுவரும்' என்றிருப்பார்; நமது சுக்ரீவ மகாராஜாவோ, ராமபிரானைக் காட்டிலும் என்னை நன்றாக அறிந்திருப்பவராதலால், நான் சீதாதேவியைக் கொண்டுவந்தே விடுவேன் என்றே நம்பியிருப்பார்!' என்று நெஞ்சு பொருமிப் புலம்பும் ஹனுமானைப் பாருங்கள்.

'ராவணனைக் கன்னத்தில் அறைந்து சீதையைக் காட்டச் சொல்லலாமா? அவனும் இலங்கையும் உருகிப்போகுமாறு தீயை வைத்துவிடலாமா?' என்றுகூட ஆலோசிக்கிறான்:

'வல்அரக்கன் தனைப்பற்றி
வாயாறு குருதியுகக்

கல்அரக்கும் கரதலத்தால்
காட்டென்று காண்கேனோ?

எல்அரக்கும் அயில்நுதிவேல்
இராவணனும் இவ்வூரும்'

மெல்அரக்கின் உருக்கிஉக
வெந்தழலால் வேய்கேனோ?'

[வல் அரக்கன் - கொடிய ராவணன். வாய் ஆறு - வாய் வழியாக. குருதி உக - இரத்தம் பெருக. கல் அரக்கும் - கல்லையும் அழிக்கவல்ல. எல் - சூரியன் ஒளி. அயில் நுதி - கூரிய நுனி. மெல் அரக்கின் - மென்மையான அரக்குப்போல. உருக்கி, உக - உருகிக் கரையும்படி. வேய்தல் - மூடுதல்.]

இத்தகைய பெருங் கோபத்திலே பின்பு நேரிடப் போகும் லங்காதகனம்கூடக் கோபத் தீயோடு கலந்து மனக்கண் முன் தோன்றுகிறது.

ஆனால் ராவண ராஜ்யத்தில் எவ்வளவோ அதிருப்திகொண்டிருக்கும் தேவர்கள் இருக்கிறார்களே, அவர்களாவது சீதை இருக்கும் இடத்தைக் காட்டிக்கொடுக்கலாகாதா?

'வானவரே முதலோரை
வினவுவெனேல், வல்அரக்கன்
தான்ஒருவன் உளனாக,
உரைசெய்யும் தருக்கிலரால்!'

[வினவுவெனேல் - விசாரிப்பேனானால்: தருக்கு - பெருமை; (இங்கே) சுயமரியாதை.]

என்று எண்ணும் ஹனுமான், தன்மதிப்பை இழந்திருக்கும் தேவர்களிடம் ஒருவிதமான உதவியையும் எதிர்பார்க்கவில்லை.

இவ்வாறு கலங்கித் திரிந்துகொண்டிருக்கும் போது அசோகவனத்தைப் பார்க்கிறான். அந்த வனத்திலும் தேடிப் பார்க்கவேண்டுமென்று உள்ளே பிரவேசிக்கும்போது, அடிமைத் தேவர்களும் தங்களை மறந்து சந்தோஷ மிகுதியால் ஹனுமான்மீது பூமழை பொழிகிறார்கள்.

# 8. சிறையிருந்த செல்வி

நெருக்கமான கற்பாறைக்கிடையே அபூர்வமான ஒரு மருந்துப் பச்சிலை. தாராளமாக வேரோடி இலை வீசுவதற்கு வசதியில்லை. தண்ணீர் விட்டு வளர்ப் பவருமில்லை. ஒரு மழைத்துளியாவது அதன்மேல் விழவேணுமே, அதுவுமில்லை. அப்படிப்பட்ட மூலிகை யாக இருக்கிருள் சீதாபிராட்டி அசோக வனத்திலே :

வல்ம ருங்குல்வாள்
அரக்கியர் நெருக்கஅங்(கு)
இருந்தார்,
கல்ம ருங்(கு)எழுந்(து),
என்றும்ஓர் துளிவரக்
காணு
நல்ம ருந்துபோல்,
நலன்அற உணங்கிய
நங்கை ;
மெல்ம ருங்குல்போல்
வேறுள அங்கமும்
மெலிந்தாள்.

[வல் மருங்குல் - வலிமையான இடை. கல் - (இங்கே) கற்பாறை. மருங்கு - இடையே. நலன்அற - அழகுகெட. உணங்கிய - வாடிய. நங்கை - சீதை. மெல் மருங்குல்போல் - மெல்லிய (தன்) இடைபோல.]

இப்படி அரக்கியர் நெருங்கிக் காவல் செய்ய, சீதை புலிக்கூட்டத்தின் நடுவே அகப்பட்டுக்கொண்ட மானைப்போலவும், வெயிலில் ஏற்றிவைத்த விளக்கைப் போலவும் இருக்கிருள். தேவாமிர்தம் கொண்டு

காதற்கடவுளே செய்துவைத்த ஒரு சித்திரம் புகை யுண்டதுபோலவும் இருக்கிறது அந்த ரூப சௌந்தரி யம் :

தேவு தெள்கடல்
அமிழ்துகொண்(டு), அனங்கவேள்
செய்த
ஓவி யம்புகை
உண்டதே ஒக்கின்ற
உருவாள்.

[தேவு - தெய்வத்தன்மையுள்ள. தெள் கடல் அமிழ்து - தெளிவான பாற்கடல் அமிர்தம். அனங்க வேள் - மன்மதன்.]

ஒரு சமயம் கீழே விழுகிருள்; பிறகு விம்மி வாய் விட்டுப் புலம்புகிருள். ஒரு சமயம் வெதும்பிப் பயந்து எழுந்திருக்கிருள் ; உடனே ஏங்கிப் பரிதவிக் கிருள். அப்பால் சோர்ந்து நடுங்குகிருள். துக்கம் நெஞ்சை அடைக்கவும் பெருமூச்சு விடுகிருள். திடீ ரென்று ராமன் இருக்கும் திக்கை நோக்கித் தொழு கிருள். அடுத்த நிமிஷத்தில் ஓவென்று அழுகிருள். வேறு என்ன செய்யலாம் என்று தெரியாமல், ஒன் றும் தோன்ருமல், அப்படியே இருக்கிருள் :

விழுதல், விம்முதல்,
மெய்யுற வெதும்புதல்,
வெருவல்,
எழுதல், ஏங்குதல்,
இரங்குதல், இராமனை
எண்ணித்

தொழுதல், சோருதல்,
துளங்குதல், துயர் உழந்(து)
உயிர்த்தல்;

அழுதல் அன்றி,மற்(று)
அயல்ஒன்றும் செய்குவ(து)
அறியாள் !

பிரிவுத்துயரம் என்பதைக் குறித்துக் கேட்டிருக்கிறோம், படித்தும் இருக்கிறோம். ஆனால் அதைக் கண்ணால் பார்க்க முடியுமா? இப்போது இவளைப் பார்த்த பிறகு, 'அந்தத் துயரத்திற்கு உருவம் உண்டு, அந்த உருவம்தான் இது!' என்று சொல்லத் தோன்றுகிறது. இவள் விழுகின்ற, விம்முகின்ற, வெதும்புகின்ற, வெருவுகின்ற, எழுகின்ற, ஏங்குகின்ற, தொழுகின்ற, அழுகின்ற நிலைகளையெல்லாம் படம்பிடித்து அவற்றுக்கெல்லாம் கீழே 'பிரிவு எனும் பிணி' என்ற பெயரையும் பொறித்துவிடலாம் :

பிரி(வு)எ னும்துயர்
உருவுகொண் டால்அ(ன்)ன
பிணியாள்.

[கொண்டால்அன்ன - கொண்டாற்போன்ற.]

திசைகளையெல்லாம் கண்ணால் அளக்கின்றவள் போலப் பார்க்கிறாள் இப்போது. ஏன்?

' பரிதி வானவன்
குலத்தையும் பழியையும்
பாராச்

சுருதி நாயகன்
வரும்! வரும்! என்ப(து)ஓர்
துணிவால்,
கருதி மாதிரம்
அனைத்தையும் அளக்கின்ற
கண்ணாள்.

[பரிதி வானவன் - சூரியபகவானது. பாரா - பார்த்து. சுருதி நாயகன் - வேத நாயகனாகிய ராமன். மாதிரம் - திசைகள்.]

'தன் சூரிய குலத்தையும், அதற்கு ஏற்படும் களங்கமாகிய பழியையும் ஆலோசித்துப் பார்த்தாவது நாயகன் வருவான், இதோ வந்துவிடுவான், அதோ வந்துகொண்டிருப்பான்!' என்ற துணிவுடன், 'வரும்! வரும்!' என்று ஜபம் செய்துகொண்டிருக்கும் சீதை, 'அவன் எந்தத் திசையாக வந்துவிடுகிறானோ?' என்று தான் அப்படியெல்லாம் திசைகளைப் பார்த்துக்கொண்டிருக்கிறாள்.

'மானின் பின்னே போன பிராணநாதனைத் தம்பி காணப்போனானே; கண்டானோ, காணவில்லையோ? கண்டாலும், இந்தத் தீவு ஒன்று சமுத்திரத்துக்கு இடையிலே கிடக்கிறது என்பதுதான் அவர்களுக்கு எப்படித் தெரியும்?' என்ற சந்தேகங்கள், புண் திறந்து அதிலே நெருப்பு நுழைந்தாற்போல, அந்தக் காதல் மயமான நெஞ்சிலே நுழைகின்றன. 'ராட்சஸன் என்னை எடுத்துவரும்போது பார்த்த ஜடாயுவும் மாண்டுபோனாரே; என்னுடைய நிலைமையை எடுத்துச் சொல்ல வேறு யாருமில்லையே! ஐயோ, இந்தப் பிறப்பில் அவரைப் பார்க்கப்போகிறேனோ?' என்று

ஒரு சமயம் கலங்கிப் புலம்புகிருள். ' லட்சுமணனை மதியாமல் மகாபாவியாகிய நான் சொன்ன வார்த்தைக்‌ காக என்னைத் துறந்துவிட்டாரோ ?' என்ற பயமும் உண்டாகிறது. இந்தப் பயத்தால் உணர்வு சோர்ந்து உயிர் பதைக்கிறது.

இவ்வளவு கிலேசத்துக்கு மிடையே, ' அவருக்கு யார் உணவு பரிமாறுவார் ?' என்ற கவலையும் ஏற்படு கிறது சீதைக்கு. அப்படி அந்த வனத்தில் அவருக்குக் கிடைக்கும் உணவுதான் என்ன ? பருப்பும், வடை, பாயஸமுமா ? பெரும்பாலும் கீரை முதலான இலை யுணவுகள்தான் ! ஆனால் அந்த உணவுகளும் சீதை பரிமாற அவர் அமுதுசெய்யும்போது, அமுதமாகவே மதித்து மகிழ்ந்துபோவாராம். இந்த எண்ணம் போதுமே சீதையை விம்மி விம்மி அழச்செய்வதற்கு !

' இப்படிப்பட்ட நோய்க்கு மருந்தும் உண்டோ ?' என்று சீதை தன்னைத்தானே கேட்டுக்கொள்கிருள். கேட்டுக் கேட்டு மயங்குகிருள் :

> ' மருந்தும் உண்டுகொல்
> யான்கொண்ட நோய்க்(கு) ?' என்று
> மயங்கும்.

[உண்டுகொல் - உண்டோ.]

' அரக்கர்கள் இத்தனை நாள் சீதையை உயிரோடு வைத்திருக்க மாட்டார்கள் !' என்று தாம் தேடுவ தையே விட்டுவிட்டாரோ ? தாய்மார்களும் பரதனும் மறுபடியும் வந்து ஊருக்குத்தான் அழைத்துக் கொண்டு போய்விட்டார்களோ ? ஆனால், பதினலு வருஷம் வனவாசம் செய்யாமல் போகமாட்டாரே !

ஏதேனும் விபத்து நேர்ந்திருக்கவேண்டும்!—இப்படியெல்லாம் எண்ணங்கள் தாறுமாருக எழுந்து சீதையின் உள்ளத்தில் குழம்பிக்கொண்டிருக்கின்றன.

'அரக்கர்களோடு காட்டில் இன்னும் ஒரு பெரும் போர் ஏற்பட்டிருக்கவேண்டும்!' என்று மனம் பொருமிக்கொண்டிருக்கும்போதே, கரன் முதலானவர்களோடு முன்னே விளைந்த பயங்கரமான சண்டை இப்போதும் கண்ணெதிரே நடப்பதுபோலக் காண்கிறது. இந்நிலையில் சீதையின் கவலைக்கு ஓர் எல்லையும் உண்டோ?

கணவனேடு வாழ்ந்துகொண்டிருந்த காலத்தில் நடந்த சில முக்கியமான நிகழ்ச்சிகளும், மரணத் துன்பம் அனுபவித்துக்கொண்டிருக்கும் சீதையுள்ளத்தில் சலனப்படக் காட்சிகள்போல் தோன்றித் தோன்றி மறைகின்றன.

கைகேயி செய்த சூழ்ச்சியும், அதைத் தனக்கே வெற்றியாக்கிக்கொண்ட ராமனது அருங்குணமும் முதன்முதல் ஞாபகத்திற்கு வருகின்றன:

'தெம்ம டங்கிய
சேண்நிலம்', கைகயர்
தம்ம டந்தை,'உன்
தம்பிய தாம்'என,
மும்ம டங்கு
பொலிந்த முகத்தினன்,
வெம்ம டங்கலை
உன்னி வெதும்புவாள்.

மெய்த்தி ருப்பதம்
மே(வு)!'என்ற போதினும்,

இத்தி ருத்துறந்(து)
ஏ(கு)!' என்ற போதினும்,
சித்தி ரத்தின்
அலர்ந்தசெந் தாமரை
ஒத்தி ருக்கும்
முகத்தினை உன்னுவாள்.

[தெவ் மடங்கிய - சத்துருக்கள் அடங்கிய. சேண் நிலம் - பெரிய ராஜ்யம். கைகயர்தம் மடந்தை - கைகேயி. வெம் மடங்கல் - கொடிய சிங்கம். மெய்த் திரு - தர்ம வழியில் கிடைத்த செல்வம். மேவு - (நீ) அடைவாயாக. அலர்ந்த - மலர்ந்த.]

ராம பட்டாபிஷேகம் என்று விளம்பரஞ் செய்த பின் முடி சூடிக்கொள்ள வரும் ராமனைப் பார்த்துக் கைகேயி, 'இந்தச் சிங்காதனம் உனக்கில்லை, பரதனுக்குத்தான்!' என்று கண்டிப்பாய்ச் சொல்லிவிட்டாள்.

ராமன் சிரித்த முகத்துடனேதான் வந்தான். முடிசூடும் ஆசையினால் இல்லை; வழக்கமாகவே அந்த முக-பாக்கியம் அவனுக்கு. சிறிய தாயார், 'ராஜ்யம் இல்லை!' என்று சொன்னதும், ஒன்றும் குடிமுழுகிப் போய்விடவில்லை! அந்தச் சிரித்த முகம் சிறிதும் மாறுபடவில்லை; முன்னிலும் மும்மடங்கு அதிகமான சௌந்தரியத்துடன் ஜொலித்ததாம். அப்பேர்ப்பட்ட ராஜ சிங்கத்தின் மகத்தான வலிமையும் பொறுமையும், அற்புதமான கலைச்சுவையுடன் சித்திரத்திலே மலர்ந்திருக்கும் செந்தாமரை போன்ற அந்தத் திருமுகத்திலே இப்போது எவ்வளவு பிரத்தியக்ஷமாய்த் தோன்றித் திகழ்ந்து, இவளுடைய உள்ளத்தை வெதுப்புகின்றன!

இன்னும் காலம் பின்னோக்கிச் செல்கிறது: கல்யாண ஞாபகம் வருகிறது. 'இந்த மலைபோன்ற வில்லை இந்தச் சுகுமாரன வளைப்பானே, வளைக்க மாட்டானே!' என்று தந்தையாகிய ஜனக மகாராஜா ஏங்கிக்கொண்டிருந்தாராம். அப்படி அவர் ஏங்கிப் பெருமூச்சு விடும்போதே, அந்த வில் இரண்டு துண்டாகி விழுந்துவிட்டது! அதே சமயம் ராமனுடைய வீரத் தோள் ஓங்கிப் பூரித்திருந்தது. அந்தத் தோள்களின் பூரிப்பு இன்றும், இப்போதும், இவள் நெஞ்சை மயக்குகிறது:

> ஏங்கும் மாத்திரத்(து)
> இற்(று)இரண் டாய்விழ,
> வீங்கு தோளை
> நினைந்து மெலிந்துளாள்.

[மாத்திரத்து - மாத்திரத்தில். இற்று - முறிந்து.]

'கல்யாண மில்லாமலே இருந்துவிடுவாளோ?' என்று ஏங்கும் பெண்ணைப் பெற்றவரின் அந்த ஏக்கத்தையும், மாப்பிள்ளையின் அந்தத் தோளின் பூரிப்பையும், காதலியின் அன்றைய பூரிப்பையும் இன்றைய மெலிவையும், எவ்வளவு சுலபமாகப் படம் பிடித்துக் காட்டுகிறது கவிதை!

மேலே சொன்ன இரண்டு காட்சிகளையும் சீதை நேரில் பார்க்கவில்லை; பிறர் சொல்லக் கேட்ட விஷயங்களே. இப்போது சீதையின் மனோபாவம் பிடித்துக் காட்டும் படங்கள்தான்! அப்படியானால் சீதை நேரில் பார்த்து அனுபவித்த நிகழ்ச்சிகள் எவ்வளவு தெளிவாக மனக்கண் முன் வரவேண்டும்!

கல்யாணம் நடக்கும்போது, ராமன் கை தன் கையைப் பிடித்துக்கொண்டதும், தன் வலது காலை அவன் தன் வலது கையால் பிடித்து அம்மிமேல் எடுத்துவைத்ததும், இப்போதுதான் நடப்பதுபோலத் தோன்றுகின்றன. கல்யாணம் முடிந்து அயோத்திக்குத் திரும்பிச் செல்கையில், க்ஷத்திரிய குலத்தின் ஜன்ம விரோதியான பரசுராமனை ராமன் கர்வபங்கம் செய்ததும் ஒரு தெளிவான மனப்படமாக வருகிறது. அது தன் கண்முன் நடந்ததால், வில் முறித்த வெற்றி போல், அதுவும் தன்மீது ராமன் கொண்டிருந்த காதலின் வெற்றிதான் என்றே கருதுகிருள் சீதை.

இத்தகைய முக்கியமான காட்சிகளோடு, தான் கணவனுடன் காட்டுக்குப் புறப்படும் சமயத்தில் அவ்வளவு சோகத்திற்கு இடையே நிகழ்ந்த ஒரு ஹாஸ்யக் காட்சியும் மனக்கண் முன் ஓடி வருகிறது:

பரித்த செல்வம்
ஒழியப் படரும்நாள்,

அருத்தி வேதியர்க்(கு)
ஆன்குலம் ஈந்(து),அவர்

கருத்தின் ஆசைக்
கரையின்மை கண்(டு)இறை

சிரித்த செய்கை
நினைத்(து),அழும் செய்கையாள் !

[பரித்த - தாங்குவதற்கு உரிமையான. படரும் - (காடு) செல்லும். அருத்தி - ஆசை. ஆன் குலம் - பசுக் கூட்டம். இறை - அற்பம்.]

காட்டுக்குப் புறப்படும்போது ராமன் தன்வச முள்ள பொருள்களையெல்லாம், விரும்பிவந்தவர்களுக் கெல்லாம் வாரி வழங்கிக்கொண்டிருந்தான். கடைசி யாகச் சில வைதிகர்கள் யாசிக்க வந்தார்கள். வேறு பொருள் தன்னிடம் இல்லாததால் மிஞ்சியிருந்த பசுக் களை ராமன் அவர்களுக்குப் பரிசாகக் கொடுத்தான். எளிய வாழ்க்கையை மேற்கொண்டிருக்கும் வேதியர் களுக்கு அது போதுமென்று எண்ணினான். அவர் களோ அவ்வளவு லேசாக அவனை விட்டுவிட விரும்ப வில்லை. 'இன்னும் ஏதாவது கிடைக்காதா?' என்று ஏற இறங்கப் பார்த்தார்கள். ராமன் உடம்பிலே மரஉரி தவிர ஆபரணம் இரத்தினம் முதலியவை ஒன்றும் காணப்படவில்லை.

அந்தச் சமயம் அவர்கள் பார்த்த பார்வையாகிய ஜன்னல் வழியாக ராமன் அவர்கள் உள்ளத்தையே பார்த்துவிட்டான். எவ்வளவு பேராசை அந்த உள் ளங்களில் கரையில்லாத கடல்போலப் பொங்கி, அவர் களுடைய முகத்திலும் கண்களிலும் அலையெறிந்து கொண்டிருந்தது! ராமனுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. ஆனால் நாகரிகமாக அதை அடக்க முயன்றான்; முயன் றும் அடக்கமுடியாமல் கொஞ்சமாகச் சிரித்துவிட் டான். [வால்மீகி ராமாயணத்தில் திரிசடன் என்ற முனிவனைக் குறித்து வரும் ஒரு நிகழ்ச்சியை வைத்துக் கொண்டு 'அருத்தி வேதியர்'களை யெல்லாம் பரிகசிக் கும் கம்பசித்திரம் இது. அறிவையும் கலைகளையும் விருத்திசெய்யும் 'விருத்தி வேதியர்'களைக் கம்பன் போற்றுவதை அயோத்தியா காண்டத்தில் காண் கிறோம்.]

சீதையும் கூட இருந்து அனுபவித்த காட்சி இது. இவள் எப்படிச் சிரிப்பை அடக்கிக்கொண்டாளோ, இறைவனுக்குத்தான் வெளிச்சம். இப்போதிருக்கும் நிலையிலோ, அந்தச் சிரிப்பின் நினைவே இவளுக்கு அழுகையை உண்டாக்குகிறது.

பிறகு, பரதன் தனக்குத் தாயார் வாங்கிக் கொடுத்த கிரீடத்தை உரிமை பாராட்டிச் சூடிக் கொள்ளாமல், அண்ணனைப்போல் தானும் ஜடைமுடி தரித்துக் காட்டில் தோன்றியதும், அது ராமனை இரங்கி ஏங்கச் செய்ததும், ஞாபகத்திற்கு வந்து இவளை மீண்டும் எவ்வளவோ வருத்தத்திற்குள் ளாக்குகின்றன.

இக் காட்சிகளுக் கெல்லாம் நடுநாயகமாகத் தோன்றுவது, பரம ஏழையும், 'கீழ்மகன்' என்று ஒதுக்கப்பட்டவனுமாகிய குகனோடு ராமன் கொண்ட தோழமைதான் :

> ஆழ நீர்க்கங்கை
> அம்பி கடாவிய
>
> ஏழை வேடனுக்(கு),
> 'எம்பிநின் தம்பி ; நீ
>
> தோழன் ; மங்கை
> கொழுந்தி !' எனச்சொன்ன
>
> வாழி நண்பினை
> உன்னி மயங்குவாள் !

[அம்பி - தோணி. கடாவிய - செலுத்தின. எம்பி - என் தம்பி. உன்னி - நினைத்து.]

தன் தம்பியை அந்த ஏழை வேடனுக்குத் தம்பி யாக்கியதோடு, தன்னையும் ராமன் அவனுக்குத் தோழன் ஆக்கிக் கொடுத்தான். அப்படியும் நின்று விடாமல், 'அந்தத் தோழனுக்கு என்னையும் கொழுந் தியாளாக அறிமுகப்படுத்தினாரே!' என்ற நினைப்பு வருகிறது சீதைக்கு. அந்த நட்புக்காதலை—சிநேக தர்மத்தை—இவளால் மறக்க முடியவே இல்லை. ('அத்தகைய நட்பு வாழி!' என்று சீதையே வாழ்த்துவதுபோல் அமைந்திருக்கிறது செய்யுள்.) அந்தக் காட்சியிலேயே இப்போது மோகித்து மூர்ச் சித்துவிடுவாள்போலத் தோன்றுகிறது.

* * * *

இதே சமயம் இந்த நள்ளிரவில் காவல் செய்யும் அரக்கியர் யாவரும் கள்ளுண்டு கருத்தழிந்து மெய்ம் மறந்து உறங்கலாயினர். அந்தக் கூட்டத்திலே விபீஷ ணன் புதல்வியான திரிஜடையும் இருந்தாள். அவள் மட்டும் அந்த மதுபான விருந்திலும் கலந்துகொள்ள வில்லை; அந்த உறக்க மயக்கத்திற்கும் இடங் கொடுக்கவில்லை. சீதைக்கு ஆறுதல் சொல்லச் சமயம் பார்த்திருந்தாள்.

## 9. திரிஜடை கனவு

காவலாளிகளான அரக்கியர் மதுவுண்டு மயங்கிக் கிடக்க, சீதையும் துயர மிகுதியால் உணர்வு ஓய்ந்து மயக்கமடையும் நிலையை அடைந்தாள். அப்போது இடதுகண் முதலிய உறுப்புக்கள் துடிப்பதாகத் தோன்றியது. 'ஆம், காதலர் அந்த முனிவருடன் மிதிலை நகருக்கு வந்தபோது நேர்ந்த அதே நன்னிமித்தம், சந்தேகமில்லை!' என்று எண்ணிக்கொண்டே, தன் மயக்க நிலையை உதறிவிட்டுத் தாயினும் இனிய திரிஜடையை நோக்கினாள்.

'தூயவளே! என் தோழியே! நான் சொல் வதைக் கேட்பாயாக!' என்ற பீடிகையுடன் தனக்கு நேர்ந்த நன்னிமித்தத்தைத் தெரிவித்து, ராமன் காடு புகுந்தபொழுதும், காட்டிலே ராவண சந்நியாசி வஞ்சனை இழைத்தபொழுதும், வலதுகண் துடித்தது என்பதையும் ஞாபகப்படுத்திக் கொண்டாள். 'ஆனால் இப்போது நேர்ந்த நன்னிமித்தத்தால் இங்கே என்ன நன்மைதான் விளையக்கூடுமோ?' என்று கேட்டாள்.

அதற்குத் திரிஜடை, 'அம்மா! உனக்குச் சோப னம்!' என்று சொல்லி, மறுபடியும் இவளை நோக்கி, 'நீ உன் துணைவரை அடைவது உண்மை!' என்றாள். தான் சீதையிடம் கண்ட நன்னிமித்தம் ஒன்றையும் எடுத்துக்காட்டினாள் :

'உன்நிறம் பசப்புற,
உயிர்உ யிர்ப்புற,
இன்நிறத் தேன்இசை
இனிய நண்பினள்

மின்நிற மருங்குலாய்!
செவியின் மெல்லெனப்

பொன்நிறத் தும்பிவந்(து)
ஊதிப் போயதால்.'

[பசப்புற - பசுமை அடைய. உயிர்ப்பு-உயிர்த்தல். இன்நிறத் தேன்-(கண்ணுக்கு) இனிய நிறத்தையுடைய தேன். தேன் இசை - தேன் போன்ற இசை. மின்னிற மருங்குலாய் - மின்னலின் நிறத்தையுடைய இடையோடு கூடிய சீதையே. செவியின் - காதில். பொன்நிறத் தும்பி - பொன்வண்டு.]

'பொன் வண்டு ஒன்று மெல்லென வந்து தேன் போன்ற இன்னிசையை உன் காதில் ஊதிப் போயிற்று!' என்று திரிஜடை சொல்லிக்கொண்டிருக்கும்போதே ஹனுமான் அசோக வனத்திற்குள் வந்துவிட்டான்.

பிறகு தான் கனுக்கண்டதையும் திரிஜடை சொல்லத் தொடங்குகிருள்: 'எண்ணெய் தேய்த்துக் கொண்டு இரத்த வர்ணமான ஆடை உடுத்து ஒரு தேரின் மேலேறித் தென்திசையை நோக்கிப் போனுன். அந்தத் தேரை முரட்டுக் கழுதைகளும் பேய்களும் இழுத்துச் சென்றன. அம்மா! அந்தப் பொன் முடிகளையும் அந்தப் பெருமிதம் ததும்பிய முகங்களையும் பார்த்ததும் ராவணன் என்று தெரிந்துவிட்டது. அவனேடு அருமைப் பிள்ளைகளும், பந்து ஜனங்களும், வேறு அரக்கர்களும் போய்க்கொண்டிருந்தார்கள். அந்தத் திக்கையே நான் பார்த்துக் கொண்டிருந்தேன். அவர்களெல்லாம் திரும்பி வரவில்லை.

'எங்கே போய்விட்டார்கள் என்று திகைத்துக் கொண்டிருக்கும்போது, பேரிகைகள் முழக்குவோர் இல்லாமல் தாமே முழங்கின! மேகம் இல்லாமல், மின்னல் இல்லாமல், ஆகாசமே வெடித்துவிட்டதுபோல் இடி இடித்தது. நட்சத்திரங்கள் உதிர்ந்து விழுந்தன. திடீரென்று இலங்காபுரியும் கோட்டை மதில்களும் பம்பரம்போலச் சுழன்றன. திக்குக்கள் தீப்பற்றி எரிந்தன. விளக்கு இருட்டை விழுங்குவதற்கு மாறாக இருட்டே விளக்கை விழுங்கியது! மேகம் இரத்த மழை பொழிந்தது! ஆயுதங்களெல்லாம், வீரர்கள் கையிலெடுத்து யுத்தம் செய்யாமலிருக்கும்போது, தாமே ஒன்றோடொன்று ஜணஜணவென்று தாக்கிப் போர்புரியத் தொடங்கின. மகாராணியின் பின்னிய கூந்தல் தானே அவிழ்ந்து விழுந்தது; பக்கத்தில் இருந்த விளக்கின் ஜ்வாலை பட்டு அது சுறுசுறு வென்று எரிந்தது.'

சீதை பிரமித்துக் கேட்டுக்கொண்டிருக்கிறாள்.

'இன்னும் சொல்லுகிறேன் கேள், அம்மா!' என்று திரிஜடை மேலும் சொல்லுகிறாள் :

என்றனள் இயம்பி,' வே(று)
இசைப்பக் கேட்டியால் :

இன்(று)இவண் இப்பொழு(து)
இயைந்த(து) ஓர்கனா :

வன்துணைக் கோளரி
இரண்டு, மாறிலாக்

குன்றிடை, உழுவையங்
குழுக்கொண்(டு) ஈண்டியே,

[இசைப்ப - சொல்ல. கேட்டி - கேட்பாயாக. இவண் - இவ்விடத்தில். வல்துணை - வலிய; ஒன்றுக்கு ஒன்று துணையான. கோளரி - ஆண்சிங்கங்கள். மாறு இலா - ஒப்பில்லாத. குன்றிடை - ஒரு குன்றிலே. உழுவையங் குழு - கண்ணுக்கு அழகாய்த் தோன்றுகிற புலிக் கூட்டம். ஈண்டி - சேர்ந்து வந்து.]

வரம்பிலா மதகரி
உறையும் அவ்வனம்

நிரம்புற வளைந்தன,
நெருக்கி நேர்ந்தன,

குரம்பறு பிணம்படக்
கொன்ற; மாறிலாப்

புரம்புக இருந்ததோர்
மயிலும் போயதால்!'

[வரம்பிலா - அளவில்லாத. மத கரி - மதத்தை யுடைய யானைகள். உறையும் - வசிக்கிற. நிரம்புற - நிரம்புதல் பொருந்த; சிறிதும் விடாமல். நேர்ந்தன - எதிர்த்தனவாய். குரம்பறு - எல்லையற்ற. மாறிலாப் புரம் - பகையில்லாத பட்டணம்; அயோத்தி.]

'இன்றைக்கு இந்த இடத்தில் இப்போதுதான் வேறொரு சொப்பனமும் கண்டேன்' என்று அதையும் சொல்லத் தொடங்கிவிடுகிறாள்:

'இரண்டு சிங்கங்கள் ஒன்றுக்கொன்று துணையாகப் புறப்பட்டன —' என்று இந்தச் சொப்பனக் கதையை ஆரம்பித்ததும், சீதை யுள்ளம் புருஷ சிம்மங்களாகிய ராம லட்சுமணர்களை நினைத்திருக்க வேண்டும்.

திரிஜடை சொல்கிறாள் : 'அந்தச் சிங்கங்கள் குன்றுகளிடையே வந்து சேர்ந்தன. அந்தப் பிரதேசத்தில் புலிகள் கூட்டமாய்க் காணப்பட்டன. சிங்கங்கள் அந்தப் புலிக்கூட்டத்தையும் சேர்த்துக்கொண்டு அங்கேயிருந்து புறப்பட்டன.'

சொப்பனத்தின் இப்பகுதி சீதைக்குப் புரிந்திருக்க முடியாது. கிஷ்கிந்தாபுரி வாசிகளான வானர வீரர்களை ராம லட்சுமணர்கள் சேர்த்துக்கொண்டு இலங்கை நோக்கியதை இவள் எப்படி அறிவாள் ?

திரிஜடை மேலும் சொல்கிறாள் : 'ஒரு பெரிய காடு. அந்தக் காட்டிலுள்ள யானைகளுக்கெல்லாம் மதம் பிடித்திருந்தது. அந்த மதத்திற்கு ஒரு வரம்பு கிடையாது. அந்த யானைக் கூட்டங்களுக்கும் அளவில்லை !'

இலங்காபுரியையும் மதங்கொண்ட அரக்கர்களையும்தான் திரிஜடை கனவில் கண்டாள் என்று சீதை ஊகித்திருக்கக்கூடும்.

'அப்பேர்ப்பட்ட காட்டை வளைத்துக்கொண்டன சிங்கங்களும் புலிகளும். பிறகு எல்லையில்லாத பிணக் காடாகிவிட்டது; எங்கும் அந்த யானைப் பிணங்கள்தான். அப்பால் அந்தக் காட்டிலிருந்த ஒரு மயில் வெளியே போயிற்று !' என்கிறாள் திரிஜடை.

எவ்வளவு கவனமாய்க் கேட்டுக்கொண்டிருக்கிறாள் சீதை ! அந்த மயில் — என்ன, இவளுடைய பிரதிபிம்பம்தானோ ? அந்தச் செய்தி—அந்த விடுதலை—இவள் உள்ளத்தை வசீகரிக்கிறது. அதைக் குறித்து இன்னும் கொஞ்சம் விவரமாய்த் தெரிந்துகொள்ள ஆசை.

திரிஜடை பின்னும் சொல்கிறாள்: ‘அதே சமயத்தில் வேறொரு காட்சி என் கவனத்திற்கு இலக்காயிற்று. ஆயிரம் கிளை விளக்குகள் ஜாஜ்வல்யமாய்ப் பிரகாசிக்கும் அலங்காரமான ஒரு பெரிய தீபம். ஆஹா, எவ்வளவு தூரம் ஒளி வீசியது! அந்தத் தீபத்தை மகாலட்சுமி போன்ற ஒரு பெண் கையில் ஏந்திக்கொண்டிருந்தாள். அவளுடைய சிவந்த மேனியும் தீச்சுடரைப்போல் ஜொலித்துக்கொண்டிருந்தது. காட்டிலிருந்து மயில் வெளிப்பட்டபோது, அந்தப் பெண்மணியும் அரண்மனையிலிருந்து வெளிப்பட்டாள். என்னை அறியாமலே என் மனம் அவளைத் தொடர்ந்தது. அந்த ஸ்திரீ என் தந்தை வீட்டுக்கே வந்து சேர்ந்தாள் :

‘ ஆயிரம் திருவிளக்(கு)
 அமைய மாட்டிய
சேய்ஒளி விளக்கம்ஒன்(று)
 ஏந்திச் செய்யவள்,
நாயகன் திருமனை
 நின்று, நண்ணுதல்
மேயினள் வீடணன்
 கோயில், மென்சொலாய் !’

[சேய் ஒளி விளக்கம் - வெகு தூரம் ஒளி வீசும் பெரு விளக்கு. செய்யவள் - சிவந்த நிறமுள்ளவள்; லட்சுமி. நாயகன் - சக்ரவர்த்தியாகிய ராவணன். நண்ணுதல் மேயினள் - அடைந்தாள். வீடணன் - விபீஷணன். கோயில் - அரண்மனை. மென்சொலாய் - மென்மையான சொற்களையுடைய சீதையே.]

இவ்வாறு சுவாரஸ்யமாகத் திரிஜடை சொல்லி வரும்போதே, சீதையின் மனம் திரும்பத்திரும்ப மயிலைத் தொடர்ந்திருக்கவேண்டும். 'அந்த மயிலை அப்படியே விட்டுவிட்டாளே! இனி மறுபடியும் ஏதாவது சொல்லப் போகிறாளா, சொல்லமாட்டாளா?' என்று சீதை நெஞ்சு படபடத்துக் கொண்டிருக்கிறது என்று கருதலாம். (ராஜ்யலட்சுமி ராவணனுடைய அரண்மனையிலிருந்து விபீஷணனுடைய அரண்மனைக்குச் சென்றது திரிஜடையின் கவனத்தை ஈர்த்தது போல் சீதை யுள்ளத்தைக் கவர்ந்திருக்க முடியாதல்லவா?)

'லட்சுமியைப்போல இந்தப் பெண் அந்தப் பெரிய அலங்கார தீபத்தோடு எங்கள் மாளிகைக்குள் பிரவேசித்த சமயத்திலே நீ என்னை எழுப்பிவிட்டாய்! ஆகையால் என் சொப்பனம் முடிந்ததில்லை!' என்று திரிஜடை சொல்லி முடித்ததும், அந்தச் சுகிர்த வசனங்களைக் கேட்ட சீதை என்ன செய்கிறாள் தெரியுமா?

> 'பொன்மனை புக்கஅப்
> பொருவில் போதினில்,
> என்னை நீ உணர்த்தினை :
> முடிந்த(து) இல்!' என,
> 'அன்னையே! அதன்குறை
> காண்!' என்(று) ஆயிழை,
> 'இன்னமும் துயில்(க)' என
> இருகை கூப்பினாள்.

[பொன் மனை-பொன் மயமான அரண்மனை. புக்க-புகுந்த. பொருவில் - ஒப்பில்லாத. உணர்த்தினை -

துயில் எழுப்பினாய். இல்-இல்லை. ஆயிழை-(இங்கே) சீதை. துயில்க - தூங்குவாயாக.]

அந்தக் கனாவின் குறை திரிஜடைக்கே ஒரு மனக் குறையாகிவிட்டது. சீதையும், 'நம்முடைய பிசகினாலல்லவா அந்தக் கனா முடியவில்லை; மயிலின் விடுதலைச் செய்தியும், மயில் சிங்கங்களையடைந்த அந்தக் குறைச்செய்தியும் நன்றாகத் தெரியவில்லையே!' என்று பச்சாத்தாபப்படுகிறாள். திரிஜடையின் தாயன்பைப் பெரிதும் பாராட்டும் சீதை, 'அன்னையே! எனக்காக அந்தச் சொப்பனத்தின் குறையை நீ எப்படியாவது கண்டுபிடித்துவிட வேண்டும். அதற்காக நீ இன்னமும் தூங்கு; இனி நான் உன்னைத் தொந்தரவு செய்யமாட்டேன்!' என்று இரண்டு கைகளையும் கூப்பிக்கொண்டு மன்றாடுகிறாள்.

என்ன தங்கமான குழந்தையுள்ளம்! அந்தப் பேச்சிலும் செய்கையிலும்தான் என்ன கவிதா சௌந்தரியம்! பேதைமை பூண்ட அந்தப் பெண்மை இதயத்தையும், அதைப் பேதையாக்கிய ஆசையையும் எவ்வளவு தெளிவாகப் பார்க்கிறோம், கவிதை என்ற மந்திரவித்தையால்!

அப்போது ராமதூதனாகிய ஹனுமானும் அந்த இடத்திற்கு வருகிறான். சோர்ந்து சற்றே கண்ணயர்ந்து கிடந்த அரக்கிமார்கள் திடீரென்று தெளிந்து, 'இந்த உறக்கம் நம்மைக் கெடுத்துவிட்டது, அம்மம்ம!' என்று நடுங்கிக்கொண்டே, வழக்கம் போல் ஆயுதங்களைத் தூக்கிக்கொண்டு சீதையைச் சூழ்ந்து காவல் செய்கிறார்கள்.

அந்தக் கும்பலில்தான் எத்தனை ரூப விசித்திரங்கள் !

வயிற்றிடை வாயினர்,
வளைந்த நெற்றியில்

குயிற்றிய விழியினர்,
கொடிய நோக்கினர்,

எயிற்றினுக்(கு) இடையிடை
யானை, யாளி, பேய்

துயில்கொள்வெம் பிலன்எனத்
தொட்ட வாயினர் !

[குயிற்றிய - அமைக்கப்பட்ட. எயிற்றினுக்கு - பற்களுக்கு. யாளி - யானையைக் கொல்வதும், சிங்கம் போன்றதும், துதிக்கை யுடையதுமாகிய ஒரு மிருகம் என்பர். வெம் பிலன் - கொடிய மலைக் குகை. தொட்ட - தோண்டிய ; ஆழமான.]

இந்த அரக்கிமார்களில் சிலருக்கு, கபந்தேச்வரனைப்போல், எவ்வளவு சௌகரியமாய் வயிற்றிலேயே வாய் அமைந்திருக்கிறது ! சிலருக்கு நெற்றி நடுவிலே இயற்கை அமைத்த பொட்டுப்போல் ஒரே கண் ! அந்தக் கண்ணிலேதான், ஐயோ, என்ன கொடுமை ! மாமிச பர்வதங்களின் உச்சியிலே இயற்கை தோண்டி வைத்த பள்ளங்களைப் போன்ற வாய்கள் !

இன்னும் சிலருக்கு முதுகிலே முகம் ! ஒருத்தி ஒற்றைத் தலையும் பத்துக் கைகளுமாய் இருக்கிறாள் ! வேறொருத்திக்கு இருபது தலைகளும் இரண்டு கைகளும் ! (ஜலதோஷம் பிடித்தால், இவளுக்கு எவ்

வளவு அசௌகரியம்! பத்துக் கைகள் உடையவளுக்கு எவ்வளவு சௌகரியம்!)

ஒருபது கையினர்,
ஒற்றைச் சென்னியர்;
இருபது தலையினர்,
இரண்டு கையினர்;
வெருவரு தோற்றத்தர்,
விகட வேடத்தர்!

... ... ... ...
... ... ...

[ஒருபது - பத்து. சென்னி - தலை. வெருவரு - நடுங்குவதற்குக் காரணமான. வேடத்தர் - வேஷங்களை யுடையவர்.]

முகங்களிலேதான், அடடா, எத்தனை தினுசுகள்! சிலருக்குப் பிள்ளையார்போல் யானைமுகம்; வேறு சிலருக்குக் கல்கிபோல் குதிரைமுகம்; வேறு சிலருக்குப் புலிமுகம், கரடி முகம்; இன்னும் சிலருக்கு யாளி முகம், சிங்கமுகம்! பலர் நாய்முகத்தோடும், நரி முகத்தோடும் காட்சி தருகிறார்கள்! அதோ, சிலர் பேய்முகத்தோடு காணப்படுகிறார்கள்! பேய்த் தன்மையும் மிருக சுபாவங்களும் உள்ளவர்களுக்கு இசைந்த முகங்களும் அருமையாக அமைந்திருப்பது எவ்வளவு பெருமையா யிருக்கிறது, பொருத்தமா யிருக்கிறது! (தற்காலத்திலும் இப்படி யிருந்தால் எவ்வளவு 'பேஷா'ய் ஆசாமிகளைத் தெரிந்துகொள்ள லாம்!)

கரி, பரி, வேங்கைமாக்,
கரடி, யாளி, பேய்,
அரி, நரி, நாய்என
அணிமு கத்தினர்,
வெரிந்உறு முகத்தினர்,
விழிகள் மூன்றினர்,
புரிதரு கொடுமையர்,
புகையும் வாயினர்!

[கரி - யானை. பரி - குதிரை. வேங்கைமா - புலி. அரி - சிங்கம். வெரிந் உறு - முதுகிலே பொருந்திய. புரிதரு - புரிகின்ற.]

இப்படியெல்லாம் அழகு வாய்ந்த முகங்களில் சில, முன் பக்கத்தில் அமைந்திராமல், முதுகுப் பக்கத்திலும் அமைந்திருக்கின்றனவாம். இவர்களில் சிலர் ஸாக்ஷாத் பரமேச்வரனைப்போல் திரிநேத்திரதாரிகளாகவும் இருக்கிறார்கள்! சிலருக்கு வாய் புகைந்து கொண்டே இருக்கிறதாம். (சுருட்டுப் புகையல்ல, கொடுமைக்கு அறிகுறியான புகைதான்!)

கண்ணுக்கு அடங்காத தோற்றமும் எண்ணுக்கு அடங்காத கூட்டமும் ஆகிய இவர்களும் பெண்களா? 'பெண் தெய்வங்க'ளா?

எண்ணினுக்(கு) அளவிடல்
அரிய ஈட்டினர்,
கண்ணினுக்(கு) அளவிடல்
அரிய காட்சியர்,
பெண்எனப் பெயர்கொடு
திரியும் பெற்றியர்,

துண்எனத் துயில்உணர்ந்(து)
எழுந்து சுற்றினர்.

[அளவிடல் அரிய - அளவிட அருமையான. ஈட்டு- கூட்டம். கொடு - கொண்டு. பெற்றி - தன்மை. துண்என - திடுக்கென்று.]

பெண்ணென்று பெயர் வைத்துக்கொண்டு திரியும் இத்தகைய கோர சொரூபங்கள்—சிருஷ்டிக்கப்பட்ட பயங்கர விகடங்கள்—ராவணேச்வர பக்த கோடிகள்—சூலம், வாள், வேல், இருப்புலக்கை முதலான ஆயுதங்களுடன் சீதையைச் சுற்றிக்கொண்டதும், இவளும் திரிஜடையும் தங்கள் பேச்சை நிறுத்திவிடுகிறார்கள்.

அச்சமயம் ஹனுமான் உயர்ந்து வளர்ந்திருந்த ஒரு மரக்கிளையில் ஏறி மறைவாயிருந்து பார்த்துக் கொண்டிருக்கிறான். 'இத்தனை ராட்சஸிகள் இங்கே ஆயுதபாணிகளாகக் கூட்டமா யிருப்பதற்குக் காரணம் என்ன?' என்று சிந்தித்துக்கொண்டே அந்த இடத்தை விரைவாக உற்றுப் பார்க்கிறான்.

பார்த்ததும், கருத்த மேகக் கூட்டத்தைக் கிழித்துக்கொண்டு மின்னற் கொடிபோலத் தோன்றும் சீதா தேவியே காட்சியளிக்கிறாள்!

விரிமழைக் குலம்கிழித்(து)
ஒளிரும் மின்எனக்
கருநிறத்(து) அரக்கியர்
குழுவில் கண்டனன்
குருநிறத்(து) ஒருதனிக்
கொண்ட லாம்எனத்

திருஉருப் பொலியும்ஓர்
செல்வன் தேவியை !

[விரி மழைக் குலம் - விரிந்து பரவுகிற கருமேகக் கூட்டம். குழு - கூட்டம். குருநிறத்து - சிலாக்கியமான நிறத்தையுடைய. ஒரு தனிக் கொண்டல் - தனக்கு ஒப்பே யில்லாத நீர் கொண்ட மேகம்.]

'ரூப சம்பத்திலே நிகரற்று விளங்கும் என் தலைவனாகிய ராமனுக்கு இசைந்த ரூபவதியான தேவியே இவள் !' என்று நினைக்கிறான். இப்படிச் சீதையைக் கண்டதும் ஹனுமான் உள்ளம் அடைந்த நிலையை என்னென்பது ? இவனுடைய உள்ளமெல்லாம்,

குருநிறத்து ஒருதனிக்
கொண்ட லாம்எனத்
திருஉருப் பொலியும்ஓர்
செல்வன்............

வசமாகவே இருக்கிறது. தன் உள்ளமெல்லாம் குடி கொண்டு நிறைந்திருக்கும் அந்தச் செல்வனுடைய தேவியை இப்போது கண்ணுற்றதும், ஒரே ஆனந்த பரவசமாகிறது இவன் உள்ளம்.

சோக வெள்ளத்திலே மூழ்கியிருக்கும் இந்த அழகின் ஜோதியைக் கண்டபோதுதான் ஹனுமான், 'தர்மம் அழியவில்லை ! நானும் அழியமாட்டேன் !' என்று ஆனந்த வெள்ளத்திலே மூழ்கிப் போகிறான் :

' வீடின(து) அன்(று)அறன் !
யானும் வீகலேன் !

தேடினென் ! கண்டனென் !
  தேவி யே !' என,
ஆடினன் ; பாடினன் ;
  ஆண்டும் ஈண்டும்பாய்ந்( து )
ஓடினன் ; உலாவினன் ;
  உவகைத் தேன்உண்டான் !

[வீடினது அன்று - அழியவில்லை. வீகலேன் - அழியமாட்டேன். என - என்று தெளிந்து. ஆண்டும் ஈண்டும் - அங்கும் இங்கும்.]

அப்போதும் ஹனுமான் மிகவும் நுட்பமான வடிவத்தில் இருந்ததினாலேயே அந்தக் கூத்தும் குதூகலமும் கீழே இருப்பவர்களுக்குத் தெரியவில்லை.

'அந்த ராமபிரானுடைய உயிரை இங்கே யல்லவா ஒளித்து வைத்திருக்கிறான் கள்ளப்பயலான ராட்சஸன் !' என்று கண்டுகொண்ட ஹனுமானது உத்ஸாகம் இப்போது,

கள்ளவாள் அரக்கன்அக்
  கமலக் கண்ணனார்
உள்உறை உயிரினை
  ஒளித்து வைத்தவா !'

[கமலக் கண்ணனார் - ராமன். வைத்தவா - வைத்த விதம் (என்னே !).]

என்றபடி ஆச்சரியமும் பரிவும் எவ்வளவோ துயரமுமாகப் பொங்குகிறது !

'ராமனுடைய உயிரை இங்கே ஒளித்து வைத்தவன் தன் உயிரை இழப்பதற்காகத்தான் இப்படிச்

செய்திருக்கிறான்! மூன்று லோகங்களையும் ஹிம்ஸித்த பாவியின் பாப சிகரம் இது!' என்று துணிகிறான்.

பிறகு ஹனுமான், "மாசுபடிந்த இரத்தினம் போல இருக்கிறாள்; ஆனால் இவளுடைய கற்புக்கும் காதலுக்கும் யாதொரு பின்னமும் ஏற்படவில்லை என்பதற்கு இந்த முகமே சாட்சி! அறத்துக்கும் அழிவுண்டோ!' என்று தனக்குள்தானே சொல்லிக் கொள்கிறான்:

'மாசுண்ட மணியனாள்,
வயங்கு வெங்கதிர்த்
தேசுண்ட திங்களும்
என்னத் தேய்ந்துளாள்,
காசுண்ட கூந்தலாள்,
கற்பும் காதலும்
ஏசுண்ட(து) இல்லையால்;
அறத்துக்(கு) ஈறுண்டோ!'

[மாசுண்ட - மாசு படிந்த. மணியனாள் - இரத்தினம் போன்றவள். வயங்கு - விளங்குகிற. வெங் கதிர்த் தேசு உண்ட - வெம்மையாகிய கிரணங்களையுடைய சூரியனது தேஜஸ் பட்ட. திங்கள் - சந்திரன். காசுண்ட - சிக்குப் பிடித்த. ஏசுண்டதில்லை - குற்றம் பொருந்தினதில்லை. ஈறு - அழிவு.]

இதுவரை ராமனது மகாவீர சௌந்தரியத்திலும் ரூப சௌந்தரியத்திலும சொக்கிப் போயிருந்த ஹனுமான் உள்ளம் இப்போது சீதையின் தியாக சௌந்தரியத்தைக் கண்டு பிரமித்துப் போகிறது. 'இப்படிப்பட்ட மனத் தவத்திற்கு முன், பட்டினி

கிடந்து இந்திரிய நிக்கிரகம் செய்து, பஞ்சாக்கினி மத்தியில் நின்று ரிஷிகள் செய்யும் தவமும் ஒரு தவமா?' என்று ஆலோசிக்கும் ஹனுமான், 'தர்மத்தின் பெருமையெல்லாம் பெருமைதான்!' என்று உத்ஸாகமாகச் சித்தாந்தம் செய்கிறுன்:

'தனிமையும், பெண்மையும்,
தவமும் இன்னதே;
வனிதையர்க் காகநல்
அறத்தின் மாண்பெலாம்!'

[இன்னதே - இப்படிப்பட்டதே. வனிதையர் பெண்கள். மாண்பு - மாட்சி.]

கடைசியாக, 'இந்தக் காட்சியைப் பார்க்கும் பாக்கியம் ராமனுக்குக்கூட இல்லை; எனக்கே கிடைத்திருக்கிறது!' என்று இவன் அடைந்த செருக்குக்கு எல்லையே இல்லை.

'மாணநோற்(று) ஈண்(டு)இவள்
இருந்த ஆ(று)எலாம்,
காணநோற் றில,அவன்
கமலக் கண்களே!'

[மாண - மாட்சிமைப்பட. நோற்று - (தியாகமாகிய) நோன்பு அல்லது தவத்தைச் செய்து. இருந்த ஆறு - இருந்தவிதம். காண நோற்றில - காணத் தவம் செய்ததில்லை.]

என்று ராமன்மீது ஹனுமான் பரிதாபம் காட்டுவதைப் பாருங்கள்.

* * *

. இப்படியெல்லாம் ஹனுமான் சிந்தித்து, தான் இருந்த நீண்ட மரத்தின் இலைகள் அடர்ந்த கிளையில் மறைந்து கீழே நடப்பதைப் பார்த்துக்கொண்டிருக்கிறன். அப்போது அந்தப் பூஞ்சோலையில் திடீரென்று அரக்கன் தோன்றுகிறன். ஆம், ஹனுமான் அரண்மனையிலே படுக்கையில் பார்த்த அதே ராவணன்தான்!

## 10. சோலையில் தோன்றிய அரக்கன்

கருங்கடல் மீது பால சூரியன் உதயமாகி இள வெயில் எறிப்பதுபோலக் காண்கிறது, அசோகவனத்தின் ஒரு புறத்திலே. நடுநிசி பகலாகக் காண்கிறது. ரத்தினாபரணங்கள் அணிந்த நங்கையர் ஏந்திவரும் தீபவரிசைகளின் வெளிச்சத்திலே அப்படி ஜொலிக்கின்றன தகதகவென்று பத்துக் கிரீடங்களும். பருத்து உயர்ந்த வலிமைமிக்க தோள்களின்மீது அசைந்தாடுகின்றன வைரம் இழைத்த மகர குண்டலங்கள் :

சிகரவண் குடுமி
நெடுவரை எவையும்
ஒருவழி திரண்டன
சிவண,

மகரிகை வயிர
குண்டலம் அலம்பும்
திண்திறல் - தோள்புடை
வயங்க,

சகரவே லையின்நீர்
தழுவிய கதிரின்,
தலைதொறும் தலைதொறும்
தயங்கும்

வகையபொன் மகுடம்
இளவெயில் எறிப்ப,
கங்குலும் பகல்பட
வந்தான்.

[வண் குடுமி நெடு வரை - வளப்பமான உச்சியோடு கூடிய நீண்ட மலைகள். சிவண - போல. மகரிகை குண்டலம்-மகர குண்டலம். அலம்பும் - அசைந்தாடும்.

துணை திறல் - மிக்க வலிமை. புடை வயங்க - (இரு) பக்கத்திலும் விளங்க. சகர வேலை - சாகரம் அல்லது சமுத்திரம். கதிரின் - (இளஞ்) சூரியன்போல. தயங்கும் வகைய - பிரகாசிக்கும் வகையை உடைய. கங்குல் - இரவு.]

ராவணேச்வரனுடைய (மலைபோன்ற) தோள்களும், கிரீட வரிசையும், மாட்சிமை தங்கிய மிடுக்கான தோற்றமும், ஹனுமானுக்கும் சீதைக்கும் போல், கம்பனுக்கும் பிரத்தியட்சமாகி நமக்கும் எவ்வளவு பிரத்தியட்சமாக இருக்கின்றன! உலகத்தையெல்லாம் அடைத்துக்கொண்டு வருவது போன்ற பிரமையை உண்டாக்கும் ராட்சஸ சக்ரவர்த்தியின் சர்வாதிகார சம்பிரமத்தைக் கம்பன் தனது சப்த சித்திரத்திலே அப்படியே படம் பிடித்துக் காட்டுகிறான்.

எனினும், தன் உத்தியான வனத்திற்குள்ளே வரும் ராவணன் ஏதோ ஒரு புண்ணிய ஸ்தலத்தில் அடிவைத்து நடப்பவனைப்போல் வருகிறான், உடைவாளையும் எடுத்துச் சொருகிக்கொள்ளாமல்—செருப்புகளையும் கழற்றிவிட்டு! அந்த உடைவாளை ஊர்வசி எடுத்துக்கொண்டு பின்னே வருகிறாள். அந்தச் செருப்புகளையோ பளிச்சென்று திலோத்தமை தலைமேல்தாங்கி, ‘தலை படைத்த பாக்கியம இது—அடியாளுக்குத்தான்!’ என்று எண்ணிப் பெருமை கொண்டவள்போல் பின்தொடர்கிறாள். மேனகை வெற்றிலை மடித்துக்கொடுத்துக்கொண்டே வருகிறாள்—எவ்வளவு பெருமையாக! ரம்பை முதலான தேவ ஸ்திரீகளோ பொறுமையுடன் பக்கத்திலே தொடர்ந்து வந்து பணி செய்யப் போட்டியிடுவதுபோலக் காண்கிறது.

உருப்பசி உடைவாள்
எடுத்தனள் தொடர,
மேனகை வெள்ளடை
உதவ,
செருப்பினைத் தாங்கித்
திலோத்தமை செல்ல,
அரம்பையர் குழாம்புடை
சுற்ற,.........

[உருப்பசி - ஊர்வசி. வெள்ளடை - வெற்றிலை. அரம்பையர் - தேவ மாதர்கள். குழாம் - கூட்டம். புடை - பக்கங்களிலே.]

வருகின்ற ராவணன், சீதையை நினைத்துக்கொண்டே எவ்வளவு மரியாதையாக வந்தாலும், அவ்வளவு படாடோபமும் அவனைத் தொடர்ந்து வருகின்றது. 'மேனகை வெள்ளடை உதவ' என்பதில் 'ஜம்மென்று மாப்பிள்ளைபோல் வருகிறானே!' என்பது குறிப்பு.

இந்த நள்ளிரவில் திடீரென்று விழித்துக்கொண்டான். வெகு காலமாகவே நல்ல உறக்கமில்லை. மிகுந்த அலுப்பினால் இன்றிரவு கொஞ்சம் தூக்கம் பிடித்தது. ஆனால் அது அயர்ந்த தூக்கம் அன்று. (அப்போதுதான் ஹனுமான் ராவணனைப் பார்த்து விட்டு அசோகவனத்திற்குள் வந்தான்.) அந்தத் தூக்கத்திலே ஏதோ ஒரு விபரீதமான சொப்பனம். கோபத்தோடு திடுக்கிட்டு விழித்துக்கொள்கிறான். கோபத்திற்குக் காரணம அந்தச் சொப்பனத்திலே தன் சர்வாதிகார சங்கல்பத்திற்கு ஏதோ இடையூறு புகுந்திருக்கிறது என்பதுதான். அந்த இடையூறு இன்ன

தென்று விளங்கவில்லை. (அந்த இடையூறு ஹனுமான் வடிவத்திலே புகுந்துவிட்டது உத்தியானவனத்திற் குள்ளே என்பதை அவன் எப்படி அறிவான்?) ஏன்? அந்தத் துர்ச் சொப்பனமே விவரமாக இப்போது ஞாபகத்திற்கு வரவில்லை. கவிஞனும் அதை இன்ன தென்று சொல்லாமலே வாசகர் உள்ளத்தை வசீகரித்து இழுத்துக்கொண்டு போகிறான் ராவண பவனியோடு :

'அந்தரம் புகுந்த(து)
உண்டு'என முனிவுற்(று)
அருந்துயில் நீங்கினன்.
'ஆண்டைச்

சந்திர வதனத்(து)
அருந்ததி இருந்த
தண்நறுஞ் சோலையின்
தனையோ?

மந்திரம் யாதோ?
யாரொடும் போமோ?'
என்றுமா மனம்மறுக்
குறலால்,

இந்திரன் முதலோர்
இமைப்பிலா நாட்டம்
முகிழ்த்தனர், உயிர்ப்(பு)அவிந்(து)
இருப்ப...

[அந்தரம் - இடையூறு. முனிவு - கோபம். அருந் துயில் - அருமையாகக் கிடைத்த தூக்கம். ஆண்டை - அங்குள்ள. அருந்ததி - (இங்கே) அருந்ததிபோல் மகாபதிவிரதையாக இருக்கும் சீதை. தண் நறு -

குளிர்ந்த வாசனையுள்ள. சோலையின் தனையோ-சோலை வரையிலுமோ. மந்திரம் - (இங்கே) ஆலோசனை. மாமனம் - பெரிய மனம். மறுக்குறலால் - கலக்க மடைவதால். இமைப்பிலா நாட்டம் - இமையாக் கண்கள். முகிழ்த்தனர் - மூடிக்கொண்டவர்களாய். உயிர்ப்பு அவிந்து - மூச்சுக் காற்றும் அடங்கி.]

ராவணன் திடீரென்று எழுந்து கோபத்தோடு வெளியே புறப்பட்டதும், வந்துவிட்டது கவலை இந்திரன் முதலான படேபடே தேவர்களுக்கெல்லாம். 'ஐயோ! அந்தக் கோபம் சீதை இருக்கும் சோலையோடுதான் நிற்குமோ? இன்னும் யார்மீது செல்லுமோ? அவனுடைய ஆலோசனைதான் என்னவோ?' என்று மனம் அதிகமாய்க் குழம்புகிறது பெரிய பெரிய இடங்களில். தேவர்களுக்கு எப்போதும் இமையாத கண்கள் உண்டல்லவா? அந்த இமையாத கண்களும் இப்போது இமைத்து மூடிக்கொள்கின்றன; கண்களைத் திறக்க முடியவில்லை! அவ்வளவு பயம் அவர்களுக்கு. மூச்சும் திணறி அடங்கப் பார்க்கிறதாம்.

இத்தகைய பெரும் பயத்துக்குக் காரணமான ராவணபவனியை இன்னும் கவனித்துப் பார்ப்போம். ராவணனது கம்பீரமும் மாட்சியுமே நமது கவனம் முழுவதையும் அப்புறம் இப்புறம் செல்லவிடாமல் இழுத்துக்கொள்கின்றன. நீலமலையிலிருந்து இறங்கும் அருவிபோல வெண்பட்டு உத்தரீயம் ஒன்று தோளில் மாலையாகத் தொங்குகிறது. கழுத்திலே வெற்றிமாலையாகிய பொன்னாரம் இளவெயில்போல ஒளி வீசுகிறது. மார்பில் அணிந்த பூணூல் மேகத்தைக் கிழித்துக் கொண்டு துடிக்கும் மின்னல் போலக் காண்கிறது.

தோள்களிலுள்ள வைர வாகுவலயங்கள் நட்சத்திரங்களைப்போல் மிளிர்கின்றன. பொன்னால் செய்த வீரக் கழல்கள், அந்த அடிச்சோதியைக்கொண்டே நடந்து போகும் தரையை ஜோதிமய மாக்குகின்றன. (முடிச் சோதியைச் சொல்லவா வேண்டும்?) உடம்பின் நிறத்தோடு மாறுபட்டு ஒளிரும் பொற்சரிகை வஸ்திரம் பாதம் வரையிலும் தழைந்து தொங்குகிறது. கைவிரல்கள் நிறைய இரத்தின மோதிரங்கள். பாற்கடலின் அலைகள் கரிய மலைமேல் புரளுவதுபோல வெண் சாமரங்கள் அசைகின்றன. கிரீடங்களின்மீது சந்திர வட்டக் குடை ஜில்லென்று விளங்குகிறது.

சில இளம் பெண்கள் புல்லாங்குழல் ஊதிக் கொண்டு வருகிறார்கள். சிலர் வாயால் பாடுகிறார்கள். கின்னர ஸ்திரீகள் கின்னரம் என்ற யாழ் கொண்டு பாடுகிறார்கள். பாட்டுக்கு இசைய மத்தளம். வேறு வாத்திய விசேஷங்களும் ஒலிக்கின்றன. கீத விநோதங்களுக்கும் தாளத்துக்கும் இசைவாகக் கட்டழகிகள் நர்த்தனம் செய்துகொண்டே வருகிறார்கள். சில பெண்கள் சாமரை முதலியவற்றை ஏந்தி மான்கூட்டம் போல் மருண்டு மருண்டு பார்த்துக்கொண்டு வருகிறார்கள். அழகிய கைகள் அழகிய தீபங்களை ஏந்துகின்றன. மயில்போல வரும் இப்பெண்களின் சிலம்புகளும் சதங்கைகளும் மேகலாபரணங்களும் கிண் கிண் என்று எவ்வளவு இனிமையாக ஒலிக்கின்றன! ஒலித்து இசையோடு இசையாக இசைந்துவிடுகின்றன: இவை கம்பன் தமிழிசையிலே எவ்வளவு தெளிவாய்க் கேட்கின்றன!

காணத் தெவிட்டாத இக்காட்சிகளுக் கிடையே, அதோ என்ன விபரீதம்! சில பெண்கள் இருப்புலக்கை, மழு, சூலம், வாள், வேல், வில் முதலான கொலைக்

கருவிகளைச் சுமந்துகொண்டு வருகிறார்கள். என்ன விகார உருவங்கள்! ஒவ்வொருத்தியும் வலிமையில் தாடகைக்கு 'இரட்டி'(இரு மடங்கு)!—என்று காட்டுகிறான் கவிஞன். அந்த முரட்டுக் கொலைகாரக் கைகளுக்கு அந்த வளைகளும் வேண்டுமா? தாய்க்குலம் போர்வெறி பிடித்துப் பேய்க்குலம் ஆகிவிட்டது!

இவ்விதமாக ராவணன் வந்துகொண்டிருக்கும் போது அவனுக்கு வேண்டியவர்களில் சிலர் அங்கங்கே எதிர்ப்படுகிறார்கள். அவர்கள் தலைகுனிந்து வணங்க, அவன் கம்பீர இளநகை அரும்பிப் பூமி அதிரும்படியாகக் கால்களை மாறி மாறி வைத்து வருகின்ற அந்த வருகையே அவனை அகிலலோக சர்வாதிகாரியாகக் காட்டுகிறது.

எனினும், அவனுக்கு உள்ளத்தில் மகிழ்ச்சி என்பதே இல்லை. தனக்காக நடைபெறும் நாட்டியத்திலும் சங்கீதத்திலும் அவன் மனம் சிறிதும் செல்லவில்லை. தன்னோடு வரும் பெண்களை அவன் கண்ணெடுத்தும் பார்க்கவில்லை.

மரங்களும் இலைகளும் அடர்ந்திருக்கும் அந்தச் சோலையில் இடைவெளிகளின் வழியாகக் குளிர்ந்த சந்திரகிரணம் வீசுகிறது. மன்மத பாணங்களால் துளைக்கப்படும் அந்த உடம்பில் அது விழும்போது, வெந்த புண்ணில் வேல் நுழைந்தாற்போல் இருக்கிறது. அப்போது—என்ன சதியாலோசனை!—இளந் தென்றல் - காற்றும் பூக்களையெல்லாம் அளைந்து கொண்டு வந்து மிருதுவாக மூச்சுவிடுகிறது. அது தெறிக்கும் நீர்த்திவலைகள் உருக்கிய செம்பை மேலே ஊற்றுவதுபோல் இருக்கின்றன. பெருமூச்செறிந்து கொண்டே வருகிறான்.

இலங்காபுரியின் ஒவ்வொரு பகுதியும் இவனுக்கு நன்முகத் தெரியும்; அசோக வனத்தில் எத்தனையோ தடவை சுற்றித் திரிந்திருக்கிருன். எனினும், இப்போது என்ன மயக்கம்!—அந்த வனத்தில் சீதை இருக்கும் இடம் தெரியவில்லை. அவள் இருக்கும் திசை தெரியும்; ஆனல்—என்ன திகைப்பு!—அவளைப் பல இடங்களிலும் தேடுகிருன்.

திருமகள் இருந்த
திசைஅறிந் திருந்தும்,
திகைப்புறு சிந்தையன் -

[திருமகள் - (இங்கே) சீதாலட்சுமி.]

என்ற இந்தக் குறிப்பிலே காம பரவசமாகிய உள்ளம் தத்ரூபமாய்ப் பிரதிபலிக்கிறதல்லவா?

ஏதோ அபூர்வமான ஒரு பொருளைப் பறிகொடுத்தவனைப்போல் அங்கும் இங்கும் தேடித் திகைத்துக் கொண்டு, கடைசியாகச் சீதை யிருக்கும் இடத்திற்கு அருகே வந்துவிட்ட ராட்சஸ சக்ரவர்த்தியை, மரக் கிளையிலும் இலைகளிலும் மறைந்து பிறரால் கண்டு கொள்ள முடியாத சிறு ரூபத்துடன் இருக்கும் ஹனுமான் பார்த்துவிடுகிருன்:

இனையதோர் தன்மை
எறும்வலி அரக்கர்
ஏந்தல்வந்(து) எய்(து)கின்
ருனை,
அனையதோர் தன்மை
அஞ்சனை சிறுவன்

கண்டனன், அமைவுற
நோக்கி,
வினையமும் செயலும்
மேல்வினை பொருளும்
இவ்வழி விளங்கும் 'என்(று)
எண்ணி,
வனைகழல் இராமன்
பெரும்பெயர் ஓதி
இருந்தனன், வந்(து)அயல்
மறைந்தே.

[இனையதோர் தன்மை - இப்படிப்பட்ட தன்மையோடு. எறும் வலி - மிக்க வலிமை. அரக்கர் ஏந்தல் - ராட்சஸ ராஜன். அனையதோர் தன்மை - அங்கே நடப்பதைப் பார்த்துக்கொண்டிருக்கும் தன்மையுள்ள. அஞ்சனை சிறுவன் - அஞ்சனு தேவியின் புதல்வனுகிய ஹனுமான் (ஆஞ்சநேயர்). வினையம் - வஞ்சனைக் குணம். மேல்வினை பொருள் - மேலே நடக்கும் காரியம். இவ்வழி - இந்த இடத்தில்; இப்போது. வனை கழல் - புனைந்துள்ள வீரக் கழல்.]

'ராவணனுடைய வஞ்சனைக் குணமும் செயலும், இனிமேல் நடக்கப்போகும் காரியமும், இந்த இடத்தில், இப்போது தெரிந்துவிடும்' என்று நினைக்கிருன் ஹனுமான். கீழே நடக்கப் போவதை நன்ருகக் கவனிக்க வேண்டுமென்று, முன் இருந்த இடத்தை விட்டுச் சிறிது நெருங்கிவந்து, முன்போல் இலைகளுக்கும் கிளைகளுக்கும் இடையில் மறைந்தவண்ணமே பார்க்கிருன்.

சீதைக்கு எந்த நிமிஷத்தில் என்ன அபாயம் நேர்ந்துவிடப் போகிறதோ என்ற கவலையும் உள்ளத்தை வெதுப்புகிறது. ஆனல் எல்லாத் துன்

பங்களுக்கும் எல்லா நோய்களுக்கும் ஒரு மருந்து தெரியும் ஹனுமானுக்கு. ஆம், ஒரே மருந்து—சர்வரோக நிவாரண சஞ்சீவி. அந்த ம்ருந்தைத்தான் இப்போதும் உபயோகப்படுத்திக் கொள்கிறான். அதற்குச் செலவில்லை, சிரமமுமில்லை. அதுதான் 'ராம நாமம்'— 'இராமன் பெரும் பெயர்.'

'ராம ராம' என்று சொல்லி ஹனுமான் பார்த்துக்கொண்டிருக்கும்போதே, ராவணன், தன்னோடு வந்த கூட்டத்தை விலகி நிற்கச் செய்து, சீதாதேவி கண்முன் தோன்றுகிறான். அப்போது அவள் அடைந்த நிலை? கவிஞன் கண்ணைக்கொண்டே பார்ப்போம் :

ஆயிடை, அரக்கன்,
அரம்பையர் குழுவும்
அல்லவும் வே(று)அயல்
அகல,

மேயினன், பெண்ணின்
விளக்(கு)எனும் தகையாள்
இருந்துழி: ஆண்(டு)அவள்
வெருவி

போயின உயிரள்
ஆமென நடுங்கி,
பொறி-வரி- எறும்வலிப்-
புகைக்கண்-

காய்சின- உழுவை
தின்னிய வந்த
கலை இளம் பிணை எனக்
கரைந்தாள்.

[ஆயிடை - அப்போது. அரக்கன் - ராவணன். அரம்பையர் குழு - தெய்வப் பெண்களின் கூட்டம். அல்லவும் - மற்றவர் கூட்டமும். மேயினன் - அடைந்தான். விளக்கு எனும் தகையாள் - விளக்குப் போன்ற சீதை. இருந்துழி - இருந்த இடத்தில். ஆண்டு - அந்த இடத்திலே. வெருவி - அஞ்சி. போயின உயிரள் ஆமென - உயிர் போனவள்போல. பொறி - புள்ளிகள். வரி-கோடுகள். எறும் வலி - மிக்க வலிமை. காய் சின உழுவை - காய்ந்து எரியும் கோபத்தையுடைய புலி. தின்னிய - தின்னும் பொருட்டு. பிணை - பெண் மான்.]

பெண்களுக்குள் விளக்குப் போலிருக்கும் சீதா பிராட்டி இருக்குமிடத்தில் ராவணன் திடீரென்று தோன்றியதும், அந்த விளக்கு அப்படியே அவிந்து போய்விட்டதா? என்ன நடுக்கம்! உயிரே போய் விட்டதா? இளமையான பெண் மான் ஒன்று திடீரென்று தன் கண்ணெதிரே ஒரு புலியைப் பார்த்து விடுகிறது. அந்தப் புலியின் புள்ளிகளும் கோடுகளும், பலமும் பசியும், கோபத்தால் புகைந்து எரியும் கண்களும் மானுக்கு எவ்வளவு நடுக்கத்தை உண்டாக்கும்! 'இந்தப் புலி நம்மைத் தின்னும்பொருட்டே வந்துவிட்டது!' என்று தெரிந்துகொண்ட அந்த மானின் நிலைமையை அடைகிருளாம் சீதை. அப்படியே நடு நடுங்கி நிலைகுலைந்து போகிருள். 'பொறி-வரி-எறும் வலிப்-புகைக்கண்-காய்சின உழுவை' என்று அந்தப் பதினுறடி வேங்கையை அப்படியே கண்முன் காட்டுவது போல் இருக்கிறதல்லவா?

என்ன ஆச்சரியம்! அவனுக்கும் இப்போது உயிர் நிலைகுலைகிறது! பயப்படுகிறவளுக்கும், பயமுறுத்துகிறவனுக்கும் ஒரே நிலைமை! பார்த்துக்கொண்டிருப்ப

வனுக்கும் என்ன மன உளைச்சல்! சீதை, ராவணன், ஹனுமான் ஆகிய இம்மூவரையும் கம்பன் எவ்வளவு அநாயாசமாகப் படம்பிடித்துக் காட்டுகிறான் :

கூசி ஆவி
குலைவுறு வாளையும்,

ஆசை யால்உயிர்
ஆசழி வானையும்,

காசில் கண் இணை
சான்(று)எனக் கண்டனன்,

ஊச லாடி
உளையும் உளத்தினன்.

[குலைவுறுவாளையும்-குலைந்து நடுங்குகின்ற சீதையையும். ஆசு - கட்டு; பற்றுக்கோடு. காசில் - குற்றமற்ற. கண் இணை - கண்கள் இரண்டும். ஊசல் - ஊஞ்சல்.]

ஸர் வால்டர் ஸ்காட் முதலான ஆசிரியர்களைப் போல் மூன்று ஸ்தூல உருவங்களைப் படம் பிடிக்க வில்லை கம்பன்; ஷேக்ஸ்பியர்-பாத்திரம் போல் ஹிருதயத்திலிருந்து வரும் இந்த உயிர்ப்படம், காவிய பாத்திரங்களின் ஹிருதயத் துடிப்போடு நம் கண்முன் வருகிறது. சீதை பயத்தாலும், ராவணன் ஆசையாலும், ஹனுமான் நம்பிக்கை அவநம்பிக்கை என்ற இரண்டுக்குமிடையே ஊஞ்சலாடித் திகைக்கும் உள்ளத்தினாலும், தத்தளிக்கிறார்கள். ஒரே படத்தில்—அதிலும் ஒரே சிறு படத்தில்—என்ன சேர்க்கை! என்ன அவஸ்தை!

சீதா ராவணர்களின் சந்திப்பிற்கு இரண்டு சாட்சிகள். ஹனுமானுடைய கள்ளங்கவடற்ற இரண்டு கண்களே இந்தச் சாட்சிக்காரர்கள்! இந்தச் சாட்சிகளின் வாயிலாக நிலைமையை உணர்ந்து கொண்டதும் இப்போது ஹனுமான் உள்ளத்திலே ஒரு மகத்தான மாறுதல் உண்டாகிறது.

இதற்குமுன் அந்த உள்ளத்திலே ராமனுக்குத்தான் முதலிடம்; இனி ராமனும் இந்த ராம பக்தனுடைய ஹிருதயத்தில் இரண்டாவது ஸ்தானம் வகிக்கவேண்டியதுதான். முதல் ஸ்தானம் சீதைக்குத்தான். இப்போது இந்த நெருக்கடியான நிலையில் ஹனுமான் ஹிருதய பூர்வமாக—உள்ளத்தின் ஆழத்திலிருந்து வாழ்த்துகிறான், கேளுங்கள் :

'வாழி ஜானகி,
வாழிஇ ராகவன்!
வாழி நான்மறை!
வாழியர் அந்தணர்!
வாழி நல்அறம்!'
என்(று)உற வாழ்த்தினான்,
ஊழி தோறும்
புதி(து)உறும் கீர்த்தியான்.

[அந்தணர் - ஜீவகாருண்ய உணர்ச்சியோடு கூடிய முனிவர்கள். உற - (இங்கே) மனப்பூர்வமாக. ஊழி - யுகம். புதிது உறும் - புதிதாக வளரும்.]

நீங்களும் ஹிருதயத்திலிருந்து (உதட்டிலிருந்தல்ல) பாடிப் பாருங்கள். கவிஞனுடைய மந்திர வித்தையால், ஹனுமான் தனக்குள் சொல்லிக்கொள்

ளும் ஹிருதய - கானமாகிய வாழ்த்து எவ்வளவு தெளிவாய்க் கேட்கிறது !

சீதையின் வாழ்வே ராமனுக்கும் வாழ்வு ; ராமனுடைய வாழ்வு உலகத்திற்கே வாழ்வு. அந்த வாழ்வினால், வேதம் முதலிய கலைகளும், அக்கலைகளை வளர்க்கும் அருளாளர்களும் க்ஷேமம் அடைகிறார்கள் அந்த க்ஷேமத்தினால்தான் தர்ம தேவதையும் க்ஷேமம் அடைகிறது. ஆம், சமுதாய தர்மமே உயர்ந்தோங்குகிறது.

இவ்வளவு க்ஷேமங்களுக்கும் காரணமாய்ச் சிறை புகுந்து தவங்கிடக்கும் தியாக சுந்தரியை ஹனுமான் முதல் முதல் வாழ்த்துவது எவ்வளவு பொருத்தமாயிருக்கிறது !

இந்த மகாவீரனுடைய வாழ்த்தினாலும் செய்கையினாலும் மேலே சொன்ன க்ஷேமங்களெல்லாம் ஏற்படப் போவதால், 'காலந்தோறும் மேலும் மேலும் புதிது புதிதாக வளரும் கீர்த்தியையுடையவன்' என்று ஹனுமானைக் கம்பனும் வாழ்த்துகிறான். மகாகவிகளின் வாழ்த்தினாலும் பாடல்களினாலும் அல்லவா ஹனுமானைப்போன்ற மகாவீரர்களும் புதிய புதிய வளர்ச்சிகளை அடைகிறார்கள் ?

சாமானிய வீரர்களுக்குக் காலம் செல்லச் செல்லக் கீர்த்தி மங்கும், தேய்ந்து மாய்ந்து போகும் ; ஹனுமானுக்கோ கீர்த்தி வளர்ந்துகொண்டேயிருக்கிறது என்றுகூடச் சொல்லவில்லை, 'ஊழிதோறும் புதிது உறும்' கீர்த்தி என்கிறான் கவிஞன்.

ஹனுமான் வாழ்த்திக்கொண்டிருக்கும்போதே, ராவணன் சீதையின் சமீபத்தில் வந்துவிடுகிறான். வந்து, என்ன சொல்லுகிறான், கேளுங்கள் :

அவ்வி டத்(து)அரு(கு)
எய்திஅ ரக்கன்தான்,
'எவ்வி டத்(து)எனக்(கு)
இன்னருள் ஈவது?
நொவ்வி டைக்குயி
லே,நுவல்க!' என்றனன் -
வெவ்வி டத்தை
அமிழ்தென வேண்டுவான்!

[நொவ்விடை - வருந்தும் இடை. நுவல்க - சொல்வாயாக. வெவ்விடம் - கொடிய விஷம்.]

'வருந்திக்கொண்டிருக்கும் இடையை யுடைய குயிலே!' என்று கொஞ்சும் குரலில் அழைத்து, 'நீ எப்போது என் வருத்தத்தைப் போக்கி உன் இன்னருளை வழங்கப்போகிறாய்? தயவுசெய்து உன் இனிய குயில் - மொழிகளால் தெரிவிப்பாயாக!' என்று பிரார்த்திக்கிறான்.

இந்தக் காட்சியைச் சிறிது தூரத்திலிருந்து கவிஞன் நமக்கு அருகே வந்து காட்டுகிறான். காட்டி, 'அதோ அந்த அரக்கன் தேவாமிர்தம் என்று கொல்லும் விஷத்தையல்லவா ஆசைப்படுகிறான்?' என்று நம் காதோடு காதாய்ச் சொல்லுகிறான்.

ராவணனுடைய மாட்சிமை தங்கிய மிடுக்கு என்ன? செருக்கு என்ன? படாடோபம் என்ன? இப்போது இந்தப் பரிதாப நிலை என்ன?

இவன் உபாஸிக்கும் மூர்த்தி சிவபெருமான். அந்தப் பெருமான் முன்னிலையிலும் தன் பெருமைக்கும் அந்தஸ்துக்கும் குறைவான வணக்க ஒடுக்கங்களை இவன் மேற்கொள்வதில்லை. 'பரமேச்வரனுக்கு ராவ

ணேச்வரன் இளைத்தவனா? அதமபட்சம், தன்னைச் சமானமாகவே மதித்திருப்பான். அப்பேர்ப்பட்ட ராவணேச்வரன் இப்போது தன் சிறையில் இருக்கும் அபலை முன் என்ன பாடு படுகிறான்!

ஈசற்கு ஆயினும்
ஈடழி வுற்(று)இறை
வாசிப் பா(டு)அழி
யாத மனத்தினன்,
ஆசைப் பாடும்,அந்
நாணும் அடர்த்திடக்
கூசிக் கூசி
இனையன கூறினன்.

[ஈடு - ஒப்பு. இறை - கொஞ்சமும். வாசிப்பாடு- இயற்கையான பெருமை நிலை. அடர்த்திட - தாக்கி ஹிம்ஸிக்க. இனையன - இப்படிப்பட்ட வார்த்தைகள்.]

ஆசை ஒருபுறம் கொல்லாமல் கொல்லுகிறது! 'கேவலம் ஒரு பெண்ணிடத்திலா லங்கேசன் தன் வணங்கா முடியைத் தாழ்த்திப் பேசுவது?' என்று நாணம் ஒருபக்கம் ஹிம்ஸிக்கிறது. என்ன நடுக்கம்! என்ன கூச்சம்! இந்தப் பிராணாவஸ்தையில் சிந்தனைகளும் வார்த்தைகளும் எவ்வளவு தூரம் குழம்பி வருகின்றன!

'இன்(று)இறந்தன!
நாளை இறந்தன!

என்று சொல்லும்படி எத்தனை "இன்று"கள் நம்பிக்கை காட்டிக் காட்டி இறந்துபோய்விட்டன!

"நாளை, நாளை" என்று எத்தனை தினங்கள் ஆசை காட்டி மோசஞ் செய்துவிட்டனை!' என்று புலம்புகிறான். 'நானும் உன்னால் கொல்லப்பட்டு இறந்து போன பின்புதானா, நீ இரங்கப்போகிறாய்?' என்று மனக்கசப்போடு கதறுகிறான்.

பூமி, சொர்க்கம், பாதாளம் என்ற மூன்று லோகங்களையும் ஒருசேர அரசு புரியும் மகாராஜ்யமென்றால், அது சாமானியமா? அந்த ராஜாங்கத்தின் ஐசுவரியத்திற்கு எல்லையுண்டா? இப்படிப்பட்ட ஏகாதிபத்திய ஆட்சியில், கலகம் என்பது தலைகாட்ட முடியுமா? எனினும் இப்போது ஒருவன் கலகம் செய்யத் துணிந்துவிட்டதாக ராவணன் ஒப்புக்கொள்கிறான். கலகம் ஏற்பட்டதே அவமானம்; அதிலும் சக்ரவர்த்தி பலமில்லாமல் தோற்றுப்போவதானால், எவ்வளவு மகத்தான அவமானம்! அப்படிப்பட்ட தாழ்வும் தளர்ச்சியும் வந்துவிடுமோ என்று ராவணன் கவலைப்படுகிறான். 'கலகக்காரன் யார்? மன்மதன்தான்! என்ன நெஞ்சத் துணிவு! உன்னுடைய பலத்தை நம்பியல்லவா கலகம்செய்யத் துணிந்து விட்டான்? தோல்வியும் ஏற்பட்டுவிட்டால், ராவணேச்வரனை நான் எவ்வளவு தாழ்மைப்படவேண்டியிருக்கும்! இவ்வளவு அவமானத்தையும் நீ பார்த்துக் கொண்டிருக்கப் போகிறாயா? உனக்கு எப்படி மனம் சகிக்கும்?' என்று சீதையை நோக்கிப் பிதற்றுகிறான்:

'உலகம் ஒன்றொரு(டு)
இரண்(டு)ஒருங்(கு) ஓம்பும்என்
அலகில் செல்வத்(து)
அரசியல்- ஆணையில்,

திலக மே! உன்
திறத்(து), அனங் கன்தரு
கலகம் அல்ல(து),
எளிமையும் காண்டியோ?'

[உலகம் ஒன்ருெடு இரண்டு - உலகம் மூன்றையும். ஓம்பும் - ஆட்சி செய்கிற. அலகில் - எல்லையில்லாத. உன் திறத்து - உன் விஷயமாக. அனங்கன் - மன்மதன். எளிமை - தாழ்வு; வலிமையின்மை; தளர்வு. காண்டியோ - காண்பாயோ.]

பிறகு, ராவணன் சீதையை வாயாரப் புகழத் தொடங்கி,

'பூந்தண் வார்குழல் -
பொற்கொழுந் தே!'

[பூந் தண் வார் குழல - பூவை அணிந்து குளிர்ந்து ஜில்லென்றிருக்கும் நீண்ட கூந்தல்.]

என்று ஆசைதீர அழைக்கிருன். அழைத்து, 'என்னுடைய புகழ்பெற்ற செல்வத்தை உபேட்சிக்கிருயே ஒருவேளை கணவன் மாண்டுபோகவில்லை என்றும், நீயும் அவனோடு வாழப்போகிருய் என்றும் வைத்துக் கொண்டபோதிலும், நான் அளிக்கக்கூடிய வாழ்வோடு ஒப்பிட்டால், அந்த வாழ்க்கை எவ்வளவு அற்பமானது!' என்கிருன்.

மறுபடியும் அதே கொஞ்சும் குரலில்,

'வீட்டும் காலத்(து)
அலறிய மெய்க்குரல்
கேட்டும், காண்டற்(கு)
இருத்திகொல், கிள்ளை நீ?'

[வீட்டும் காலத்து - (நான்) கொன்ற காலத்தில். இருத்திகொல் - இருக்கிறாயோ. கிள்ளை - கிளியே.]

என்று கேட்கிறான். 'உன் புருஷன் சாகவில்லை என்று மனப்பால் குடிக்கிறாயா? நல்லது! நான் அவனை அன்று வதஞ்செய்தபோது, "ஹா ஸீதே! ஹா லக்ஷ்மணா!" என்று அலறிக்கொண்டு சாகவில்லையா உன் கணவன்? அந்தக் குரலை நீ காதாரக் கேட்டிருக்கிறாயே!' என்று ஞாபகப்படுத்தும் ராவணன், 'அப்பா குதிருக்குள் இல்லை!' என்றது போல், 'அந்தக் குரல் மெய்யான குரல்தான்!' என்று சத்தியமாகச் சொல்கிறான். இவ்விதமாகச் சொல்லி, 'கிளியே! உனக்கு இன்னும் அந்த வாழ்விலே நம்பிக்கை இருக்கிறதா?' என்று கேட்டு அவளைக் கலங்கச் செய்யலாமென்று மனப்பால் குடிக்கிறான்.

பிறகு கொஞ்சம் வேதாந்தமாகவும் பேசத் தொடங்கி,

'ஈண்டு நாளும்
இளமையும் மீண்டில;

மாண்டு மாண்டு
பிறிதுறும் மாலைய!'

[ஈண்டு - இங்கே. நாள் - வாழ்நாள். மீண்டில - மீண்டு வருவன அல்ல. பிறிதுறும் மாலைய - ஒழிந்து போகும் தன்மையுடையன.]

என்கிறான். 'அம்மா! வாழ்நாளும் இளமையும் கொஞ்சங் கொஞ்சமாக மாண்டுபோகின்றன. மாண்டவை மீண்டு வருமா? காலம் இப்படி வீணாகப்

போய்விட்டால் இனிமேல் உனக்கு வாழ்வுதான் ஏது ?' என்று இவளுக்காக எவ்வளவோ அனுதாபப் படுவதுபோல் பேசுகிறான்.

கிளர்ஒளி இளமை
கெடுவதன் முன்னம்—

பக்திபண்ண வேண்டும் என்று உபதேசிக்கிறார் நம்மாழ்வார். ராவணனோ, இளமை கெடுவதன் முன்னம் போகம் அனுபவிக்கவேண்டும் என்று உபதேசிக்கிறான் !

வேதாந்தம் பேசுவதுபோல், அருள் - நெறியைக் குறித்தும் பேசுகிறான். 'சிருஷ்டி கர்த்தா உன்னை எவ்வளவு அழகாய்ப் படைத்திருக்கிறான் ! இடையில்லாமல் உன்னைச் சிருஷ்டித்தது போலவே, அந்தப் பாவி அருளில்லாமலும் படைத்துவிட்டானா ? ஜனக குலத்திலே பிறந்த உனக்கு மன உறுதி முதலான குணங்களுக்குக் குறைவில்லை ; ஆனால் தாக்ஷண்யமும், தயையோடு கூடிய வண்மைக் குணமும் இல்லாமல் போய்விட்டனவே !' என்று நொந்துகொள்கிறான்.

தன்னுடைய காமாந்தகாரத்திலும், சீதையின் நன்மையைக் குறித்த கவலையே மேலிட்டிருப்பதாகப் பேசுகிறான். 'நீ இரக்கப்படாமலிருந்தால் நான் சாவது நிச்சயம். அப்படி நான் உயிரை இழக்க நேர்ந்துவிட்டாலும் அது பெரிதன்று. ஆனால், உன் அழகுக்கு ஏற்ற நல்ல குணங்களும், இவ்வளவு பிரியமும் உள்ள என்னைப்போன்ற வேறு புருஷர் உனக்குக் கிடைப்பரோ ?' என்று கவலைப்படுகிறான்.

சீதை தனக்கு அருள்செய்யாவிட்டால், இன்னும் எப்படிப்பட்ட அனர்த்த பரம்பரை வந்துவிடும் என்

பதையும் பட்டவர்த்தனமாய்ப் பேசித் தீர்க்கிறான். 'அப்படி நான் இறந்துபோனால் என் செல்வமாகிய இந்த ராஜ்யமே அழிந்துபோகும். சீதாலட்சுமி ஒருத்தி புகுந்து, ராவணன்-செல்வம் ஓங்கியது என்ற புகழ் பெறவேண்டாமா? அதற்கு மாறாக, அந்தச் செல்வம் முழுக்க முழுக்க அழிந்தது என்ற பெரும் பழியை அடையப் போகிறாயோ?' என்று அவ ளுடைய பரோபகார உணர்ச்சிக்கும் ஒரு விண்ணப் பம் செய்துகொள்கிறான்.

இத்தகைய அனர்த்தங்களைத் தடுப்பதோடு சீதை தனக்கும் 'மகாராணி - பதவி'யைத் தேடிக்கொள் ளலாமல்லவா? அவள் எப்பேர்ப்பட்ட மாட்சிமை தங்கிய மகாராணியாகக் கொலுவீற்றிருக்கலாம் என்பதையும் ராவணன் விளக்கமாய்ச் சித்திரிக் கிறான் :

'தேவர் தேவியர்
சேவடி கைதொழும்
தாவில் மூஉல
கின்தனி நாயகம்,
மேவு கின்றது
நுன்கண்! விலக்கிளை ;
யாவர் ஏழையர்
நின்னின், இலங்கிழாய்?'

[சேவடி - சிவந்த பாதம். தாவில் - அழிவில்லாத. மேவுகின்றது - வந்து அடைகிறது. நுன்கண் - உன் னிடத்திலே. நின்னின் - உன்போல. இலங்கிழாய் - (இங்கு) பெண்ணே.]

தேவர்கள் தேவிமார்களோடு இந்த மகாராணி யின் பாதங்களைப் பார்த்துக் கும்பிட்டுக்கொண்டிருப் பார்களாம். முடி சூடிய முகத்தைப் பார்க்க அவர் களுக்குத் தைரியமே இராதாம். 'இப்படிப்பட்ட திரிலோகாதிபத்யம் உன்னைத் தேடிவருகிறது. நீயோ வலுவிலே வரும் ராஜலட்சுமியை வேண்டாம் என்று விலக்குகிறாய். உன்னைப்போல் ஏழை யார் இருக் கிறார்? அடி பயித்தியக்காரி!' என்று ஆசை கலந்த மனஉளைச்சலோடு பேசுகிறான்.

இவ்வளை அப்பேர்ப்பட்ட சக்ரவர்த்தினி ஆக்கி முடி சூட்டிவைப்பதுகூட ராவணனுக்குப் பரிபூரண திருப்தியளிக்கவில்லை. ராஜ்யத்தோடு தன்னையும் அவள் அடிமைகொண்டு அருளவேண்டும் என்பது தான் இவனது இறுதியான பிரார்த்தனை :

'குடிமை மூன்(று)உல
கும்செயும் கொற்றத்(து)என்
அடிமை கோடி
அருளுதி யால்!' எனா,
முடியின் மீது
முகிழ்த்(து)உயர் கையினன்,
படியின் மேல்விழுந்
தான் ,பழி பார்க்கலான்.

[குடிமை - குடியாகும் தன்மை. கொற்றம் - வெற்றி. கோடி - கொள். எனா - என்று. முகிழ்த்து- குவித்து.]

'மூன்று லோகங்களையும் குடிகளாகச் செய் திருக்கும் வெற்றி வீரனாகிய என்னை அடிமையாகக்

கொண்டருள வேணும்!' என்று கிரீடத்தின்மேல் கை கூப்பிக்கொண்டு, சீதைக்கு எதிரே ஸாஷ்டாங்கமாகத் தரையின்மீது விழுந்து நமஸ்காரம் செய்கிறான். 'ஆசை வெட்கம் அறியாது'; பழியையும் பாராது அல்லவா?

# 11. சீதையின் ·வீரத் தமிழ்

இரும்புக் கம்பிகளைப் பழுக்கக் காய்ச்சிக் காதிலே செலுத்துவதுபோலிருந்தது. அந்தக் கொடுமையான வார்த்தையைச் சரியாகக்கூட இவள் வாங்கிக்கொள்ள வில்லை; எனினும் அது காதுகளைப் பொசுக்கிவிட்டது. உள்ளம் மயங்கிச் சுழன்றுகொண்டிருக்கிறது. அழுது சிவந்திருந்த கண்கள், கோபத்தால் இரத்தம் சொட்டு வது போலிருக்கின்றன. தன் உயிர்மேல் கொஞ்சங் கூட ஆசை, இரக்கம் இல்லையா? பெண்மைக்குத் தான் தகுதியா? எப்படிப்பட்ட கொடுஞ் சொற்களை, எவ்வளவு கண்டிப்பாய்ச் சொல்லப்போகிருள்!

காய்ந்தன சலாகை
　　அன்ன உரைவந்து
　　　　கதுவா முன்னம்,
தீய்ந்தன செவிகள்!
　　உள்ளம் திரிந்தது;
　　　　சிவந்த சோரி
பாய்ந்தன கண்கள்;
　　ஒன்றும் பரிந்திலள்
　　　　உயிர்க்கும்! பெண்மைக்(கு)
ஏய்ந்தன அல்ல
　　வெய்ய மாற்றங்கள்
　　　　இனைய சொன்னுள்.

[சலாகை - இருப்புக் கம்பி. கதுவா முன்னம் - நுழைவதற்கு முன்னமே. திரிந்தது - மயங்கியது;

சுழன்றது. சோரி - இரத்தம். பரிந்திலள் - இரக்கப் படவில்லை; அன்பு காட்டவில்லை. ஏய்ந்தன - இசைந்தன. வெய்ய - கொடிய. மாற்றங்கள் - சொற்கள். இனைய - இத்தகைய.]

அபலை இப்போது மகா வீரபத்தினியாகக் காண்கிருள். ராவணனைத் துரும்பாக மதிக்கும் சீதையையும், இவள் உள்ளத்திலே அலை அலையாகப் பொங்கி வரும் கோபத்தையும் இந்தப் பாட்டிலே எவ்வளவு பிரத்தியட்சமாகப் பார்க்கிருேம்! அந்தக் கோப அலைகளின் கோஷத்தோடு வரும் வீர வாசகத்தையும் இப்போது கேட்கப்போகிருேம்!

ராவணன் சந்யாசியாக வந்து வஞ்சித்த காலத்தில் தன்னுடைய ராட்சஸ பலத்தைக் குறித்துப் பிரமாதமாகப் பேசியது இவள் ஞாபகத்திற்கு வந்தது. அந்தக் காலத்தில் அவன் சொன்னுன்:

'மேருவைப் பறிக்க
வேண்டின், விண்ணினை
இடிக்க வேண்டின்,

நீரினைக் கலக்க
வேண்டின், நெருப்பினை
அவிக்க வேண்டின்,

பாரினை எடுக்க
வேண்டின், பலவினை-
சிலசொல் ஏழாய்!

யார்எனக் கருதிச்
சொன்னுய்? இராவணற்(கு)
அரி(து)என்?' என்ருன்.

[பார் - பூமி. ஏழாய் - ஏழையாகிய பெண்ணே. அரிது என் - அரியது என்னதான் இருக்க முடியும்.]

அவ்வளவு மமதை கொண்டிருந்த அவனுக்கு விளங்கும் அதே பாஷையில், 'வல்லாளனுக்கும் ஒரு வல்லாளகண்டன் உண்டு!' என்று மனத்தில் உறைக்கும்படி இப்போது பேசுகிறாள் :

'மேருவை உருவல்
வேண்டின், விண்பிளந்(து)
ஏகல் வேண்டின்,

ஈரேழு புவனம்
யாவும் முற்றுவித்
திடுதல் வேண்டின்,

ஆரியன் பகழி
வல்ல(து)! அறிந்திருந்(து)
அறிவி லாதாய்!

சீரிய அல்ல
சொல்லித் தலைபத்தும்
சிந்து வாயோ ?'

[உருவல் - துளைத்தல். விண் - வானம். ஏகல் - (அப்புறம்) செல்வது. புவனம் - லோகங்கள். முற்றுவித்திடுதல் - முடித்துவிடுதல். ஆரியன் - பெரியோன்; (இங்கே) ராமன். பகழி - பாணம். சீரிய அல்ல - சிறப்பில்லாத சொற்கள்.]

என்று தொடங்கும் பேச்சு அந்த ராட்சஸ சக்ரவர்த்தியையும் பிரமிக்கச் செய்திருக்கவேண்டும்.

'ராவணா! நீ பயந்துவிட்டாய் என்பதற்கு நீயே சாட்சி! வேறு சாட்சி வேண்டியதில்லை. வஞ்சனை

செய்து, அவர் இல்லாத சமயம பார்த்துத்தானே வந் தாய்! நீ தப்பிப் பிழைக்க வேண்டுமென்ருல் என்னை விடுதலைசெய்து அவரிடம் அனுப்பிவிடு. உன் குலத்துக் கெல்லாம் நஞ்சல்லவா நான்?' என்ற பேச்சிலே என்ன வீரம், என்ன கம்பீரம்!

> அஞ்சினை ஆத
> லான்,அன்(று) ஆரியன்
> அற்றம் நோக்கி,
>
> வஞ்சனை மான்ஒன்(று)
> ஏவி, மாயையால்
> மறைத்து வந்தாய்;
>
> உய்ஞ்சனை போதி
> ஆயின், விடுதி; உன்
> குலத்துக்(கு) எல்லாம்
>
> நஞ்சினை எதிர்ந்த
> போது, நோக்குமே
> நினது நாட்டம்?'

[அற்றம் - இல்லாத சமயம். உய்ஞ்சனை போதி ஆயின் - பிழைத்துப் போக வேண்டுமென்று கருதினுல். விடுதி - (என்னை) விடுதலை செய். நோக்குமே - நோக் குமோ. நினது நாட்டம் - உன் கண்கள்.]

பத்துத் தலை, இருபது தோள் என்ருல் பயமா? அவற்றினுல் பயன் யாருக்கு? ராவணனுக்கு அன்று!— எனச் சீதை நினைக்கிருள்.

> 'பத்துள தலையும்
> தோளும் பலபல
> பகழி தூவி,

வித்தக வில்லி
　　னற்குத் திருவிளை
　　　　யாடற்(கு) ஏற்ற
சித்திர இலக்கம்
　　ஆகும் அல்லது,
　　　　செருவில் ஏற்கும்
சத்தியை போலும்?
　　மேனாள் சடாயுவால்
　　　　தரையின் வீழ்ந்தாய்!'

[வித்தகம் - சாமர்த்தியம். இலக்கம் - லட்சியப் பொருள்; குறி. செருவில் - போரில். சத்தியை - சக்தியுள்ளவனாய்.]

என்று சீதை அந்தப் பெருந் துன்பத்திலும் அலட்சியமாகச் சிறிது நகைச்சுவை தோன்றப் பேசுகிறாள்.

லட்சியப் பொருள்களைச் சித்திரத்தில் எழுதி வைத்துக்கொண்டு, அரசிளங் குமரர்கள் விளையாட்டாகக் குறிவைத்து அம்பு போட்டுப் பழகக்கூடுமல்லவா? ராவணனுடைய தோள்களும் தலைகளும் அப்படிப்பட்ட சித்திரக் குறிகளாகவே இருக்கப் போகின்றனவாம். கிழப் பறவையாகிய ஜடாயுவே முதுகில் மண்காட்டிவிட்டதென்றால், ராமன் போர் செய்யவும் வேண்டுமா? அவனுடைய அம்பு - விளையாட்டே போதுமல்லவா?

ராம பாணத்திற்கு முன் ராவணனுடைய வரம், வாழ்நாள், வலிமை முதலியவை நிற்க முடியுமா? விளக்கின்முன் இருள் நிற்குமா?

பெற்றுடை வரனும்,
　　நாளும், பிறந்துடை
　　　　உரனும், பின்னும்

மற்றுடை எவையும்,
தந்த மல(ர்)அயன்
முதலோர் வார்த்தை,

வில் - தொடை இராமன்
கோத்து விடுதலும்,
விலக்குன்(டு) எல்லாம்

இற்(று)இடைந்(து) இறுதல்
மெய்யே : விளக்கின்முன்
இருளுண் டாமோ ?

[பெற்றுடை - நீ பெற்றுள்ள. வரன் - வரம். நாள்- வாழ்நாள். பிறந்துடை உரன் - உன்னிடம் உண்டாயிருக்கும் பலம். மற்றுடை எவையும் - நீ அடைந்துள்ள மற்ற ஆயுத பலம், மாயா பலம் முதலியவைகளும். மலர் அயன் - தாமரை மலரில் வாழும் பிரம்ம தேவன். வில் தொடை கோத்து - வில்லில் அம்பைத் தொடுத்து. இற்று - துண்டாகி. இடைந்து - பின்வாங்கி. இறுதல்- அழிதல்.]

இவ்விதமாகப் பேசிக்கொண்டு வரும் சீதையின் உள்ளத்தை ரம்பம்போல் அறுத்துக்கொண்டிருந்தது அந்தக் காமுகன் காலில் விழுந்த செயல். 'வில்லும் தோளுமாய்த் தம்பி காவல் செய்துகொண்டிருந்த போதாவது நீ முகங்காட்டத் துணிந்ததுண்டா? இன்னமும் ஆண்பிள்ளைபோலத் தலைதூக்கிக்கொண்டு வெட்கமில்லாமல் பெண்கள் காலிலும் விழுகிறுயே? இதுதான் வீரமோ?' என்று பரிகசிக்கிருள் :

'சிலையெடுத்(து) இளையவன்
நிற்கச் சேர்ந்திலை ;

தலையெடுத்(து) இன்னமும்
மகளிர்த் தாழ்தியோ ?'

[சிலை - வில். மகளிர்த் தாழ்தியோ - பெண்களின் காலிலும் விழுகின்றாயோ.]

'நீ ஒளித்து வாழும் இந்த இடம் என்னுடைய நாயகருக்கு எப்படியாவது தெரிந்துவிடும். அப்போது அவருடைய கோபம் ராட்சஸர்களையெல்லாம் கொன்றாகிலும் தீரப்போகிறதா ?........நீ மண்ணும் விண்ணும் அஞ்சும்படி அதிக்கிரம வாழ்க்கை நடத்துகிறாய். இதற்குத் தண்டனை கிடையாதென்றும், மும்மூர்த்திகளும் செயல்மறந்து சும்மா இருப்பார்கள் என்றும் எண்ணுகிறாய் !' என்றெல்லாம் பேசிவரும் சீதை, பளிச்சென்று,

'செங்கண்மால், நான்முகன்,
சிவன்என் றேகொலோ
எங்கள்நா யகனையும்
நினைந்த(து) ஏழைநீ ?'

[செங்கண் மால் - விஷ்ணு. நான்முகன் - பிரம்மதேவன்.]

என்று ஒரு கேள்வி போட்டு ராவணனையும் திகைக்க வைக்கிறாள்.

மேலே மேலே பொங்குகிறது சீதையின் கோபம். ராவணனை ஒருகாலத்தில் தோல்வியுறச்செய்த கார்த்த வீரியார்ஜுனனை ஞாபகப்படுத்துவதே அவனுக்கு அவமானம். அந்த ஞாபகத்தை இப்போது எவ்வளவு கொடுமையாகக் கிளறிவிடுகிறாள் !

'ஆயிரம் தடக்கை
யான், நின் ஐந்நான்கு
கரமும் பற்றி,
வாய்வழி குருதி
சோரக் குத்தி, வான்
சிறையில் வைத்த
தூயவன், வயிரத்
தோள்கள் துணித்தவன்,
தொலைந்த மாற்றம்
நீ அறிந் திலையோ?
ஏகும் நெறிஅறிந்
திலாத நீசா!'

[தடக்கை - பெரிய கை. ஐந்நான்கு - இருபது. குருதி - இரத்தம். சோர - சொரிய. வான் சிறை - பெரிய சிறை. துணித்தவன் - வெட்டியவன். தொலைந்த - வலி அழிந்த. மாற்றம் - செய்தி. ஏகும் நெறி - செல்ல வேண்டிய வழி.]

என்ற வார்த்தை, தான் காதலிக்கும் ஒரு பெண்ணின் வாயிலிருந்து வரும்போது, எவ்வளவு ரோஷத்தை மூட்டியிருக்கவேண்டும்!

ஆயிரம் கையுள்ள கார்த்தவீரியன் ராவணனுடைய இருபது கைகளையும் பிடித்துக்கொண்டு முதுகிலே ஒரு குத்து விட்டானும், வாய் வழியாக இரத்தம் கக்கும்படி. பிறகு ஒரு சிறைச்சாலைக்குள் தள்ளி அடைத்து வைத்தானும். தனக்கு வஞ்சனை செய்த ராவணனோடு ஒப்பிட்டுப் பார்த்தால், 'அந்த முரடனும் தூயவன்!' என்று தீர்மானிக்கிறாள். அந்தக் கார்த்தவீரியனுடைய வயிரம் பாய்ந்த அந்தத் தோள்களையும் வெட்டித்தள்ளிய பரசுராமனையும்

ஞாபகப்படுத்தி, அந்தப் பரசுராமனே தன் புருஷனுக்கு முன் வலியிழந்து தொலைந்துபோன செய்தியையும் ஒரே மூச்சில் குறிப்பிடுகிறாள்.

கடைசியாகச் சீதை ராவணனை நோக்கி, 'நீ மதோன்மத்தனாய் இருக்கிறாய். இடித்து அறிவு புகட்டுகிறவர் உனக்கு இல்லை; சுற்றியிருப்பவர்கள் உன் மனம் போன போக்கிலேயே உன்னைத் தள்ளி விட்டு உன்னை முடிப்பவர்களாகவே இருக்கிறார்கள்!' என்று கூறி முடிக்கிறாள் :

' கடிக்கும்வல் அரவும்
கேட்கும் மந்திரம்;
களிக்கின் றோயை,
" அடுக்கும்ஈ(து) அடா(து) "என்(று)
ஆன்ற ஏதுவோ(டு)
அறிவு காட்டி,
இடிக்குநர் இல்லை ;
உள்ளார், எண்ணிய(து)
எண்ணி, உன்னை
முடிக்குநர் என்ற
போது, முடிவன்றி
முடிவ(து) உண்டோ? '

[வல அரவு - கொடிய சர்ப்பம். களிக்கின்றோயை - மதோன்மத்தனாய்த் திரிகின்ற உன்னை. ஈது - இது. ஆன்ற ஏது - சிறந்த காரணங்கள்; இடிக்குநர் - இடித்து அறிவு புகட்டுகிறவர். உள்ளார - உன்னிடம் உள்ளவர்கள். எண்ணியது - நீ நினைத்ததையே. முடிக்குநர் - முடிப்பவர்களாய் இருக்கிறார்கள்.]

சீதையின் வீர வாசகமாகிய இப்பாடல்களை 'வீரத் தமிழ்' என்று சொல்லலாம். கம்பனுக்குச் சீதையும் தமிழ்ப்பெண்தானே?

## 12. கொஞ்சமோ துன்ப வெள்ளம்?

சீதையின் வீர மொழியில் எவ்வளவோ தர்மோப தேசம் அடங்கி யிருந்தது. ஆனால், உபதேசம் கேட் கவா ராவணன் வந்திருக்கிறான்? அந்த வீர மொழி யும் தர்மோபதேசமும் ராவண - கோபத்தை ஜ்வாலை செய்துவிடுகின்றன. ராவண கோபமும் ராவணாகார மாகவே பொங்கிவிடுமல்லவா? அப்படியே பாருங்கள் பின்வரும் பாடல்களில் :

என்(று)அ றத்துறை
கேட்டலும், இருபது
நயனம்
மின்தி றப்பன
ஒத்தன ; வெயில்விடு
பகுவாய்
குன்(று)இ றத்தெழித்(து)
உரப்பினன்; குறிப்ப(து)என் ?
காமன்
தன்தி றத்தையும்
கடந்தது சீற்றத்தின்
தகைமை !

[அறத் துறை - தர்மோபதேசம். மின் - மின்னல். பகு - பிளந்த. இற - இற்றுப்போகும்படி. தெழித்து - ஆரவாரஞ்செய்து. உரப்பினன் - அதட்டினான். குறிப்பது என் - குறிப்பிடுவதற்கு என்ன இருக்கிறது. காமன் தன் திறத்தையும் - மன்மதனது திறமையையும். தகைமை - தன்மை.]

வளர்ந்த நாணினன் ;
மாதிரம் அனைத்தையும்
மறைவித்(து)
அளந்த தோளினன் ;
அனல்சொரி கண்ணினன் ;
' இவளைப்
பிளந்து தின்பென் !' என்(று)
உடன்றனன் ; பெயர்ந்தனன்
பெயரான்,
கிளர்ந்த சீற்றமும்
காதலும் எதிர்எதிர்
கிடைப்ப !

[நாணினன் - வெட்கத்தையுடையவன். மாதிரம் - திக்கு. உடன்றனன் - கோபித்தான். பெயர்ந்தனன் - சென்றான். பெயரான் - செல்லாமலிருந்தான். கிளர்ந்த - பொங்கியெழுந்த. கிடைப்ப - தோன்ற.]

இருபது கண்களும் மின்னலைத் திறந்துவிடுவது போல் ஜொலிக்கின்றன. உக்கிரமான வெயிலைக் கக்குவதுபோல் வாய்கள் பிளந்து கோரப் பற்களை நன்றாக வெளிக் காட்டுகின்றன. அதட்டி ஆர்ப்பாட்டம் செய்து அந்தப் பற்களை நெறு நெறுவென்று கடிக்கும்போது, பீதியால் ' குன்றுகளும் இற்று விழும் ! ' என்று தோன்றுகிறதாம. ராவண கோபம் இப்போது காமனது உக்கிர வல்லமையையும் ஜயித்து விடுகிறது. ஆனால், இந்த ஜயம் நிலைக்கப் போகிறதா ?

கோபத்தைத் தூண்டும் வெட்கமும் மேலும் மேலும் வளர்கிறது. திக்குகளை யெல்லாம் மறைத்து

விடுவதுபோலவும் அளக்கப்போவதுபோலவும் தோள்கள் பூரிக்கின்றன. அனல் சொரியும் கண்களுடன், 'இவளைப் பிளந்து தின்றுவிடுவேன்!' என்று சீறி, சீதை இருக்கும் இடத்தை நோக்கிச் செல்கிறான். ஆனால்—என்ன அதிசயம்!—அவனால் இடம்பெயர்ந்து செல்ல முடியவில்லை.

'பெயர்ந்தனன் பெயரான்!' என்ற நிலையில், முன்வைத்த கால்கள் பின்வாங்குவதற்குக் காரணமென்ன? ஒரு க்ஷணம் தன்னை வென்ற கோபத்தைக் காதல் மறுபடியும் எதிர்த்துப் போராடுகிறது; இப்போது வெற்றி தோல்வி இல்லாமல், ஒன்றையொன்று மிஞ்சிவிடாமல், இரண்டும் ஒத்த நிலையில் இருக்கின்றன.

இங்கே இப்படி நடந்துகொண்டிருக்க, மேலேயிருந்து பார்த்துக்கொண்டிருக்கும் ஹனுமானுடைய நிலை என்ன? அதையும் இந்தக் காட்சிக்கிடையே காட்டிவிடுகிறான் கம்பன். ராவண கோபத்தைக் கண்டு ஹனுமானுக்கும் கோபம் வந்துவிடுகிறது. அந்தக் கோபத்தையும், சீதா ராமர் மீது ஹனுமானுக்குள்ள பக்தியையும் பாருங்கள்:

அன்ன காலையின்,
அனுமனும், 'அருந்ததிக்
கற்பின்

என்னை ஆளுடை
நாயகன் தேவியை
என்றான்

சொன்ன நீசன்கை
தொடுவதன் முன்,துகைத்(து)
உழக்கி,

பின்னை நின்றது
செய்குவென்!' என்பது
பிடித்தான்.

[அன்னகாலையின் - அப்பொழுது. என்னை ஆளுடை நாயகன் - என்னை ஆட்கொண்டுள்ள தலைவனாகிய ராமன். சொன்ன - (தாறுமாறாய்ச்) சொன்ன. நீசன் - (இங்கே) ராவணன். துகைத்து - துவைத்து. உழக்கி - ஹிம்ஸித்து. பின்னை - பின்பு. நின்றது - செய்ய வேண்டுவது. பிடித்தான் - உறுதியாக நினைத்தான்.]

கீழே ராவணன் - காதலும் ராவணன்-கோபமும் போராடிக்கொண்டிருக்க, உயரே மரக்கிளை இலைகளின் மறைவிலே ஹனுமான் கைகளைப் பிசைந்து கொண்டிருக்கிறான்;—' அவளைத் தொடுவதற்கு முன்னமேயே பத்துத் தலைகளையும் துகைத்துத் தொகையலாக்கிவிடுவேன்!' என்று. ஆனால், இதற்கு அவசியம் ஏற்படவே யில்லை.

ஹனுமான் அப்படி நினைத்ததுதான் தாமசம், அதற்குள்ளே ராவண கோபத்தை ராவணனுடைய காதலே பூர்ணமாய் ஜயித்து விடுகிறது. காலாக்கினி போன்ற அந்தக் கொடிய கோபாக்கினியும் அவிந்து போகிறது அந்தக் காதல் - வெள்ளத்திலே !—என்கிறான் கவிஞன். சீதையின் வார்த்தைக்குச் சமாதானமாகவே பதில் சொல்லப் பார்க்கிறான் ராவணன்.

கணவனைக் கொன்றுவிட்டு அவளைக் கவர்ந்து வந்திருந்தால், அவளும் உயிரை விடக்கூடும் ; அவளுக்கு உயிர் போனால் தனக்கும் உயிர் போய்விடுமாம். இதனால்தான் அவளை வஞ்சனையாகக் கவர்ந்து வந்தானும். ' மானென்று பின் தொடர்ந்து போனவர்கள்

(ராவணேச்வரனுகிய) நானென்று தெரிந்துகொண்டால், இந்தத் திசையிலேதான் வரத் துணிவார்களா? அவசியமானால் அவர்களைக் கூவிநின்று ஏவல்கொள்வேன்! அல்லது அந்த இருவரையும் ஒரு கையாலே பிடித்துக்கொண்டு வருவேன், அந்த வேடிக்கையையும் நீ காண்பாய்! தின்னுவதற்கும் அந்த ஆசாமிகள் பதமாகத்தான் இருப்பார்கள்! ஆனால் உன்னைத் தந்த உபகாரத்தை மறந்துவிடுவேனு?' என்றெல்லாம் பிதற்றுகிறுன்.

இவ்விதமாகச் சமாதானம் பேசி வரும்போதே, மறுபடியும் கோபம் பீறிக்கொண்டு வருகிறது. ராம லட்சுமணரைக் கொல்வதோடு, அயோத்தியிலுள்ள பரதன் முதலானவர்களையும் உயிர் குடித்து, மிதிலையிலுள்ளவர்களையும் வேரறுத்துவிடுவதாக வீரம் பேசுகிறுன். அவள் பிறந்த இடத்தையும் புகுந்த இடத்தையும் நாசஞ் செய்து மீண்டபின் அவளையும் கொன்றுவிடப் போவதாகப் பயமுறுத்துகிறுன் :

பிறகு அந்தப் பொங்கும் கோபத் தீயுடன் தன் உடைவாளை (ஊர்வசி கையிலிருந்து) வாங்கி உறையிலிருந்து உருவியதும், அதுவும் தீயைப்போல் ஜொலிக்கிறது. ஆனுல், இந்த நிலையில் ராவணனும் அந்த வாளை உபயோகிக்கத் துணியவில்லை. ஏன்? எப்படி? பாருங்கள் :

ஈதுரைத்(து) அழன்று
பொங்கி, எரிகதிர்
வாளை நோக்கி,

தீ(து)உயிர்க்(கு) இழைக்கும்
நாளும் திங்கள்ஓர்
இரண்டில் தேய்ந்த(து);

ஆதலின் நின்ற(து)
எண்' என்(று), 'அறிந்தவாறு
அறிவாய்.' என்று,
போதரிக் கண்ணி
னாளை அகத்துவைத்(து),
உரப்பிப் போனான்.

[ஈது - இது; இவ்விதமான சொல். அழன்று பொங்கி - தீயைப்போல கோபத்தால் பொங்கி. எரி கதிர் - எரிவது போன்ற ஒளி. தீது - தீமை. திங்கள் - மாதம். நின்றது - நேரிட இருப்பது. எண் - எண்ணிப் பார். அறிந்தவாறு - அறிகின்ற வழியில். என்று - என்று சொல்லி. போதுஅரிக் கண்ணினாள் - செந்தாமரை மலர்போன்ற, செவ்வரி பரந்த கண்களையுடைய சீதை. உரப்பி - அதட்டி.]

ராவணன் இப்போது சீதையை நோக்காமல் தன் எரிகதிர் வாளை நோக்கி, 'இன்னும் இரண்டு மாத காலம்தான் உனக்குத் தவணை; இதை எண்ணிப் பார்!' என்று அதட்டிவிட்டு, அவளைத் தன் உள்ளத்தில் வைத்த வண்ணமாகவே திரும்பிப் போகிறான்.

போகும்போதே அரக்கிமாரைத் தனியே சமிக்ஞையால் அழைத்து, 'நயமாகவோ பயமாகவோ எப்படியாவது சீதையை வசப்படுத்த வேண்டும். இல்லாவிட்டால், உங்களுக்கு நான் நஞ்சாய் இருப்பேன்!' என்று எச்சரிக்கை செய்கிறான்.

ராவணன் போனதும், சிரிப்பையே அறியாத அந்த முகங்கள் முன்னிலும் கடுமையாகி அவளைச் சூழ்ந்துகொண்டு என்ன ஆர்ப்பாட்டம் செய்கின்றன! என்ன அதட்டுப் போடுகின்றன! கண்கள் கனல்

சிந்த, சூலாயுதங்களும் வேலாயுதங்களும் சீதைமேல் பாய்ந்துவிடுவதுபோல மின் வெட்டுகின்றன. 'கொல் லுங்கள், கொல்லுங்கள்! கண்டங் கண்டமாக்கி வயிறாரத் தின்னுங்கள்!' என்ற இரைச்சல் கிளம்பு கிறது. 'நான் முன்னே, நான் முன்னே!' என்று ஒருவர் முன் ஒருவராகப் போட்டி போட்டுக் கொண்டு அரக்கியர் சீதையைப் பயமுறுத்துகிறார் கள்.

'எப்படிப்பட்ட பெண்கள்! எவ்வளவு கொடிய வர்கள்!' என்று அதிசயிக்கிறீர்கள் அல்லவா? ஆனால் சீதையே பெண்களில் கொடியவள் என்பது அவர்கள் சித்தாந்தம். 'பெண்ணில் தீயோய்!' என்று சீதையை அழைத்து, அவளுடைய கொடுமையை விவ கார ரீதியாக அவளுக்கே ருசுப்படுத்திவிடலாம் என்று எண்ணுகிறார்கள். 'மன்மத பாணத்தால் எங்கள் ராஜாவின் பொன் மேனியைப் புண்மேனியாக்கி விட்டாய்! பிறகு புண்ணிலே கோலிட்டாற்போல் கொடுஞ் சொற்களையும் பிரயோகித்தாய்! இதனால் உனக்குத்தான் என்ன பயன்? நீ அழிந்துபோவது நிச்சயம். நீ அழிவதோடு மனிதர் குலமும் அடியோடு அழிந்துபோகும்படியான குறும்பு செய்துவிட்டாய்! பட்சபாதமில்லாது ஆலோசித்து இந்த உண்மையைக் கண்டுகொள்ளவும மாட்டேனென்று பிடிவாதம செய் கிறாய். பெண்ணாய்ப் பிறந்தும் உன்னிடத்தில் எவ் வளவு கொடுமை இருக்கிறது!' என்று அவர்கள் சீதையைப் பழிக்கிறார்கள். அபார ராஜபக்தி, அபூர்வ மான மூளை, அதிசயமான வாதம்!

வேறு சிலர் சீதையைப் பைத்தியக்காரி என்று மதிக்கிறார்கள். 'பைத்தியம் இல்லாவிட்டால், பிறந்த

குலத்திற்கும் புகுந்த குலத்திற்கும் இப்படி நெருப்பை ஒருசேர வாரி இறைப்பாயா? இந்த க்ஷணமே நீ செத்துப்போவாய். இனிமேல் இந்த உலகத்தில் உனக்கு வாழ்வு இல்லை!' என்று மனத்தில் தைக்கும் படி அவர்கள் பேசுகிறார்கள்.

இன்னும் சிலர், பயப்படுத்தாமல் நயமாகப் பேசி அவளை வசப்படுத்தி விடலாமென்று நினைக்கிறார்கள். அவர்கள் பேச்சிலேதான், ராவணனுடைய ஜாதி, உயர்வு, பரம்பரையின் பெருமை, அறிவுத் திறமை முதலியன எவ்வளவு பிரமாதப் படுகின்றன!

'வையம் தந்த
நான்முகன் மைந்தன்,
மகன்மைந்தன்,

ஐயன், வேதம்
ஆயிரம் வல்லோன்,
அறிவாளன்,

மெய்யன்(பு) உன்பால்
வைத்துள(து) அல்லால்,
வினைவென்றோன்

செய்யும் புன்மை
யாதுகொல்?' என்றார்
சிலர்எல்லாம்.

[வையம் - உலகம். நான்முகன் - பிரம்மதேவன். வினை - நல்வினை, தீவினை என்ற இருவினை. புன்மை - இழிதொழில்; குற்றம்.]

சாதாரணமான பிராம்மணர்கள் ரிஷி பரம்பரையைச் சார்ந்தவர்கள் என்றால், ராவணனோ நேரடியாகப் பிரம்மதேவனுடைய பரம்பரையிலேயே வந்த

அசல்-பிராம்மணனாக விளங்குகிறானும். தலைமுறை கூட அதிகம் ஆகவில்லையாம். பிரம்மா இவனுடைய கொள்ளுப்பாட்டன்; அந்தத் தேவனுக்கு இவன் ஸாக்ஷாத் கொள்ளுப்பேரன். இத்தகைய பிரம்மகுலம் மற்றப் பிராம்மணர்களுக்கு இல்லையல்லவா? ஆகவே, 'ஐயன்' என்ற பட்டத்துக்கு ராவணனைக் காட்டிலும் தகுதி வாய்ந்தவர் யார்?

மேலும் பிறப்புக்குத் தகுந்த சிறப்பும் இருக்கிறது. 'வேதம் ஆயிரம் வல்லோன்' என்கிறார்கள். 'ஆயிரம் சாகைகளாகவுள்ள சாம வேதத்தில் நிபுணன்' என்பதே பொருளாயினும், 'ஒரு வேதம், இரண்டு வேதம், மூன்று வேதம், நாலு வேதம் மட்டுமா ராவணனுக்குத் தெரியும்? வேதம் ஆயிரமும் அப்படியே கரைத்துக் குடித்திருக்கிறான்!' என்று பிரமிக்கும்படி தொனிக்கிறது அந்த 'அபாரமான வைதிகக் கல்வி'.

இது மட்டுமா? வைதிக ஞானத்தோடு விசேஷ லௌகிக ஞானத்தையும், ஏட்டுப் படிப்போடு விசேஷமான பகுத்தறிவுக் கூர்மையையும் குறிப்பிடுகிறது 'அறிவாளன்' என்ற வார்த்தை.

இவ்விதமாக ராவண வைபவத்தை வர்ணித்து வரும் அரக்கிமார்கள், ஒழுக்கத்தைக் குறித்து ஒரு வார்த்தையும் சொல்லவில்லையே? அவ்வளவு பெருமையுள்ளவனுக்கு ஒழுக்கமே தேவையில்லை யென்பது அவர்கள் அபிப்பிராயமா? ஆம், அவனை அவர்கள் 'வினை வென்றோன்'—அதாவது, நல்வினை தீவினைகளுக்கு அப்பாலுள்ள அதிவீரன் (Super-man) என்று குறிப்பிடுகிறார்கள். சாமானியர்களுக்கன்றோ, நன்மையும் தீமையும்?

ராட்சஸ மகாராஜ்யத்தில், அவன் ஏகசக்ராதிபதி யாக விளங்குவதுபோல், பரமாசாரியனுகவும் விளங்கு கிருன். இவ்வளவு வல்லமை வாய்ந்தவனுக்கு நன்மை யென்றும், தீமையென்றும் உண்டோ? அவன் எது செய்தபோதிலும் அதை நன்மையாகக் கொள்வது தானே அறிவுடைமை!

இவ்விதமாகப் பிரசங்கித்துவரும் ராட்சஸிகள், 'அப்படிப்பட்ட பெரியோன், தன்னை நோக்கித் தவம் கிடக்கும் எத்தனையோ பெண்களை அலட்சியம் செய்து விட்டு உன்னிடத்தில் அன்பு வைத்திருக்கிருன் என்ருல், அது உன்னுடைய பெரும் பாக்கியம் அல் லவா?' என்று சொல்லி, அந்த அன்பு உண்மையான அன்புதான் என்றும் உறுதி கூறுகிருர்கள்.

ஆ, எப்படிப்பட்டவன்! எப்படிப்பட்ட அன்பு! அது குற்றமாகுமா? அந்த அன்பைப் பாராட்டாத சீதையே குற்றவாளி யென்று அவளிடம் விசேஷ அனுதாபம் காட்டி, எவ்வளவு நயமாக எவ்வளவு ரஸமாக வசனிக்கிருர்கள்!

இப்படிப்பட்ட நயவஞ்சகத்திற்கும் சீதை அசைய வில்லை; பயமுறுத்தல்களுக்கும் அசையவில்லை. ராட் சஸிகள் பரபரத்து விழுங்குபவர்போல வந்து மேல் விழுகிருர்கள், ராவணன் கட்டளையையும், அவர்கள் செயலையும், நினைக்க நினைக்கக் கண்ணீர் வருகிறது சீதைக்கு. அந்தக் கண்ணீருக்கிடையே—என்ன அதி சயம்!—தன் நிலைமையை நினைக்க அவளுக்குச் சிரிப்பும் வந்துவிடுகிறது! துக்கத்தின் அதீதமா? பைத்தியம்தானு?

அப்போது அங்கு நின்றுகொண்டிருந்த திரிஜடை சீதையைப் பார்த்து,

முன்னே சொன்னேன்
கண்ட கனவின்
முடிவம்மா !'

என்று அந்தச் சொப்பனத்தை ஞாபகப்படுத்துகிறாள். மற்ற அரக்கிகளுக்கும் அவளிடத்தில் கொஞ்சம் மதிப்பு இருந்தது. அவர்களும் அவள் சொன்ன புத்திமதியைக் கேட்டுப் பின்னும் சீதையைத் தொந்தரவு செய்யத் துணியவில்லை. சீதையும் சற்றுத் துயர் நீங்கி ஆவி தரித்திருந்தாள்.

'இதுதான் இவளைக் கண்டு பேசத் தக்க சமயம்' என்று உயரே இருக்கும் ஹனுமான் தீர்மானிக்கிறான்.

## 13. சீதை தனிமொழி

'காண்பதற்கு ஒத்த காலம் இதுவே' என்று தீர்மானித்த ராமதூதன்,—'ஆனால் அவளைச் சுற்றி இருக்கும் கட்டுக்காவல் சாமான்யமா?' என்று ஆலோசிக்கிறான். காவல் - தெய்வமே கொஞ்சம் அயர்ந்துவிட்ட போதிலும், 'ஜாக்கிரதை' என்று சொல்லி அந்தத் தெய்வத்தையும் தூண்டி உத்ஸாகப் படுத்தக்கூடியவர்கள் அல்லவா அந்தக் காவலாளிகள்? அப்பேர்ப்பட்டவர்கள் தங்கள் காவலுக்குப் பங்கம் வந்தால் சும்மா இருப்பார்களா?

அவர்கள் மறுபடியும் தூங்கினால் சீதையோடு கொஞ்சம் பேசிக்கொள்ளலாமே என்றால், இனிமேல் அந்த ஆசாமிகள் தூங்குவது என்பது நடக்கிற காரியமா? இந்த நிலையில் ஹனுமான் கொஞ்சம் ஹாஸ்ய ரஸம் தோன்றத் தனக்குள் தானே பேசிக்கொள்கிறான்: 'இவர்களைப் பார்த்து, "நான் சீதையோடு பேச விரும்புகிறேன்; தயவுசெய்து எனக்காகக் கொஞ்சம் உறக்கம் போடுங்கள்!" என்று நான் நிதான புத்தியோடு வேண்டிக்கொண்டால், அல்லது பிரார்த்தனை செய்துகொண்டால், இந்தப் பேர்வழிகள் உறங்கப் போகிறார்களா? "மயிலே மயிலே! இறகு போடு" என்றால் பலிக்குமா? சரி, ஒரு மந்திர வித்தை செய்து இவர்களை மயங்கி உறங்கிவிழச் செய்வேன்!'

அந்த மாய வித்தையால் அரக்கியர் யாவரும் உறங்கிப்போகிறார்கள். சாகத்தான் போகிறார்களோ

என்று எண்ணும்படி அவ்வளவு தூரம் பிரக்ஞை தவறிக் கிடக்கிறார்கள் !

' காண்டற்(கு) ஒத்த '
காலமும் ஈதே ;
தெருகாவல்

தூண்டற்(கு) ஒத்த
சிந்தையி னரும்
துயில்கில்லார் ;

வேண்டத் துஞ்சார் ! '
என்றுஒ(ரு) விஞ்சை
வினைசெய்தான் :

மாண்டற்(கு) உற்ற
ராம்என எல்லாம்
மயர்வுற்றார்.

[ஈதே - இதுவே. தெரு காவல் - சுடுகின்ற காவல் ; அழிக்கின்ற காவல் ; (இங்கே) காவலின் அதிதேவதை. துயில்கில்லார் - தூங்குகின்றார் இல்லை. துஞ்சார் - தூங்கமாட்டார். விஞ்சை வினை - மந்திரவித்தையோடு கூடிய தொழில். மாண்டற்கு உற்றாராம் என - சாகத் தொடங்கிவிட்டார்கள் என்று சொல்லும்படி. மயர்வுற்றார் - மயக்கம் அடைந்தார்கள்.]

அவர்கள் இப்படித் தூங்கிக்கொண்டிருந்ததைச் சீதை ஒருபோதும் பார்த்ததில்லை. திரிஜடை தன் கனவைச் சொல்லிக்கொண்டிருந்த போதும் அவர்கள் இப்படிச் செத்தவர்களைப்போல் மயங்கிக் கிடக்கவில்லை. அப்போதெல்லாம் தன் துன்பத்தை அதிகமாய் வெளிக் காட்டிக்கொள்வதற்கும் அவளுக்குப் பயம். எப்படியோ உணர்ச்சி வெள்ளத்திற்கு

அணைபோட்டு வைத்திருந்தாள். இப்போது அந்த அணை உடைந்துபோய்விடுகிறது.

இப்பெருந் துன்பத்திலிருந்து தப்ப முடியுமா? வழி ஒன்றும் கண்ணுக்குத் தெரியவில்லை; மனக்கண்ணுக்குக்கூட ஒரு வழியும் காணப்படவில்லையே! உள்ளங் கரைந்து, உடம்பும் கரைந்துகொண்டே இருக்கிறது. எத்தனையோ நாளாகச்செத்துக்கொண்டு தானிருக்கிருள்! எனினும்,—ஆச்சரியத்திலும் ஆச்சரியம்—அவள் செத்துப்போய்விடவில்லை! காரணம் என்ன?

துஞ்சா தாரும்
துஞ்சுதல் கண்டாள்:
துயர்ஆற்ருள்,
நெஞ்சால் ஒன்றும்
உய்வழி காணுள்,
நெகுகின்ருள்,
அஞ்சா நின்ருள்,
பன்னெடு நாளும்
அழிவுற்ருள்,
எஞ்சா அன்பால்,
இன்னபகர்ந்(து)ஆங்(கு)
இடருற்ருள்.

[ஆற்ருள் - பொறுக்கமாட்டாதவளாய். உய்வழி - பிழைத்துப்போகும் வழி. நெகுகின்ருள் - கரைகின்ருள். அஞ்சாநின்ருள் - அஞ்சுகின்றவளாய். எஞ்சா அன்பு - அற்று ஒழியாத அன்பு; குறையாத, முழுமையான, அன்பு. இன்ன பகர்ந்து - இவ்வார்த்தைகளைச் சொல்லி.]

ராமனிடம் உள்ள அன்புதான்—மேலும் மேலும் பெருகிக்கொண்டிருக்கும் அந்த இறவா அன்புதான்—உள் மனத்திலே அவ்வளவு நம்பிக்கையைத் தூண்டி, உயிர்த்தீயை அணையவிடாமல் காத்துக்கொண் டிருக்கிறது. உண்மையில் செத்துச் செத்துப்போகிறவள் தான், ராமாமிர்தம் என்ற அன்பின் மகிமையால் 'செத்தவள் பிழைத்தாள்' என்று சொல்லும்படி பிழைத்துக் கொள்கிருள்.

இப்போது இவள் தனக்குள்ளே புலம்பிக்கொண் டிருப்பதைக் கவிஞரது மந்திர வித்தையால் நாம் தெளிவாகக் கேட்கிறோம் :

'கருமே கம்,நெடுங்
கடல்,கா அனையான்,
தருமே தமியேன்
என(து)ஆ ருயிர்தான் ?
உரும்ஏ(று) உமிழ்வெஞ்
சிலைநாண் ஒலிதான்
வருமே ? உரையாய்,
வலியார் வலியே !'

[கா - சோலை. அனையான் - ஒத்தவன். தருமே - தருவானே ? தமியேன் எனது - கதியற்றுத் தனியாயிருக்கும் என்னுடைய. உரும்ஏறு - பெரிய இடிமுழக்கம். வெஞ்சிலை - கொடிய வில் ; விரும்பப்படும் வில்.]

என்ற தனிமொழி, சீதையின் அன்பு மயமான மனோலோகத்தைக் காட்டுகிறது.

அந்த லோகத்திலே, கருமேகம் போலவும், நீலக் கடல் போலவும், பசுஞ்சோலை போலவும் தோன்று

கிருன் ராமன்! நிறத்தில் மட்டுமா? குணத்திலும் அப்படியே. என்ன கருணை! என்ன பலம்! நெஞ்சைக் குளிர்விக்கும் குஞ்நிசயம்தான் எப்படிப் பட்டது! மேகம், சமுத்திரம், சோலை ஆகிய இம் மூன்றையும் உயிர்தரும் பொருள்கள் என்று சொல்லலாம். இந்த முப்பெருங் குணங்களும் ராமன் என்ற ஒரே ரூபத்தில் அடங்கியிருக்கின்றன. அப்பேர்ப்பட்ட நாயகன், கதியற்றுத் தனித்திருக்கும் தனக்கு உயிரைத் தருவானு?—என்று சீதை கேட்கிருள். அவன் பொருட்டாவது தனக்கும் உயிர் அருமையானதல்லவா?—இப்படி நினைத்துக்கொண்டிருக்கும்போதே, ராமன் கையிலிருக்கும் கோதண்டத்தின் ஞாபகம் வருகிறது. அந்த வில்லை அனாயாசமாக விரலால் சுண்டி நாண் தெறித்ததும், என்ன இடி முழக்கம் உண்டாகும்! அந்த முழக்கத்தைக் கேட்டு ராட்சஸர்கள் என்ன ஓட்டம் ஓடினுர்கள்!

இப்போது சீதை அந்த விஜய கோதண்டத்தின் டங்காரத்தைக் கேட்க அலந்துபோயிருக்கிருள். எதிரிகளுக்குப் பயங்கரமாயிருந்த அந்த முழக்கம் அவளுக்கு எவ்வளவு இனிமையா யிருக்கிறது! 'இந்த இலங்கையிலும் அந்த ஓசை பிறக்குமா?' என்று பல்லைக் கடித்துக்கொண்டு கேட்கிருள். இக் கேள்விகளுக்கு யாரே பதில் சொல்ல முடியும்? இப்போது அவள் திரிஜடையோடு பேசவில்லை. அவளும் மற்றவர்களைப்போல் ஹனுமானது வசிய நித்திரைக்கு உட்பட்டு உறங்கிக்கொண்டிருக்கிருள். வேறுயாரோடு பேசுகிருள்? தனக்குள் தானே பேசிக்கொள்ளும் இவள், யாரோடுதான் பேசிக்கொண்டிருக்க முடியும் 'நீயே பதில் சொல்' என்று வேண்டிக்கொள்கி

ருளே, யாரை? இதோ கவனியுங்கள்: 'வீரர்களு டைய வீரமே!' என்று அழைக்கிருள் அல்லவா? வீரம்தான் வீரபத்தினியின் கேள்விகளுக்குப் பதில் சொல்லவேண்டும்.

பைத்தியம் பிடிக்கவேணும் என்று ஆசைப்படு கிறவர் உண்டா? செத்துப்போகவேணும் என்ற விருப்பம்தான் சாதாரணமாக ஏற்படுமா? எல்லாப் பிராணிகளும் உயிரோடிருக்க விரும்புகின்றன. உயி ரைக்காட்டிலும் அறிவை விரும்பிக் காக்கவேணு மென்ற ஆசை பிராணி வர்க்கத்தின் சிகரமாயிருக்கும் மனித ஜாதிக்கு உண்டு. இப்படியிருக்க, எத்தனையோ போக இன்பங்கள் நிறைந்திருக்கும் பிரதேசத்தில் ஒரு ராஜகுலசுந்தரி, தனக்குப் பைத்தியம் பிடிக்கவில்லையே என்று பல நாளாகக் கவலைப்பட்டுக்கொண்டிருக் கிருள். 'மரணம்தான் வரவில்லையென்ருல், பைத் தியமாவது வரலாகாதா? அப்போது இந்தப் பிராண வேதனையை உணராமலாவது இருக்கலாமே?' என்ற எண்ணம் உள்ளத்தைத் துருவுகிறது.

'அறிவே! உயிரே! உங்களுக்கு வெட்கமில் லையா? என்னைவிட்டு நீங்காமல் ஏன் இப்படி என் னைச் சுற்றிச் சுழன்றுகொண்டிருக்கிறீர்கள்?' என்று கேட்கும் அவள், திடீரென்று தன் உற்ற துணைவர் களான அறிவுக்கும் உயிருக்கும் தானே வக்காலத்து வாங்கிக்கொண்டு, 'சரிதான், உங்களுக்கும் என்னைப் போல் ஆசை, அவனைப் பார்க்கும்வரையிலும் போக முடியாது என்று பிடிவாதம் செய்கிறீர்கள் போலும்!' என்று சொல்லுகிருள். ராமனைப் பார்த்து விட்டு இருக்கவேணுமென்றுகூட அவை ஆசைப்பட வில்லையாம். அந்தப் பார்வையைக்கொண்டு வேறு

ஒன்றையும் பார்க்கவேணுமா ? ' நீங்கள் போகவில்லை யென்றால், உங்களுக்கும் என்னைப்போல் பழி ஏற் படுமே ! ஐயோ ! ஆபரணமாக அல்லவா நான் பழியை அணிந்துகொண்டிருக்கிறேன் ?' என்று மீண்டும் சொல்லுகிறாள் :

' பேணும் உணர்வே !
உயிரே ! பெருநாள்
நாணின்(று) உழல்வீர் ;
தனிநா யகனைக்
காணும் துணையும்
கழிவீ ரலிர் ! நான்
பூணும் பழியோடு
பொருந் துவதோ ?'

[பேணும் - விரும்பும். பெருநாள் - பலநாளாக. நாண் இன்று - நாணம் இல்லாமல். உழல்வீர் - (என் னோடு) அலைகிறீர்கள். தனி நாயகன் - ஒப்பற்ற தலைவ னான இராமன். காணும்துணையும் - காணுமளவும். கழி வீர் அலிர் - நீங்கமாட்டீர் போலும். பூணும் - பூண் அல்லது ஆபரணமாகக் கொண்டிருக்கும்.]

' பழியோடு காத்துக்கொண் டிருந்தபோதிலும் ஆசைதான் நிறைவேறப்போகிறதா ? இங்கே வரு வாறா ? அவ்வளவு இரக்கம் உண்டா ?' இப்படி நினைக்கும்போதே, இறந்துபோன மாமனாரின் ஞாப கம் வருகிறது ; வனவாசம் செய்யப் புறப்பட்ட கால மும் ஞாபகத்திற்கு வருகிறது. ' பெருங் கிழவரான மாமா, நோயால் இறந்தாரா ? அவருடைய ஆட்சிக்கு முடிவே கிடையாதென்றல்லவா ஜனங்கள் நம்பிக்

கொண்டிருந்தார்கள் ? அவரை முடித்த பெருமை நம்முடைய புருஷனைச் சேர்ந்ததுதானே ! ஐயோ, என்ன கல்நெஞ்சு ! கிழத் தந்தையை மட்டுமா முடித்தான் ? "ஆ, பிரிகிறேமே !" என்ற பெருந்துன்பத்தால் அந்த ஜனங்கள் கதறவில்லையா ? நாயகன் அவர்களைத் திரும்பிப் பார்த்தானா ? அப்படியே வனத்துக்கு வந்துவிடவில்லையா ? அப்படிக் கொடுமையுள்ளவன் என் துன்பத்தைப் பெரிதாக மதித்து இவ்வளவு தூரம் வரப் போகிறானா ? நெஞ்சே ! "வருவான், வருவான் !" என்று குலாவிக்கொண்டிருக்கிறாயே ! உன் நம்பிக்கைக்காவது மகிழ்ச்சிக்காவது காரணமே யில்லை" என்று தேம்பிப் பெருமூச்சு விடுகிறாள்.

'முடியா முடிமன்
னன்முடிந் திடவும்,
படிஏ ழும்நெடுந்
துயர்பா விடவும்,
மடியா நெறிவந்
துவனம் புகுதும்
கொடியார் வருமென்-
றுகுலா வுவதோ ?'

[முடி - கிரீடம். படி ஏழும் - ஏழு லோகங்களிலும். பாவிடவும் - பரவவும். மடியா நெறி - முடியாத வழி. கொடியார் - கொடியவர். குலாவுதல் - மகிழ்தல்.]

என்ற நிஷ்டூர வார்த்தையில், எய்த்துப்போன உள்ளத்தையும் அலுத்துக் குலைந்துகொண்டிருக்கும் உயிரையும் பார்க்கிறோம். நாயகன்மேல் அவநம்பிக்கை கொள்ளும் சீதை சத்தியத்தின்மீதுள்ள நம்பிக்கையை

யும் இழந்துகொண்டிருக்கிறுளோ என்றுகூட அஞ்சு கிறேம்.

உயிருண்டு என்றல் துன்பமும் உண்டு!—என்ற ஒரு விஷயம்தான் இப்போது உண்மையாகத் தோன்று கிறது. 'என் உயிரோடுதான் துன்பமும் போகும், பழியும் போகும். அப்போது எனக்குப் புகழும் ஏற் படும்' என்று தீர்மானிக்கிறுள்.

'புருஷன் வரப்போவதில்லை; ஆகையால் நான் சாகவேண்டும்!' என்ற இந்த நிலையைச் சீதை தனி மொழியின் முதலாவது படி என்று சொல்லலாம்.

'அவர் வந்தாலும் என்னை அங்கீகரிக்கப்போகி ருரா?' என்ற சந்தேகம் அடுத்தபடியாக ஏற்படு கிறது.

'பொறை இருந்(து) ஆற்றிஎன்
உயிரும் போற்றினேன்,
அறையிருங் கழலவன்
காணும் ஆசையால்!
நிறையிரும் பல்பகல்
நிருதர் நீள்நகர்ச்
சிறையிருந் தேனை, அப்
புனிதன் தீண்டுமோ?'

[பொறை - பொறுத்தல். அறை - ஒலிக்கிற. இருங் கழலவன் காணும் ஆசை - பெரிய வீரக்கழலை அணிந்த ராமனைக் காணும் விருப்பம். நிறையிரும் பல் பகல் - நிறைந்த மிகப் பல நாளாக. நிருதர் - அரக்கர். நீள் நகர் - பெரிய பட்டணம்.]

என்று கூறுவதைக் கேளுங்கள்.

ராட்சஸ பட்டணத்தில் ஒவ்வொரு நிமிஷமும் யுகமாகக் கழியும்படி இத்தனை நாளாகத் தன்னுயிரை எப்படியோ காப்பாற்றி வைத்திருக்கிறாள்! இந்த அற்புதத்திற்குக் காரணம் அவனைக் காணும் ஆசை தானே? அந்த வீரமூர்த்தி இங்கே எப்படியாவது வரக்கூடும்; வந்துவிட்டாலோ அரக்கர்களை அடியோடுமுடித்துத் தன்னைச் சிறையிலிருந்து விடுவிக்கவும் கூடும். 'ஆனால் அவன் புனிதன் (பரிசுத்தமானவன்); துஷ்ட ராட்சஸர்களுக்கு இடையே சிறை இருந்த என்னை ஏற்றுக்கொள்ளப்போகிறானா?' என்ற சந்தேகத்துடன் ஏங்கிக்கொண்டிருக்கும் சீதை உள்ளத்தில் எதிர்காலத்தின் சாயை—யுத்த காண்டம் மீட்சிப் படலத்திலே ராமன் சீதையை அங்கீகரிக்க மறுக்கும அந்த நிகழ்ச்சியின் சாயை—ஒரு முற்குறியாக வந்து விழுவதுபோலத் தோன்றுகிறது.

இதைக்காட்டிலும் ஒரு கொடிய சந்தேகத்தையும் மனோபாவம் கற்பித்துக் காட்டுகிறது:

'அற்புதன், அரக்கர்தம்
வருக்கம் ஆசற
விற்பணி கொண்(டு), அருஞ்
சிறையின் மீட்டநாள்,
'இல்புகத் தக்கலை!'
என்னின், யானுடைக்
கற்பினை எப்பரிசு
இழைத்துக் காட்டுகேன்?'

[அற்புதன் - அற்புதமான வீரமுள்ளவன். வருக்கம் - கூட்டம். ஆசற - அடியோடு முடிய. விற்பணி - வில்லின் தொழில். அருஞ் சிறை - மீட்பதற்கு அருமை

யான சிறை. இல் - வீடு. தக்கலை - தகுதியுடையவள் இல்லை. என்னின் - என்று சொல்லிவிட்டால். யான் உடைக் கற்பு - நான் உடைமையாகக் கொண்டுள்ள கற்பு. எப்பரிசு - எவ்விதம். இழைத்து - (இங்கே) நிரூபித்து.]

ராமன் வருகிறான், விடுவிக்கிறான், அயோத்திக்கே அழைத்துப் போகிறான். ஆனால் அரண்மனைக்குள்ளே அழைத்துக்கொண்டு போகாமல், 'சீதே! நீ என்னுடன் வீட்டுக்குவரத் தகுதியுடையவளில்லை; வெளியே ஒரு மாளிகையில் தங்கலாம்!' என்று சொல்லிவிட்டால் என்செய்வது? 'அந்நிலையில் என் கற்புநிலையை எந்தச் சாட்சிகொண்டு எப்படி நிரூபித்துக் காட்டுவேன்?' என்று தன்னைத் தானே கேட்டுக்கொள்கிறாள்.

கற்பினை 'யானுடைக் கற்பு' என்று கூறுவது கவனிக்கத் தக்கது. வேறு உடைமை அல்லது செல்வம் என்பது இல்லாமல் கற்பையே முழு உடைமையாகக் கொண்டிருக்கிறாள் என்பது குறிப்பு.

நாயகன் தன்னை ஊருக்கு அழைத்துகொண்டு போனபோதிலும், வீட்டிலேயே வைத்துக்கொண்டபோதிலும், அங்கேதான் எப்படிப்பட்ட வாழ்க்கை கிடைக்கப்போகிறது?

> 'பெருந்தவ மடந்தையர்
> முன்பு பேதையேன்,
> "கருந்தனி முகிலினைப்
> பிரிந்து கள்வர்ஊர்
> இருந்தவள் இவள்!" என
> ஏச நிற்பெனோ?'

[பெருந் தவம் - கற்பாகிய தவம். மடந்தையர் ' - பெண்கள். பேதையேன் - அறிவில்லாத யான். கருந் தனி முகில் - ஒப்பற்ற நீலமேகம் போன்ற இராமன்.]

என்று மற்றவர் ஏச்சையும் பேச்சையும் பிரமாதப் படுத்துகிறது சீதையின் பெண்மையுள்ளம். 'மற்றப் பெண்கள் என்னைக் குறித்து வம்பளப்பார்களே! பதினறு வருஷம் ஊரிலில்லாத என்னை ஒருவருக் கொருவர் சுட்டிக்காட்டி, "இவள் யார் தெரியுமா? நாயகனைப் பிரிந்து கள்ள அரக்கர்களின் ஊரில் இருந்தவள்!" என்று ஏசுவார்களே, அந்த ஏச்சுக்கு இலக்காக நிற்பேனு?' 'அவள்' என்றுகூடச் சிறிது தூரத்திலிருந்து சுட்டிக்காட்டாமல், 'இவள்' என்று சமீபத்திலேயே வந்து ஏசுவார்கள் என்கிறது சீதை யின் மனேபாவம். அந்த ஸ்திரீகளைப் 'பெருந்தவ மடந்தையர்'—அதாவது கற்பு என்ற பெருந்தவத்தை யுடையவர்கள் என்று குறிப்பிடுகிருள் சீதை.

இனி, அந்தப் பெருந்தவக் கற்பின் லட்சி யத்தை நினைத்துப் பார்க்கிருள். 'நினைப்பும் செயல் தான்!' என்ற யோகநூல் உண்மையை ஆதார மாகக்கொண்டு, கற்பிலே சிறந்த பெண்கள் பரபுருஷர் களை மனசாலும் நினைக்கமாட்டார்கள் என்று சொல் வதுண்டு. தமிழர்கள் இதைக்காட்டிலும் உயர்ந்த லட்சியம் ஒன்றைக் கற்பித்தார்கள். பரபுருஷர்கள் மனசிலும் கற்புடைய பெண்கள் பிரவேசிக்கமாட் டார்கள்! — என்பதுதான் இக்கொள்கை. (நடை உடை பாவனைகளும் பரபுருஷர் உள்ளத்தில் தவறான எண்ணங்களைத் தூண்டாமல் இருக்கவேண் டும் என்பது இக்கொள்கையின் அடிப்படையாக இருக்

கலாம்.) சீதை இந்த லட்சியத்தின் முன் எவ்வளவு கடுமையாகத் தன்னைச் சோதித்துப் பார்க்கிருள் :

> ' உன்னினர் பிற(ர்)என
> உணர்ந்தும் உய்ந்(து)அவர்
>
> சொன்னன சொன்னன
> செவியில் தூங்கவும்
>
> மன்னுயிர் காத்(து), இருங்
> காலம் வைகினேன் !
>
> என்னின்வே(று) அரக்கியர்
> யாண்டை யார்கொலோ ?'

[உன்னினர் - நினைத்தார்கள். உய்ந்து - பிழைத்திருந்து. தூங்கவும் - தொங்கி ஆடிக்கொண்டிருக்கவும் ; ஒலித்துக்கொண்டிருக்கவும். மன்னுயிர் காத்து - உயிரை விடாமல் நிலையாகக் காத்து. இருங் காலம் - பலகாலம். யாண்டு - எவ்விடம். யாண்டை யார் கொலோ - எவ்விடத்தில் இருக்கிருர்களோ.]

என்று கேட்கிருள்.

தன்னைப் பரபுருஷர் நினைத்ததுமட்டுமா ? விரும்பியதுமட்டுமா ? அவர்கள் சொன்ன சொற்களும் செவியில் தொங்கி ஒலித்துக்கொண்டிருக்கின்றனவே ! 'இதோ இருக்கும் இவர்களா ராட்சஸிகள் ? இன்னும் உயிரை வைத்துக்கொண்டிருக்கும் நானல்லவா கொடிய ராட்சஸி ?' என்று நெஞ்சு துடி துடிக்கிறது.

'பிறர் மனம் புகுந்ததுமட்டுமா? பிறர் மனையிலும் புகுந்துவிட்டேனே !' என்ற எண்ணம் அந்தத் துடிப்பை எவ்வளவு அதிகப்படுத்துகிறது ! ராவணன்

மனைக்குத் தானாக வந்து சேர்ந்ததாகவும், அதற்கு வசதியாகவே நாயகனை மாயமானுக்குப் பின் அனுப்பி விட்டு, மைத்துனப் பிள்ளையாகிய லட்சுமணனையும் வைது அவன் பின்னே அனுப்பி வைத்ததாகவும் எண்ணுகிறாள்.

'வஞ்சனை மானின்பின்
மன்னைப் போக்கிஎன்
மஞ்சனை வைது,"பின்
வழிக்கொள் வாய்!" என
நஞ்சனை யான்அகம்
புகுந்த நங்கைநான்
உய்ஞ்சனென் இருத்தலும்
உலகம் கொள்ளுமோ?'

[மன்னை - (இங்கே) நாயகனை. மஞ்சன் - மைத்துனப்பிள்ளை. நஞ்சனையான் - நஞ்சுபோன்ற இராவணன். உய்ஞ்சனென் இருத்தலும்-பிழைத்து இருத்தலும்.]

என்ற நினைப்பிலே, மாய மானைக் கண்டுபிடித்துக் கொள்ளாத பிசகும், லட்சுமணனைக் கோபித்துக் கொண்ட குற்றமும் எவ்வளவு மகத்தான குற்றங்களாகக் காண்கின்றன!

இந்நிலையில் 'பெண்களில் சிறந்தவள்' என்று பொருள்படும் 'நங்கை' என்ற சொல்லால் தன்னை அழைத்துக்கொள்வது எவ்வளவோ மனக்கசப்பை வெளியிடுகிறது. 'இந்த உலகம் எப்படித்தான் என்னைத் தாங்கிக்கொண்டிருக்கிறதோ? பூமி நாணத்தால் குறுகி என்னைப் பாதாளத்தில் தள்ளிவிடவில்லையே!'

என்ற ஆச்சரியம் இவளுடைய வெறுப்புணர்ச்சியின் அதீத நிலையை வெளியிடுகிறது.

இப்படிப்பட்ட தன் பழி எவ்வளவு காலம் இருக்கும்? பழி என்ற சொல் எவ்வளவு காலம் இருக்குமோ, அவ்வளவு காலம் அந்தச் சொல்லுக்கு இலக்கியமாக இவள் பழியும் இருக்குமாம்.

'சொற்பிரி யாப்பழி
சுமந்து தூங்குவேன்,
நற்பிறப்(பு) உடைமையும்
நாணும் நன்றரோ !
கற்புடை மடந்தையர்,
கதையில் தானுளோர்,
இற்பிரிந்(து) உய்ந்தவர்
யாவர் யானலால் ?'

[சொற்பிரியாப் பழி - பழி என்ற சொல் உள்ள வரையில் பிரியாமல் நிற்கும் நிந்தை. தூங்குவேன் - தூங்குவேனுடைய; கவலையற்றிருக்கிற என்னுடைய. இல் பிரிந்து - இல்வாழ்க்கைக்கு உரிய கணவனைப் பிரிந்து. உய்ந்தவர் - பிழைத்திருந்தவர்.]

'கற்புடைய பெண்களில் என்னைப்போல் வேறு யார் இருக்கிறார்?' என்று கேட்கும் சீதை, கதையிலாவது தன்னைப்போல் ஒரு பாத்திரத்தை எந்த ஆசிரியனாவது சிருஷ்டித்திருக்கிறானா ?—என்று அதிசயிக்கிறாள்.

இப்படிச் சீதை தனிமொழியில் கூறுவதாய்க் கவிஞன் கூறுவது, சீதை கதையை நிஜம்போல் நம் கண்முன் நடத்திக்காட்டும் சாதுரியங்களில் ஒன்று.

'சொற்பிரியாப் பழி' விஷயமாகச் சீதை மேலே சொன்னபடி தன்னைத்தானே கேட்டுக்கொண்டதும், அந்தராத்மா பதில் சொல்கிறது,

எப்பொழு(து) இப்பெரும்
 பழியின் எய்தினேன்,
அப்பொழு தேஉயிர்
 துறக்கும் ஆணையேன் !'

[ஆணையேன் - நியதி அல்லது கடமை யுடையவளாக இருக்கிறேன்.]

என்று.

புருஷன் வந்தாலும் ஏற்றுக்கொள்ளமாட்டான், ஏற்றுக்கொண்டாலும் உலகம் ஒப்புக்கொள்ளாது என்றெல்லாம் காரணம் காட்டி, 'ஆதலால் உயிரை விடவேணும் !' என்று இவ்வாறு தீர்மானிப்பது சீதை தனிமொழியின் இரண்டாவது பகுதி.

'என் பழியை நான்தானே துடைத்துக் கொள்ள வேணும்' என்று கருதும் சீதை, பெண் குலத்தின் பெருமைக்கே தான் பொறுப்பாளி என்று நினைக்கிறாள் :

' அன்பழி சிந்தைய
 ராய ஆடவர்,
வன்பழி சுமக்கினும்
 சுமக்க ! வான்உயர்
துன்பழி பெரும்புகழ்க்
 குலத்துள் தோன்றினேன் !
என்பழி துடைப்பவர்
 என்னின் யாவரே ?'

• [அன்பு அழி - அன்பை அழிக்கின்ற. துன்பு அழி - துன்பத்தை அழிக்கும். என்னின் யாவரே - என்னை யல்லாது வேறு யார்?]

என்ற சிந்தனையில், ராம லட்சுமணர்மேலுள்ள வருத்தம் ஆண்குலத்தையே அன்பை அழிக்கின்ற குலம் என்று சொல்லத் தூண்டுகிறது. பெண்குலத்தையோ எவ்வளவு கர்வத்துடன் 'வான் உயர் துன்பழி பெரும் புகழ்க் குலம்' என்று குறிப்பிடுகிருள்! ஆடவர் அன்பு அழித்துத் துன்பம் பெருக்க, பெண்களோ அன்பு பெருக்கித் துன்பம் துடைத்து வானளாவிய பெரும் புகழ் சூடிக்கொள்கிருர்களாம்.

'இத்தகைய பெரும்புகழ்க் குலத்திலே தோன்றிய நானே என் பழியைத் துடைத்துக்கொள்ள வேண்டும்' என்கிருள். 'பழியைப் போக்கிக்கொள்ளவேண்டுமென்ருல், உயிரைப் போக்கிக்கொள்ள வேண்டியதுதான், வேறு வழியில்லை' என்று தீர்மானிக்கிருள். இது சீதை தனிமொழியின் மூன்ருவது படி.

இனி இதற்கும்மேலான ஒரு படி. 'என் பழியைப் பற்றிய கவலைகூட எனக்கு இல்லை; அவனுக்குப் பழி ஏற்படலாகாது என்பதற்காகவே மரணமடைவேன்!' என்று தீர்மானிக்கப்போகிருள்.

அவன் தன்னைத் தேடி வராமலிருப்பதிலும் தவறு ஒன்றுமில்லை என்று நினைக்கிருள் இப்போது.

'பிறர் மனை புகுந்த பெண்ணைத் தேடி வருவது வீரத்திற்குக் குறைவு என்றுதான் பிராணேசன் என்னை மீட்டுக்கொள்ளவில்லை' என்று முடிவு கட்டுகிருள். என்ன மனப்பிராந்தி! உண்மையில், இப்போது அவளுக்குத் தன்னைக் குறித்தாவது தன் பழியைக்

குறித்தாவது கவலையில்லை. ஒரே எண்ணம்—ஒரே உணர்ச்சி—உள்ளத்தை ஊடுருவி நிற்கிறது. அதாவது, புருஷனுக்குப் பழி ஏற்படலாகாது என்பது தான். அவன் தேடிவரவில்லை யென்றால், ஏதாவது ஒரு காரணம் இருக்கவேண்டும் அல்லவா ?

ஆனால், 'இன்னார் மனைவி இன்ன இடத்தில் இருக்கிறாள்' என்று அயலார் தூற்றும் பழியை அவன் கேட்டுக்கொண்டிருக்க வேண்டுமே! 'என் உயிர் நீங்கினால் தான், அந்தப் பழியும் நீங்கும்' என்று எண்ணிக் கொண்டிருக்கும்போதே, தன்னால் போக்கமுடியாத வேறொரு குற்றமும் ராம லட்சுமணர்களுக்கு உண்டு என்ற ஞாபகம் வருகிறது.

> ' வல்இயல் மறவர்தம்,
> வடுவின் தீர்பவர்,
> வெல்லினும் வெல்கபோர் !
> விளிந்து வீடுக !
> இல்இயல் அறத்தையான்
> இறந்து வாழ்ந்தபின்,
> சொல்லிய என்பழி
> அவரைச் சுற்றுமோ ?'

[வல் இயல் - வலிமை வாய்ந்த. மறவர் - வீரர். வடு - குற்றம். விளிந்து வீடுக - செத்தாலும் சாகட்டும். இல்இயல் அறம் - இல்வாழ்க்கைக்குரிய தருமம்.]

என்று தனக்குள் தானே சொல்லிக்கொள்வதைக் கேளுங்கள்.

அவர்களுக்கு ஒரு வடுவும் உண்டு; ஒரு பழியும் உண்டு. பழி தன்னால் ஏற்படுகிறது; வடு அவர்கள்

தங்கள் வீரதர்மத்தைச் செய்யாததால் ஏற்படுகிறது. பழி, வடுவைக் காட்டிலும் பெரிது; வடுவைப் பழியின் பிஞ்சு என்றே சொல்லவேண்டும். வடுவை நீக்கிக் கொள்ள அவர்கள் இங்குவந்துராட்சஸர்களோடு போர் செய்து தீரவேண்டும். அந்தப் போரில் அவர்கள் ஜயித்தாலும் ஜயிக்கட்டும்; இறந்தாலும் இறக்கட்டும்! கடமைதானே பொறுப்பு; பலனுக்கு அவர்களா பொறுப்பாளிகள்? இப்படிப்பட்ட நினைப்பில் அலட்சிய புத்தியும் உண்டாகிறது. 'அவர்கள் யுத்தம் செய்யாமல் பழியுடன் செத்தாலும் சாகட்டும்!' என்றுகூட உபேட்சித்துச் சொல்லுகிறாள்! ஆனால் இந்த உபேட்சையும் அலட்சிய புத்தியும் ஒரே கணத்தில் குமிழியிட்டுத் தோன்றி அப்படியே அடங்கிப் போகின்றன. தன்னால் ஏற்படும் பழியைப்பற்றிய எண்ணமே மறுபடியும் மேலோங்குகிறது.

எதிரே ஒரு புதர். அங்கே தருவைத் தழுவிப் பூங்கொடி படர்ந்திருக்கிறது. தருவும் கொடியும் இல்வாழ்க்கைக்கு எவ்வளவு பொருத்தமான அறிகுறி! அப்படிப்பட்ட இல்வாழ்க்கை தனக்கு இனிமேல் இல்லை. இருந்து வாழமுடியாத அந்த வாழ்க்கையை இறந்துதான் வாழவேண்டும்! அப்போதுதான் தன்னால் அவர்களுக்கு ஏற்படும் பழியும் நீங்கும்.

வாழ்க்கையாகிய ராஜபாதையில் தருமம் கைகாட்டி மரம்போல் நிற்கிறது. ஜீவ யாத்திரை செய்வோருக்கு, 'நீ இந்த வழியே போ; அவன் அந்த வழியே போகட்டும்!' என்று வழிகாட்டுகிறது. ஒருவனுக்கு இந்தக் கைகாட்டி, சிங்காசனத்தைக் காட்டுகிறது; வேறொருவனுக்குத் தூக்குமேடையைக் காட்டுகிறது. 'மரணமே உனக்கு வழி!' என்று சிதைக்

குச் சொல்கிறது. சிலநாளாக அது இப்படிச் சொல்லி வந்தும், அவளுக்குச் சரியான சந்தர்ப்பம் கிடைக்க வில்லை. கண்கொட்டாமல் அரக்கியர் காவல் செய்து கொண்டிருக்கிறார்கள் அல்லவா? இப்போது அவர் களும் உறங்கிக் கிடக்கிறார்கள். 'இதுதான் சமயம்!' என்று கருதும் சீதை, எதிரேயுள்ள மாதவிப் புதரைப் பார்த்து, 'அதுதான் இடம்!' என்றும் தீர்மானிக் கிறாள்.

'ஆதலான் இறத்தலே
அறத்தின் ஆ(று)எனு,
சாதல் காப்பவரும்
என்தவத்தின் சாம்பினர்!
ஈ(து)அலா(து) இடமும்வே(று)
இல்லை!' என்(று)ஒரு
போதுலாம் மாதவிப்
பொதும்பர் எய்தினள்.

[ஆறு - வழி. சாம்பினர் - உணர்வழிந்து கிடக் கிறார்கள். போது - பூக்கள். உலாம் - அசையும். பொதும்பர் - புதர்.]

தன்னைச் சுற்றியுள்ள காவலாளிகளை அவள், 'தன்னைக் காப்பவர்' என்று நினைக்கவில்லை; 'சாதல் காப்பவர்' அதாவது 'சாவதற்குக்கூடத் தனக்குச் சுதந்திரம் இல்லாமல் காவல் செய்பவர்' என்றே எண்ணுகிறாள். (பரம ஏழைகளுக்குக்கூட உள்ள அந்தச் சுதந்திரம் அவளுக்கு இல்லை.) அவர்கள் ஹனுமானது வசிய நித்திரைக்கு உட்பட்டிருக்கிறார் கள் என்பது அவளுக்குத் தெரியாது. தன்னுடைய

'கற்பு' என்ற தவம்தான் அவர்களை உறங்கச்செய்து தனக்கு மகத்தான ஒரு சந்தர்ப்பத்தைக் கொடுத்திருக்கிறதென்று சொல்லிக்கொள்கிறாள். அதே சமயத்தில் மாதவிப் புதரில் பூக்கள் காற்றினால் அசைந்து அவளை 'வா!' என்று அழைப்பனபோல் காண்கின்றன.

சீதை எழுந்து அங்கே போகிறாள். கொடியும் தருவும் எவ்வளவு பழைய நினைவுகளைத் தோற்றுவிக்கின்றன! அந்தக் கொடியை எவ்வளவு பலமாக இழுத்து அறுத்துவிடுகிறாள்! அறுபட்ட கொடி, இற்றுப்போன அவள் வாழ்க்கையை ஞாபகப்படுத்துகிறது. கொடியும் கையுமா யிருக்கும் சீதையின் முகம் இப்போது பரிசுத்தமான அக்கினியைப்போல் ஜ்வலிக்கிறது. அவள் அந்தப் பூங்கொடியை அழகான பெரிய மரக்கிளை ஒன்றில் கட்டுகிறாள். சரி, அது அவளைத் தாங்கக் கூடியதுதான்.

> சுற்றிய கொடிஒன்று
> துணித்துத் தூயள்,ஓர்
> பொற்றடங் கொம்பினில்
> பூட்டிப் 'பூமியில்
> நற்றவம் உடையள்யான்
> ஆகில், நாயகன்
> வெற்றிசேர் திருவடி
> மேவுவேன்!' என்றாள்.

[பொற்றடங் கொம்பு - பொன் + தடங்கொம்பு ; அழகான பெரிய மரக்கிளை.]

பூமிதேவி எல்லாருக்கும் தாய்; ஸீதைக்கோ, பூமியைத் தவிர வேறு தாயில்லை! இப்படிப்பட்ட பூமியைப் பார்த்துக்கொண்டு, 'தாயே! என் கற்புக்கு நீதான் சாட்சி. பிழைத்திருந்து நாயகன் அடிகளில் குற்றேவல் செய்யும்படியான பாக்கியம் இனி எனக்கு இல்லை. நான் கற்பு என்ற தவமுடையவளானால், மரணமடைந்தாவது அவன் திருவடிகளை அடைவேன்!' என்று சொல்கிறாள். அப்படிச் சொல்லிக்கொண்டிருக்கும்போதே, 'அவன் திருவடி வெல்க!' என்று உள் மனத்திலே அந்தராத்மா வாழ்த்துகிறது. தான் இறந்த பிறகாவது அவன் துஷ்ட ராட்சஸர்களை வதம் செய்து வெற்றி சூடவேண்டும் என்ற ஆசை உள்ளுக்குள்ளே குமுறிக்கொண்டிருக்கிறது. இடையிலே தோன்றிய உபேட்சை இப்போது எங்கே?

ஸீதையின் திருமுகம் இப்போது தீச்சுடர்போல ஜ்வலிக்கிறது. காட்டிலே துணிந்துவந்து தன் கஷ்டங்களையும் அபாயங்களையும் ஸஹதர்மிணியாகப் பங்கு போட்டுக்கொண்டிருந்த காலத்தில் ராமன் அவளைப் பார்த்து, 'கற்பு என்பது அருந்ததிக்கு நீ கொடுத்த பிச்சைதான்!' என்று சொன்னான். இப்போது ராமனுக்காக உயிர்த் தியாகம் செய்யத் சித்தமாயிருக்கையில் அந்த முகத்தைப் பார்த்தால், 'அருந்ததி மனத்தாலும் நெருங்கமுடியாதது இந்தக் கற்பு' என்று தோன்றுகிறது. அப்படிப்பட்ட நிலையையும் அந்த மகத்தான தியாக முயற்சியையும் கவிஞன் வாயிலாகப் பாருங்கள்:

என்(று) அருந்ததி
மனத்(து) எம்மையாளுடைத்

துன்றருங் கற்பினாள்,
சுருதி நாயகன்
பொன்தரு மலர்ப்பதம்
வழுத்திப் பூங்கொடி
தன்தனிக் கழுத்திடைத்
தரிக்கும் எல்லையில் —

[துன்றரும் - நெருங்க முடியாத. சுருதி நாயகன் - ராமன். வழுத்தி - துதித்து. தனி - ஒப்பற்ற. எல்லையில் - பொழுதில்.]

—நாமும் எப்படியோ அந்த ஸ்தலத்திற்குப் போய்ப் பார்க்கிறோம். 'எப்படிப்பட்ட மகோன்னதமான தியாகத்தால் இவள் மனிதர்களாகிய நம்மையெல்லாம் ஆட்கொள்ளப்போகிறாள் ! ஆ, என்ன ஒப்புயர்வற்ற லட்சியம் !' என்று கவிஞர் சுட்டிக் காட்டும்போதே, அவள் ராமனுடைய திருவடிகளை மனக்கண்முன் தரிசித்துக்கொண்டு கழுத்தைச் சுற்றி அந்தப் பூங்கொடியை மாட்டிக்கொள்கிறாள். அதைக் கண்டதும் ஹனுமானுள்ளம் என்ன பாடு படுகிறது !

கண்டனன் அனுமனும்,
கருத்தும் எண்ணினான்,
கொண்டனன் துணுக்கம் !
மெய்தீண்டக் கூசுவான்,
'அண்டர் நாயகன்
அருள் தூதன் யான் !' எனாத்
தொண்டைவாய் மயிலினைத்
தொழுது தோன்றினான்.

[துணுக்கம் - நடுக்கம். தொண்டை - கோவைப் பழம்.]

அந்தச் செய்கையில் அவளுடைய பயங்கரமான நோக்கம் தெரிந்துவிட்டது. ஹனுமான் உடம்பில் உச்சந்தலைமுதல் உள்ளங்கால்வரை ஒரு நடுக்கம் உண்டாகிறது. தொட்டு இழுத்தாவது அந்த அபாயத்திலிருந்து காப்பாற்றிவிடவேணும் என்று முதல் முதல் தோன்றுகிறது. ஆனால் அவளைத் தொடுவதற்குக் கையும் மனமும் கூசுகின்றன. மற்றும், ஹனுமானை அதற்குமுன் அவள் பார்த்ததேயில்லை. ராட்சஸன்தான் மாறுவேஷம் பூண்டு இப்படி வந்திருக்கிறான் என்று எண்ணக்கூடும். அதிகமாகப் பேசுவதற்கும் சாவகாசம் இல்லை. அவ்வளவு நெருக்கடியான நிலைமையைச் சமாளிப்பதற்கு மகா மேதாவியான ஹனுமான் பளிச்சென்று ஒரு யோசனை செய்கிறான்.

யோசனை ரொம்பவும சுருக்கமானதுதான். இன்னதென்று தெரிந்த பிறகு நமக்கும் சாதாரணமாகவே தோன்றும். அவள் யாரைநினைத்துத் தவித்துக்கொண்டிருக்கிறாளோ, எந்தப் பெயரை அந்த ராட்சஸ பூமியில் காதால் கேட்டதில்லையோ, அப்படிப்பட்ட ராம நாமத்தைச் சொல்லி, அவள் கவனத்தைக் கொஞ்சமாவது வசீகரிக்கவேண்டும் ;—இதுதான் ஹனுமான் யோசனை. அப்படியானாலும் அவளுக்குச் சந்தேக நிவர்த்தியாகாது என்பது அவனுக்குத் தெரியும். எனினும் அந்த அபாயகரமான நிலையைக் கொஞ்சமாவது தாமதிக்கச் செய்துவிட்டால், அந்தச் சொற்ப அவகாசத்திற்குள் வேறோர் ஆலோசனை செய்துகொண்டு ஏப்படியாவது காரியத்தைச் சமாளித்துக் கொள்ளலாம்.

எவ்வளவு விரைவாக யோசனை முடிகிறது! எவ்வளவு விரைவாக ராமனுடைய பெயரைச் சொல்லி,

'அவன் அனுப்பியருளிய தூதன் அடியேன்!' என்று சீதைமுன் தொழுதுகொண்டே தோன்றுகிறான்!

மரக்கிளையில் உறுதியாகக் கட்டியிருந்த கொடியைத் தன் கழுத்தில் சேர்த்து, ராமனைத் தியானித்துக் கொண்டே சுருக்கிட்டுக்கொள்ளும் சமயத்தில், திடீரென்று ராமநாமம் காதில் விழுந்ததும், சீதை கொஞ்சம் தயங்குகிறாள்; ஆச்சரியப்படுகிறாள். அந்த ஊரில் — அந்த இடத்தில் — அந்தப் பெயரைச் சொல்லத் துணிந்தது யார்? ஆனால் மாரீசன் கற்பித்த பாடத்தை எளிதில் மறக்க முடியுமா? 'இதுவும் ராட்சஸர் வஞ்சனைதான்!' என்பதைக் குறித்துச் சந்தேகமில்லை. அந்த ராட்சஸன் தன் பெயரையும் லட்சுமணன் பெயரையும் சொன்னான்; இவன் ராமன் பெயரைச் சொல்கிறான். இந்தப் புதிய வஞ்சனைக்காகச் சிறிது நன்றியறிவும் தோன்றுகிறது. பயமுறுத்துவதற்கும ஏமாற்றுவதற்கும் எத்தனையோ வழிகள் இருக்கும்போது, தன் உள்ளத்திற்கு அமுதாய்த் தான் கேட்க அலந்துபோயிருந்த காதலன் பெயரைச் சொல்லும் ராட்சஸன் ஏதோ கருணையுள்ளவனாகத்தானே இருக்கவேண்டும்! எனினும இப்போது அவனால் ஏமாற்ற முடியாது. அந்த ராமநாமத்தைக் கேட்டுக்கொண்டே சொர்க்கம் போய்விடலாம்!

சுருக்கு இன்னும் இறுகவில்லை. கொடி சுற்றிய கழுத்தோடு,

'வஞ்சனை அரக்கர்
செய்கை இது!' என
மனக்கொண் டேயும், —

'அஞ்சன வண்ணத்
தான்தன் பெயர்உரைத்(து)
அளியை! என்பால்,

துஞ்சுறு பொழுதில்
தந்தாய் துறக்கம்!'' என்(று)
உவந்து சொன்னாள்,

மஞ்சென வனமென்
கொங்கை வழிகின்ற
மழைக்கணீராள்.*

[அஞ்சன வண்ணத்தான் - அஞ்சனம்போலும் நிற முடைய ராமன். அளியை - அருளுடையவன் நீ. துஞ்சுறு - இறக்கும். துறக்கம் - (இங்கே) நல்ல கதி. மஞ்சு- மேகம். வனம் - அழகு.]

'இரக்கமுள்ள ராட்சஸனே! நான் சாகும் போது ராமநாமத்தைச் சொல்லி நல்லகதியைத் தந்து விட்டாய்!' என்று சொல்கிறாள். அப்போது கண்ணீர், மழைபோலப் பெருகி மார்பில் வழிகிறது. மழைக்கிடையே மின்வெட்டியதுபோல் முகத்தில் மகிழ்ச்சியும் தோன்றுகிறது.

சீதையின் அவநம்பிக்கை, அவன் எதிர்பார்த்தது தான். எனினும் அவளுடைய தயக்கம், அடுத்தபடியாக என்ன செய்வதென்று தீர்மானிக்கச் சிறிது அவகாசம் கொடுத்துவிட்டது. இப்போது தன்னை அவள் பார்க்கும்படி எதிரே வருகிறான். வரும்போதே, எத்தனையோ வானர வீரர்கள் ராமன் கட்டளையைச் சிரமேல் தாங்கித் தேடப்போயிருக்கிறார்களென்றும்,

---

*இந்தப் பாட்டு, 'திருவடி தொழுத படல'த்தில் இருக்கிறது.

அவ்ளுடைய திருவடிகளைத் தரிசிக்கும் பாக்கியம் தனக்கே கிடைத்திருக்கிறதென்றும், ராட்சஸ வர்க்கம் அழியவில்லையென்பதே ராமன் அந்த இடத்தை அறிய வில்லை என்பதற்குத் தகுந்த சாட்சியமாகுமென்றும் சொல்கிறான். கழுத்தைச் சுற்றிய கொடி இன்னும் அப்படியே இருக்கிறது. 'அம்மா! சந்தேகம் வேண்டாம். என்னிடம் சாட்சியாக ஒரு பொருளும் இருக்கிறது. அவன் சொல்லியனுப்பிய அடையாள வார்த்தைகளும் உண்டு. உள்ளங்கை நெல்லிக்கனி போல் கண்டுகொள்ளலாம். வித்தியாசமாக ஒன்றும் நினைக்கவேண்டாம்' என்று மன்றாடுகிறான். என்ன சுத்தமான குரல்! அப்படிப்பட்ட குரலை எத்தனையோ நாளாகக் கேட்டதில்லை சீதை.

அன்றிரவு நல்ல நிலா; ஆனால் அந்தச் சோலையில் அவ்வளவு வெளிச்சமில்லை. அடர்ந்த கிளைகளுக்கு ஊடே, சிற்சில இடைவெளி வழியாகச் சந்திர கிரணம் நுழைந்து வருகிறது.

அப்படிப்பட்ட கிரணம் தன் முகத்தில் விழும்படி வசதியான ஓரிடத்தில் வந்து வணங்கி நிற்கிறான். ஆ! என்ன முகம்! அப்படிப்பட்ட முகத்தை இலங்கையில் எங்குமே பார்த்ததே இல்லை.

என்றவன் இறைஞ்ச
நோக்கி, இரக்கமும்
முனிவும் எய்தி,
'நின்றவன் நிருதன்
அல்லன்; நெறிநின்று
பொறிகள் ஐந்தும்

வென்றவன் ; அல்ல
ளுகில் விண்ணவ
ளுக வேண்டும் !
நன்(று)உணர் உரையன் ;
தூயன் ; நவையிலன்
போலும் ! ...... '

[நிருதன் - ராட்சஸன். நவை - குற்றம்.]

குழந்தை-முகம்போலிருந்த அந்த முகத்தைப் பார்த்ததும் அவளுக்கு எவ்வளவு இரக்கம் உண்டாகிறது! அதே சமயத்தில் தன்னுடைய நோக்கம் தடைப்பட்டிருந்ததைக் குறித்துக் கோபமும் உண்டாகிறது. ஆனால் அந்த முகம் சந்திரிகையில் எவ்வளவு தேஜோமயமாகப் பிரகாசிக்கிறது! 'இதுவோ ராட்சஸ மூஞ்சி? நல்லொழுக்கத்திலே நிலைத்துப் பழகி இந்திரியங்களை ஜயித்திருக்கும் அதிவீரனை தேஜஸ்வியின் முகமன்றோ? ஆ, என்ன களை! என்ன வசீகரம்! களியாட்டங்களிலும சிற்றின்பத்திலும் மூழ்கிக்கிடப்பவர்களுக்கும இந்த முகத்துக்கும் எவ்வளவு தூரம! தெய்வ ஒளி வீசும கண்கள்! இவன் ஜிதேந்திரியனை பிரமசாரியாக இருக்கவேண்டும்!' என்று நினைக்கும் சீதை, அவன் சற்று முன் பேசிய பேச்சையும் தனக்குள்ளேயே பாராட்டிக்கொள்கிருள். அந்தப பேச்சும் குரலும் எவ்வளவு நல்லறிவைப் புலப்படுத்துகின்றன !

தன்முன் நிற்பவன் பரிசுத்தன் என்ற எண்ணம் உண்டாகிறது. குறைந்த பட்சம், குற்றமில்லாதவன் என்று சந்தேகிக்கவாவது இடமிருக்கிறது. இன்னும் அவளுக்கு நிச்சயபுத்தி ஏற்படவில்லை. 'இது என்ன

மாரீசமோ?' என்ற சந்தேகம் உள் மனத்தில் கிடக்கிறது. எனினும் தற்கொலை செய்துகொள்ள வேணுமென்ற எண்ணம் மனத்தைவிட்டு மெள்ள நழுவி விடுகிறது. ராமன்மேலுள்ள அன்பு இவ்வளவு காலம் அவளைச் சாகவிடாமல் காத்துக்கொண்டிருந்தது; இப்போது ராமதூதன் பேரன்போடு உச்சரித்த ராமநாமம், உணர்வை உருக்கி அவளுக்குப் புதிய உயிர் தந்துவிடுகிறது! இப்படிப்பட்ட அற்புதத்தைச் செய்தவன் யாராயிருந்தா லென்ன? ராட்சஸனுயிருந்தா லென்ன?

'அரக்கனே யாக!
வேருேர் அமரனே
யாக! அன்றிக்
குரக்கினத்(து) ஒருவ
னேதான் ஆகுக!
கொடுமை யாக!
இரக்கமே யாக!
வந்(து)இங்(கு) எம்பிரான்
நாமம் சொல்லி,
உருக்கினன் உணர்வைத்
தந்தான் உயிர்! இதின்
உதவி உண்டோ?'

[அமரன் - தேவன். குரகினம - குரங்குக் கூட்டம். இதின் - இதைககாட்டிலும்.]

என்று எண்ணமிடும் சீதை அந்த முகத்தை இன்னும் நன்ருகப் பார்க்கிருள்.

## 14. கணையாழி கொடுத்தல்

பார்க்கப் பார்க்க, அவள் உள்ளம் அவன் விஷயத்தில் எவ்வளவு இரங்குகிறது! பார்வை, முகத்தோடு அகத்தையும் ஊடுருவுகிறது. அந்த உள்ளத்தில் கொஞ்சமும் கள்ளமில்லை யென்பது தெளிவாகிறது. வஞ்சகமே அறியாத அந்தப் பேச்சும் குரலும், காதில் அப்படியே ஒலித்துக்கொண்டிருக்கின்றன. ஐயோ! இந்த அன்னியன் தன்னைப்பார்த்து ஏன் இப்படிக் கண்ணீர் வடித்துப் புலம்புகிறான்! தன்னுடைய துன்பம் எப்படியோ அந்த் நெஞ்சிலே படுகிறது! சந்தேகம் பறந்துவிடுகிறது. இனி இவனை யாரென்று விசாரிக்க வேண்டியதுதான்! ஆனால் இப்போது வேறொரு சந்தேகம்; 'அவனை எப்படி அழைப்பது?' அந்த ராட்சஸ ராஜதானியில் எத்தனையோ கட்டுக்காவல்களைத் தாண்டிக் கொஞ்சங் கூட அச்சமில்லாமல் அங்குவந்து நிற்பவன் யாராயிருந்தாலும் வீரஜாதியைச் சேர்ந்தவன் என்பது நிச்சயம். எனவே, அவள் அவனை, 'வீரனே! நீ யார்?' என்று கேட்கிறாள். அந்தக் கேள்வியிலேயே ஹனுமானுடைய யோசனைக்கு வெற்றி கிடைத்து விட்டது!

அந்த வார்த்தையைக் கௌரவிப்பதற்கு அறிகுறியாகக் கைகளைத் தலைமேல் குவித்துக்கொண்டு ஹனுமான், தான் வந்த வரலாற்றைக் கொஞ்சம் விவரிக்கத் தொடங்குகிறான்: 'தாயே! உன்னை ராமன் பிரிந்தபின்பு அவனுக்கு ஒரு ஸ்நேகிதன்

கிடைத்தான். அவன்தான் வானர ராஜாவாகிய சுக்கிரீவன். அவனுக்கு வாலியென்று ஓர் அண்ணன் இருந்தான். ராவணனை வாலிலே கட்டிக்கொண்டு எங்கும் பாய்ந்து சென்றான் என்று உலகப்பிரசித்தமா யிருக்கிறதல்லவா ? அந்த வாலிதான்.

‘ அன்னவன் தன்னை
உம்கோன் அம்(பு)ஒன்றால்
ஆவி வாங்கி,
பின்னவற்(கு) அரசு
நல்கி, துணைஎனப்
பிடித்தான் : நங்கள்
மன்னவன் தனக்கு
நாயேன் மந்திரத்(து)
உள்ளேன் ; வானின்
நன்னெடுங் காலின்
மைந்தன் ; நாமமும்
அனுமன் என்பேன்.’

[அன்னவன் - அப்படிப்பட்ட வாலி. உம்கோன் - உமது பதியாகிய ராமன். பின்னவன் - தம்பியாகிய சுக்கிரீவன். நல்கி - கொடுத்து. நங்கள் - எங்கள். மந்திரத்து - மந்திராலோசனைச் சபையில். வானின் - வானத்தில் உலாவுகிற. நல் நெடுங் கால்-நல்ல பெரிய வாயுபகவான்.]

என்று தன்னுடைய உத்தியோகத்தையும் பெயரையும் தெரிவித்துக்கொள்கிறான் ஹனுமான்.

‘நீ யார்?’ என்ற கேள்விக்குப் பதிலாக, ‘அடியேன் சுக்கிரீவனுடைய மந்திராலோசனைச் சபையில்

உள்ளவன். வாயு புத்திரனான ஹநுமன்' என்று சொல்வதே போதும். ஆனால் ஹநுமானோ வாலி பெயரையும் சொல்லி, 'அவனை ஒரே அம்பால் உன் புருஷன் கொன்று சுக்கிரீவனைப் புதிய மகாராஜாவாக ஆக்கிவைத்தான்' என்கிறான். இதனால், 'அப்போர்ப் பட்ட ராமனுக்கு ராவணவதம் செய்து சீதையை மீட்டுக்கொள்வது சுலபமாக இருக்கும் என்பதைக் குறிப்பாக உணர்த்திச் சீதையைத் தைரியப்படுத்து கிறான்.

பிறகு ராமனுக்குத் துணையாக அமைந்திருக்கும் வானரங்களின் பலம் முதலியவற்றைச் சுருக்கமாகச் சொல்லுகிறான். ராவணன் கவர்ந்து சென்ற காலத் தில் அவள் ஆபரணங்களைச் சேலையில் முடிந்து வீசிய தையும், அந்த முடிப்பைத் தான் எடுத்துக்கொடுத்த தையும், தன்னை விசேஷ நம்பிக்கையோடு ராமன் தனியே அழைத்து, 'நீ தெற்குத் திசையில் போய்த் தேடு' என்று அன்புகூர்ந்து கட்டளையிட்டதையும் சொல்லுகிறான் :

'வென்றியான் அடியன்
தன்னை வேறுகொண்(டு)
இருந்து கூறி,
"தென்திசை சேறி?"
என்றான் : அவன் அருள்
சிதைவ தாமோ?'

[வென்றியான்-வெற்றியையுடைய ராமன். சேறி - செல்வாயாக.]

ஹனுமான் முதல்முதல் சீதையிடம் ராமனுடைய 'அருள் தூதன்' என்று வெளியிட்டுக்கொண்டதற்கும் காரணம் இது. 'அந்த அருள் பழுதாகுமா? உன்னைக் காணப்பெற்றேன்!' என்ற குதூகலத்துடன்,

> இற்றைநாள் அளவும்,
> அன்னே! அன்று நீ
> இழித்து நீத்த
> மற்றைநல் அணிகள்
> காண் உன் மங்கலம்
> காத்த மன்னே!'

[இற்றை நாள் - இன்றைத் தினம். அன்னே - அன்னையே! இழித்து நீத்த - கழற்றி வீசிய. மங்கலம - திருமங்கலியம்.]

என்று எவ்வளவு உருக்கமாய்ப் பேசிச் சீதையைத் தேற்றுகிறான்! தான் ராமனுக்கு அந்தரங்கமானவன் என்பதைச் சாதுரியமாக வெளியிட்டதுபோல், அவள் கழற்றி எறிந்த ஆபரணங்களைப் பார்த்ததனாலேயே அவன் உயிர்வைத்திருக்கிறான் என்பதையும் சாதுரியமாகத் தெரிவிக்கிறான்.

பெண்களுக்கெல்லாம் திருமங்கலியம் அல்லது தாலிதான் மற்ற ஆபரணங்களைக் காத்துக்கொடுக்கிறது. (அதாவது, அந்த ஆபரணங்களை அணிந்து கொள்ளும் உரிமையைக் காப்பாற்றுகிறது.) சீதைக்கோ, மற்ற ஆபரணங்கள் திருமங்கலியத்தைக் காத்தனவாம்!

கடைசியாக, வாலி புத்திரனாகிய அங்கதனும் ராமனுக்கும் சுக்கிரீவனுக்கும் பணி செய்கிறான் என்று சொல்லி, அந்த வாலி மைந்தன் தன்னை இலங்கைக்கு அனுப்பியதாகக் கூறி முடிக்கிறான்.

ஹனுமான் வார்த்தையைக் கேட்ட சீதையுள்ளத்தில் ஆனந்தம் பொங்குகிறது. உள்ளத்தைப்போல் உடம்பும் பூரிக்கிறது. 'எனக்கும் விடுதலை வந்து விட்டதோ?' என்று நினைக்க நினைக்கக் கண்கள் ஆனந்தபாஷ்பம் பொழிகின்றன.

சோகக் கண்ணீர் ஆனந்தக் கண்ணீராகும் அதிசயத்தை இதோ கவிதானுபவமாகக் கண்டு, நாமும் அந்தப் பரமானந்தத்திலே பங்குகொள்வோம் :

எய்தவன் உரைத்த
　　லோடும், எழுந்துபேர்
　　　　உவகை யேற,

வெய்துறல் ஒடுங்கும்
　　மேனி வானுற
　　　　விம்மி ஓங்கி,

'உய்தல்வந்(து) உற்ற
　　தோ?' என்(று) அருவி நீர்
　　　　ஒழுகு கண்ணாள்,

'ஐய, சொல்! ஐயன்
　　மேனி எப்படிக்(கு)
　　　　அறிதி?' என்றாள்.

[எய்து அவன் - (தூது)வந்த ஹனுமான். வெய்துறல் - வெப்பமான துன்பம். வானுற - பருமனாக. உய்தல் - (துன்பத்திலிருந்து) பிழைத்துக்கொள்வது. எப்படி - எந்தவிதமாக.]

இச்செய்யுளில்,

'உய்தல்வந்(து) உற்ற
தோ?' என்(று) அருவிநீர்
ஒழுகு கண்ணாள்

என்பது, ரஸிகர் உலகில் அட்சர லட்சம் பெறும் கவிதையின் மகா வாக்கியங்களில் ஒன்று எனலாம்.

இனி ஹநுமான் சீதையை நோக்கிச் சில அடையாள வார்த்தைகள் சொல்லப் போகிறான். 'அங்கே நடப்பது கஷ்டமாயிருக்குமே! காட்டுப் பாதையல்லவா?' என்று தொடங்கியதும், அவன் இன்னும் என்ன சொல்லப் போகிறான் என்று கவனமாய்க் கேட்டுக்கொண் டிருக்கிறாள் சீதை. 'சில நாள்கள் தானே, போய்வருகிறேன்!' என்று ராமன் பதினாலு ஆண்டுகளைக் குறிப்பிட்டா னல்லவா? அதை 'நாள்கள் சில' என்று குறிப்பிட்டு, 'அதுவரையில் எனக்காகத் தாய்மார்களுக்கு (உன் மாமியார்களுக்கு)ப் பணிவிடை செய்துகொண்டு நீ இங்கே இரு' என்று நாயகன் சொன்னதையும் நாயகிக்கு இப்போது ஞாபகப்படுத்துகிறான்.

அவன் பேசப் பேச அவளுக்குப் பழைய நினைவுகள் பொங்குகின்றன. மாற்று வஸ்திரம்கூட எடுத்துக்கொள்ளாமல், உடுத்த ஆடையோடும், உயிரையே உதறிவிடுவது போன்ற உடம்போடும், கோபத்தோடும், காதலன் அருகில் காதலி வந்து நின்றதாக முதலாவது அடையாளத்தைச் சொல்லி முடித்த போது, அது அவளுக்கு அப்போதுதான் நடந்தது போலத் தோன்றுகிறது:

'நடத்தல்அரி தாகும்நெறி;
நாள்கள்சில; தாயர்க்கு
அடுத்தபணி செய்(து)இவண்இ
ருத்திஎன, அச்சொற்(கு)
உடுத்ததுகி லோடும்,உயிர்
உக்கஉட லோடும்,
எடுத்தமுனி வோடும்.அயல்
நின்றதும்இ சைப்பாய்.'

[நெறி - வழி. இவண் - இங்கே (அயோத்தியிலே). இருத்தி - இருப்பாய். சொற்கு - சொல்லுக்கு. உக்க - சிந்திய. முனிவு - கோபம். இசைப்பாய் - சொல்வாய்.]

பின்பு இரண்டாவது அடையாளம் சொல்கிறான் :

' நீண்டமுடி வேந்தன்அருள்
ஏந்தி,நிறை செல்வம்
பூண்டதனை நீங்கி,நெறி
போதலுறு நாளின்,
ஆண்டநகர் ஆரையொடு
வாயில்அக லாமுன்,
" யாண்டையது கான்?"என
இசைத்ததும் இசைப்பாய்.

[நீண்ட முடி வேந்தன் - தசரத சக்ரவர்த்தி. நெறி - வழி. போதலுறு நாளின்-புறப்பட்டபொழுது. ஆரை - கோட்டை மதில். யாண்டையது - எவ்விடத்திலிருக்கிறது.]

என்று ராமன் தன்னிடம் சொன்னதாக ஹனுமான் விண்ணப்பித்துக்கொண்டதும், 'கால வெள்ளம் எப்படியோ பின்னேக்கி ஓடித் தன்னை அக்காலத்து அயோத்திக்கு அருகே கொண்டு சேர்த்துவிட்டதாக எண்ணுகிருள். ஆம், தாங்கள் பிரிந்துகொண்டிருக்கும் அந்த அயோத்திக்கு அருகே!

நீண்ட ஆட்சிக்குப் பின் சக்ரவர்த்தி தமது அருமைப் பிள்ளைக்கு ராஜ்யம் கொடுத்ததும், அதில் ஆசை இல்லாமலிருந்தும் பித்ரு வாக்கிய பரிபாலன மாகவே ராஜ்ய பரிபாலனத்தைச் சிரசாக வகித்ததும், புருஷன் முடி சூடிக்கொண்டதாகவே சீதையும் பிறரும் நம்பியதும், பிறகு பூண்ட முடியையும் ஆண்ட நகரத்தையும் கைவிட்டதாகவே கருதியதும் காட்டுக்குப் புறப்பட்டதும், கோட்டை வாசலைத் தாண்டிப் போவதற்கு முன்னமேயே, 'காடு எங்கே இருக்கிறது?' என்று சீதை பேதைமையும் குதூகலமும் தோன்றக் கேட்டதும், அப்படியே மீண்டும் பிரத்தியட்சமாகின்றன. ஹனுமான் அடையாளம் சொல்லுகிருனு? ஏதோ மந்திர வித்தை காட்டுகிருனு?

இதோ இன்னும் ஒரு காட்சி. காட்டிலே விட்டுப் போகும்போது சுமந்திரன் தயங்கித் தயங்கிப் பரிதவிப்பதும், தன் புருஷன் தேறுதல் சொல்லுவதும், அந்த வசன சாதுரியம் சுமந்திரன் துயரத்தை நீக்காவிட்டாலும உலகம் தெரியாத தன்னுடைய உள்ளத்தில் துயரமே இல்லாமல் செய்துவிடுவதும், அந்த நிலையில் தான் சுமந்திரனை நோக்கி, 'நான் அரண்மனையில் அருமையாக வளர்த்துவந்த கிளிக்கும் மைனுவுக்கும் யாராவது தொடர்ந்து பேச்சுக் கற்றுக்

கொடுக்கவேணும்' என்று கவலையோடு செய்தி சொல்லி அனுப்புவதும் ஆகிய காட்சிகள் ஹனுமான் வாய்மொழி மூலமாக இப்போது மனக்கண் முன் வந்து, அவள் உள்ளத்திலே எத்தனையோ சிந்தனைகளையும் உணர்ச்சிகளையும் தூண்டிவிடுகின்றன!

வேறு அடையாளங்களையும் ராமன் சொல்லி அனுப்பியிருந்தான். அவளும் ஹனுமான் வார்த்தையை அமிர்தமாகப் பருகிக்கொண்டிருந்தாள். ஆனால் இந்தச் 'சொல்லின் செல்வன்' இனிமேல் சொற்கள் அவசியமில்லை என்று தீர்மானித்து விடுகிறான் :

> மீட்டும்உரை வேண்டுவன
> இல்லையென, ' "மெய்ப்பேர்
> தீட்டியது, தீட்டரிய
> செய்கையது, செவ்வே
> நீட்டிது!" என நேர்ந்தனன்;'
> எனநெடிய கையால்
> காட்டினன் ஓர்ஆழிஅது
> வாள்நுதலி கண்டாள்.

[மீட்டும் - மேலும் மேலும். தீட்டரிய - சித்திரித்துக் காட்டவும், சொல்லி யறிவிக்கவும் இயலாத. செய்கை - வேலைப்பாடு. செவ்வே - நேரே. நீட்டிதென - நீட்டு+இது+என. நேர்ந்தனன் - (ராமன்) கொடுத்தான். என - என்று சொல்லி. ஆழி - வட்டமான மோதிரம். வாள் - ஒளி. நுதலி - நெற்றியையுடையவள்.]

காலத் திரை எப்படியோ விலக, ஒன்றின் பின் ஒன்றாக மூன்று ஜாலக் காட்சிகளைக் கண்ட சீதை

இப்போது ஓர் இந்திர ஜாலத்தைக் காண்கிறாள். எந்தப் பேர் கொஞ்ச நேரத்திற்கு முன் காதில் விழுந்ததோ, அது இப்போது கண் முன்னும் வருகிறது! எந்தப் பேரைக் கேட்டதும் இவளுடைய உணர்வு நீராய் உருகிப்போயிற்றோ, அதே ராம நாமம் சித்திரிக்கப் பெற்றிருக்கிறது; உண்மையாகவே கண்முன் சித்திரித்துக் காட்டப்படுகிறது.

அந்த வேலைப்பாடுதான் எவ்வளவு விசித்திரமானது! அதைப்போல் யாரே செய்யமுடியும்? அந்த வேலைத்திறத்தை வர்ணிக்கத்தான் யாரால் முடியும்? அப்படிப்பட்ட கணையாழியை, 'உன்னிடம் கொடுக்கும்படி உன் காதலன் தந்திருக்கிறான்' என்று சொல்லி, ஒரு தெய்வத்தின் முன் நிவேதனமாக அபூர்வமான ஒரு பொருளைச் சமர்ப்பிப்பதுபோல் ஹனுமான் தன் இரண்டு கைகளாலும் மோதிரத்தை யேந்திக்கொண்டு காண்பிக்கிறான். அதைக் கண்டதும் சீதை முகத்தில் ஒரு புதிய ஒளி பரவுகிறது. ஒரு புதிய அழகு வருகிறது.

ராமன் மோதிரத்தைக் கண்ட சீதையின் மகிழ்ச்சியை—சீதையின் தன்மையை என்னென்பது!

> இறந்தவர் பிறந்தபயன்
> எய்தினர் கொல்என்கோ?
>
> மறந்தவர் அறிந்(து)உணர்வு
> வந்தனர் கொல்என்கோ?
>
> துறந்தஉயிர் வந்(து)இடை
> தொடர்ந்தது கொல்என்கோ?
>
> திறம்தெரிவ(து) என்னைகொல்இ(ந்)
> நன்னுதலி செய்கை?

[எய்தினர்கொல் என்கோ - அடைந்துவிட்டார்கள் என்பேனே. இடை - உடம்பினிடையே, உடம்பி னிடத்தே. தொடர்ந்தது - தொடர்புற்றது. திறம் - தன்மை; இங்கே மகிழ்ச்சியின் தன்மை. தெரிவது - தெரிந்து சொல்வது. என்னைகொல் - எவ்வாறோ. நல் நுதலி - அழகிய நெற்றியையுடைய சீதை.]

இம்மை யின்பத்தையும் மறுமை யின்பத்தையும் அடைய முயல்வது பிறந்ததனால் ஆய பயன். இப் பயனை அடைய முயலாமல் வாணாளை வீணாளாக்கி இறந்து போகிறவர்களும் உண்டல்லவா? அப்படி இறந்து போனவர்கள் பிறந்த பயன் தங்களுக்கு மறுமையில் கிட்டுமென்று எதிர்பாராமல்தானே யிருப் பார்கள்? அந்த நிலையில் அவர்கள் பிறவிப் பயனைத் தற்செயலாக அடையப் பெற்றார்கள் என்று வைத்துக் கொள்வோம். அத்தகைய மகிழ்ச்சியைச் 'சீதையின் மகிழ்ச்சியோடு ஒப்பிடலாம் என்பேனோ?' என்று கவிஞன் தன்னைத் தானே கேட்டுக்கொள்கிறான்.

இத்தகைய உவமையோடு திருப்தியடையவில்லை கவியுள்ளம். அறிதற்கு அரிய ஒரு பொருளை அறிந்துவிட்டார் ஒருவர்; பின்பு மறந்தும் விட்டார். அவர் எவ்வளவு கஷ்ட நிலையில் இருந்திருப்பார்? அவரே திரும்ப அந்த அரும் பொருளைப்பற்றி அறிவு வரப் பெற்றாராயின் எத்தகைய ஆனந்தத்தை அடைந் திருப்பார்? 'அத்தகைய ஆனந்தத்தைச் சீதையும் அடைந்தாள் என்பேனோ?' என்கிறான் கவிஞன்.

இன்னும் திருப்தி பெறவில்லை கவிஞனுள்ளம். உடலைத் துறந்துவிட்டது உயிர்: அழுதால் மீளுமா, தொழுதால் மீளுமா? 'அந்த உயிர் மீண்டு வந்து அந்த உடம்புடன் தொடர்புற்றது என்றால், அந்த

உவகையை என்னென்பது? அத்தகைய உவகையைச் சீதையும் அடைந்தாள் என்பேனே?' என்கிறான் கவிஞன்.

'சீதை அடைந்த ஆனந்த நிலையைத் தெரிந்து சொல்வது எவ்வாறோ?' என்று தவித்துக்கொண்டிருக்கும் கவியுள்ளத்திலே நாலு கனவுகள்—பகற் கனவுகள்தான்—தோன்றுகின்றன.

நாகரத்தினத்தைப் பறிகொடுத்த பாம்பொன்று, அதைத் தேடித் தவித்துக்கொண்டிருக்கிறதாம். 'கண்டுபிடிக்க முடியவில்லையே!' என்று ஏங்கிப் புற்றுக்குத் திரும்பிவிட்டது. ஆனால்—என்ன அதிசயம்!—புற்றிலிருக்கும்போது அந்த நாகம் தான் இழந்த ரத்தினத்தை எதிரே கண்டுவிடுகிறதாம்.

வேறொரு காட்சி. நீண்ட காலமாகத் தாம் அனுபவித்துவந்த பெருஞ்செல்வங்களை இழந்துவிட்டார் ஒருவர். 'போனது போனதுதான். ஐயோ! இனி நாம் அந்த ஐசுவரியத்தைக் கனவிலும் பார்க்க முடியுமா?' என்று ஏங்கிக் கஷ்ட ஜீவனம் செய்துகொண்டிருக்கிறார் அந்த மாஜி கோடீச்வரர். அப்படியிருக்கும்போது திடீரென்று ஒருநாள், அதிர்ஷ்ட தேவதை காட்டும் செப்படிவித்தையால், அவர் அந்தச் செல்வங்களைத் திரும்பப்பெற்று மறுபடியும் கோடீச்வரராகிறார். என்ன ஆச்சரியம், என்ன மகிழ்ச்சி!

இன்னொரு காட்சி. ஒருத்திக்கு வெகு காலமாகக் குழந்தையில்லை. வயது ஏற ஏறக் குழந்தை ஆசை அதிகப்படுகிறது; நம்பிக்கையோ குறைந்து வருகிறது. ஊரார் அந்த அம்மாளை—'அம்மா!' என்று கூப்பிட ஒரு குழந்தையில்லையே என்று தவித்துக்கொண்டிருக்கும் அந்த அம்மாளை—'மலடி' என்றே பிரசித்தமாய்க்

குறித்துப் பேசுவது வழக்கமாகிவிட்டது. அதே ஊரில் ஒருநாளுமில்லாத திருநாள் வந்துவிட்டது போல் தூள்படுகிறது—"மலடி குழந்தை பெற்று விட்டாள்!' என்று. 'மலடி' என்றால்தான் தெரியும்; பெயர்கூட மறைந்துவிட்டது! அந்த 'மலடி' அடையும் ஆனந்தத்திற்கு எல்லையும் உண்டோ?

நாலாவது காட்சி. இரண்டு கண்களையும் இழந்து விட்டான் ஒருவன். சூரிய வெளிச்சமும, இயற்கையின் அழகுகளும், வர்ண ஜாலங்களும் பழைய ஞாபகங்களாகிவிட்டன. 'ஐயோ! பிறவிக் குருடனாயிருந்தாலும் இவ்வளவு கஷ்டம் தெரியாதே! நம்முடைய வாழ்க்கை இனி ஒரே ராத்திரிதான்; இந்த இருளுலகத்திலிருந்து இந்த ஜன்மத்தில் எனக்கு விடுதலை கிடையாது!' என்று புலம்பிக்கொண்டிருந்தான். அப்படிப்பட்டவன் ஒருநாள், 'ஓஹோ, இரண்டு கண்களும் மீண்டும் நன்றாய்த் தெரிகின்றனவே! மீண்டும் இந்த அழகிய உலகின் அழகிய காட்சிகளைக் காணக் கிடைத்ததே!' என்று குதூகலப்படுகிறான். புதிய பிறப்பை அடைந்துவிட்டதாகவே ஆனந்திக்கிறான்.

இப்படிப்பட்ட அபரிமிதமான ஆனந்தங்களின் சேர்த்தியை இப்போது சீதையிடம் காண்கிறான் கவிஞன் :

> இழந்தமணி புற்றர(வு)எ-
> திர்ந்த(து)என லானாள்;
>
> பழந்தனம் இழந்தன
> படைத்தவரை ஒத்தாள்;

குழந்தையை உயிர்த்தமல-
டிக்(கு)உவமை கொண்டாள் ;
உழந்துவிழி பெற்றதொர்
உயிர்ப்பொறையும் ஒத்தாள் !

[மணி - (இங்கே) நாகரத்தினம். புற்றரவு - புற்றில் உள்ள பாம்பு. எதிர்ந்தது - சந்தித்தது. உயிர்த்த - பெற்றெடுத்த. உழந்து - வருந்தி. உயிர்ப்பொறை - உடம்பு.]

மோதிரத்தைக் கண்ட நிலை இது. இதற்கு முந்திய பாட்டிலும் கணையாழி கண்ட சீதை அடைந்த ஆனந்தத்தை ஏழு உவமானங்களால் நமக்குப் பிரத்யக்ஷப்படுத்துகிறான் கவிஞன்.

இதோ பாருங்கள் : மோதிரத்தை ஹனுமான் கையிலிருந்து வாங்கிக்கொள்கிறாள். எவ்வளவு ஆசையோடு வாங்கித் தன் ஹிருதயத்திற்கு அருகே சேர்த்துக்கொள்கிறாள் பாருங்கள் :

வாங்கினள்; முலைக்குவையில்
வைத்தனள்; சிரத்தால்
தாங்கினள்; மலர்க்கண்மிசை
ஒத்தினள் ; தடந்தோள்
வீங்கினள்; மெலிந்தனள்;
குளிர்ந்தனள்; வெதுப்போ(டு)
ஏங்கினள்; உயிர்த்தனள்: இ(து)
இன்னதென லாமே ?

[முலைக் குவையில்-ஸ்தனங்களின் முகட்டில். மலர்க் கண்மிசை - பூக்களை யொத்த கண்களில். தடந் தோள் - விசாலமான தோள். வீங்கினள் - பூரிக்கப்பெற்றாள்.

வெதுப்பு - வெப்பம். உயிர்த்தனள் - பெருமூச்சுவிட்டாள். ஆமே - (இங்கே) ஆகுமோ. இது - ஸ்தம்பித்துச் செயலற்றிருக்கும் இந்த ஆனந்த நிலை.]

கணையாழியை வாங்கியதும் ஆசையோடணைத்துக் கொண்டவள், பிறகு தலைமேல் ஏந்திக்கொள்கிறாள். இழந்த கிரீடமென்றே எண்ணிவிட்டாளா ? அந்தக் கணையாழியை நீலமலர்போன்ற தன் அழகிய — குற்ற மற்ற — கண்களிலே ஒத்திக்கொள்கிறாள். நாயகனுடைய அனுக்ரஹத்தோடு வந்த மகாபிரசாதம் என்றே மதிக்கிறாளா ?

எப்படிப்பட்ட மந்திர சக்திதான் இருக்குமோ அந்த மோதிரத்திலே ! ராமனைக் கண்முன் காட்டிக் காட்டி மறைக்கிறது ! தோள்கள் பூரிக்கின்றன; பூரிப்புக்குப் பின் மறுபடியும் மெலிந்துபோகிறாள் ! ஒரு நிமிஷம் உள்ளம் குளிர்ந்து உடம்பும் நேராகிறது ; அடுத்த நிமிஷத்திலே உடல் வெதும்பி ஏங்கிப் போகிறாள் !

ஆ, இப்படி ஏன் பெருமூச்சு விடுகிறாள் ? இப்போது, அலையடித்து ஓய்ந்த சமுத்திரம்போல் செயலற்றுச் சும்மா இருக்கிறாளே ! இந்த ஆனந்த நிலையையும் நமக்குக் காட்டி, 'இது இன்னதென்று சொல்வது எப்படி ?' என்று நம்மிடத்திலேயே கவிஞன் ஆலோசனை கேட்பதுபோலத் தோன்றுகிறது.

'இது இன்னதெனலாமோ ?' என்று நாமும் திகைத்துக்கொண் டிருக்கும்போதே, நம்மை மீண்டும் கவனிக்கச் சொல்கிறான் கவிஞன். அது என்ன ? சீதா பிராட்டி கணையாழியை மோந்து பார்க்கிறாள். அது இப்போது ஒரு பூச்செண்டாகி விட்டதா, என்ன ? மறுபடியும் மார்போடணைத்துத் தழுவிக்கொள்கிறாள்.

கணையாழியை இன்னும் நன்றாகப் பார்க்கவேண்டு மென்னும் ஆசையுண்டாகிறது; கண்குளிரப் பார்க்கலா மென்றால் கண்ணீர் வந்து தடுக்கிறது. அந்த ஆனந்தக் கண்ணீரும் அக்கண்களுக்கு ஒரு புதிய பிரகாசத்தையும் அழகையும் தருகிறது. கண்ணைத் துடைத்துக்கொண்டு மீண்டும் பார்க்கிறாள். மீண்டும் கண்ணீர் நிறைந்து ததும்புகிறது. இப்படி அவள் எவ்வளவு நேரம்தான் பார்த்துக்கொண்டிருக்கப் போகிறாளோ?

ஆ, அந்தப் பார்வைதான் எவ்வளவு நெடுநீள மான பார்வை! எத்தனை நீண்ட நினைவுகள் அப் பார்வையில் கண்ணீரோடு கலந்து மிதக்கின்றன! அதிசயத்தின்மேல் அதிசயம்: இப்போது கணையாழி யுடன் ஏதேதோ கொஞ்சிப் பேச விரும்புகிறாள். ஆனால் ஒரு பேச்சும் வரவில்லை, தொண்டை அடைத் துக்கொள்கிறது; மேலும் மேலும் விம்மலோடு அழுகைதான் வருகிறது. அதை அடக்கி மீண்டும் மீண்டும் விழுங்கத் தொடங்குகிறாள்.

அமிதமான மகிழ்ச்சிக்கும், அழுகைக்கும் எவ் வளவு சிநேகம் பாருங்கள்! இப்படிப்பட்ட அழு கைக்கு மேலான ஒரு பேச்சாவது பாஷையாவது உண்டா?

மோக்கு(ம்);முலை வைத்துற
முயங்கும்;ஒளிர் நன்னீர்

நீக்கிநிறை கண்இணை
ததும்ப, நெடுநீளம்

நோக்கும்நுவ லக்கருதும்;
ஒன்றும்நுவல் கில்லாள்;
மேக்குநிமிர் விம்மலள்;வி-
ழுங்கலுறு கின்றாள்.

[மோக்கும் - மோந்து பார்ப்பாள். அகம் - மார்பு. உற - நன்றாக. முயங்கும் - தழுவுவாள். நன்னீர் - (நல்+நீர்) (இங்கே) ஆனந்தக்கண்ணீர். இணை - இரட்டை. நுவல - பேச. மேக்கு - மேல். விம்மல் - அழுகை; (இங்கே) உள்ளப் பூரிப்பினால் தோன்றும் அழுகை. உறுகின்றாள் - தொடங்குகிறாள்.]

அப்படி அவள் கணையாழியை உற்று நோக்கிக் கொண்டிருக்கும்போது, மின்னற் கொடிபோலிருக்கும் அந்த மேனி முழுவதும் மாற்றுயர்ந்த தங்கம்போலப் பிரகாசிக்கிறது; இன்னும் விசேஷ நிறங்களும் அந்த மின்னொளியோடும் பொன்னொளியோடும் கலந்து ஜ்வலிக்கின்றன! ரத்தினகசிதமான அந்தத் தங்கமோதிரம் வட்டமான — வேலைப்பாடமைந்த — ஒருமோதிரம் தானா என்ற சந்தேகம்கூட நமக்கு உண்டாகிறது. ஒருவேளை அது தொட்டதையெல்லாம் ஆயிரத்தெட்டு மாற்றுப் பொன்னாக மாற்றும் தெய்வமணியாக இருக்குமோ?

எவ்வளவு ஒருமையுள்ளத்தோடு அதே தியானமாக அந்த மணியாழியோடு லயித்துப்போய் விட்டாள்!

இருந்துபசி யால்இடர்
உழந்தவர்கள் எய்தும்
அருந்தும்அமு தாகிய(து);
அறத்தவரை அண்மும்

விருந்தும்என லாகியது;
வீயும்உயிர் மீளும்.
மருந்தும்என லாகியது :
வாழிமணி ஆழி !

[இடர் உழந்தவர்கள் - துன்பம் அனுபவித்துக் கொண்டிருந்தவர்கள். எய்தும - அடையப் பெற்ற அருந்தும் - உண்ணுதற்கு ஏற்ற. அமுது - அமிர்தம் போன்ற பால். அறத்தவர் - தருமவான்கள். அணுகும்- அடுத்துவரும். விருந்து - விருந்தாளி. வீயும் - செத்துப் போகும். மருந்து - சஞ்சீவி. மணி ஆழி - அழகிய கணையாழி.]

உணவு தேடிப் போகவும் சக்தியில்லாமல் இருந்த இடத்திலேயே யிருந்து பசித்தீயால் தகிக்கப்பெற்றவர் களுக்குப் பாலுணவு கிடைத்துவிட்டால் எப்படி யிருக்கும்? அந்தப் பாலமுதம் தேவாமிர்தமாகத் தோன்றுமல்லவா ? அப்படிப் பருகும் அமிர்தமாக இருக்கிறதாம் சீதைக்கு மணியாழி.

மேலும், தர்மவான்களை வந்தடைந்த விருந்தாளி யைப்போலவும் அது இருக்கிறதாம். விருந்தாளி முகம் கண்டதும் அந்த இல்லறத்தார்களின் முகம்தான் எப்படி மலர்கிறது ! எவ்வளவு அகமகிழ்ச்சியையும் அன்பையும் அந்த முகமலர்ச்சி பிரதிபலிக்கிறது !

எல்லாவற்றுக்கும் மேலாக அந்தக் கணையாழி, செத்துக்கொண்டிருக்கும் உயிரை மீட்டித்தரும் அற்புதமான ஒரு சஞ்சீவி மருந்தாகவும் இருக்கிறதாம். ஆம், 'அமுது' 'விருந்து' 'மருந்து' ஆகிய முப்பொரு ளாகவும் தோன்றி ராமன் மோதிரம் சீதைக்குப் பிராணுபாயம் தவிர்த்துப் பேருவகை விளைக்கிறது.

'இப்படிப்பட்ட இந்திரஜால மகேந்திர ஜாலங்களையெல்லாம் சீதைக்குக் காட்டி, இவளை வாழ்வித்து உலகத்தை வாழ்விக்கப் போகும் கணையாழி வாழ்வதாக! கால தத்துவம் உள்ள அளவு வாழ்வதாக!' என்று வாழ்த்துகிறான் கவிஞன்.

முத்துக்கள்போல் உதிரும் ஆனந்த பாஷ்பத்திற்கு இடையே, உள்ளத்தில் கொந்தளித்துக்கொண்டிருக்கும் பெருமகிழ்ச்சியின் சிற்றலையொன்று வெளிப்படுகிறது புன்சிரிப்பாக. இப்போது அவள் ஹனுமானுடன் பேச விரும்புகிறாள். முன்பிருந்த பேச்சுத்தடை எப்படியோ ஒருவாறு நீங்குகிறது. குழந்தைகளின் இனிய மழலை மொழிகள்போல் மிருதுவான இளஞ் சொற்கள் குழறி வருகின்றன.

'பிராணோபகாரியே! புருஷோத்தமனே!' என்று ஹனுமானை அருமையாக வாய் குளிர அழைக்க ஆசைப்படுகிறது உள்ளம். 'உயிர் தந்தாய், உத்தமனே!' என்ற சொற்கள் எப்படியோ தட்டித் தடுமாறி வந்து நம் காதிலும் விழுகின்றன. சத்தம் செய்யாமல் கவனமாய்க் கேளுங்கள், பாருங்கள் :

இத்தகையள் ஆகி,உயிர்
ஏமுற விளங்கும்

முத்தநகை யாள்விழியின்
ஆலிமுலை முன்றில்

தத்திஉக, மென்குதலை
தள்ள,'உயிர் தந்தாய்,

உத்தம!' என்றுஇனிய
வாசகம்உரைத்தாள்.

[இத்தகையள் - இப்படிப்பட்ட தன்மையுடைய வள். ஏமுற - (அளவற்ற) இன்பம் அடைய. முத்த நகையாள் - முத்துப்போல் பற்கள் சிறிது வெளிப்படப் புன்னகை பூத்த சீதை. விழியின் ஆலி - (ஆனந்தக்) கண்ணீர்த் துளிகள். முலை முன்றில்-ஸ்தனங்களின் மேல் முகடு. தத்து உக - பாய்ந்து உதிர. மென் குதலை - மென்மையான மழலைச் சொற்கள். தள்ள - தடுமாறி வர; குழறிவர. எனு - என்று. இனைய - இப்படிப் பட்ட.]

'உயிர் தந்தாய். உத்தம!' என்று வழியும் கண்ணீரோடும் சிறிது புன்னகையுடனும் சீதை குழறிப் பேசியது அற்புதமான—என்றுமழியாத—கவிச்சித்திரம் பெற்றுவிட்டதல்லவா? 'நீ மோதிரத்தையா கொடுத்தாய்? என்உயிரையே கொடுத்திருக்கிறாய்!' என்ற வாசகம், தங்க ஏட்டிலே இரத்தின எழுத்துக்களில் பொறிக்கப் பெற்றதுபோல் பொறிக்கப் பெற்றிருக்கிறது இப்பாட்டினிடையே.

இனி இவள் ஹனுமானுக்கு நன்றி சொல்லப் போகிறாள். இப்போது பேச்சுத்தடை நீங்கி வாக்குப் பிரவாகமே வந்துவிட்டது.

'மும்மையாம் உலகம் தந்த
முதல்வற்கும் முதல்வன் தூதாய்ச்
செம்மையால் உயிர்தந் தாய்க்குச்
செயல்என்றால் எளிய(து) உண்டோ?
அம்மையாய் அப்ப னாய
அத்தனே! அருளின் வாழ்வே!
இம்மையே மறுமை தானும்
நல்கினை, இசையோ(டு)!' என்றாள்.

[மும்மை - மூன்று. முதல்வற்கும் முதல்வன் - பிரும்மதேவனுக்கும் முதல்வனான ராமன். செம்மை - நன்மை; நற்குணம். தந்தாய்க்கு - தந்த உனக்கு. செயல் - பிரதியுபகாரம். உண்டே - உண்டோ. அத்தன் - குரு; கடவுள். இம்மையே மறுமைதானும் - இந்த லோக வாழ்வும், மறு லோக வாழ்வும். நல்கினை - கொடுத்தாய். இசையோடு - புகழுடன்.]

'தக்க சமயத்தில் வந்து என்னைக் காப்பாற்றிய அந்த உபகாரத்திற்கு அரக்கர் சிறையிலிருக்கும் எளியவளாகிய நான் செய்யக் கூடிய பிரதியுபகாரமும் உண்டோ?' என்று கேட்கிறாள். அந்த மகோபகாரியின் தூய அன்பை நினைத்ததும் 'அம்மையே!' என்று அழைக்கத் தோன்றுகிறது. அந்த ஆற்றலை நினைத்து 'அப்பனே!' என்கிறாள். அவனுடைய தூய அறிவை நினைத்து 'குருவே!' என்கிறாள். தெய்வமே அந்த ரூபத்தில் தனக்கு உதவிசெய்ய வந்துவிட்டது என்று கூடக் கருதுகிறாள்.

இப்படியெல்லாம் அழைத்தும் திருப்தியடையாமல் மேலும் மேலும் அன்பும் நன்றியறிவும் பெருக, 'அருளின் வாழ்வே!' என்று வாய் குளிர நெஞ்சு குளிர அழைக்கிறாள். அந்தப் பிராணோபகாரி தனக்குப் பிராணனைக் கொடுத்துப் பிராண நாயகனையும் கொடுத்திருக்கிறான்; இகலோக வாழ்வைக் கொடுத்து மறுலோக வாழ்வையும் கொடுத்திருக்கிறான். பழியைப் போக்கிப் புகழையும் கொடுத்திருக்கிறான்.

'அம்மையாய் அப்பனாய
அத்தனே! அருளின் வாழ்வே!'

என்று அழைத்து நன்றி தெரிவிப்பது எவ்வளவு பொருத்தமாக இருக்கிறது!

இவ்விதமாக நன்றியறிவிக்கும் சீதை இனி ஹநுமானை எப்படி வாழ்த்தப் போகிறாள்? கேளுங்கள் :

'பாழிய பணைத்தோள் வீர!
துணையிலேன் பரிவு தீர்த்த
வாழிய வள்ள லே! யான்
மறுவிலா மனத்தேன் என்னில்,
ஊழிஓர் பகலாய் ஓதும்
யாண்டெலாம், உலகம் ஏழும்
ஏழும்வீ வுற்ற ஞான்றும்,
இன்றென இருத்தி!' என்றாள்.

[பாழி - வலிமை. பணைத் தோள் - பருத்த தோள்கள். பரிவு - துன்பம். வாழிய - வாழ்வாயாக. மறு - குற்றம். என்னில் - என்றால். ஊழி - யுகம். யாண்டு - ஆண்டு. உலகம் ஏழும் ஏழும் - பதினான்கு லோகங்களும். வீவுற்ற - அழிவடைந்த. ஞான்றும் - நாளினும். இன்றென - இன்றுபோல். இருத்தி - இருப்பாயாக.]

ராக்ஷச ராஜதானியிலே சிறையிருக்கும் தன்னைக் கண்டு பேசத் துணிந்த மனோபலத்தையும் தேக பலத்தையும் பாராட்டிச் சீதை, 'பாழிய பணைத்தோள் வீர!' (வலிமை வாய்ந்த பருத்த தோள்களையுடைய வீர சிகாமணியே!) என்று ஹநுமானை அழைக்கிறாள், வாழ்த்தத் தொடங்குவதற்கு முன்.

திருப்தி யடையாதவளாகி, 'நிர்க்கதியாகத் துன்பத்திலே அழுந்திக் கிடந்த என்னைக் காப்பாற்றிய வள்ளலே!' என்றும் உருக்கமாக அழைக்கிறாள்.

> துணையிலேன் பரிவு தீர்த்த
> வாழிய வள்ள லே!'

என்ற சொற்றொடர் சீதையின் மாசு மறுவில்லாத மனத்தைப் பளிங்கில் வைத்துக் காட்டுவதுபோலக் காட்டுகிறது.

'வள்ளலே!' என்று அழைப்பதற்கு முன்பே வாய் வாழ்த்துகிறது, 'நீ வாழ்வாயாக' என்று. வாழ்த்தின் விவரத்தை வெளியிடுவதற்கு முன், 'நான் மாசு மறுவில்லாத மனமுடையவளானால்—' என்று ஆரம்பிக்கிறாள். இப்படி ஆரம்பமாகும் அந்த வாழ்த்தின் விவரத்தை அறிந்துகொள்ள நமது நெஞ்சிலும் எவ்வளவு ஆவல்!

'சிரஞ்சீவியாக வாழ்ந்திருப்பாய்' என்றுதான் வாழ்த்தப் போகிறாள். ஆனால் எப்படிப்பட்ட சிரஞ்சீவி!

பெரியார் ஒருவரை ஓரறிஞர் ஒரு சமயம், 'தாங்கள் நூறு வயசு வாழ்ந்திருக்கவேண்டும்' என்று வாழ்த்தினார். உடனே அப்பெரியார் சொன்னார்: 'எதற்காக ஒரு மனிதன் அவ்வளவு ஆயுள் வாழ வேண்டும்? அத்தனை காலம் இருந்தால் பிறருக்குச் சுமையாகவே வாழ நேரிடும் அல்லவா? பிறருக்கு நான் எவ்வளவு காலம் உபயோகமாக இருக்க முடியுமோ, அதுவரை நான் உயிரோடிருந்தால் போதும்!'

கை கால் தளர்ந்து, பல் விழுந்து, கண் குழிந்து, காதும் அறிவும் மந்தமாய், கூனிக் குறுகி,

இது என் அப்பர் மூத்தவாறு !'

[மூத்தவாறு - கிழப் பருவம் அடைந்த விதம்.]

என்று பிறர் நகைக்க, ஒரு நாளை ஒரு யுகமாய்க் கழிக்கும் கிழப் பருவத்தோடு ஒருவன் நீடூழி காலம் வாழ்ந்திருக்க நேர்ந்தால், அதுவும் ஒரு வாழ்வா? அதுவும் ஒரு வாழ்த்தாகுமா? அப்பேர்ப்பட்ட சிரஞ்சீவிக்கு அந்தப் பட்டமும் பதவியுமே ஒரு கொடிய தண்டனை அல்லது சாபம் அல்லவா?

எனவே, சீதை ஹனுமானை நோக்கி,

'இன்றென இருத்தி !'

என்று வாழ்த்துகிறாள். 'கடல் தாண்டி, அகழ் தாண்டி, மதில் தாண்டி, அரக்கர் காவல்களையெல்லாம் தாண்டி வந்திருக்கும் இன்றைத் தினத்தில் இருப்பதுபோல், இந்தத் தைரிய சாகச - வீர - யௌவன - சௌந்தர்யத்தோடும், பரோபகார சிந்தையோடும், மகத்தான தியாக புத்தியோடும் நீ என்றும வாழ்ந்திருப்பாயாக !' என்பது சீதாதேவியின் அனுக்ரஹ பூர்வமான வாழ்த்து.

இந்த வாழ்த்தை,

'ஊழிஓர் பகலாய் ஓதும்
யாண்டெலாம், உலகம் ஏழும்
ஏழும்வீ வுற்ற ஞான்றும்
இன்றென இருத்தி !' என்றாள்.

என்று இரண்டடியாக நீட்டி வளர்த்துக் கூறுவது கவனிக்கத் தக்கது. சீதையின் வாழ்த்து ஹனுமானின் ஆயுளை நீளச் செய்வதுபோல், வாழ்த்தைக் கூறும்

வாசகத்தையும் நீளச் செய்திருக்கிறது கவியுள்ளம். இந்த நீண்ட வாழ்த்திலே, 'இன்றெனை இருத்தி' என்ற சிறு பகுதியில்தான் எவ்வளவு புதை-பொருள். 'இந்த "இன்றெனை" என்பது, சொல்லால் வாமனனையும், பொருளால் திரிவிக்கிரமனையும் போலும் எனலாம்' என்பர் ரசிகர் வெ. ப. சுப்பிர மணிய முதலியார்.

இக்கவிதைச் சித்திரம், 'சீதையின் நன்றியறிவும் உள்ளன்பும் அப்படியே சொல்லுருக்கொண்டு வந்து விட்டன!' என்று அதிசயிக்கும்படி அமைந்திருக் கிறது. வேறு எந்த வீரன், எந்தப் பதிவிரதையால், (எந்தப் பாஷையில்தான்—என்றுகூட ஒரு ரசிகர் சேர்த்துக் கொள்ளலாம் என்கிறார்) இந்த விதமாக வாழ்த்தப் பெற்றிருக்கிறான்! இந்த நன்றிபோல் நன்றியும், இந்த வாழ்த்துப்போல் வாழ்த்தும், மகா காவிய உலகிற்கூட அருமையினும் அருமையல்லவா?

## 15. இன்னும் அவ்நம்பிக்கையா?

துன்பம் இரக்கத்தைத் தூண்டுகிறது. அதுவும் ஓர் அபலை அனுபவிக்கும் துன்பமென்றால், இரக்கம் எவ்வளவு அதிகப்படுகிறது! அந்த அபலையும் ஒரு கட்டழகி என்றால், இரக்கம் இன்னும் எவ்வளவோ அதிகப்படுகிறது. சில சமயங்களில் மிதமிஞ்சிய இரக்கம் ஏற்பட்டு எதார்த்த நிலையைத் தெளிவாகப் பார்க்கவிடாமலும் அறிவுக் கண்ணை மூடிவிடுகிறது.

கணையாழி கொடுத்துச் சீதைக்கு ஆறுதல் அளித்து விச்வரூபமும் காட்டிய ஹனுமான், 'இனி என்ன செய்யலாம்?' என்று ஆலோசிக்கிறான். சீதையிடம் செய்தி பெற்று விடை வாங்கிக் கொள்ள வேண்டுமல்லவா?

அவளை இப்போது பார்த்ததும், 'உண்டா ஒப்பு உலகத்திலே? ஆச்சரியம், ஆச்சரியம்! அழகிற்கும் ஒப்பில்லை; துன்பத்திற்கும் ஒப்பில்லை. அழகு எவ்வளவோ அவ்வளவு துன்பம்! அவனுடைய உயிரல்லவா இங்கே இந்தக் கோலத்தில் இருக்கிறது! ஐயோ, என்ன விபரீதம்! அங்கே உடம்பு, இங்கே உயிர்!' என்றெல்லாம் உருகுகிறது ஹனுமான் உள்ளம்.

இதற்கிடையே பளிச்சென்று தெரிகிறது ஒரு குறுக்கு வழி, குமிழிபிடுகிறது ஓர் ஆலோசனை. விஞ்ஞானப் புதுமையொன்றைக் கண்டுபிடித்த சாஸ்திரி போல், ஒரு புதிய கண்டத்திற்கு வழிகண்ட யாத்திரி

கன்போல், 'கண்டேன், கண்டேன்!' என்று உள்ளம் துள்ளுகிறது.

'இந்த உயிரை அங்கே சேர்த்துவிட வேண்டும்' என்பதுதான் ஆலோசனை. ஆனால், இதை எப்படி வெளியிடுவது? ஐயத்திற்கே இரையாக இருந்த உள்ளத்தில் இப்போதுதானே நம்பிக்கை உதயமாயிருக்கிறது! மறுபடியும் சந்தேகம் வந்துவிட்டால் மோசம் வந்துவிடுமே! இப்படிப்பட்ட நெருக்கடியிலும் தன் வாக்கு-விலாசம் முன்போல் உதவி செய்யும் என்று நம்புகிறான் சொல்லின் செல்வனாகிய ஹனுமான்:

'உண்டுதுணை என்னஎளி-
 தோஉலகில்? அம்மா!
புண்டரிகை போலும்இவள்
 இன்னல்புரி கின்றாள்!
அண்டமுதல் நாயகன(து)
 ஆவிஅனை யாளைக்
கொண்(டு)அகல்வ தேகருமம்'
 என்(று)உணர்வு கொண்டான்.

[துணை - ஒப்பு. அம்மா - ஆச்சரியம். புண்டரிகை - மகாலட்சுமி. இன்னல் - துன்பம். அண்டம் முதல் நாயகன் - உலகங்களுக்கெல்லாம் முதல் தலைவனான நாயகன். ஆவி அனையாள் - உயிர் போன்றவள். கருமம் - செயல்; இப்போது செய்யவேண்டிய செயல்.]

இந்த உணர்வை ஒரே கவியில் சொல்லும் கவிஞன் ஹனுமானுடைய வார்த்தையை ஒன்பது கவிகளில் வெளியிடுகிறான். உணர்வு பளிச்சென்று

தோன்றக் கூடும். ஆனால், அதை உரைத்துக் காட்டு வதற்கு, அதைப் பாஷையில் உருவாக்கி வைப்பதற்கு, அவகாசம் வேண்டுமல்லவா?

'கேட்டருள வேண்டும், கோபிக்க வேண்டாம்!' என்ற பீடிகையோடு தொடங்கும் விண்ணப்பம் வெகு விநயமாகவும் சாதுரியமாகவும் வெளிப்படு கிறது. 'காரியம் பெரிதா, வீரியம் பெரிதா?' என்று சாதாரணமாய்ச் சொல்லுகிறோ மல்லவா? இதை மனசில் வைத்துக்கொண்டு, 'ராவணனை வெல்வது காரியமன்று, ராமன் எதிரே உன்னைக் காட்டுவது தான் இப்போது செய்ய வேண்டிய காரியம்' என்று முதல் முதல் சுருக்கமாய்த் தெரிவிக்கிறான் :

> 'நீட்டிஇனி என்பல?
> இராமன்எதிர் நின்னைக்
> காட்டி,அடி தாழ்வென்.இது
> காண்டி,இது காலம்!'

[நீட்டி - நீளப் பேசி. என் - என்ன (பயன்). பல - பல சொற்களை. தாழ்வென் - தாழ்ந்து வணங்குவேன். இது - இந்த என் செய்கையை. காண்டி - காண்பா யாக. காலம் - (இங்கே) தக்க தருணம்.]

'இதோ பார், இப்பொழுதே உன்னை ராமனிடம் கொண்டுபோய்க் காட்டிவிடுகிறேன். இதுவே தக்க தருணம்' என்று முதல் முதல் சிறிது விரைவாகவே பேசுகிறான். ஹனுமான் தானும் துரிதப்பட்டுச் சீதையையும் துரிதப்படுத்துவதுபோல் அமைந்திருக் கிறது செய்யுளின் போக்கு. 'இராமன் எதிர் நின் னைக் காட்டி, அடி தாழ்வென்' என்று சொல்வதில், 'சீதையை ராமனுக்குக் காணிக்கையாகக் காட்டி,

என்னையும் பாத காணிக்கையாக ஒப்புவித்துவிடு வேன்!' என்ற பக்த குதூகலம் தொனிக்கிறது.

பிறகு, உபாயமோ மிகவும் சுலபம் என்கிறான். அவன் தோள்மேல் ஏறிக்கொள்ள வேண்டியதுதான்; அப்பால் அவளுக்குக் கவலையே வேண்டாம் என் கிறான். மெத்தைமேல் உறங்குகிறவர்களைப்போல் இனிமையாக உறங்கிக் கொள்ளலாம் என்று கூடச் சொல்லத் துணிகிறான். ஆனால் அந்த உறக்கத்திற்கு ஒரே ஒரு இடையூறு. 'நொடிப் பொழுதில், ராமன் இருக்கும் மலையில் குதித்துவிடுவேன்; ஆகவே நீ உறங்க முடியாதம்மா!' என்று சொல்லும்போது, களங்கமற்ற அந்த ஹாஸ்யம்கூட அவள் கவலைகளை ஊதித் தள்ளி விடுமென்பது எண்ணம்:

' பொன்திணி பொலங்கொடி !என்
மென்மயிர் பொருந்தித்
துன்றிய புயத்(து)இனி(து)
இருக்க, துயர் விட்டாய்,
இன்துயில் விளைக்க !ஓர்
இமைப்பின்,இறை வைகும்
குன்றிடை உனைக்கொடு
குதிப்பென்,இடை கொள்ளேன்.'

[பொன் திணி - பொன் மயமான. பொலங்கொடி - அழகிய பூங்கொடி போன்றவளே. துன்றிய - நெருங் கிய. புயத்து - தோள்களின் மேல். இனிது இருக்க - இனிமையாக ஏறியிருந்து. துயர்விட்டாய் - துயரத்தை விட்டவளாய். இன் துயில் விளைக்க - இனிமையான தூக்கத்தையும் விளைத்துக் கொள்வாயாக. ஓர் இமைப் பின் - இமை கொட்டும் ஒரு நொடிப் பொழுதில்

இறை - தலைவனாகிய ராமன். வைகும் - தங்கியிருக்கும். குன்றிடை - குன்றிலே. இடை கொள்ளேன் - நடு வழியில் எங்கும் தங்கமாட்டேன்.]

'அரக்கர்களால் இடையூறு ஏற்படாதோ என்றால், அந்தப் படுவேகத்தை அறிந்துகொள்ளத்தான் முடியுமா? அறிந்துகொண்ட போதிலும் பின் தொடர்ந்து வர அவ்வளவு பைத்தியமா? அப்படி வரக்கூடிய ஆண்பிள்ளைகள் இங்கே உண்டென்றால், சரி, வரட்டும்; என் சினம் தீர முறித்துக் கடலிலே உதிர்த்துவிடுவேன்!' என்கிறான்:

'அறிந்(து) இடை அரக்கர்தொடர்
வார்கள்உள ராமேல்,
முறிந்(து)உதிர நூறி,எதிர்
என்சினம் முடிப்பேன்!'

[இடை - நடு வழியில். உளராமேல் - உண்டு என்றால். நூறி - அழித்து.]

'தாயே! நான் மட்டும் ராமபிரானிடம் திரும்பிப் போனால் என்னதான் சொல்லுவது? "உன் தேவி கொடிய வஞ்சகர்களுடைய சிறைச்சாலையில் பெருந் துயரத்தோடு விடுதலைக்கு வழி பெறாமலே இருக்கிறாள்!" என்றுதானே சொல்ல வேண்டும்? இந்த மானக்கேட்டை மற்றவர் கேளாதபடி ஜாக்கிரதையாக அவன் காதிற்கு அருகே போய்த்தான் சொல்ல வேண்டியிருக்கும்!' என்கிறான்:

'அருந்ததி, உரைத்தி! அழ
கற்(கு)அருகு சென்(று),"உன்
மருந்(து)அனைய தேவி,நெடு
வஞ்சர்சிறை வைப்பில்,

பெருந்துயரி னேடும்,ஒரு
வீடுபெறல் இல்லா(து)

இருந்தனள்!'' எனப்பகரின்
என் அடிமை என்னும்?'

[அருந்ததி - அருந்ததி போன்ற சீதையே. உரைத்தி- நீயே சொல்வாயாக. அழகற்கு - அழகனுகிய ராம னுக்கு. மருந்து - (இங்கே) அமிர்தம். நெடு வஞ்சர் - மிக்க வஞ்சனையுடைய அரக்கர்கள். சிறை வைப்பு - சிறைச்சாலை. வீடு - விடுதலை. பெறல் - பெறுதல். பகரின் - சொல்வேனுயின். அடிமை - கைங்கரியமாகச் செய்யும் அடிமைத் தொழில். என் ஆம் - என்ன பயனைத் தரும்.]

இக்கேள்வியில் தன் புதிய ஆலோசனைக்கு வெற்றி சமீபித்து விட்டதாகவே நம்புகிருன் ஹனுமான்.

பதிலை எதிர்பாராமலே மேலும் பேசுகிருன் :

'புண்தொடர்(வு) அகற்றிய
புயத்தினெடு புக்கேன்,

விண்டவர் வலத்தையும்
விரித்(து)உரை செய்கேனே?

"கொண்டுவரு கிற்றிலென் :
உயிர்க்(கு)உறுதி கொண்டேன் ;

கண்டுவரு கிற்றிலென்!''
எனக்கழறு கேனே?'

[புண் தொடர்வு - புண்படுவது. புயத்தினெடு - தோள்களுடனும். புக்கேன் - சென்றவனும். விண்ட

வர் - பகைவர்கள். வலம் - பலம். வருகிற்றிலென் - வந்தேனில்லை. கழறுகேனோ - சொல்வேனோ.]

'வெறுங் கையை வீசிக்கொண்டு போனால் தோள்கள் புண்படாமல் இருக்கும்! ஆனால் அப்படி அங்கே போய் இந்தப் பகைவர்களுடைய பல பராக்கிரமங்களைத்தானே பிரசங்கித்து விரிவுரை செய்யவேண்டும்? "அவளைக் கொண்டுவர முடியவில்லை; இதோ என் உயிரைக் காப்பாற்றிக்கொண்டு, வடுப்படாத முழு உடம்போடு ஓடி வந்துவிட்டேன், பார்!" என்று என்னுடைய சாமர்த்தியத்தை விளம்பரப்படுத்தப் போகிறேனா? அல்லது, கொண்டுவர முடியவில்லை என்று ஒரே அடியாய்ச் சாதித்து விடுவேனா?' என்று சொல்லும் தர்க்க வாதத்திற்கு வெற்றி கிடைத்து விட்டதாகவே நினைக்கிறான் ஹனுமான்.

கடைசியாக ஒரு முக்கிய காரணம் சொல்லுகிறான்: 'உன்னைக் கண்டதும் ராமனுக்குத் துயரம் தீர்ந்துவிடும், மனத்தெளிவு உண்டாகும். பின்பு உத்ஸாகத்தோடு வந்து துஷ்ட நிக்கிரகம் செய்வான், அதுதான் நல்லது!'

இதற்குமேல் ஒன்றும் சொல்லவேண்டியதில்லை என்று நினைக்கிறான். அவளும் ஆட்சேபிக்கப் போவதில்லை என்றும் நினைக்கிறான். அவளைக் கொண்டு சேர்க்கும் பெருமை அதிர்ஷ்ட வசத்தால் தனக்குக் கிடைத்து விட்டதென்றே குதூகலப்படுகிறான்.

ஹனுமானுடைய இந்தக் 'காரிய'ப் பேச்சு, சீதைக்குப் பிடிக்கவில்லை. ஆனால் இவ்வளவு பக்தி - விச்வாசம் உள்ள மகோபகாரியை எவ்விதமாய்க் கண்டித்துப் பேசுவது?

'அரிய(து) அன்று; நின்
ஆற்றலுக்(கு) ஏற்றதே;
தெரிய எண்ணினை;
செய்வதும் செய்தியே!
உரிய(து) அன்(று)என
ஓர்கின்ற(து) உண்(டு); அ(து),என்
பெரிய பேதைமைச்
சின்மதிப் பெண்மையால்!'

[செய்தியே - செய்தே முடிப்பாய். ஓர்கின்றது - ஆலோசிக்கின்றது. சின்மதி - சிற்றறிவு.]

என்று சொல்லும் சீதை விநய சம்பத்தில் ஹனுமானோடு எவ்வளவு நாகரிகமாகப் போட்டி போடுகிருள்!

'முடியாத காரியம் அன்று; உன் ஆற்றலுக்கும் ஏற்றதுதான். நன்ருக ஆலோசித்துத்தான் சொன்ணுய்; சொன்னபடி செய்தும் முடிப்பாய்; என்ருலும் அது எனக்கு உரியதன்று; பெரும் பேதைமையும் சிற்றறிவுமுள்ள என் பெண்புத்திக்குச் சரியாகத் தோன்றவில்லையே!' என்ற முகவுரையோடு ஆரம்பமாகும் வார்த்தைகள் மென்மையாகத்தான் வருகின்றன, சின்னஞ்சிறு மழைத்துளிகள் விழுவதுபோலே. எனினும், அந்தப் பேச்சு விரைவிலே மின்னலும் இடியும் புயலுமாய் விதியின் மகத்தான ஸங்கல்பத்தை வெளியிடுகிறது.

இடை வழியில்—சமுத்திர மத்தியிலே—அரக்கர்கள் வளைத்துக்கொண்டு அபாயம் விளைவிக்கக் கூடும் என்பதை வற்புறுத்திய பின், பிறருக்குத் தெரியாமல் கொண்டு போவது ராவணனுடைய திருட்டுத்

தொழிலைப் பின்பற்றுவதே யாகும் என்கிருள். தன்னை வஞ்சித்தவர்களை நினைக்கும்போதே, கோபம் கரையைப் பீறிக்கொண்டு புறப்படுகிறது. ராம லட்சுமணர்கள் வில்லில் நாண் இழுக்கும்போது, ராட்சஸிகளுடைய மங்கலநாண் அறுபட்டுப் போகும் என்றும், பொன்மலையாகிய இலங்கை எலும்பு மலை யாகிவிடும் என்றும், அப்போதுதான் கற்புக்கு வெற்றி ஏற்படும் என்றும் சொல்லும்போது, ரௌத்திரம் உள்ளபடியே இடிக் குரலில் பேசுகிற தல்லவா!

‘அல்லல் மாக்கள்
இலங்கையொ(டு) ஆகுமோ?
எல்லை நீத்த
உலகங்கள் யாவும்,என்
சொல்லி ணுல்சுடு
வேன்! அது தூயவன்
வில்லின் ஆற்றற்கு
மா(சு)என்(று) வீசினேன்!’

[அல்லல் - துன்பம் (செய்யும்). மாக்கள் - பகுத் தறிவில்லாமல் மிருகம்போல் வாழ்கிறவர்கள். எல்லை நீத்த - கணக்கில்லாத.]

இப்பேர்ப்பட்ட வீர பத்தினியை ராவணன் தீண்டியிருக்க முடியுமா? சாபத்திற்குப் பயந்து தன்னை நிலத்தோடு பேர்த்தெடுத்து வந்தான் என்று சீதை சொல்லுகிருள். ஹனுமான் உள் மனத்தில் ஒரு சந்தேகம் இருந்தது; ஒரு துன்பமும் அந்த உள்ளத்தை அரித்துக்கொண் டிருந்தது. இப்போது

இரண்டும் நீங்கிவிடுகின்றன. 'நீ நினைத்தது காரியமன்று; திரும்புவதுதான் காரியம்' என்று கண்டிப்பாக முடிக்கிருள் சீதை :

ஆத லான்,அது
காரியம் அன்(று),ஐய!

வேத நாயகன்
பால்இனி மீண்டனை

போதல் காரியம்!'
என்றனள் பூவை ;அக்

கோதி லானும்
இனையன கூறினன்.

[ஆதலான் - ஆதலால். ஐய - ஐயனே. வேத நாயகன்பால் - ராமனிடத்தில். மீண்டனை போதல் - மீண்டு போவது. பூவை - கிளி போன்ற சீதை. கோது இலானும் - குற்றமில்லாத ஹனுமானும். இனையன கூறினன் - இவற்றைச் சொல்வான் ஆனன்.]

தன்னை ஹனுமான் தோளின்மீது எடுத்துப் போவதாகக் கூறிய அந்தக் காரியப் பேச்சுக்கு விடை கூறி முடிக்கும்போது சீதை, 'அது காரியம் அன்று' என்று தன் கருத்தை முடிவாக வற்புறுத்திவிடுகிருள். 'இனி நீ திரும்பிப் போவதுதான் காரியம்!' என்றும் தன் கண்டனத்தை அறிவித்துவிடுகிருள்.

இத்தகைய கண்டனப் பேச்சையும் 'விதியின் இடிக் குரலையும்கூடச் சீதை தன் இனிய குரலில் இனிய சொற்களால் தெரிவிக்கிருள் என்பதற்கு ஒரு குறிப்பாக அமைந்திருக்கிறது 'பூவை' என்ற சொல்.

போதல் காரியம்!'
என்றனள் பூவை

என்று சொற்கள் வந்துவிழும் 'சொற்கலை'யைப் பாருங்கள். 'பூவை'யின் கண்டனத்திற்கு இப்போது உரியவனாகிவிட்ட போதிலும், ஹனுமானைக் 'கோதிலான்' என்று கவிஞன் உடனேயே குறிப்பிடுவதுதான் எவ்வளவு அருமையாக இருக்கிறது!

ஹனுமானுடைய ஆலோசனைக்குத் தோல்வி தான்; எனினும் குதூகலம் குறைவதற்கு மாருக அதிகப்படுகிறது! 'அவனுக்கு ஏற்ற தேவிதான்; இவள் தவத்தின் வலிமை நன்றாயிருக்கிறது, மிகவும் நன்றாயிருக்கிறது!' என்று கொண்டாடுகிறான் தனக்குள் தானே. 'ஆம், நான் போய் ராமனை அழைத்து வரும் வரையில் இவள் தைரியத்தைக் கைவிடமாட்டாள்!' என்ற நம்பிக்கையும் உண்டாகிறது:

'நன்று நன்(று), இவ்
உலகுடை நாயகன்
தன்து ணைப்பெருந்
தேவி தவத்தொழில்!'
என்று சிந்தை
களித்(து)உவந்(து) ஏத்தினன்,
நின்ற சங்கை
இடரொடு நீங்கினன்.

[உலகுடை நாயகன் - இவ்வுலகமெல்லாம் இவனுக்கே உடைமை என்று சொல்லும்படி உயர்ந்து விளங்கும் ராமபிரான். துணை - இல்லறம் நடத்துவதற்கு ஏற்ற துணையாக அமைந்த. பெருந் தேவி -

பட்டமகிஷி. ஏத்தினான் - புகழ்ந்து போற்றினான். நின்ற - உள்ளத்தில் இருந்த. சங்கை - சந்தேகம். இடர் - துன்பம்.]

'ராவணன் தொட்டெடுத்துக்கொண்டு வந்திருக்க, இவள் இப்போது நமது நன்னோக்கம் ஈடேற வொட்டாமல் இடையூறாக நிற்பதற்குக் காரணம் என்னவோ?' என்பது ஹனுமானால் வெளியிட முடியாதபடி உள்ளத்திலே முள்ளைப்போல் உறுத்திக் கொண்டிருந்த சந்தேகம். இந்தச் சந்தேகத்தாலும், தான் போய் ராமனை அழைத்து வரும்வரை அவள் தைரியமாக உயிரை வைத்துக்கொண்டிருப்பாளோ என்ற எண்ணத்தாலும், ஹனுமானுக்கு ஏற்பட்ட துன்பத்தை இங்கே 'இடர்' என்று குறிப்பிடுகிறான் கவிஞன்.

சங்கையும் இடரும் சீதை வாக்கினால் நீங்கப் பெற்றவனாய் ஹனுமான் சீதையைப் புகழ்ந்து போற்றுகிறான்: முதல் முதல் தனக்குள்ளே, பிறகு வெளிப்படையாகவும்—என்று கருதலாம்.

இனி விடை பெற்றுக்கொள்ள வேண்டுமென்று கருதிச் சீதைக்கு ஆறுதல் சொல்லி, ராமனுக்கு ஆறுதலாக அவள் சொல்லி அனுப்பக் கூடிய வார்த்தையை அறிந்துகொள்ளவும் விரும்புகிறான்:

'இருளும் ஞாலம்
இராவண னால்; இது
தெருளும், நீ இனிச்
சில்பகல் தங்குறின்;

மருளும் மன்னவற்(கு)
யான்சொலும் வாசகம்

அருளு வாய் !'என்(று)
அடியின் இறைஞ்சினன்.

[ஞாலம் - உலகம். தெருளும் - தெளிந்து விளங்கும். சில் பகல் - சில தினங்கள். தங்குறின் - தங்கியிருந்தால். மருளும் - மயங்கிக் கொண்டிருக்கிற.]

இருண்டு கொண்டிருக்கிறது உலகம்; இருள் வரவர அதிகரித்துக்கொண்டே யிருக்கிறது. காரணம் ராவணன் ஆட்சிதான். ஆனல் எவ்வளவு இருள் அடர்ந்திருக்கிறதோ, அவ்வளவு நம்பிக்கையும் இருக்கிறது. கீழ்வானம் தெளிவு பெறும், விரைவில்!' என்று உலகப் போக்கை உய்த்துணர்ந்து கூறும் ஹனுமான், தியாகம் இல்லாமல் உலக இருள் நீங்கிவிடுமென்று நம்பவில்லை. 'ஒரு குற்றமும் அறியாத நீ இந்தச் சிறையில் இன்னும் சில தினங்கள் இருந்து துன்பம் அனுபவிக்கவேண்டும். அப்போது தான் லோகத்தை மூடியிருக்கும் ராவண இருள் நீங்கி ஒளி பிறக்கும்' என்று சீதையிடம் சொல்வதைக் கேளுங்கள்.

இந்தக் கொள்கை அவளுக்கு ஆறுதல் அளிக்கும் என்று நம்பி, இனி ராமனுக்கு ஆறுதல் அளிக்க வேண்டியதுதான் பாக்கி என்று நினைக்கிருன். 'உன்னைப் பிரிந்து மயங்கிக்கொண்டிருக்கும் மன்னவனுக்கு நான் என்ன சொல்லவேண்டும் என்பதை நீ தயவு செய்து தெரிவிக்கவேண்டும்' என்று சீதையை வணங்கிக் கேட்கிருன்.

ஆனந்தத்தின் உச்சியிலிருந்து அவள் அவநம்பிக்கை என்ற பாதாளத்திற்கே வந்துவிட்டாள் என்பதை அவன் அறிந்து கொள்ளவில்லை. தியாகத்தின் தத்துவத்தைக் குறித்துப் பேசியதிலிருந்தும், ராமனுடைய துன்பத்தையே பெரிதாகக் கருதியதிலிருந்தும், ஹனுமான் அவளுடைய அபாயகரமான நிலையை உள்ளபடி அறிந்துகொள்ளத் தவறிவிட்டான் என்றே நினைக்கிறாள் சீதை :

> ' இன்னும் ஈண்(டு)ஒரு
> திங்கள் இருப்பல்யான் ;
> நின்னை நோக்கிப்
> பகர்ந்தது, நீதியோய் !
> பின்னை ஆவி
> பிடிக்கின்றி லேன் ! அந்த
> மன்னன் ஆணை !
> இதனை மனக்கொள் நீ.'

[திங்கள் - மாதம். பிடிக்கின்றிலேன் - பிடித்து வைக்கமாட்டேன்.]

என்று தான் எதிர்பார்த்ததற்கு மாறாக அவள் பதில் சொல்லத் தொடங்குவது, ஹனுமானைத் திடுக்கிடச் செய்கிறது.

'என் உயிர் பறந்து போகத்தான் பார்க்கிறது ; எவ்வளவோ சிரமப்பட்டு அதை இந்தக் கூட்டில் எப்படியோ பிடித்து வைத்திருக்கிறேன் ! இந்த அற்புதத்தை இன்னும் ஒரு மாத காலம்தான் செய்து கொண்டிருக்க முடியும் !' என்று சொல்லும் சீதை, தன் கருத்தை இன்னும் உறுதியாக வற்புறுத்தும்

பொருட்டு, 'நீ சொன்ன அந்த மன்னன் ஆணை!' என்று ஆணையிடுகிருள். நாயகனை 'அந்த மன்னன்' என்று குறிப்பிடுவது, உள்ளத்திலே குமுறிக் குமைந்து கொண்டிருக்கும் வெறுப்பு, சோர்வு, கோபம் முதலியவற்றை வெகு லேசாகக் காட்டிவிடுகிறது.

வெறுத்துப் பேசும்போதே, ராமனுடைய திவ்யமான ரூப சித்திரம் மனக்கண் முன் வருகிறது. மாலை அணிந்து சந்தோஷமா யிருப்பது போன்ற தோற்றம். ஆ, என்ன கொடுமை!

> ஆரம் தாழ்திரு
> மார்பற்(கு) அமைந்ததோர்
> தாரம் தான்அல
> ளேனும். தயாஎனும்
> ஈரம் தான்அகத்(து)
> இல்லைஎன் ருலும், தன்
> வீரம் காத்தலை
> வேண்டென்று வேண்டுவாய்!'

என்று எவ்வளவு நிஷ்டூரமாக ஹனுமானை நோக்கிப் பேசுகிருள்!

'சீதை அவனுக்கு ஏற்ற தாரம் அல்லள்' என்று குழந்தை போல் பேசும்போது, அவளுடைய கோபமும் குழந்தையின் கோபத்தைப்போலத் தோன்றுகிறது. 'அந்த அழகான மார்புக்குள் ஈரம்தான் இல்லை' என்றும், 'நெஞ்சில் ஈரம் இல்லை என்ருலும், வீரமாவது இருக்க வேண்டுமல்லவா? வீரம் இருந்தால் அது ருசுப்படவேண்டுமே!' என்றும், வார்த்தைகள் எவ்வளவு காரமாக வந்து விழுகின்றன!

திடீரென்று இளையவன் ஞாபகம் வருகிறது. அந்த நாளில், தான் அவனை நிந்தித்துப் பேசியது மனசில் இன்னும் உறுத்திக் கொண்டிருக்கிறது. ஐயோ, அந்த வார்த்தை அவன் உள்ளத்தை ரம்பம் போல் அறுத்துக் கொண்டிருக்குமே! எனவே, ராம னுக்கு ஆறுதல் சொல்ல மறுக்கும் சீதை, தம்பிக்கு ஆறுதலாக ஏதாவது சொல்லி அனுப்பவேண்டு மென்று நினைக்கிறாள்.

'அவன் பஞ்சவடியில் காவல் செய்து கொண்டி ருக்கும் போதல்லவா ராவணன் என்னை எடுத்துக் கொண்டு வந்தான்? ஆகையால் இந்தச் சிறையி லிருந்து விடுவிப்பது அந்தக் காவலாளியின் கடமை தான்!' என்று செய்தி சொல்லியனுப்புவது, அவனி டம் அவள் கொண்டிருக்கும் நம்பிக்கையையும் நன் மதிப்பையும் காட்டுவதோடு, 'அந்தப் பழைய சமா சாரத்தை நீ தயவுசெய்து மறந்துவிட வேணும், அப்பா!' என்றும் சொல்லாமல் சொல்லுகிறதல் லவா? அந்த இளையவனை 'ஏத்தும் வென்றி இளை யவன்' என்கிறாள். (வென்றி = வெற்றி.)

நாயகன் மீதுள்ள நிஷ்டூர நினைவு மறுபடியும் மேலே வருகிறது. 'குறித்த ஒரு மாதத்திற்குள் வராமற் போனால், பிறகு இங்கு வரவேண்டிய ஜோலியே இல்லை!' என்கிறாள். அந்த நாளில் தான் அவனோடு கவலையில்லாமல் விளையாடிக் கொண் டிருந்த கங்கை ஆற்றங்கரை நினைவிற்கு வருகிறது. அப்போது புதுவெள்ளம் வந்துகொண்டிருந்த காட்சி யும், இருபுறங்களிலும் அமைந்த இயற்கை யழகின் மாட்சியும் உள்ளத்தை வசீகரித்திருந்தன. அந்த அழகின் கனிபோலத் தோன்றிய ராமனுடன் தான்

கொஞ்சிக் குலாவி வனவாஸ நினைவையே மறந்து பொழுதுபோக்கிய அந்த நினைவின் வெள்ளம் இப்போது இவளை மூழ்கடிக்க, ஹனுமானை நோக்கி, 'அதே ஆற்றங்கரையில் அடியேனுக்கு அந்திம கிரியை செய்துவிடச் சொல்லு; அந்த அழகிய கையினாலே அந்தக் கடனையாவது செய்யவேண்டும். இதுதான் என்னுடைய ஆசை!' என்று எவ்வளவு பரிதாபமாய் வேண்டிக் கொள்கிருள்:

> 'திங்கள் ஒன்றின், என்
> செய்தவம் தீர்ந்ததால்,
> இங்கு வந்தில
> னேஎனின், யாணர்நீர்க்
> கங்கை ஆற்றங்
> கரை, அடி யேற்குத்தன்
> செங்கை யால்கடன்
> செய்கென்று செப்புவாய்!'

[திங்கள் ஒன்றின் - ஒரு மாத காலத்தோடு. என் செய்தவம் - நான் கொண்டுள்ள சபதமாகிய தவம். தீர்ந்ததால் - தீர்ந்துவிடு மாதையால். இங்கு வந்திலனே எனின் - ராமன் என்னை மீட்க இலங்கைக்கு வரா விட்டால். யாணர் நீர் - புதுவெள்ளம். ஆற்றங்கரை - ஆற்றின் அழகிய கரையிலே. செங்கை - சிவந்த அழகிய கை. செப்புவாய் - சொல்லுவாய்.]

பிறகு, மாமியருக்கு ஒரு செய்தி; மூன்று பேருக்கும்தான். கைகேயியையும் விலக்கிப் பேசவில்லை, இச்சந்தர்ப்பத்திலே. இந்தச் செய்திதான் என்ன?

'சிறக்கும் மாமியர்
  மூவர்க்கும், "சீதை ஆண்(டு)
இறக்கின் ருள், தொழு
  தாள்" எனும் இன்னசொல்,
அறத்தின் நாயகன்
  பால்அருள் இன்மையால்,
மறக்கும் ஆயினும்,
  நீமற வேல்,' ஐயா!'

[சிறக்கும் - சிறந்த. ஆண்டு - அங்கே; அதிதூரத்தி லுள்ள இலங்கையில். இன்ன - இப்படிப்பட்ட. மற வேல் - மறக்காதே.]

என்று சொல்வதைக் கேளுங்கள்.

அதிதூரத்திலுள்ள அன்னிய தேசத்திலே, இரக்க மில்லாத பகைவர்களுக்கிடையே, சீதை செத்துக் கொண்டிருப்பதாகவும், சாகும்போது ஒருவர் மேலும் வருத்தப்படாமல், கைகேயி உள்ளிட்ட மாமியருக்கு வணக்கம் தெரிவிப்பதாகவும் அறிவிக்கச் சொல்லு கிருள். இந்தச் செய்தியை ஹனுமான் மாமியரிடம் நேரில் சொல்ல வேண்டுமாம். ராமனிடம் சொல்லி வைத்தால் அவனுக்கு மறதி ஏற்படக்கூடுமாம். தன் னிடம் அருள் இல்லாததால் அப்படி யிருப்பான் என்கிருள். 'அறத்தின் நாயகன்தான்; ஆனல் அருள் மாத்திரமில்லை!' என்று சொல்லும்போது, 'திவ்ய மான பூஞ்செடி; ஆனல் வேர்தான் இல்லை!' என்று சொல்வது போலிருக்கிறதல்லவா?

இப்போது இவ்வளவு உபேட்சையோடு இருப்ப வன், ஒரு காலத்தில், தான் இருக்குமிடம் தேடி வந்து

தன்னைக்கைப்பிடித்தான் என்பதையும் ஹனுமானிடம் கர்வத்தோடு சொல்லுகிருள். 'அப்போது, " இந்தப் பிறப்பில் உன்னையன்றி வேறு ஒரு பெண்ணைச் சிந்தையாலும் தொடுவதில்லை!" என்று வாக்குக் கொடுத்திருந்தார். அந்த மறதிக்காரருக்கு அதுதான் ஞாபகமா? எனவே, ஹனுமானே! அந்த வார்த்தையை அவர் செவியில் போட்டு, ஞாபகப் பிசகு ஏற்படாத படி நீ செய்துவிட வேண்டும். அப்போது மனச்சாட்சியாவது அந்தக் கள்ள மனத்தைத் தண்டித்துக் கொண்டிருக்கும்!' என்று கொடூரமாய்ப் பேசுகிருள் :

> 'வந்(து) எனைக்கரம்
> பற்றிய வைகல்வாய்,
>
> " இந்த இப்பிற -
> விக்(கு)இரு மாதரைச்
>
> சிந்தை யாலும்தொ -
> டேன்!" என்ற செவ்வரம்
>
> தந்த வார்த்தை
> திருச்செவி சாற்றுவாய்!'

[கரம் பற்றிய - பாணிக்கிரகணம் செய்த ; கல்யாணம் செய்துகொண்ட. வைகல்வாய் - நாளில். இந்த இப்பிறவிக்கு - இப்பிறவியில். செவ்வரம் - சிறந்த வரம்.]

என்று சொல்லி அந்தப் பழைய வரத்தைப் புதுப்பித்துக் கொள்வதோடு, வேருெரு புதிய வரமும் கேட்கப் போகிருள்.

பழைய வரத்திலுங்கூட இப்போதுள்ள சந்தேக புத்தி ஒரு குற்றம் கண்டுபிடித்து விடுகிறது. ' இந்த

இப்பிறவிக்கு' என்று ராமன் அழுத்தமாகச் சொல்லியிருந்தும், அதில் என்ன குறை காணக்கூடும் என்று தானே எண்ணுகிறீர்கள்? அவ்வளவு அழுத்தமாகச் சொன்னதால்தான், இவ்வளவு சந்தேகம்! 'ஆம், இந்தப் பிறவிக்குத்தானே இந்த வாக்கு; வேறு பிறவிக்கோ......' என்ற சந்தேகம்தான் இப்போது சீதைக்கு.

ஆனல், தன்னுடைய காதல் எவ்வளவு உண்மையானது! இந்த ஒரு பிறப்போடு நின்றுவிடப் போகிறதா? ஆகவே ஒரு புது வரம் வேண்டுகிருள்:

'ஈண்டு நான்இருந்(து)
இன்உயிர் மாயினும்,

மீண்டு வந்து
பிறந்துதன் மேனியைத்

தீண்ட லாவதொர்
தீவினை தீர்வரம்

வேண்டினுள் தொழு(து)
என்று விளம்புவாய்!'

[ஈண்டு - இந்த இலங்கையிலேயே. இருந்து - மீட்கப்படாமல் இருந்து. இன்உயிர் - இனிமையான உயிர். உயிர் மாயினும - இறந்தாலும். மீண்டு வந்து பிறந்து - இன்னொரு ஜன்மம் எடுத்து. தன் - ராமன் தன். தீண்டல் ஆவது - தழுவும்படியான. ஓர் - (இங்கே) ஒப்பற்ற. தீவினை தீர் வரம் - பழுதற்ற சிறந்த வரம். வேண்டினுள் தொழுது - கும்பிட்டு வேண்டிக்கொண்டாள்.]

என்று ஹனுமானிடம் சொல்லும்போது, துன்பம், அவ நம்பிக்கை என்ற இரு கரைகளுக்கு இடையே அலை யெறியும் பரிசுத்தமான காதலைக் காண்கிறோம்.

இப்படிச் சீதையின் மனோபாவம் உயர உயரப் பறந்து கொண்டிருந்த போதிலும், இந்த இப்பிறவியி லேயே ராமனுடன் பட்ட மகிஷியாய் வீற்றிருக்கும் பாக்கியம் பெறவில்லையே என்ற ஆசாபங்க நினைவும் வரத்தான் செய்கிறது :

'அரசு வீற்றிருந்(து)
ஆளவும், ஆய்மணிப்
புரசை யானையின்
வீதியில் போகவும்
விரசு கோலங்கள்
காண விதியிலேன் !
உரைசெய்(து) என்பல ?
ஊழ்வினை உன்னுவேன் !'

[ஆய் மணி - தெரிந்தெடுத்த மணி ; யானை முதுகின் இருபக்கத்தும் தொங்கவிடும் மணி. புரசை - யானைக் கழுத்துக் கயிறு. விரசு - பொருந்துகிற. உரை செய்து என் பல - பலபடச் சொல்லிப் பயன் என்ன. ஊழ்வினை - பழவினை ; முன் செய்துள்ள விதி.]

'கொலுமண்டபத்திலே, வீரசிங்காசனத்திலே, சந்திரவட்டக் குடை சாமரம் முதலிய ராஜ சின்னங் களுடன், ராமபிரான் செங்கோலேந்தி, தலையிலே பொன்முடியும் நெஞ்சிலே அருள்முடியுமாய்க் கொலு வீற்றிருப்பதையும், யானைமீது கம்பீரமாக ராஜ வீதி யிலே பவனி போவதையும், அந்த அந்தச் சமயங்

களுக்குப் பொருந்தும் கோலங்களால் அந்த அழகன் தன்னை அழகு செய்து கொள்வதையும், கண்டு களிக்கப் பாக்கியம் செய்யவில்லையே! அதற்கெல்லாம் புண்ணியம் செய்யாத பாவியாகிய நான் இப்போது பலபடப் பேசிப் பயன் என்ன? என் விதியைத்தான் நொந்து கொள்ள வேண்டியிருக்கிறது! பிறர்மீது குற்றங் கூறுவதில் பயனில்லை! கணவன் மீது குற்றங் கூறுவதிலும் பயனில்லை!' என்கிருள் சீதை ஹனுமானை நோக்கி. 'சீதாபிராட்டியானாலும், பெண் பெண்தான்!' என்ற ரீதியில் சீதையின் பெண்மையுள்ளத்தைப் படம் பிடித்துக் காட்டுகிறது இச்செய்யுள்.

'இப்போது இருக்கும் மனநிலையில் எப்படி ஆலோசித்துப் பார்த்தாலும், ராமன் வருவான் என்று எண்ண இடமில்லை. அவரைச் சொல்லத்தான் என்ன குற்றம்?' என்று நினைக்கிருள். அவனைப் பிரிந்திருக்கும் ராஜ்யம், அவன் திரும்பி வரும் வழி மேல் விழிவைத்துக் கதறிக் கொண்டிருக்குமே! வயசு காலத்தில் தாய், 'மகனே மகனே!' என்று துடித்துக் கொண்டிருப்பாளே! எல்லாவற்றுக்கும் மேலாக நந்திக் கிராமத்தில் பரதன் அண்ணனை எண்ணி எண்ணித் தவித்துக் கொண்டிருப்பானே! இவ்விதமாக எண்ணமிடும் சீதை,

> 'தன்னை நோக்கி
> உலகம் தளர்தற்கும்,
>
> அன்னை நோய்க்கும்,
> பரதன்அங்(கு) ஆற்றுறும்

இன்னல் நோய்க்கும்,அங்(கு)
　　ஏகுவ(து) அன்றியே,
என்னை நோக்கி இங்(கு)
　　எங்ஙனம் எய்துமோ ? '

[தன்னை நோக்கி - தான் அயோத்தி விட்டுக் காடு சென்றதைக் குறித்தும், காட்டிலிருந்து எப்போது நாட்டுக்கு வருவான் என்று தன்னை எதிர்பார்த்தும். உலகம் - (இங்கே) ராமராஜ்யம்; ராஜ்யத்துக் குடிகள். தளர்தற்கும் - தளர்ந்து வருந்துவதற்கும். நோய் - (இங்கே) துன்பம், துன்புறுதல். ஆற்றும் - பொறுத்துக் கொண்டிருக்கும். இன்னல் நோய் - (ராமனைப் பிரிந்த) மனவருத்தம். ஏகுவதன்றி - போவதேயல்லாமல். எங்ஙனம் - எவ்வாறு.]

என்று ஏங்குகிருள்.

'நாட்டார், தாயர், தம்பி இவர்கள் துயரம் தீர்க்க அவர் வடக்கு நோக்கிச் செல்வாரே யொழிய, நான் ஒருத்தி துன்புறுவதை எண்ணிப்பார்த்துத் தெற்கே இலங்கை நோக்கி எப்படி வரப்போகிருர்? அவர் இங்கே வருவார் என்று எண்ணுவது வீணை எண்ணம்தான், கனவுதான்!' என்று தனக்குத்தானே ஏங்கிப் பேசுவது போல் பேசுகிருள் சீதை, ஹனுமானிடம் பேசுகிருள் என்பதைக்கூட ஒருவாறு மறந்து.

கடைசியாகத் தன் நெஞ்சில் ஒரே ஒரு குறை தான் இருப்பதாக ஹனுமானிடம் சொல்லி முடிக்கிருள். அது ராம பட்டாபிஷேகம் பாராமல் செத்துப்போகும் குறைதான்! 'அவர் கொலுவீற்றிருப்பதையும் பவனி வருவதையும் காணக் கொடுத்து வைக்கவில்லையே!' என்று விதியை நொந்து கொண்ட

சீதை, தான் இறந்த பிறகாவது, தடைப்பட்ட பட்டா பிஷேகம் இனிது நிறைவேற வேண்டும் என்று ஆசைப் படுகிறாள். அப்போதுதான் தனக்கு ஆத்ம சாந்தி ஏற்படும் என்று சொல்லி முடிக்கிறாள்.

* * * *

ஆஹா, அழுகைப்போல் துன்பம்; துன்பத்தைப் போல் அவநம்பிக்கை! இவ்வளவு அவநம்பிக்கைக்கு முன் 'சொல்லின் செல்வ'னுடைய வாக்கு விலாஸமும் தோற்றுப்போகிறது. ஆனால், இத்தோல்வி தாற் காலிகமானதுதான்.

## 16. சூடாமணி கொடுத்தல்

ராமன் தன்னைச் சிறை மீட்கவில்லையே என்று வெறுத்து விசனமாய்ப் பேசும்போதும், சீதைக்கு அவன் மீதிருந்த ஆழ்ந்த அன்பும் அவள் அறியாமலே குமிழியிடத்தான் செய்தது. அந்தப் பேச்சின் சிகர மாக, 'நானோ சாகப் போகிறேன்; அவராவது முடி சூட்டிக்கொண்டு க்ஷேமமாக வாழவேண்டும்!' என்று சீதை சொல்லி முடித்தாள். இதை ஒட்டிப் பேசுவது போல் ஹனுமான் பேசத் தொடங்கி, அவள் சொல்வது அசம்பாவிதம் என்பதைச் சாதுரியமாய், மரியாதையாய்க் காட்டப் போகிறான்.

'ஓ, நீ உயிர்விடுவாய்! சரி, இங்கு வராமலே ஓய்ந்திருக்கும் ராமன் பிழைத்திருப்பான்! ஊருக்கும் போவான்! போனால்தானே நீ சொன்னபடி முடிசூடி வாழலாம்? நாங்களும் உயிரைச் சுமந்துகொண்டு அங்கே போவோம்; அவனும் வில்லைச் சுமந்துகொண்டு போகவேண்டாமோ?' என்று இவ்விதமாகத் தொடங்கும் பேச்சு, மீண்டும் கொஞ்சங் கொஞ்சமாய்க் கவனத்தை வசீகரித்து அவளுக்கு உத்ஸாகத்தை ஊட்டுகிறது.

'நல்லது, உன்னைச் சிறை வைத்த ராவணனும் உயிர் வாழ்வானாம்; ராம லட்சுமணர்களும் ஊரிலே உன்னை மறந்து வாழ்க்கை நடத்துவார்களாம்!' என்று சொல்லும் போதே, சீதையின் வார்த்தை மிகவும் அசம்பாவிதம் என்பதை மிகவும் நாகரிகமாய்க் குறிப்பிடுகிறான்:

'கைத்தோ டும்சிறை
கற்போயை
வைத்தோன், இன்னுயிர்
வாழ்வானும்!
பொய்த்தோர் வில்லிகள்
போவாராம்!
இத்தோ(டு) ஒப்பது
யா(து) உண்டே?'

[கைத்து - வெறுத்து. ஓடும் - ஓடிப்போகும்படி நினைக்கும் (மிகக் கொடிய). சிறை - சிறையிலே. கற்போயை - கற்புடையவளாகிய உன்னை. பொய்த்தோர் போவாராம் - பொய்த்துப் போவார்களாம். வில்லிகள் - வில் வீரர்களான ராம லட்சுமணர்.]

சீதை பெரிதும் வருந்திப் பேசியதோடு பொருந்தப் பேசுவது போலத் தொடங்கும் பாடல்கள் சீதைக்கு ஒரு புதிய தேறுதல் அளிக்கும் முறையில் சந்தர்ப்பத்திற்குத் தகுந்த சந்தத்துடன் அமைந்திருக்கின்றன:

'நல்லோய்! நின்னை
நலிந்தோரைக்
கொல்லோம், எம்உயிர்
கொண்(டு)அங்கே
எல்லோ மும்செல,
எம்கோனும்
வில்லோ டும்செல
வேண்டாவோ?'

. [ நல்லோய் - நற்குண நற்செய்கை உடையவளே. நலிந்தோரை - வருந்தச் செய்தவர்களை. கொல்லோம் - கொல்லாதவர்களாய். எல்லோரும் - நாங்கள் எல்லாரும். செல - செல்ல. எம் கோனும் - எங்கள் தலைவனாகிய ராமனும். ]

என்ற செய்யுளின் போக்கையும் சந்தத்தையும் கவனித்தாலும், மேலே சொன்ன உண்மை இனிது புலனாகும்.

'உன்னைத் துன்புறுத்திய ராவணாதி ராட்சஸர்களைக் கொல்லாத வில்லும் வில்லாகுமா? வெறுஞ் சுமைதானே!' என்ற தொனிப்பொருளும், 'அந்த நிலையில் எங்களுக்கு உயிரும் சுமைதானே?' என்ற தொனிப்பொருளும் எவ்வளவு பொருத்தமாகவும் லளிதமாகவும் வெளியிடப் பெறுகின்றன!

'ராமன் அப்படித் திரும்பிப்போனால், வீரம்தான் எப்படி விளங்கும்? ஆயிரம் தீவட்டி (தீவர்த்தி) பிடித்ததுபோல் விளங்கிவிடாதா?' என்ற ஆழ்ந்த மனோபாவத்தை,

> 'மீண்டால் வீரம்
> விளங்காதோ?'

என்று வெளியிட்டு ஹனுமான் பரிகசிக்கிறான்.

பேச்சினிடையே, ராட்சஸ வதம் செய்வதாகத் தண்டகாரணிய வாசிகளான முனிவர்களுக்குச் சீதை கண் முன்னே ராமன் செய்த வாக்குத் தத்தத்தை ஞாபகப்படுத்துகிறான் ஹனுமான். பின்பு அவளைப் பிரிந்த நிலையில், ஜடாயு கண் முன்னே மூன்று லோகங்களையும்— துஷ்டர் சிஷ்டர் என்ற வித்தியாசமில்லாமல்—

வதைத்து விடுவதாகப் பொங்கிய கோபாவேசத்தையும் அப்படியே சீதை கண்முன் காட்டுகிறான்.

> ‘முன்னே மூவுல
>     கும்கொல்வான்,
>
> பொன்னே! பொங்கிய
>     போர்வில்லான்,
>
> என்னே! நின்நிலை
>     ஈ(து)என்றால்,
>
> பின்னே செம்மை
>     பிடிப்பானோ?’

[ பொன்னே - சீதாலட்சுமியே. பொங்கிய-கோபத்தால் பொங்கிய. என்னே - என்ன ஆச்சரியம். செம்மை - செவ்வை; நேர்மை. ]

என்று கேட்கும் ஹனுமான், ராமனது வாழ்க்கையின் உயிர்நிலை சீதையின் காதல்தான் என்பதைத் தெளிவாகத் தெரிந்து, சாமர்த்தியமாக ஞாபகப்படுத்துகிறான்.

சீதையை ராவணன் கொண்டு போனதாகக் கேள்விப்பட்டதும், உலகத்தையே கொன்றொழித்து விடுவதாகப் பொங்கி யெழுந்தான் என்றால், அவள் செத்துப் போவதாகச் சொல்லும் இந்த நிலையை அறிந்து கொண்டால், பின்பு தர்மத்தைத்தான் பிடித்துக் கொண்டிருப்பானோ? ஆகையால் காதலனுடைய தர்ம வாழ்க்கையை உருவாக்கும் சக்தி காதலி கையிலேதான் இருக்கிறது!

'படுத்தான் வானவர்
பற்றாரை,
தடுத்தான் தீவினை,
தக்கோரை
எடுத்தான், நல்வினை
எந்நாளும்
கொடுத்தான்!' என்(று)இசை
கொள்ளாயோ?'

[படுத்தான் - அழித்தான். பற்றார் - சத்துருக்கள். தக்கோர் - தகுதி வாய்ந்தவர்.]

என்று உருக்கமாக மன்றாடுகிறான். 'தேவசத்துருக்களை அழித்துத் தீவினையைத் தடுத்தான் என்றும், தகுதி வாய்ந்தவர்களைக் கைதூக்கி விட்டான் என்றும், நல்வினையை நிலைபெறச் செய்தான் என்றும் ராமன் புகழ் பெற வேண்டும். உண்மையில் அந்தப் புகழ், வாழ்க்கைத் துணையான உனக்கே உரியது. அம்மா! "தர்மமூர்த்தி தர்மத்தைக் கைதுடைத்து விட்டான்!" என்ற அபகீர்த்தியை நீ கொள்ளலாமா?' என்று, லோக க்ஷேமத்தையும், ராமனுடைய க்ஷேமத்தையும், அபலையான காதலியின் அபார சக்தியோடு உசிதமாகப் பிணைத்துப் பேசுகிறான்.

ராமனுடைய வீர தர்மத்திற்கும், அதனால் ஏற்படப்போகும் உலக நன்மைக்கும் சீதையின் காதல் உயிரா யிருப்பது போல், அவளுடைய தியாகமும் இன்றியமையாதது என்பது ஹனுமான் கருத்து. காதலுக்குத்தானா வாழ்க்கை? உயர்ந்த லட்சியம் தியாகம் அல்லவா? காதலின் முடிந்த முடிபும் அதுதானே!

ஆனால், உயிரை விடவேண்டியதன்று அவள் இப்போது செய்ய வேண்டிய தியாகம். உயிரை வைத்துக்கொண்டு சிலநாள் துன்பத்தை அனுபவிக்க வேண்டியதுதான்!

'சின்னாள் நீஇடர்
தீராதாய்,
இன்னா வைகலின்,
எல்லோரும்
நன்னாள் காணுதல்
நன்றன்றோ,
உன்னால் நல்அறம்
உண்டானால்?'

[இன்னா - துன்பம். வைகல் - தங்கியிருத்தல்.]

என்று முன்னிலும் தெளிவாகத் தன் கொள்கையை ஹனுமான் விளக்குவதைக் கேளுங்கள். நிரபராதியான சீதை சிறைபுகுந்து அனுபவிக்கும் துன்பத்தால், எல்லாரும் நல்ல காலம் காண்பார்களாம்! எவ்வளவு சத்தியமான கொள்கை! சமூக தர்மத்திற்கே புதிய அழகும் புதிய உயிரும் தரக்கூடியதல்லவா?

பிறகு தர்மவீரனும் சத்திய வீரனுமாகிய ராமனுடைய பராக்கிரமத்தை எதிர்த்து நிற்கக்கூடிய சக்தி ஒன்றுமில்லை என்பதை,

'தாழித் தண்கடல்
தம்மோடும்
ஏழுக்(கு) ஏழுலகு
என்றாலும்,

ஆழிக் கையவன்
அம்பம்மா,
ஊழித் தீயென
உண்ணுவோ?'

[தாழி - வாயகன்ற பானை. ஆழி - சக்ராயுதம். ஊழி - யுகாந்த காலம்.]

என்று உத்ஸாக வெறியோடு வற்புறுத்துகிறான்.

கடலுக்கு நடுவே சிறையிருக்கும் சீதைக்கு அந்தக் கடல் எவ்வளவு அதைரியத்தையும் அவநம்பிக்கையையும் உண்டாக்கிக் கொண்டிருக்கிறது! எவ்விதமாக ராமன் அந்தக் கடலைக் கடந்து வரப் போகிறான் என்ற ஏக்கம் உள்ளத்தில் ஊறி உதிரத்திலே கலந்துவிட்டது. அவளைப் பார்த்து ஹனுமான், 'இந்தக் கடலெல்லாம் அந்த மகாவீரனுக்குப் பிரமாதமா? தண்ணீர் வைத்திருக்கும் தாழிப்பானைபோல் தானே தோன்றும்! கடலோடு உலகமெல்லாம் — ஏன், பதினாலு லோகங்கள் என்றாலும் — முன் நிற்க முடியுமா? சக்ராயுதம் சுழற்றிய கையல்லவா அம்பை வீசப்போகிறது? கடலோடு நிலத்தையும், ஊழித் தீ உண்ணுவதுபோல், அந்த அம்புகள் உண்டுவிடுமல்லவா?' என்று சொல்லிக் கொண்டே, எதிர்காலத்தை மூடியிருக்கும் திரையைச் சிறிது விலக்கிக் காட்டுகிறான்.

இப்போது அவன் வாக்கே பாணங்களைப்போல் நெருப்பைக் கக்குகிறது!......திடீரென்று யுகாந்த காலமே வந்துவிட்டதா? ராமபாணங்களின் இடி முழக்கம் கேட்கிறது! ராட்சஸ வர்க்கம் ஒரே

இரத்த வெள்ளமாகிறது! அந்த வெள்ளத்திலே பேய்களின் ஜலக்கிரீடை!—என்ன பயங்கர உத்ஸாகம்!—அவை முங்கி முழுகி விளையாடுகின்றன! இருக்குமிடம் தெரியாமல் தலைமறைவாயிருந்த தேவர்கள் அது கண்டு — ஆம், அந்த விளையாட்டைப் பார்க்க வேண்டுமென்று — தங்கள் மறைவிடங்களிலிருந்து உத்ஸாகமாய்த் தலை நிமிர்ந்து வெளிப்படுகிறார்கள் :

‘ புளிக்கும் கண்டகர்
புண் நீருள்

குளிக்கும் பேய்குடை -
யுந்தோறும்,

ஒளிக்கும் தேவர்உ -
வந்(து) உள்ளம்

களிக்கும் நல்வினை
காணுயோ ? ’

[புளிக்கும் - வெறுக்கத்தக்க. கண்டகர் - முள்ளுப் போலக் கொடிய அரக்கர்கள். புண்நீர் - இரத்தவெள்ளம். குடையும் தோறும் - முங்கி முழுகி விளையாடும் போதெல்லாம்.]

வேறொரு காட்சி. கணவர்களை இழந்த ராட்சஸச் சூலிகள் (கர்ப்ப ஸ்திரீகள்) கருவுற்ற பெருவயிற்றில் அடித்துக் கொண்டு தாலிகளை அறுத்துப் போடுகிறார்கள், கண்ணீரைப் பெருக்கிக் கொண்டே. இரத்தக் கடலில் நீந்தி விளையாடிக் கொண்டிருந்த பேய்களில் சில, கழுகு முதலிய பட்சிகளோடு, அந்தக் கண்ணீர் ஆற்றில் குளிக்கின்றன ! — புண்ணிய காலத்திலே கடலாடுபவர்கள் உவர் நீங்க நன்னீரில்

குளித்தல் போலே. யமனுக்குத்தான் என்ன விருந்து, என்ன அஜீர்ணம்! இத்தகைய காட்சிகளைச் சீதை ஏதோ ஒரு சொப்பனம் காண்பதுபோலக் காண்கிருள்.

அதோ ஒரு காட்சி. இலங்கைக் கற்பகச் சோலைகளில் உள்ள குளங்களில் ராட்சஸ வீரர்கள் தங்கள் காதலிகளுடன் ஆனந்தமாக நீராடுவது வழக்கம். அந்த அழகான நீராடும் துறைகளில், — என்ன விபரீதம்! — இப்போது குரங்குகள் நீராடுகின்றன :

' அணங்(கு) இள மகளிரொ(டு)
அரக்கர் ஆடுறு
மணம்கிளர் கற்பகச்
சோலை வாவிவாய்,
பிணங்குறு வால்முறை
பிடித்து மாலைய
கணம்கொடு, குரக்கினம்
குளிப்பக் காண்டியால்! '

[ அணங்கு இள மகளிர் - தெய்வப் பெண்போல் அழகிய ராட்சஸ இளம் பெண்கள். ஆடுறு - நீராடுவதற்கு இடமான. மணம் கிளர் - மணம் மிகுந்த. வாவிவாய் - குளங்களிலே. பிணங்குறு-சிறிது வளைந்த. வால் முறை பிடித்து - ஒன்றன் வாலை மற்றென்று பிடித்துக்கொண்டு. மாலைய - ஒழுங்காகிய. கணம் கொடு - கூட்டமாக. குரக்கினம் - குரங்கு+இனம், குரங்குக் கூட்டங்கள். காண்டி - காண்பாய்.]

நீரில் இறங்குவதிலே குரங்குகளுக்கு உத்ஸாகமேது? பயம்தானே உண்டு! எனினும், குரங்குக்

கூட்டம், ஒன்றையொன்று வாலைப் பிடித்துக்கொண்டு ஒரு சங்கிலித் தொடர்போலத் தொங்கு பாலம் அமைத்து, மலையருவிகள், நீரோடைகளைக் கடந்து போவதுண்டு. அத்தகைய காட்சியை எங்கேயோ மலைக் காட்டில் கம்பன் பார்த்திருக்கலாம்; அல்லது அது குறித்துக் கேள்விப்பட்டிருக்க வேண்டும். ஆகவே, குரங்குக் காதலரும் காதலிகளும் வால் பிடித்து மாலையாகப் போய் நீராடும் காட்சியைச் சிருஷ்டிக்கிறான், ராட்சஸக் காதலர்கள் கைகோத்து ஜலக் கிரீடை செய்யும் வசதியான சிங்காரப் பூந்தடாகங் களிலே.

அதோ அதோ, வேறு சில குரங்குகள் எங்கே போகின்றன, அவசர அவசரமாக? ஓஹோ, நாடக சாலைக்கா போகிறீர்கள்? நடனம் பார்க்கவா? இல்லை, இல்லை. இப்போதுதான் அங்கே ரம்பை முதலிய தெய்வப் பெண்கள் நடனமாட வில்லையே! அந்த நாடகமேடை - நட்சத்திரங்களுடைய ஸ்தானத் திலே குரங்குகள்தான் பரதநாட்டியம் பிடிக்கின்றன!

'கரம்பயில் முரசினம்
கறங்க, கைதொடர்
நரம்பினும் இமிழ் இசை
நவில, நாடகம்
அரம்பையர் ஆடிய
அரங்கின், ஆண்தொழில் -
குரங்குகள் முறைமுறை
குனிப்பக் காண்டியால்!'

[கரம் பயில் - கைகளால் அடிக்கப்படுகிற. முர சினம் - (இங்கே) மத்தளங்களின் வகை. கறங்க -

ஒலிக்க. கைதொடர் - கையினல் தடவி வாசிக்கிற. நரம்பினும் - யாழ் நரம்பின் ஒலியைக் காட்டிலும். இமிழ் இசை நவில - இனிமையாக ஒலிக்கும் பாட்டுக் களின் இசை பொருந்த. நாடகம் - (இங்கே) பரத நாட்டியம். அரங்கு - நாடகமேடை. ஆண்தொழில் - பராக்கிரமச் செயல். முறை முறை - வரிசை வரிசை யாக. குனிப்ப - கூத்தாட. காண்டி - காண்பாய்.]

வால்வீசி வீர வானரங்கள் நாடகமேடையில் 'குர் குர்' என்று சங்கீதம் பாடிக் கூத்தாடும் காட்சி இப்போது சீதைக்குத் தெய்வ நடனங்களைக் காட்டிலும் இனிமையாக இருக்கிறது! லங்கா பட்டணத்தின் போகமும் பொருளும் நாகரிகத்தோடும் கலைச்செல்வத் தோடும் நாசமடையும் பரிதாபக் காட்சி யுத்தக் கொடு மைகளில் ஒன்று. இலங்கையின் வீழ்ச்சியையும் ராம னுடைய பரிபூர்ண வெற்றியையும் ஹனுமானுடைய வசன வசீகர சக்தியால் நாடகத்தில் பார்ப்பதுபோல் பார்த்து விடுகிருள் சீதை.

அந்த விஜயம் ராமனைக் காட்டிலும் அவளுக்கே உரியது என்பதைத்தான் ஹனுமான் எவ்வளவு தெளி வாக வற்புறுத்துகிருன்! உண்மையில் ராட்சஸர் களைச் சுட்டெரிக்கும் நெருப்பு, கற்புக் கனலாகிய சீதைதான்! அந்த நெருப்பை ஊதி ஜ்வாலை செய்யும் காற்ருகவே வரப்போகிறது ராமபாணம்:

'வினையுடை அரக்கராம்
இருந்தை வெந்(து)உகச்
சனகிஎன்(று) ஒருதழல்
நடுவண் தங்கலால்,

அனகன்கை அம்பெனும்
அளவில் ஊதையால்,
கனகநீ(டு) இலங்கைநின்(று)
உருகக் காண்டியால் !'

[வினையுடை - தீவினையுடைய. இருந்தை - கரி. உக - கெட்டுப்போக. நடுவண் - நடுவில். அனகன் - குற்றமற்றவன், (இங்கே) ராமன். அளவில் ஊதை - அளவில்லாத காற்று. கனகம் - பொன். நீடு - பெரிய.]

தீவினையுடைய அரக்கர் கூட்டம் கரிக்குவியல் போல் இருக்கிறதாம். (தேகக் கறுப்பில் தோஷமேது? தீவினைக் கருமையல்லவா தோஷமுடையது!) இலங்கையோ பொன்மயமானது. 'பொன் உருக வேண்டாம்; கரி வெந்து நீருக வேண்டாம்!' என்று நினைப்பவர் தழலைக் கரிகளுக்கு நடுவில் கொண்டு வைக்கலாமா? எனினும் இந்தப் பைத்தியச் செய்கையைத்தான் ராவணன் செய்திருக்கிறுன் என்பது ஹனுமான் குறிப்பு. ராமபாணமாகிய காற்று வீச வேண்டியதுதான் பாக்கி; கரிகள் வெந்து சாம்பலாகிப் போய்விடுமென்றும், லங்காபுரியே உருகிப் போய்விடு மென்றும் ஹனுமான் குதூகலமாய்ச் சொல்லுகிறுன்.

பிறகு, அவள் குறித்த ஒரு மாதத் தவணை கூட வேண்டாம் என்கிறுன்; தான் ராமனைக் காண வேண்டியதுதான் தாமசம். அவனுடைய துன்பத்தைத் துன்பமென்றுகூட ஹனுமான் சொல்லவில்லை. ஞாபகத்தோடு அனுபவிப்பதுதானே துன்பம்? இடி இடித்தாலும் உணர்வு உண்டாவதில்லை. பித்துப்

பிடித்தவனைப் போல் சீதையையே நினைத்துக் கொண்டிருக்கிறான். அப்படிப்பட்டவன் தாமதிப்பானா ?

'கடலைத் தூர்த்து லங்கா பட்டணத்தை முற்றுகை செய்யும் வானரங்களின் ஆரவாரம் விரைவில் உன் காதில் விழப் போகிறது. அந்தச் சேனை மத்தியிலே, கருடாரூடனான மகாவிஷ்ணுவைப்போல், என் தோள் மேல் வீற்றிருக்கும் ராமனையும், உதயகிரிமீது தோன்றும் இளஞ் சூரியன்போல், அங்கதன் தோள் மேல் விளங்கும் லட்சுமணனையும் நீ கண் குளிரக் காண்பாய். சிறையிருக்கும் துன்பமும், "எனக்கும் மீட்சி உண்டோ ?" என்ற ஐயமும், நாயகனைப் பிரிந்த தனிமையும் நீங்குவாய் !' என்றெல்லாம் கூறும் ஹனுமான், கடைசியாகச் சீதையின் அவநம்பிக்கையை அடியோடு போக்கக் கூடிய ஒரு வார்த்தையும் சொல்கிறான்.

அது என்ன வார்த்தையா, மந்திரமா ? அப்படி ஹனுமான் பேசுவான் என்று நாம் கனவிலும் நினைத்திருக்க முடியுமா ? சீதைதான் எதிர்பார்த்திருக்க முடியுமா ?

'சூராவரும் குழலி ! இக்
குறித்த நாளினே,
விராவரும் நெடுஞ்சிறை
மீட்கி லான்எனில்,
பராவரும் பழியொடும்
பாவம் பற்றுதற்(கு)
இராவணன் அவன் ! இவன்
இராமன் !' என்றனன்.

[குரா - மருதோன்றி மலர். குழலி - கூந்தலையுடையவளே. இக்குறித்த நாளினே - நீ குறிப்பிட்ட இந்த ஒரு மாத காலத்திற்குள்ளே. விராவரும் - விராவி வரும்; பொருந்தியுள்ள. மீட்கிலான் எனின் - மீட்காமல் போவானேயானால். பராவரும் - சொல்லுதற்கு அரிய.]

'அம்மா! நீ குறிப்பிட்ட தவணைக்குள் அவன் உன்னைச் சிறையிலிருந்து விடுதலை செய்யவில்லையென்றால்...' என்று தொடங்கும் ஹனுமான் வாக்கு எப்படி முடியப் போகிறதோ என்று பரபரக்கிறோம். 'அப்போது அவனை எவ்வளவு பழியும் பாவமும் பற்றிக் கொள்ளும், தெரியுமா?' என்ற கேள்வியைத் தானே போட்டுக்கொண்டு, அதற்குப் பதில் சொல்வது போல், 'அந்த ராமனே ராவணனுகி விடுவான்!' என்று எவ்வளவு துணிவாகச் சொல்லுகிறுன்! இந்த ஆச்சரியத்திலிருந்து நம்மை நாம் விடுவித்துக் கொள்வதற்கு முன், 'அப்போது இந்த ராவணனே ராமனுகி விடுவான்!' என்றும் வாய் கூசாமல் ஹனுமான் சொல்லி முடித்து விடுவதும் காதில் விழுகிறது.

ராமன் எவ்வளவு உயர்ந்த தர்ம மூர்த்தியாக இருந்தாலும், சீதையைச் சிறைமீட்காத பாவம் ஒன்றே அவனை அந்தச் சிகரத்திலிருந்து கீழே அதல பாதாளத்தில் தள்ளி ராவணனுக்கி விடுமாம். அதே சமயத்தில், அது ராவணனையும் ராமனுக்கி விடுமாம். அப்படி ராமனுவதற்கு அந்தப் பாபாத்மா ஒரு புண்ணியமும் செய்யவேண்டியதில்லை; வழக்கம் போல் இருக்கலாம்! உண்மையில் ராம ராவணர்கள் லட்சிய புருஷர்கள்தானே? அவன் புகழுக்கும் புண்ணியத்துக்கும் லட்சியம்; இவன் பழியோடு பாவத்துக்கு லட்சியம்!

'சீதாதேவியே! உன்னை ராமன் விடுவிக்கவில்லை யென்றால் அவனைப் பழிபாவங்கள் பற்றிக் கொள்ளும்; அவன் மிகக் கொடியவன் ஆவான்; ராவணனே நல்லவன் என்று சொல்லும்படி அவ்வளவு மிகக் கொடியவன் ஆவான்!' என்று சொன்னதோடு ஹனுமான் திருப்தி அடையவில்லை. 'நீ குறித்த நாட்களுக்குள் ராமன் இங்கு வந்து உன்னைச் சிறை மீட்கானாயின், அவன் இனி எனக்கு ராமன் அல்லன்; ராவணன்தான்!' என்று சொன்னதோடும் திருப்தி அடையவில்லை. 'ராவணனே நான் வணங்கத் தக்க ராமனாகிவிடுவான்! நான் ராவண தாஸன் ஆக வேண்டியதுதான்!' என்ற வார்த்தையும் தர்மநேச - ராமதாஸனாகிய ஹனுமான் வாயிலிருந்து வருகிறது; சீதையின் செவியில் விழுகிறது. ஆம், வாய் குளிர வந்து, செவி குளிர விழுகிறது! அந்த நிமிஷத்திலேயே சீதையின் அவநம்பிக்கை விசேஷ நம்பிக்கையாகப் பரிணமித்துவிடுகிறது.

அவ்விதமாக, ராம பக்த சிரேஷ்டனான ஹனுமான் சொன்னது பக்திக்குத் தகுமா? அது குற்றமற்ற வார்த்தை என்றே ராம பக்தனான கவிஞன் சொல்லுகிறான்; சீதையும் அப்படியே நினைக்கிறாள். அந்தத் துணிவான வார்த்தைதான்,—குணமென்னும் குன்று ஏறிநின்று ஹனுமான் பேசிய அந்த மந்திர வார்த்தைதான்—சீதைக்கு மனோ வியாதியைப் போக்கி அறிவுத் தெளிவை உண்டாக்குகிறது:

'ஆக இம்மொழி ஆசில
கேட்(டு)அறி வுற்றாள்,
ஓகை கொண்டுக ளிக்கும்
மனத்தள்,உ யர்ந்தாள்,

‘ போகை நன்(று)இவன் ’ என்பது
புந்தியின் வைத்தாள்,
தோகை யும்சில வாசகம்
இன்னன சொன்னாள்.

[ஆக - இவ்வாறாக ; இவ்வாறு ஹனுமான் சொல்லி முடித்தானாக. ஆசுஇல - குற்றமில்லாதன. அறிவுற்றாள் - அறிவு தெளிந்தவளாய். ஓகை - உவகை. உயர்ந்தாள் - (இங்கே) நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டாள். இவன் போகை நன்று - இந்த ஹனுமான் (விரைவில்) ராமனிடம் திரும்பிப் போவதே நல்லது. புந்தி - புத்தி. வைத்தாள் - வைத்துக் கொண்டவளாய். தோகை - மயில்போலும் சாயலுடைய சீதை. வாசகம் - வார்த்தைகள். இன்னன - இப்படிப்பட்ட.]

ஹனுமானுடைய வார்த்தைகளை, முக்கியமாக அவன் கடைசியாகச் சொன்ன வார்த்தையைக் கேட்டதும், சீதை அறிவுற்று உவகை கொண்டாள். அந்த மகிழ்ச்சி வெறியிலே உயர்ந்து விட்டாள் ; நிமிர்ந்து உட்கார்ந்துகொண்டாள். ‘ இனி இவனை அனுப்பிவிட வேண்டும் ’ என்று தீர்மானித்து, விடை கொடுக்கும் நோக்கத்துடன், தானும் சில அடையாள மொழிகளை ராமனிடம் விண்ணப்பிக்கும்படி சொல்லுகிறாள்.

இந்த அடையாளங்களில் ஒன்று, சீதாராமர்களின் பழைய ஆனந்தமான வாழ்க்கைக் காட்சிகளில் ஒன்றாகும். சீதையின் கிளியைப்பற்றி நாம் ஏற்கெனவே கேள்விப்பட்டிருக்கிறோம். இவள் காட்டுக்குப் புறப்பட்டபோது, ‘ நாட்டிலே விட்டு வந்த அந்தக் கிளிக்கு வேளையில் ஆகாரம் கொடுக்க வேணுமே;

பேச்சுக் கற்றுக்கொடுக்க வேணுமே!' என்ற ஒரு கவலைதான். அதைக் குறித்துச் சுமந்திரனிடம், தான் காட்டில் அடியெடுத்து வைக்கப்போகும் தருணத்தில், சொல்லி அனுப்பியிருந்த செய்தியைத்தான் ராமன் ஓர் அடையாளமாகச் சொல்லி அனுப்பியிருந்தான். அந்தக் கிளியைக் குறிக்கும் வேறொரு விஷயத்தைச் சீதையும் இப்போது அடையாளமாகச் சொல்லி அனுப்புகிறாள்.

அந்தக் கிளிப்பிள்ளையை அவள் தன் உயிராக மதித்துப் பாலூட்டிச் சீராட்டி வளர்த்து வந்தாள். (அதனால்தானே காட்டுக்குப் போகும் போதும் அதைப்பற்றியே கவலை!) சரி, அதன் பெயர் தெரியுமா உங்களுக்கு? அந்தக் கிளிக்குக் கைகேயி என்று பெயர். திகைத்துப் போகிறீர்கள், இல்லையா? வஞ்சித்துக் காட்டுக்கு அனுப்பிய கொடியவளின் பெயரல்லவா? அந்தப் பெயர் சீதையின் ஆசைக் கிளிக்கு எப்படி வந்தது? இந்த அதிசயத்தைச் சீதையின் வாய்மொழியாகவே கேட்போம்:

' "என்ஓர் இன்னுயிர் மென்கிளிக்(கு)
யார்பெயர் ஈகேன்,
மன்ன?" என்றலும், "மாசறு
கைகயன் மா(து) என்
அன்னை தன்பெயர் ஆக!" என
அன்பினொடு அந்நாள்
சொன்ன மெய்ம்மொழி சொல்லுதி,
மெய்ம்மை தொடர்ந்தோய்!'

[ஓர் - ஒப்பற்ற. ஈகேன் - ஈவேன்; கொடுப்பேன்; இடுவேன். மன்ன - அரசனே, நாயகனே. மாசறு

குற்றமற்ற. கைகயன் மாது - கைகேயி. ஆகஎன - ஆக என்று. மெய்ம்மொழி - மெய்ம்மையான வார்த்தை; மனப்பூர்வமான வார்த்தை. சொல்லுதி - சொல்வாய். மெய்ம்மை தொடர்ந்தோய் - உண்மை நெறியை அனுஷ்டிக்கும் ஹனுமானே.]

துன்பம் இன்னதென்பதையே அறியாமல் நாட்டி லிருந்த காலத்தில், ஒருசமயம் சீதையும் ராமனும் உல்லாசமாக உரையாடிக் கொண்டிருந்தார்கள். அப்போது அவள், 'அன்பரே! என் அன்புக் கிளிக்கு, யார் பெயரை இட்டழைப்பது உங்களுக்குச் சந்தோஷமா யிருக்கும்?' என்று கொஞ்சிக் கேட்டாள். அவன் பளிச்சென்று, 'என் தாயான கைகேயி பெயரால் அழைப்பதுதான் எனக்குத் திருப்தி! ஆ, என்ன அன்பு நிறைந்த, மாசற்ற உள்ளம்!' என்று பதில் சொன்னான். அப்போது அவன் எவ்வளவு நம்பிக்கையோடு எவ்வளவு உண்மையாகப் பேசினான் என்பது அப்படியே பிரத்தியட்சமாகிறது.

அந்த நிகழ்ச்சியே சிறந்த அடையாளமா யிருக்கும் என்று சீதை நினைக்கிறாள். இவளுடைய குழந்தையுள்ளத்தை வெளியிடுவது இது. ராமன் சொன்ன அடையாளமோ அவனுடைய மாசற்ற குணாதிசயத்தை வெளியிடுவது.

இனி அடையாளங்களுக் கெல்லாம் மேலான அடையாளம் ஒன்றுதான். ஆடையில் முடித்து வைத்திருந்த ஏதோ ஒன்றைத் தன் மலர்க் கையில் எடுக்கிறாள். 'அது என்னவோ?' என்று ஹனுமானே ஒரு கணம் ஏங்கிப் போகிறான். அவனுக்குத்தான் இப்போது என்ன திகைப்பு, என்ன ஆச்சரியம்! அந்த

ராத்திரியில், அந்தச் சோலையில், எப்படியோ சூரியோதயம் ஆனது போல் ஒரு மயக்கம். சுற்றிலுமுள்ள இருட்டு அப்படி நிலைகுலைந்து ஓடுகிறது!

ஹனுமானுடைய அந்தப் பூரிப்பையும் திகைப்பையும் நாமும் பங்கு கொள்வோம் :

வாங்கி னாள்தன் மலர்க்கையின்
அன்னது ; முன்னா
ஏங்கி னான்அவ் அனுமனும்,
' என்கொல்(இது)!' என்னா,
வீங்கி னான்,வியந் தான்;உல(கு)
ஏழும் விழுங்கித்
தூங்கு காரிருள் முற்றும்
இரிந்தது சுற்றும்!

[ வாங்கினாள் - எடுத்தாள். அன்னது - அந்தச் சூடாமணியை. முன்னா - முன்னி, எண்ணி. ஏங்கினான் - ஏங்கித் தியங்கிப் போனவனாய். என்கொல் - என்ன. என்னா - என்று எண்ணி. வீங்கினான் - உடல் பூரித்தவனாய். தூங்கு - தங்குகிற. கார் இருள் - கரிய இருள். முற்றும் - முழுவதும். இரிந்தது - நிலைகுலைந்து ஓடிப்போய் விட்டது. சுற்றும் - சுற்றிலும். ]

அந்த மேனிக்கும் அந்த இரத்தினத்திற்கும்தான் எவ்வளவு பொருத்தம்! அதை அவள் சூடாமணியாகவா மதிக்கிறாள்? தன் கண்மணியாகவே கருதுகிறாள். கோசல மகாராஜ்யத்தின் 'கோஹிநூரா'யிருப்பதோடு அந்த ரத்தினம் எத்தனையோ பழைய நினைவுகளுக்கும் கனவுகளுக்கும் ஓர் அறிகுறியாக இருக்கிறது.

அப்படிப்பட்ட சூடாமணியை அவள் இப்போது ஹனுமானிடம் கொடுப்பதைப் பாருங்கள் :

‘ சூடை யின்மணி கண்மணி
ஒப்பது ! தொன்னாள்
ஆடை யின்கண் இருந்தது,
பேர்அடை யாளம் ;
நாடி வந்துஎனது இன்னுயிர்
நல்கிய நம்பா !
கோடி ! ’ என்றுகொ டுத்தனள்
மெய்ப்புகழ் கொண்டாள்.

[தொன்னாள் - ராவணன் தன்னை எடுத்து வந்த காலம் தொட்டு. நம்பா - புருஷோத்தமனே. கோடி - கொள்வாயாக.]

ராவணன் அவளை எடுத்து வந்த நாளில் தேடி வருவோர்க்கு அடையாளமாக நகைகளைக் கழற்றி எறிந்தாள் அல்லவா ? சூடாமணி மட்டும் கீழே விழுந்து விடாமல் ஆடையில் தங்கியிருந்ததாம். வேறொரு சமயத்தில் பயன்படுமென்று முடிந்து வைத்திருந்தாள்.

இதைக் கொடுக்கும்போதுதான் அவனை எவ்வளவு அருமையாக அழைக்கிறாள் !

‘ நாடி வந்துஎனது இன்னுயிர்
நல்கிய நம்பா ! ’

‘ நான் இருக்கும் இடத்தை எப்படியோ தேடிக் கண்டுபிடித்து எனக்குப் பிராணதானம் செய்த புருஷோத்தமனே !’ என்று வாய்குளிர உளங்குளிர அழைப்பதற்கு மேலாக ஹனுமானுக்கு அளிக்கக்

கூடிய சமமானமும் உண்டோ? ஏற்கெனவே அளித்த சிரஞ்சீவிப் பட்டம்தான் இப்படிப்பட்ட உபகார ஸ்மிருதிக்கு ஈடாகுமா?

சூடாமணியை ஹனுமான் உடனே வாங்கிக் கொள்ளவில்லை; வாங்கிக்கொண்டபின் சிறிது நேரம் அவளைக் கவனிக்கவே இல்லை! ஏன்? எப்படி?

தொழுது வாங்கினன், சுற்றிய
  தூசினன்; சுற்றிப்

பழுது றுவகை பந்தனை
  செய்தனன் பந்தித்(து),

அழுது மும்மை வலங்கொ(டு)
  இறைஞ்சினன்; அன்போ(டு)

எழுது பாவையும் ஏத்தினள்;
  ஏகினன் இப்பால்.

[தூசு - ஆடை. உறு வகை - உண்டாகாதபடி. பந்தனை - கட்டுதல். ஏத்தினள் - துதித்தாள்; தொழுதாள்.]

சீதை கொடுத்த சூடாமணியை ஒரு கும்பிடு போட்டு வாங்கிக் கொள்கிறான். பிறகு வாங்கிய சூடாமணியைப் பத்திரப்படுத்துவதிலேயே கண்ணும் கருத்துமா யிருக்கிறான். திரும்பத் திரும்ப முடிச்சைப் பரிசோதிப்பதும், முடிச்சின்மேல் முடிச்சாகப் போடுவதும், அப்போது சீதை இருப்பதையே மறந்திருப்பதும், அவனை எவ்வளவு முன் ஜாக்கிரதையுள்ள மேதாவியாகக் காட்டுகின்றன!

சூடாமணியைப் பத்திரப் படுத்திய பின்புதான், விடை பெற்றுக் கொள்வதற்காகச் சீதை முகத்தைப் பார்க்கிறுன். இதுவரையில் அடக்கி வைத்திருந்த உணர்ச்சி தத்தித் ததும்புகிறது. அழுகையே வந்து விடுகிறது! அந்த அழுகைக்குள்ளே எவ்வளவு விஷயம் அடங்கியிருக்கிறது! அதற்கு ஒரு மகாபாஷ்யம் எழுத வேண்டும் : ஆனுல் அது யாரால் முடியும்?

அழுதுகொண்டே அவளைப் பிரதட்சிணம் செய்கிறுன்; ஒரு தரம், இரண்டு தரம், மூன்று தரம். உடனே காலில் விழுந்து மறுபடியும் வணங்குகிறுன்.

அந்த வாசாலகனுக்கு இப்போது ஒன்றுமே சொல்லத் தெரியவில்லை. அவளுக்கும் இப்போது ஒன்றுமே பேசத் தோன்றவில்லை. பரிபூரண அன்போடு மகாநிபுணன் ஒருவன் சித்திரத்திலே எழுதிவைத்த பிரதிமை போலிருக்கிறுள்! அவன் வணங்கி எழுந்ததும், அவளும் கைகூப்பித் தொழுகிறுள்.

முன்னே அவனை வாயார மனமாரப் புகழ்ந்தது கூட, இப்போது அவள் செய்யும் மௌன ஸ்தோத்திரத்திற்கு ஈடாகுமா? ஹனுமானுல் தாங்க முடியவில்லை. உடனே அந்த இடத்தை விட்டுப் புறப்படுகிறுன்.

## 17. ஹநுமானின் உத்ஸாக வெறி

அந்தச் சோலை என்ன பாடு படுகிறது, ஆஹா !

முடிந்தன, பிளந்தன,
முரிந்தன, நெரிந்த,
மடிந்தன, பொடிந்தன,
மறிந்தன, முறிந்த,
இடிந்தன, தகர்ந்தன,
எரிந்தன, கரிந்த,
ஒடிந்தன, ஒசிந்தன,
உதிர்ந்தன, பிதிர்ந்த !

[முடிந்தன - வாழ்வு முடிந்து போயின. முரிந்தன- நிலைகெட்டு வளைந்து போயின. நெரிந்த - நெரிந்து போயின. மடிந்தன - தலை சாய்ந்து மாண்டன. பொடிந்தன - பொடியாகிப் போய்விட்டன. மறிந்தன - மடங்கி விழுந்தன. முறிந்த - முறிந்தன. தகர்ந்தன - உடைந்து போயின. கரிந்த - கரிந்தன. ஒசிந்தன - துவண்டு சாய்ந்தன. பிதிர்ந்த - பிதிர்ந்தன ; துண்டு துண்டாயின.]

சில மரங்களும், செடி கொடிகளும் மீண்டும் துளிர்க்க வழியில்லாதபடி, 'வாழ்க்கை முடிந்தது' என்று சொல்லும்படி, அழிந்து போகின்றன. சில மரங்கள் பிளந்து போகின்றன. வேறு சில மரங் களும் படர் கொடிகளும் நிலை கெட்டு வளைந்து கிடக் கின்றன. இன்னுஞ் சில நெரிந்து போகின்றன. எத்

தனை மரங்கள் தலை சாய்ந்து மடிந்து விழுகின்றன! கீழ் மேலாகி விழுந்து கிடக்கும் விருட்ச ஜாலங்கள் எத்தனை! மளமள வென்று முறிந்து விழும் கிளைகள் எத்தனை! அவற்றுக் கிடையே, பொடிபட்டும் இடிபட்டும் கிடக்கும் மாடங்களும் மண்டபங்களும் எத்தனை!

அதோ, சுவர்களும் மதில்களும் தகர்ந்து விழுகின்றன! இதோ ஒன்ரேடொன்று நெருங்கி உராய்ந்து எரியும் மரங்கள்! அந்தத் தீயில் பச்சை மரங்களும் அழகான பூங்கொடிகளும் எப்படிக் கரிந்து போகின்றன! ஒரு புறம் மரங்கள் சடசடவென்று சரிந்து ஒடிகின்றன. ஒரு புறம் பச்சைப் பசுங்கொடிகள் துவண்டு சாய்கின்றன. அங்கே நட்சத்திரங்கள் உதிர்வது போல் உதிர்கின்றன பலநிறப் பூக்களும்; இங்கே பழ வர்க்கங்கள் பிதிர்ந்து போகின்றன.

இவ்விதமாக அசோகவனம் சின்னுபின்னப்படும் காட்சியையும் சப்த ஜாலங்களையும் எவ்வளவு தெளிவாகப் பார்க்கிருேம், கேட்கிருேம்! ஓஹோ, நாம் இலங்கைக்கு வந்து விட்டோம்; பூமி சாஸ்திரத்திற்கும் சரித்திர நூலுக்கும் சம்பந்தமில்லாத ஓர் இலங்கைக்குத்தான்; கவிஞனுடைய கற்பனை - இலங்கைக்குத்தான்! கவிஞனது கவிதை - விமானத்திலேயே வந்து விட்டோம். காலத்தைப் பின்னுக்குப் படுவேகமாய்த் தள்ளிக்கொண்டு அந்த விமானம் நம்மோடு ராவண ராஜதானியின் உத்தியான வனத்திற்கு அருகே பறந்து கொண்டிருக்கிறது.

ஏன் இந்த நாசம்? இது என்ன, காலத்தின் ஊழிக் கூத்தா? இயற்கையின் கோரமா? இல்லை, அதோ ஹனுமான் காணப்படுகிருன் அந்த வனத்துக்

குள்ளே. ஆம், உள்ளபடியே அவனுடைய கோர தாண்டவம்தான்! தன் பேராண்மைக்கு இசைந்த பேருருவம் கொண்டிருக்கிறன் இப்போது. அங்கும் இங்கும் கால்களால் துகைக்கிறன்.

சீதையிடம் சூடாமணி பெற்று விடைபெற்றுக் கொண்டதும், ஹனுமான் அவள் இருந்த அசோக வனத்தினூடே, ராமன் இருந்த வட திசை நோக்கிப் போக வேண்டுமென்று நினைத்தான். நினைத்ததும், நிமிர்ந்தான் பேருருவம் கொண்டு. நிமிர்ந்ததும், ஓர் ஆலோசனை : 'நாம் இதுவரை செய்து முடித்ததெல்லாம் சிறு தொழில்! என்ன பிரமாதமாகச் சாதித்து விட்டோம்? இப்படியே திரும்பிப் போவது நமது ஆண்மைக்குக் குறைவே. பகைவர் மதிக்குமாறு — மறக்க முடியாதபடி — ஒரு பெருங்காரியம் செய்து போவதுதான் சரி' என்று கருதினன்.

'அரக்கரை அழித்து, இலங்கையைப் பெயர்த்துக் கடலில் வீசிவிட்டுச் சீதாபிராட்டியை ராமபிரான் திருவடிகளில் சேர்த்தேனில்லையே!' என்ற மனக்குறை மறுபடியும் தோன்றுகிறது. ஆனல் இது சீதை விலக்கிய செய்கை அல்லவா? சீதை பெருமைக்கும் ராமன் பெருமைக்கும் குறைவாகுமே!

'சீதையைச் சிறைவைத்த ராவணனைத் தோள்களையும் தலைகளையும் ஒருசேர வாலினல் இறுக்கிப் பிணித்து நாமும் சிறை வைத்துவிடலாமா? போர் செய்து வெல்லலாமா?' இப்படி ஆலோசிக்கிறன் ஹனுமான் ஒரு கணம். ஆனல் இச் செயல்களும் இராமபிரானது மகாவீரத்திற்குக் குறைவுதானே?

'அரக்கரை முறியடித்து, ராவணன் எதிரே அவனுடைய பட்டமகிஷி மந்தோதரியைக் கூந்தலைப்

பிடித்து இழுத்துக் கொண்டுபோய் ஏன் சிறைவைத்துப் பார்க்கலாகாது? ராவணன் சீதையைச் சிறைவைத்ததற்கு, அவனைச் சிறை வைப்பதைக் காட்டிலும் இது சரியானபடி பழிக்குப் பழி வாங்குவதாகு மல்லவா?' என்றுகூட ஆலோசிக்கிறான். கள் வெறி போன்ற உத்ஸாக வெறியிலே இந்த ஆலோசனையும் சரியாகத் தோன்றவில்லை. ராம பத்தினியை ராவணன் சிறை வைத்தது பெருங்குற்றம் என்றால், ராவண பத்தினியை ஹனுமான் சிறை வைப்பதும் பெருங் குற்றம்தானே? குற்றத்திற்குக் குற்றம் பரிகாரமா?

கடைசியாக, மின்வெட்டுவதுபோல ஓர் ஆலோசனை; அசோக வனத்தை அழிக்க வேண்டும் என்று தீர்மானிக்கிறான். இது அரக்கர்களை அறை கூவிப் போரில் மூட்டிவிடுவதற்கு ஓர் உபாயமல்லவா? அதற்காகவாவது சீதை சிறையிருந்த அந்த வனம் அழிய வேண்டியதுதான் என்று துணிகிறான். இத் துணிவு செயலாகும்போது அந்தச் சோலை படும் பாட்டைத்தான் நாம் கண்கூடாகப் பார்க்கிறோம், கவிஞனது ஞான விமானத்தில் பறந்துகொண்டே.

அந்த வனம் அழியும் சம்பிரமத்திலே அங்கே இருந்த மிருக பட்சிகள் படும் பாட்டைத்தான் என்னென்பது? என்ன பரிதாபமான காட்சிகள்!

> கதறின, வெருவி உள்ளம்
> கலங்கின விலங்கு, கண்கள்
> குதறின; பறவை வேலை
> குளித்தன; குளித்திலாத,
> பதறின பதைத்த, வானில்
> பறந்தன, பறந்து பார்விழ்ந்(து)
> உதறின சிறையை, மீள
> ஒடுக்கின, உலந்து போன.

[வெருவி - அச்சம் கொண்டு. விலங்கு - (அந்த வனத்திலுள்ள) மிருகங்கள். குதறின - கலங்கிப் போயின. வேலை-கடல். குளித்தன - (இங்கே) விழுந்து முழுகிப் போகின்றன. குளித்திலாத-(அப்படிக் கடலில்) விழுந்து முழுகிப்போகாத பறவைகள்.பதறின பதைத்த- பதறிப் பதைத்து. பறந்தன-பறக்கத் தொடங்கி. பார் வீழ்ந்து - (சிறிது தூரம் பறந்த பின் மேலே பறக்க முடியாமல்) பூமியில் வீழ்ந்து. சிறை - சிறகு. மீள ஒடுக்கின - மீண்டும் (அச்சிறகுகளை) ஒடுக்கிக்கொண்டனவாய். உலந்து போன - அழிந்து போயின.]

ஹனுமான் சோலையைத்தான் அழித்தான்; மிருக பட்சிகளை அழிக்கவில்லை. எனினும், மிருகங்களும் பட்சிகளும் நிலை கலங்கி அவஸ்தைப்படுகின்றன, அழிந்து போகின்றன. மிருகங்கள் கூச்சலிட்டுக் கண் கலங்கி உளங் கலங்கி அவஸ்தைப்பட, பறவைகளோ பயந்து நடுங்கிக் கடலிலே விழுந்து விடுகின்றனவாம். அப்படி விழாத பறவைகள் பதறிப் பதைத்து வானில் பறக்க ஆரம்பித்துச் சிறிது தூரம் சிறகடித்து மேலே பறக்க முடியாமல் கீழே விழுந்து விடுகின்றன. அப்படி விழுந்த பறவைகள் சிறகுகளை உதறுகின்றன, மீண்டும் அச்சிறகுகளை ஒடுக்கிக் கொள்கின்றன; அப்படியே பிராணனை விடுகின்றன.

சீதை தங்கியிருந்த இடம் மாத்திரம் அழியாமல் இருக்கிறது. அவள் அருகேயிருந்த மரமும் தனியாக நிற்கிறது. அந்த வனத்தை அப்படி அழித்துவிட்ட ஹனுமானும் அந்தப் பாழான வெட்டவெளியில் தனியனாக நிற்கிறான், உலகத்தை அளந்த நெடுமாலைப் போல, — யுகாந்த காலத்து ருத்திரமூர்த்திபோல. உத்ஸாக வெறி அடங்கியபாடில்லை.

அசோகவனம் பாழான அதிர்ச்சியால் விழிப்புற்ருர்கள், ஹனுமானுடைய மந்திர வித்தையால் விழிப்பு ஒழிந்து கும்பகர்ண உபாஸனை செய்து கொண்டிருந்த ராட்சஸிக ளெல்லாம். இவர்கள் ஹனுமானது பெரு வடிவைக் கண்டு பிரமித்து அஞ்சி ஓடி ஒளித்துக் கொண்டார்கள்.

அப்போது ஹனுமான், அங்கே பொன்ஞலும் மணியாலும் விநோதார்த்தமாக ஒரு மலைபோலச் செய்திருந்த செய்குன்றம் ஒன்றைக் கண்டான். கண்டதும் அதைப் பறித்தான். பறித்ததும் இலங்கைமீது வீசினுன், பழம் நிறைந்த மாமரத்தின் மீது கல்லை வீசுவதுபோல. அது தாக்கிய மாட மாளிகைகள் தகர்ந்து விழுந்தன.

அசோகவனம் ராவணனுடைய வேலைக்காரர்களான சில தேவர்களின் பாதுகாப்பில் இருந்தது. வேனில் முதலான ஆறு பருவங்களுக்கும் உரிய அதிதேவதைகளான பருவத் தேவர்களே அந்தக் காவல் - அதிகாரிகள். ராவணன் எவ்வெப்போது எந்த எந்தப் பருவத்தை விரும்புகிருனே, அவ்வப்போது அந்த அந்தப் பருவத்தைத் தோற்றுவித்து அவனைத் திருப்தி செய்து கொண்டே சோலையைப் பாதுகாக்கும் அக் காவல் - அதிகாரிகளை அசோகவனத்தின் 'போலீஸ்' அதிகாரிகள் என்று கருதலாம்.

ஹனுமாஞல் அசோகவனம் அழிந்ததும், இந்த அதிகார தேவதைகள் எவ்வளவு பயத்தோடு ராவணனிடம் நடந்ததை அறிவிக்கப் போகிருர்கள்! இவர்களை உற்று நோக்குவோம்:

நீரிடு துகிலர், அச்சம்
　　நெருப்பிடு நெஞ்சர், நெக்குப்
பீரிடும் உருவர், தெற்றிப்
　　பிணங்கிடு தாளர், பேழ்வாய்
ஊரிடு பூசல் ஆர
　　உளைத்தனர், ஓடி உற்ருர்,
பாரிடு பழுவச் சோலை
　　பாலிக்கும் பருவத் தேவர்.

[ நீர் இடு துகிலர் - நீரால் நனைந்த துகிலை உடையவர்கள். துகில் - உயர்ந்த அழகான ஆடை. நெக்கு - பிளந்து. பீரிடும் உருவர் - இரத்தம் பெருக்கிடும் உடம்பை உடையவர்கள். தெற்றி - மோதிக்கொண்டு. பிணங்கிடு - பின்னிக் கொள்ளும். தாளர் - கால்களையுடையவர்கள். பேழ் வாய் - பெரிதாகத் திறந்த வாய். ஊர் இடு பூசல் ஆர - ஊரிலே பெரிய இரைச்சல் நிறையும்படி. உளைத்தனர் - ஊளையிட்டவர்களாய். உற்ருர் - (ராவணனைச்) சமீபித்தார்கள். பார் - பூமி, (இங்கே) லங்கா பூமி. இடு - வைத்து வளர்த்திருக்கும். பழுவச் சோலை - பெருஞ் சோலை. பாலிக்கும் - பரிபாலிக்கிற; பாதுகாக்கிற. பருவத் தேவர் - ஆறு பருவ காலங்களுக்கும் உரிய தேவர்கள்.]

பெரிய போலீஸ் உத்தியோகஸ்தர்கள் படும் பாட்டைப் பாருங்கள். விலை உயர்ந்த ஆடைகள் அணிந்திருக்கிருர்கள். அடடா, அந்த அழகான - அருமையான - வஸ்திரங்கள் இப்போது வேர்வை நீரால் நனைந்து போகின்றன. பீதி அப்படி நெருப்பை நெஞ்சிலே கொட்டுகிறது! அப்பாவிகள்! எவ்

வளவோ ஒதுங்கிப் பதுங்கிப் பார்த்தார்கள்; விழுந்த சுள்ளிகளில் சில உரசி உடம்பைக் கீறிவிட்டதால் இரத்தம் பீரிடுகிறது.

இப்படி அசோக வனத்தின் அழிவுக்கு ஒருவாறு சாட்சியான காட்சியை உடம்பிலே தரித்துக்கொண்டவர்களாய், தேவர்கள் புறப்படுகிறார்கள். ஆனால் நல்ல சமயத்திலே கால்கள் நடைதராமல் 'ஒத்துழையாமை' செய்கின்றன. தட்டித் தடுமாறுகிறது முட்டோடு முட்டு — எந்தப் பிராணி போல் என்று சொல்லவா வேண்டும்?

கால்கள் பின்னிக்கொள்ள, வாய் 'ஆ' வென்று பிளந்த வண்ணமாய் இருக்கிறது! இந்தக் கோலத்தில், இந்த உத்தியோகஸ்தர்களைக் கண்ட ஊரில் இரைச்சலுக்குக் கேட்கவேண்டுமா? ஆ, பிளந்த வாயும் ஊளையிடுகிறது! இவர்கள் எப்போது இப்படி ஊளையிடக் கற்றுக் கொண்டார்கள்? ஐயோ, பயம் அல்லவா தேவர்களையும் கழுதைகளாக்கி, இப்போது குள்ள நரிகளாக்கி விடுகிறது!

நடை தராத கால்களுக்குப் பயம் எப்படியோ வேகம் தர, ஓடிவந்து ராவணனை அடைகிறார்கள். நாமும் இவர்களைத் தொடர்ந்து கவியின் ஞான விமானத்திலே ஓடுவோம்.

அந்த ராவண ராஜ்யம் ராணுவ ராஜ்யம்; அந்த ஒழுங்குகளுக்கு மாறாக இவர்கள் செய்யும ஆர்ப்பாட்டங்களைக் கண்டு யார்தான் கோபங் கொள்ளமாட்டார்? ராணுவ விதிகளில் பெரு நம்பிக்கை கொண்ட ராவண மன்னனுக்குக் கடுங்கோபம் பிறக்கிறது.

'இவர்களை அரிந்து போடலாமா துண்டு துண்டாக?' என்று சீறிக் கொண்டிருக்கிறான். ('அரிபடு சீற்றத் தான்.')

அந்தக் கோபாவேசத்தைக்கூட இப்போது அறிந்துகொள்ள முடியவில்லை இத்தேவர்களால். அவனுக்கு அவ்வளவு கோபமென்றால், இவர்களுக்கு அவ்வளவு பீதி! விலகி நின்று ராஜ வழிபாடு செய்ய வேண்டிய தேவர்கள், தாம் அந்த ராஜ்யத்திலே 'தீண்டா வகுப்பினர் - அருகிலும் செல்லத்தகாதவர்' என்பதையும் மறந்து, பயத்தால் அறிவு மழுங்கப் பெற்று, சக்ரவர்த்தியின் அருகு சென்று, 'குரங்கு, குரங்கு!' என்று புலம்பிக்கொண்டே காலில் விழுகிறார்கள் :

அரிபடு சீற்றத் தான்தன்
அருகு சென்(று) அடியின் வீழ்ந்தார் ;
'கரிபடு திசையின் நீண்ட
காவலா! காவல் ஆற்றேம் ;
கிரிபடு குவவுத் திண்தோள் -
குரங்(கு)இடை கிழித்து வீச,
எரிபடு துகிலின், நொய்தின்
இற்றது கடிகா!' என்றார்.

[அரிபடு - அரிந்து போடும்படியான. கரி - யானை ; (இங்கே) திக் கஜம். கிரி - மலை. குவவு - திரண்ட. திண் - வலிய. துகிலின் - துகில்போல. நொய்தின் - விரைவில். கடி - காவல். கா - சோலை.]

'திக்கொடு திக்கு-அந்தங்களிலும் தட்டுத்தடையின்றி ஆணை செலுத்தும் மகாராஜாதி ராஜனே!' என்று தொடங்கி, 'இனிமேல், எங்களால் தங்கள்

உத்தியோகம் பார்க்க முடியாது. இப்போதே ராஜீநாமா எழுதிக்கொடுக்கத் தயார்!' என்று சொல்லுகிறார்கள். எவ்வளவோ சிரமப்பட்டுச் சிபார்சு பிடித்துச் சம்பாதித்த வேலையல்லவா? அப்படிப்பட்ட உத்தியோக மோகத்தையும் உதறி விடுவதற்குக் காரணம் அந்த ஒற்றைக் குரங்குதான்! 'உயிர் பிழைத்திருந்தாலே போதும்; வயிறு பிழைக்க வேறு வழியில்லையா?' ஞானோதயம் உண்டாகி விட்டது.

'என்ன? குரங்குதானே!' என்றால், அவர்கள் 'மலைக் குரங்கு' என்று சொல்லுகிறார்கள். 'அந்தக் குரங்கு உங்களை ஏன் பயப்படுத்துகிறது?' என்றால், 'ஐயோ, அந்தத் தோள்கள் அப்படி ஏன் பருத்துத் திரண்டு பலம் பொருந்தி யிருக்கின்றன?' என்று உளறுகிறார்கள். 'நீங்கள் பயப்படும்படி, நடந்தது தான் என்ன?' என்றால், 'மலைக் குரங்கு வந்து நந்தவனத்திலே சாடிவிட்டது!' என்கிறார்கள். பூஞ்சோலையில் விழுந்த குரங்கு சும்மா இருக்குமா? 'அங்கும் இங்கும் கிழித்து வீசியது!' என்கிறார்கள். குரங்கை ஓட்டிவிட்டு மறுபடியும் செடி கொடிகளைச் சரியாக நட்டுவிடுவதுதானே? 'குரங்கு அநாயாசமாய்த்தான் சேட்டை செய்து கொண்டிருந்தது. சோலையோ நெருப்பிலே பிடித்த மெல்லிய ஆடை போல் விரைவில் அழிந்துவிட்டது!' என்று பொருத்தமில்லாமல் பேசுகிறார்கள். ராவணன் நம்பவில்லை. எப்படி நம்புவான்?

'சோலையை மட்டுமா அழித்தது? இலங்கையையும் அழித்துவிட்டது!' என்று தேவர்கள் மேலும் பேசுகிறார்கள்:

'சொல்லிட எளிய தன்றால் :
சோலையைக் காலின், கையின்,

புல்லொடு துகளும் இன்றிப்
பொடிபட நூறிப், பொன்னால்

வில்லிடு வேரம் தன்னை
வேரொடு வாங்கி வீசச்,

சில்இடம் ஒழியத் தெய்வ
இலங்கையும் சிதைந்த(து)!' என்றார்.

[ எளிய தன்றால் - எளியதல்ல. காலின், கையின் - கால்களாலும் கைகளாலும். துகள் - தூள்; தூசி. நூறி - அழித்து. வில் இடு - ஒளி வீசுகின்ற. வேரம் - செய்குன்று; செல்வர்கள் விளையாடிப் பொழுதுபோக்க அமைத்துக் கொள்ளும் கட்டுமலை. சில் இடம் - மிகச் சிறிய பாகம். தெய்வ இலங்கை - தெய்வத்தன்மையுள்ள லங்கா பட்டணம். ]

'அரசே! அக்குரங்கின் சேட்டையைச் சொல்லால் வெளியிடுவது எளிதன்று. காலாலும். கையாலும் அது துகைத்து விட்டது சோலையை—புல்லும் அதில் ஒட்டிய தூளும் இல்லாமல் தவிடு பொடியாக்கி விட்டது. பிறகு—என்ன அநியாயம்—எஜமான் விளையாடக் கட்டியிருந்த அந்தச் செய்குன்றையும் வேரோடு பறித்து வீசிவிட்டது ஊர் மீது!' என்று சொல்லி வந்தவர்கள், 'அதனால், இலங்கையும் சிதைந்தது!' என்று விண்ணப்பம் செய்து கொள்கிறார்கள்.

ராட்சஸ பூமியைத் தேவர்களே 'தெய்வ இலங்கை' என்று புகழ்கிறார்கள். அத்தகைய இலங்கையைக் குரங்கு அழித்துவிட்டது என்றுகூட

இவர்கள் சொல்லத் துணியவில்லை. குரங்கை வியாஜமாகக் கொண்டு தெய்வ இலங்கை தானாகவே சிதைந்து போய்விட்டதாகக் கதை பண்ணுகிறார்கள்.

ஆனால், தன் அரண்மனை அழியவில்லை, சிதையவில்லை என்பதுதான் ராவணனுக்குத் தெரியுமே! ஆகவே, அதுபோன்ற சில இடங்கள் தவிர இலங்கை சிதைந்தது என்கிறார்கள் :

> 'சில்இடம் ஒழியத் தெய்வ
> இலங்கையும் சிதைந்த(து)!' என்றார்.

எவ்வளவோ சாமர்த்தியமாய்ப் பேசுவதாக எண்ணம். எப்படிப் பேசினாலும் பத்துத்தலை ராவணனை ஏமாற்ற முடியுமா? இவர்கள் கூட்டியும் பெருக்கியும் 'அதிகப் பிரசங்கம்' செய்ததால், ராவணனுக்கு அவநம்பிக்கை அதிகப்படுகிறது.

ஒருவன் நம்மிடம் வந்து, 'ஒரு பசு, இரட்டை வால், ஐந்து கால்கள், ஆகாச மைதானத்திலே மேய்ந்து கொண்டிருக்கிறது; நான்தான் பார்த்தேன்!' என்று சொன்னால், நாம் நம்புவோமா? வேறொருவன் ஓடி வந்து, 'குளத்திலே தீ! தீ!' என்று கூச்சலிடுகிறான். 'அந்தத் தீக்கு அஞ்சி அக் குளத்திலுள்ள மீன்களெல்லாம் கரையிலுள்ள புளிய மரத்தில் ஏறிக் கொண்டன!' என்றும் சொல்லுகிறான். நாம் நம்புவோமா? இப்படிப்பட்ட அவநம்பிக்கையைத்தான் ராவணனும் அடைந்திருக்கிறான்.

இலங்கை தானாக அழியுமா? இலங்கை சிதைந்தது உண்மையானால், குரங்குதான் சிதைத்திருக்க வேண்டும். தன்னுடைய உத்தியான வனத்தை யாரால் அழிக்க முடியும்? இவ்வாறு ஆலோசிக்கும் ராவணன்

'சோலையைப் பொடிபடச் செய்தது! இலங்கையையும் சிதைத்துவிட்டது! அப்படிச் செய்தது குரங்கு தான்! அந்தக் குரங்கும் ஒன்றுதான்!' என்று இவ்விதமாக எவ்வளவு அவநம்பிக்கையோடு தானும் தேவர்கள் சொன்னதைத் திரும்பச் சொல்கிறான் அநுவாதமாக :

'ஆடகத் தருவின் சோலை
பொடிபடுத்(து), அரக்கர் காக்கும்
தேடரும் வேரம் வாங்கி
இலங்கையும் சிதைத்த(து) அம்மா!
கோடரம் ஒன்றே! நன்(று)! இ(து)
இராக்கதர் கொற்றம்! சொற்றல்
மூடரும் மொழியார்!' என்ன
மன்னனும் முறுவல் செய்தான்.

[ஆடகத் தரு - பொன்மயமான தருக்கள். தேடரும்-எங்கே தேடினாலும் காணுதற்கு அரிய; மிக அபூர்வமான. வாங்கி - பறித்து. அம்மா - ஆச்சரியம். கோடரம்-குரங்கு ; மரப் பொந்திலும் மரக் கிளையிலும் உள்ள பிராணி. நன்று - சபாஷ். கொற்றம் - வெற்றி. சொற்றல் - சொல்லுதல், பேச்சு. மொழியார் - சொல்ல மாட்டார்கள். முறுவல் செய்தான் - சிரித்தான்.]

'சோலையாவது தேவர் காவல் ; அரக்கர் காக்கும் செய்குன்றும் வேரோடு பறிக்கப்பட்டதாம் ; இலங்கையும் சிதைக்கப் பெற்றதாம். எத்தனை விநோத விபரீதங்கள்! எனினும் குரங்கு ஒன்றே! பலே! இது

தான் ராட்சஸர் வெற்றி! எந்த முட்டாளும் இந்த விதமாகப் பேச மாட்டானே!' என்று பரிகாசமாகச் சிரிக்கும் ராவணன், அந்தப் பருவத் தேவர்களை முட்டாளைவிட மோசமான ஆசாமிகளென்றும், வடிகட்டின அயோக்கியர்களென்றும், முதல்தரமான பொய்யர்கள் என்றும் தீர்மானிக்கிறான்.

குரங்கைத் தேவர்களைப்போல் 'குரங்கு' என்று வாயால் சொல்லவும் கூசுகிறான் ராவணன். 'மரக்கிளைகளில் சஞ்சரிக்கும் பிராணி' என்றும், மரப்பொந்தில் ஒளித்துக் கொள்ளும் பிராணி' என்றும் பொருள்படத்தக்க 'கோடரம்' என்ற பரிபாஷையால் குறிப்பிடுகிறான்.

தேவர்கள் பின்னும் குரங்கின் பெருமையைக் குறித்துப் பிற்காலத் தமிழ்க் கவிராயர்களின் தோரணையில் கற்பனை செய்யத் தொடங்குகிறார்கள். 'கேளீர் ராவணேச்வரரே! அந்தக் குரங்கையா நாங்கள் புகழ்வது? அதைச் சுமக்கும் சக்தி இருக்கிறதே பூமிக்கு என்று இந்தப் பூமியை அல்லவா புகழ வேண்டும்!'—என்றெல்லாம் குரங்கின் திருப்புகழ் பாடுகிறார்கள். இவர்களுடைய வசனத்தையே நம்பாத ராவணன் இந்தக் கவிதா சக்தியைத்தானா பாராட்டப் போகிறான்? கவிதைக்கும் ராவணனுக்கும் வெகு தூரம்!

அவன் நம்பவே இல்லை என்று தெரிந்துகொண்டதும், கடைசியாக ஒரு வார்த்தை சொல்லுகிறார்கள். 'குரங்கு என்று சொல்லாமல் மும்மூர்த்திகளில் ஒரு மூர்த்திதான் என்று நாங்கள் சொல்லியிருக்கலாம்.

ஆனால் அது குற்றம், அவமானம்! யாருக்கு? மூர்த்தி களுக்கு அன்று, குரங்கிற்குத்தான்! அவமானத்திலும் முடிவில்லாத அவமானம்!' என்கிறார்கள்.

இப்படிச் சொல்லித் தேவர்கள், 'எஜமானே! அப்பேர்ப்பட்ட குரங்கை இப்பேர்ப்பட்ட சக்ரவர்த்தி யாகிய தாங்கள் பார்க்க விஜயம் செய்யவேண்டும்!' என்று பிரார்த்திக்கிறார்கள். இப்போதே பார்க்க வரவேண்டும்!' என்று அவசரப்படுத்துகிறார்கள்:

> தேவர்கள் பின்னும், 'மன்ன!
> அதன்உருச் சுமக்கும் திண்மைப்
> பூவல யத்தை அன்றோ
> புகழ்வது? புலவர் போற்றும்
> மூவரின் ஒருவன் என்று
> புகல்கினும், முடிவி லாத
> ஏவம்! அக் குரங்கை ஐய,
> காணுதி இன்னே!' என்றார்.

[மன்ன - மன்னனே. உரு - உடம்பு. திண்மை - வலிமை. பூவலயம் - பூமண்டலம். புகழ்வது - புகழ வேண்டுவது. புலவர் - அறிஞர்கள். மூவரின் - திரிமூர்த்திகளில். புகல்கினும் - சொன்னாலும். ஏவம் - குற்றம்; (இங்கே) அவமானம். ஐய - ஐயனே. காணுதி - காண்பாய். இன்னே - இப்பொழுதே.]

குரங்கு ராவணனைப் பார்க்க முடியுமா? அவன் தான் அதைக் கண்ணெடுத்துப் பார்ப்பானா? குரங்குகளும் குரங்குகளின் தாயாதிகளான மனிதர்களும்

அந்த மகாராஜ்யத்திலே தீண்டத்தகாத ஜாதி மட்டு மல்ல, காணவும் தகாத ஜாதிகள்! (உணவு - ரூபத் தில் வரக்கூடுமே தவிர, மற்றப்படி கண்முன் வர முடியுமா?

மேலும் அந்தக் குரங்கைத்தான் ராவணன் பார்வைக்கு எப்படிக் கொண்டு வருவது? அது இங்கே வருமா? அது தானாகப் போய்விட்டால், அப் புறம் என்ன செய்வது? இந்தப் பிரகஸ்பதிகள் ராவணேச்வரனைத்தான் இப்போது குரங்கு-தரிசனத் திற்கு அழைக்கிறார்கள். ராவண தரிசனத்திற்குத் தேவாதி தேவர்களும் கைகட்டிக் காத்துக்கொண்டிருக் கும்போது, அப்பேர்ப்பட்ட சக்ரவர்த்தியை வானர தரிசனத்திற்கு அழைக்கத் துணிந்த அடிமைத் தேவர் கள் என்ன பாடுபடப் போகிறார்களோ? ராவண னுடைய அவநம்பிக்கைதான் எவ்விதமாய்த் தீரப் போகிறதோ ?

இப்படி நாம் ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக்கும போதே, தீராத அவநம்பிக்கையும் தீர்ந்துபோகிறது; தேவர்களும் ராவண கோபத்திலிருந்து தப்பிவிடுகிறார் கள். ஏன்,—இத்தேவர்களைப்பற்றிய நினைவே மனத்தி லிருந்து நழுவி விடுகிறது.

அசோக வனத்தில் அழிவு வேலையைப் பூர்த்தி செய்துவிட்டு,

"தொண்டைவாய் அரக்கி மார்கள்
சூல்வயி(று) உடைந்து சோர

அண்டமும் பிளந்து விண்ட
தாம்என, அனுமன் ஆர்த்தான்.

[தொண்டைவாய - கொவ்வைக் கனிபோல் சிவந்த வாய். சூல் - கர்ப்பம். சோர - சோர்ந்து போக. அண்டம் - உலக உருண்டை. விண்டது - வெடித்தது. ஆர்த்தான் - ஆரவாரஞ் செய்தான்.]

ஹனுமான் செய்த கோஷத்தால் கர்ப்பிணிகளான அரக்கியர்களின் கர்ப்பமே கலங்கிப் போய் விட்டதாம். இலங்கையிலுள்ள வைத்திய சாஸ்திரிகள் ஓர் அறிக்கை வெளியிட்டால், பட்டணம் எங்கும் ஏற்பட்ட அந்த அவப்பிரசவங்களைப்பற்றி ஒரு குறிப்பு எழுதியிருப்பார்கள்!

பருவத் தேவர்களது வாக்கு வன்மையால் தீர்ந்து போகாத அவநம்பிக்கை - நோய்க்கு ஹனுமானது வீர கர்ஜனை ஓர் அருமருந்தாகிறது.

# 18. அழிந்தது கிங்கர சேனை

ஹனுமானுடைய வீரகர்ஜனை எப்படி வந்து ராவணனுடைய இருபது செவிகளையும் தாக்குகிறது!

அருவரை முழையில் முட்டும்
அசனியின் இடிப்பும், ஆழி
வெருவரு முழக்கும், ஈசன்
வில்இறும் ஒலியும் என்ன ;
குருமணி மகுட கோடி
முடித்தலை குலுங்கும் வண்ணம்,
இருபது செவியி னூடும்
நுழைந்த(து),அவ் எழுந்த ஓசை.

[அரு வரை முழை - ஜனசஞ்சாரமில்லாத மலையின் குகை. அசனி - இடி. ஆழி - சமுத்திரம். வெருவரு முழக்கும் - அச்சம் உண்டாகும்படி முழங்குகிற முழக்கமும். ஈசன் - சிவபெருமான். வில் இறும் ஒலி - வில் முறிந்ததனால் தோன்றிய ஓசை. குருமணி - சிறந்த இரத்தினங்கள். மகுட கோடி - கிரீடங்களின் வரிசை.]

இடி இடிக்கும்போது மேடைவீடும் ஜன்னல்களும் குலுங்குவதைப் பார்த்திருக்கிறோம். அப்படியே ஒரு பெரிய மலையில் இடி இடிக்கும்போது அங்குள்ள குகையே குலுங்கிப் போகிறது; அப்படி வந்து மோதுகிறது இடி முழக்கம். அந்த மாதிரி ஹனுமானுடைய வீரகர்ஜனை ராவணனுடைய செவிகளிலே வந்து

இடித்ததாம், சடசடவென்று. பிரசண்ட மாருதத்திலே அலைபடும் கடலின் கர்ஜனை போலவும் வந்து மோதினவாம் சப்த அலைகள். இந்த இயற்கை - நிகழ்ச்சிகளோடு, சிவதனுசை ராமன் முறித்த காலத்தில் உண்டான ஓசையையும் உபமானமாக்கிக் கதையைக் கண்முன் நிகழும் நிகழ்ச்சி போலக் காட்டுகிறான் கவிஞன்.

பத்துத் தலைகளையும் ஜாஜ்வல்யமாகப் பிரகாசிக்கும் கிரீட வரிசைகளோடு குலுக்கிவிட்ட ஓசைதான், காவல் - தேவர்களின் வாக்கு வன்மையால் அசையாத அவநம்பிக்கையையும் சிறிது அசைத்துவிடுகிறது.

இப்படி அசப்பிலே முடித் தலைகள் குலுங்கிய போதிலும், அந்த வீர உள்ளம் குலுங்கிவிடவில்லை, கலங்கவுமில்லை.

புல்லிய முறுவல் தோன்ற,
பொருமையும் சிறிது பொங்க,
எல்லையில் ஆற்றல் மாக்கள்
எண்ணிறந் தாரை ஏவி,
'வல்லையின் அகலா வண்ணம்
வானையும் வழியை மாற்றிக்
கொல்லலீர் குரங்கை! நொய்தின்
பற்றுதிர்! கொணர்திர்!' என்றான்.

[புல்லிய முறுவல் - அலட்சியமாக வந்த பரிகாசச் சிரிப்பு. எல்லையில் - எல்லையில்லாத. ஆற்றல் மாக்கள் - வலிமையுள்ள அந்த அரக்க வீர ஜனங்கள். வல்லையின் - விரைவிலே. கொல்லலீர் - கொன்றுவிடாத

வர்களாய். நொய்தின் - லேசாக. பற்றுதிர் - பிடியுங்கள். கொணர்திர் - கொண்டு வாருங்கள்.]

'குரங்குதானே!' என்று அலட்சியமான பரிகாசச் சிரிப்பு உதடுகளில் தோன்றுகிறது. 'அடிமைத் தேவர்கள் சொன்னது சரியாகப் போய்விட்டதே! குரங்கு அரக்கர் தலைநகரில் அரக்கர் கோனாகிய தன்னையும் அவமானஞ் செய்யத் துணிந்ததே!' என்பது போன்ற நினைப்பால் பொருமையும் சிறிது பொங்குகிறது உள்ளத்திலே. ராவணன் தன்னுடைய கிங்கரர்களை நோக்குகிறான்.

அவர்கள் முன்பு இவனோடு போய்த் திக்குவிஜயம் செய்த அனுபவசாலிகள். அவர்களில் ஒருவனை அனுப்பலாமென்றால், அவன்மீது சக்ரவர்த்திக்கும் பட்சபாதம் இருக்கிறதென்று மற்றவர்கள் நினைக்கக் கூடுமல்லவா? எனவே, ராவணன் பொதுவாக அந்த ராட்சஸப் படையைப் பார்த்து உத்தரவு போடுகிறான்.

'இவ்வளவு சாமர்த்தியமான குரங்கு எப்படியாவது ஓடிப்போய்விடுமோ?' என்பதுதான் இவனுடைய கவலை. எனவே, 'தப்பிப் போகும் வழிகளைத் தடுக்க வேண்டும்' என்கிறான். வேறொரு கவலையுங் கூட: 'குரங்கைப் பிடிக்கும் போது நீங்கள் லேசாகப் பற்றிக்கொள்ள வேண்டும்' என்று எச்சரிக்கை செய்கிறான். ஏன் அப்படி? கொஞ்சம் அழுத்திப் பிடித்தால் குரங்கு நசுங்கிப் போய்விடுமாம். ராவணனுக்குத்தான் என்ன கருணை! 'குரங்கைக் கொல்ல

வேண்டாம்' என்று கூடத் தெளிவாகச் சொல்கிறான். உயிரோடு உருப்படியாகப் பார்க்க விரும்புகிறான். தேவர்கள் பிரார்த்தித்தும் பார்க்க இசையாத அந்தக் 'குரங்கு மூஞ்சி'யை இப்போது பார்க்க வேண்டுமென்று தானாகவே தீர்மானிக்கிறான்.

ராவணேச்வரனுடைய கட்டளை எப்பேர்ப்பட்ட ஆசாமிகள் காதில் விழுகிறது, கேளுங்கள் :

'நானிலம் அதனின் உண்டு
போர் !' என நவிலின், அச்சொல்
தேனினும் களிப்புச் செய்யும்
சிந்தையர் ; தெரித்தும் என்னின்,
கானினும் பெரியர் ; ஓசை
கடலினும் பெரியர் ; கீர்த்தி
வானினும் பெரியர் ; மேனி
மலையினும் பெரியர் மாதோ !

[நானிலம் - மலை, காடு, நாடு, கடற்கரை என்ற நாலு பிரிவுகளையுடைய பூமி. நவிலின் - சொன்னால். தேன் - (இங்கே) மது, கள். தெரித்தும் என்னின் - தெரிந்து அறிவிப்போம் என்றால். கானினும் - காட்டைக் காட்டிலும்.]

என்று கவிஞன் அறிமுகப் படுத்துகிறான் அந்தப் பேர்வழிகளை.

உலகத்தில் எங்கேயாவது போர் என்றால் போதும். 'நாட்டிலோ, காட்டிலோ, கடலிலோ, மலையிலோ உண்டு போர் !' என்று யாராவது சொல்லிவிட்

டால் போதும். அந்தச் சொல் அரக்கரது சிந்தையில் தேனைக் காட்டிலும் களிப்புச் செய்கிறதாம்.

*செந்தமிழ் நாடெனும் போதினிலே - இன்பத்*
*தேன்வந்து பாயுது காதினிலே!*

என்று பாரதியார் தேசபக்தர்களைக் குறித்துப் பாடுகிறார். 'யுத்த பக்தர்'களான அரக்கர்களைக் குறித்து, கம்பன், 'போர்என நவிலின், அச்சொல்— தேனினும் களிப்புச் செய்யும் சிந்தையர்' என்று பாடுகிறான். ஆனால், இந்தத் 'தேன்' பாரதியார் கூறும் 'இன்பத் தேன்' அன்று.

அரக்கர் போரையும் விரும்புகிறார்; கள்ளையும் விரும்புகிறார். இந்தப் போர்வீரர்களுக்கு இரண்டு காதல். எனினும், கள்ளைக் காட்டிலும் அதிகமான 'கள்வெறி' கொடுப்பது போர். தாய்நாட்டின் பெயரைக் கேட்ட பொழுதே தேசபக்தர்களுக்கு இன்பம் பிறக்கிறது; போர் என்னுஞ் சொல்லைக் கேட்ட பொழுதே ராவண கிங்கரர்களுக்கு வெறி பிறக்கிறது, ஆவேசம் உண்டாகிறது.

'இறைவனைப் பேசாத நாளெல்லாம் பிறவாத நாளே!' என்பது பக்தமணிகளான செந்தமிழ்ப் பெரியோர் கொள்கை. 'போர் பெறாத நாளே பிறவாத நாள்!' என்பது போர்வெறி கொண்ட அரக்கர் மதம்.

போர் என்ற சொல்லே போதும்; யுத்தம் என்ற பொருளில்கூட அச்சொல்லை உபயோகித்திருக்க வேண்டாம். ஒரு குடியானவன், 'வைக்கோற் போர்'

என்னும் பொருளில் 'உண்டு போர்!' என்று சொன்ன போதிலும், இந்த அரக்கர்களுக்குப் போர்வெறி கிளம்பி விடுமாம். 'கஞ்சி வரதப்பா!' என்று காஞ்சீ புரத்தில் பக்தன் ஒருவன் வரதராஜப் பெருமாளின் திருப்பெயரைச் சொன்னதும், 'எங்கு வரதப்பா?' என்று பசியன் ஒருவன் கிளம்பி விட்டானும்: அப்ப டியே இந்தப் போர் வெறியர்களும்.

இப்பேர்ப்பட்ட போர்வீரர்கள் புறப்படுகிறார்கள் அணியணியாக, பட்டாளம பட்டாளமாக. நாமும் இவர்களைத் தொடர்ந்து செல்வோம் நம் கவிஞனது ஞான விமானத்திலே. ஒரு காடு புடை பெயர்ந்து போவது போலப் போகிறார்கள். என்ன நெருக்கம்! என்ன பரப்பு! அவர்கள் போகும் ஓசையைக் கவனித் தால், அலைகடலே பொங்கிப் போவது போலிருக்கிறது. இத்தகைய பட்டாளத்திலே ஒரு கிங்கரனைத் தனி யாக நோக்கினாலும், அவனும் பிரமாதமாய்க் காண் கிறான் மலைபோலே.

இந்த வீர கிங்கரர்களைக் 'காணினும் பெரியர்' என்றும, 'ஓசையிலே கடலினும் பெரியர்' என்றும், மேனியின் தோற்றத்திலே 'மலையினும் பெரியர்' என் றும் வர்ணிக்கும் கவிஞன், கீர்த்தியில் இவர்கள் 'வானினும பெரியர்' என்கிறான்.

இத்தகைய ஆசாமிகளையும் இவர்களுடைய நிமிர்ந்த தோற்றத்தையும் பரப்பையும், பரபரப்பை யும், போகும் போக்கையும், போகும்போதே இவர் களுடைய சைகைகளையும், இடிக்குரல்களையும் இன் னும் கொஞ்சம் கவனிப்போம்.

கட்டிய வாளர், இட்ட
கவசத்தர், கழலர்; திக்கைத்
தட்டிய தோளர், மேகம்
தடவிய கையர்; வானை
எட்டிய முடியர், தாளால்
இடறிய பொருப்பர்; ஈட்டிக்
கொட்டிய பேரி என்ன,
மழைஎனக் குமுறும் சொல்லார்.

[வாளர் - வாளாயுதத்தை உடையவர்கள். இட்ட - (உடம்பிலே) தரித்த. கழலர் - (காலில் இட்ட) வீரக் கழல் உடையவர்கள். தாளால் - கால்களால். பொருப்பர் - மலைகளை உடையவர்கள். ஈட்டி -ஒருங்கே சேர்த்து. பேரி - பேரிகை. மழை - (இங்கே) மேக கர்ஜனை யாகிய இடி. குமுறும் - முழங்குகிற.]

வீரக்கழல் பூண்டு, கவசம் தரித்து, அரையில் கட்டிய வாள்களும், 'திக்கையே தட்டிவிடும்!' என்று பிறர் நெஞ்சு பறையடிக்க நிமிர்ந்த தோள்களுமாய்ச் செல்லும் இந்த வீரப் பட்டாளத்தின் வர்ணனை ஆங்கில மகாகவி மில்டன் சாத்தானுடைய பரிவாரங் களைக் குறித்துச் செய்யும் வர்ணனையை ஞாபகப் படுத்துகிறது. கம்பனுடைய போக்கும் காம்பீர்யமும் பலஇடங்களிலும் மில்டனை நினைப்பூட்டுகின்றன.

ஆயுதங்களொடு ஆபரணங்களும் பயங்கர ஒளி வீச, கண்கள் கோபாக்கினி வீச, இவ்வளவு வேகமாய்ப் போகிறார்களே,— என் போகிறோம்?' என்பதுதான் தெரியுமா இவர்களுக்கு? 'எங்கே போகிறோம்?' என் பதுகூட இவர்களில் பெரும்பாலருக்கும் தெரியாது.

ராவணனுடைய கட்டளை சிலர் காதில்தான் விழுந்திருக்க வேண்டும். அவர்களுக்கும், 'குரங்கு என்ன செய்தது? அதை ஏன் பிடிக்க வேண்டும்?' என்பது தெரியாது. 'ஏன்?' என்று விசாரிப்பதும், 'என்ன?' என்று ஆலோசிப்பதும் படைவீரர் கடமையன்று. சொன்னதைச் செய்யவேண்டும், சாகவேண்டும்!—அவ்வளவுதானே போர்வீரர் வேலை. இந்தநிலையில் கிங்கரர் போய்க் கொண்டிருக்கும்போது, 'ஏன்?' என்று ஒரு போர்வீரன் பக்கத்தில் வரும் வேறொரு போர்வீரனைப் பார்த்துக் கேட்டு விடுகிறான்.

அப்புறம் என்ன நடக்கிறது? வினவுக்கு விடை கிடைக்கிறதா? அதுதான் இல்லை:

பொன்நின்று கனலும் தெய்வப்
பூணினர், பொருப்புத் தோளர்,
மின்நின்ற படையும் கண்ணும்
வெயில்விரிக் கின்ற மெய்யர்,
'என்?' என்றார்க்கு, 'என்?' என்றார்,
எய்தியது அறிந்தி லாதார்;
முன்நின்றார் முதுகு தீயப்
பின்நின்றார் முடுகு கின்றார்!

[கனலும் - விளங்குகின்ற. தெய்வப் பூணினர் - 'தெய்வத்தன்மை வாய்ந்தவைகளோ?' என்று பிரமிக்கும்படி வேலைப்பாடுஅமைந்த ஆபரணங்களை உடையவர்கள். பொருப்புத் தோளார் - மலைபோலப் பருத்து ஓங்கிய தோள்களை உடையவர்கள். மின் - மின்னல். படை - ஆயுதங்கள். மெய்யர் - உடம்பை உடையவர்.

என் - என்ன. எய்தியது - சம்பவித்தது. முடுகின்ருர் - விரைந்து போகிருர்கள்.]

'என்ன சமாசாரம்? நாம் ஏன் கொல்ல வேண்டும்? ஏன் கொல்லப்பட வேண்டும்? தெரிந்து கொள்ளலாமே!' என்ற ஆலோசனை எப்படியோ அந்தக் கிங்கரப் பெருவெள்ளத்தின் ஒரு மூலையில், ஒரு மூளையில், உதயமாகி விடுகிறது. அப்படி ஒரு கேள்வி போடலாம் என்பதே இப்போதுதான் மற்றவர்களுக்கும் தெரிகிறது. ஒருவன் 'என்ன?' என்றதும், ஏக காலத்தில் ஆயிரம் கண்டங்கள், 'என்ன? என்ன?' என்று எதிரொலிக்கின்றன. நடந்தது இன்னதென்று தெரியாது. நின்று யோசிக்கவோ நேரமில்லை. யாராவது ஆலோசனை செய்துகொண்டு நிற்கத் துணிந்தால், அவர்கள் முதுகு தேய்ந்து காந்திப் போகும்படி பின்னே வருகிறவர்கள் விரைந்து மோதுகிருர்கள். இப்படி ஒருவரையொருவர் நெட்டித் தள்ளிக் கொண்டு கொலைக்களம்—ஆம், போர்க்களம்தான்—சேர்ந்துவிடுகிருர்கள், கசாப்புக் கிடங்கிற்குத் தள்ளிக் கொண்டு போகும் ஆடுகளைப் போல.

மீண்டும் ஹனுமானுடைய கோர தாண்டவத்தைப் பார்க்கிரேம. அப்போது அழிந்தது சோலை; இப்போது அழிகிறது கிங்கர சேனை! ஆனல், இந்தக் கிங்கரர்களுடைய வீர சாகஸத்தைத்தான் என்னென்பது?

எஞ்சல் அக்கணத்து அறிந்திலம்!
இராவணன் ஏவ,

நஞ்சம் உண்டவ ராம்என ,
அனுமன்மேல் நடந்தார்,
துஞ்சி னர்அல்லது யாவரும்
மறத்தொடும் தொலைவுற்று
அஞ்சி னர்இல்லை ! அரக்கரில்
வீரர் மற்று யாரே ?

[எஞ்சல் - (தொகையில்) குறைவது. அறிந்திலம் - அறிந்தோம இல்லை. அனுமன் மேல் நடந்தார் - ஹனுமானைத் தாக்கச் சென்றவர்கள். துஞ்சினர்கள் - செத்தார்கள். மறம் - பராக்கிரமம். தொலைவுற்று - தொலைந்துபோய். அரக்கரில் - அரக்கர்களைக் காட்டிலும். வீரர் மற்று யாரே - வீரர்கள் வேறு யாரே.]

ஹனுமான் கொல்லக் கொல்ல அந்தக் கிங்கர சேனை குறைந்து வந்தது கடைசி க்ஷணம் வரையில் நமக்குத் தெரியவில்லை. ஒருவன் செத்ததும், அந்த ஸ்தானத்தில் பின்னே இருந்து வேறொருவன் வந்து குதிக்கிறான்; முன்னணி ஒன்று நாசமடைந்தால், பின்னணி ஒன்று அதே ஸ்தானத்தை வகிக்கிறது. ஒரு பட்டாளம் அழிந்ததும், அதே இடத்தில் வேறொரு பட்டாளத்தைப் பார்க்கிறோம். ஆ, என்ன ராஜவிசுவாசம் ! என்ன ராவணபக்தி !

இதுவரையில் இவர்கள் பார்த்த போர்முறை வேறு ; இது வேறு. நஞ்சை உண்டவர்களுக்கு மரணம் எப்படி நிச்சயமோ, அப்படி நிச்சயம் ஹனுமானை எதிர்ப்பட்டவர்களுக்கும் — என்பது நன்றாகத் தெரிந்து விட்டது. எனினும் அவர்கள் அஞ்சினர்

ளா? எதிர்த்து நின்று செத்து விழுந்தார்களே அல்லாமல், ஒரு கிங்கரனாவது முதுகு காட்டியதுண்டா? கொஞ்சமாவது பின்வாங்கியதுண்டா? இப்படிப் பட்ட அரக்கர்களைக் காட்டிலும சிறந்த வீரரும் உண்டோ என்று அதிசயிக்கிறோம். அந்தப் போரில் ராவணனிடம் போய் நடந்ததைச் சொல்வதற்குக் கூட ஒரு கிங்கரனும் தப்பிப் பிழைக்கவில்லை. ராவணன் எப்படி அறியப் போகிறான்?

இந்தக் காட்சியைக் காவல் - தேவர்கள் எங்கேயோ ஒரு மூலையில் இருந்து பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள்தான் இருக்கிறார்களே செய்தி சொல்ல! அசோகவனம் அழிந்து விட்டதால், இப்போது பழைய காவல் உத்தியோகம்கூட இல்லை. எனவே, சாவோலை கொண்டுபோகும் புதிய உத்தியோகத்தில் அவர்கள் தம்மைத் தாமே நியமித்துக் கொள்கிறார்கள்.

## 19. அடிமைக் கூத்தும் அழிந்த செருக்கும்

காலுங் கையும் பின்னே இழுக்க, பயம் பிடரியைப் பிடித்துத் தள்ளுகிறது. வழி துறை பாராமல் எத்தனையோ பிணக் குவியல்கள் மீது எத்தனையோ குட்டிக்கரணம் போட்டு உருண்டுகொண்டே போகும் இந்தப் பேர்வழிகள் எப்படி ராவண சபையை அடையப் போகிறார்கள் ?

> பிந்து காலினர் கையினர்,
> பெரும்பயம் பிடரின்
> உந்த, ஆயிரம் பிணக்குவை
> மேல்விழுந்து உளைவார் !

[உந்த - தள்ள. உளைவார் - வருந்துவார்.]

ஆயினும், பெரும் பயம் இந்த 'நடைப்பிணங்'களை விரைவில் தள்ளிக்கொண்டு ஆஸ்தான மண்டபத்திலே சேர்த்து விடுகிறது. நாமும் 'ஞான விமான'த்திலே இந்தக் காவல் - தேவர்களைத் தொடர்ந்து போய் —பிணக்காடுகளைக் கடந்து போய் —ராவண சன்னிதானத்திலே இவர்கள் படும் பாட்டைப் பார்க்கிறோம்.

> விரைவின் உற்றனர்,விம்மினர்,
> யாதொன்றும் விளம்பார்,
> கரதலத்தினால் பட்டது
> கட்டுரைக் கின்றார் ;

தரையில் நிற்கிலர், திசை தொறும்
நோக்கினர், சலிப்பார் :
அரசன் மற்(று)அவர் அலக்கணை
உரைசெய அறிந்தான்.

[உற்றனர் - வந்து சேர்ந்தார்கள். விம்மினர் - தேம்பி அழுதார்கள். விளம்பார் - சொல்லமாட்டாதவர்களாய். கரதலம் - (இங்கே) கைகளின் சைகை. கட்டுரைக்கின்ருர் - உறுதியாகச் சொல்லுகிருர்கள். சலிப்பார் - அசைந்து ஆடுபவராஞர்கள். அலக்கண் - அவஸ்தை.]

குழந்தைகளைப்போல் தேம்பித் தேம்பி அழுகிருர்கள். கிங்கரர் பட்டதும், தாங்கள் பட்டு வந்ததும், வாய் பேச மறுக்கக் கைஜாடை செய்துதான் காட்ட வேண்டியிருக்கிறது. ஊமைகளாகி விட்டார்களா? ஒரு வார்த்தைகூட வரவில்லையே! ஒரே இடத்தில் நின்று அபிநயம் காட்டிக் கருத்தை வெளியிடுவதும் சாத்தியமாக இல்லை. தரையில் நிற்பதே அசாத்தியமாகத் தோன்றுகிறது. நாலு திசைகளையும் ஏன் அப்படி மருண்டு பார்க்கிருர்கள்? எந்தத் திக்கிலிருந்து குரங்கு வந்து குதித்துவிடுமோ என்ற பயம், ராவண பயத்தோடு சேர்ந்து, தேவர்களை இந்தப் பேயாட்டம் ஆட்டிவைக்கிறது. இந்தத் துன்பக் கூத்தே விஷயத்தை ஒறுவாறு சக்ரவர்த்திக்கு அறிவிக்கிறது.

ஆனல், ராவண கிங்கரர்கள் செத்துப் போயிருக்க முடியுமா? குரங்கோடு போர் செய்யச் சொன்னதால், தன் ஆணையை இகழ்ந்து போய்விட்டார்களா? அதையும் நம்ப முடியவில்லை. ராஜபக்திக்குப் பேர்போன

ராஜ சேவகர்கள் அல்லவா? ஒருவேளை போரில் தோற்று அவமானம் பொறுக்க முடியாமல் பரதேசி களாகப் போய்விட்டார்களா? அப்படியானால், மனைவி மக்களையும், முக்கியமாகத் தங்கள் சக்ரவர்த்தி யாகிய ராவணேச்வரனையும் எப்படி மறந்தார்கள்? இந்த மூன்று கேள்விகளுக்கும் உடனே பதில் வராத தால், 'அப்படி ஒன்றும் இல்லையானால், நீங்கள் ஏன் வந்தீர்கள்?' என்ற நாலாவது கேள்வியையும் ஆத் திரமாகத் தொடுத்து விடுகிறான். கேள்வியா கேட் கிறான்? நெஞ்சிலே கர்வம் பொங்க, வாய்கள் நெருப் பைக் கக்குகின்றன!

'இறந்து நீங்கின ரோ? இன்(று)என்
ஆணையை இகழ்ந்து
துறந்து நீங்கின ரோ? அன்றி,
வெஞ்சமர் தொலைந்தார்
மறந்து நீங்கின ரோ? என்கொல்
வந்த(து)?' என்(று) உரைத்தான்,
நிறம்செ ருக்குற வாய்தொறும்
நெருப்(பு)உமிழ் கின்றான்.

[வெஞ் சமர் - கொடிய போர். தொலைந்தார் - தோற் றவர்களாய். என்கொல் - ஏன்; என்ன. நிறம் - (இங்கே) மார்பு; நெஞ்சு. செருக்கு உற - கர்வம் அதிகரிக்க.]

கிங்கரர்கள் செத்துப்போனார்கள் என்பதைப் பட்டவர்த்தனமாக உடனே சொல்லத் தேவர்களுக்கு

நெஞ்சுத் துணிவில்லை. கிங்கரர்களின் கோபத்தைக் கொஞ்சம் வர்ணித்துவிட்டு, 'சிறு குரங்கோடு சண்டை போடுவதா என்று அவர்கள் வருந்தவில்லை. போர்முனையில் அஞ்சி முதுகு காட்டவுமில்லை!' என்று தலையைச் சுற்றி மூக்கைத் தொடும் சம்பிர தாயமாகப் பேசுகிருர்கள். இனி, ராவணன் நடந் ததை ஊகித்துக் கொள்ளலாமல்லவா? அதற்கும் உடனே இடங்கொடாமல், நீதி மன்றத்தைக் குறித்து ஏதோ கதை படித்த பின்புதான் விஷயத்தைச் சொல் கிருர்கள்.

'புலம்தெரி பொய்க்கரி
புகலும் புன்கணர்
குலங்களின் அவிந்தனர்,
குரங்கி ருல்!' என்ருர்.

[புலம் - அறிவு. கரி - சாட்சி. புன்கண் - துன்பம்.]

'நீதிமன்றம் ஏறி நெஞ்சறியப் பொய்ச்சாட்சி சொல்லும் பேதைகளின் வம்சம் நாசமாவது போல், கிங்கரர்களும் கூட்டங் கூட்டமாக நாசமடைந்தார் கள், குரங்கிருலே!' என்று சொன்னபோது, அந்தப் பிரசங்கத்தின் சன்மார்க்கப் பகுதியை ராவணன் காது வாங்கிக் கொள்ளவேயில்லை. 'தோற்றவர் பேச்சு அது' என்பதுதான் அவனுக்குத் தெரியுமே!

இப்போது கிங்கரர் இறந்ததுகூட அவ்வளவு பெரியதாகத் தோன்றவில்லை. ஆனல், அந்தச் செய்தி சபா மண்டபத்திலே அவ்வளவு பகிரங்கமாக அறிவிக்

கப்படுவதற்கு ஏகாதிபத்திய இறுமாப்பு எப்படி இடம் கொடுக்கும்?

ஏவலின் எய்தினர்
 இருந்த எண்திசைத்
தேவரை நோக்கினன்,
 நாணும் சிந்தையான்,
'யாவ(து)என்று அறிந்திலிர்
 போலு மால்?' என்றான்.

[அறிந்திலிர் போலும் - அறியவில்லை போலும். ஆல் - அசை.]

அங்கே அவனுடைய உத்தரவினால் அஷ்டதிக்குப் பாலகர்களும் ஏதோ ஒரு காரியமாக ஆஜராயிருந்தார்கள். அவர்கள் முன்னிலையிலே எவ்வளவு அசந்தர்ப்பமாகக் காவற்காரர்கள் செய்தி சொல்லிவிட்டார்கள்! 'என்ன நினைக்கிறார்களோ?' என்று ராவணன் ஒரு க்ஷணம் அந்த அன்னியர்களை நோக்குகிறான்; வெட்கம் மனசைத் தின்னுகிறது. அடிமைத் தேவர்களைப் பார்த்து, 'நடந்தது இன்னதென்று நீங்கள் அறியவில்லை போலும்!' என்று அதட்டுகிறான்.

பயம் அதிகப்படுகிறது; ஒன்றும் பதில் சொல்லாமலே ஏங்குகிறார்கள். இந்த மௌனத்தால் ராவணனுக்குக் கொஞ்சம் நம்பிக்கை பிறக்கிறது. ஒரு வேளை இந்தப் பயங்காளிகள் நேரில் பார்த்திருக்க மாட்டார்கள் என்று நினைக்கிறான்.

நெஞ்சுத்துணிவில்லை. கிங்கரர்களின் கோபத்தைக் கொஞ்சம் வர்ணித்துவிட்டு, 'சிறு குரங்கோடு சண்டை போடுவதா என்று அவர்கள் வருந்தவில்லை. போர்முனையில் அஞ்சி முதுகு காட்டவுமில்லை!' என்று தலையைச் சுற்றி மூக்கைத் தொடும் சம்பிர தாயமாகப் பேசுகிறார்கள். இனி, ராவணன் நடந் ததை ஊகித்துக் கொள்ளலாமல்லவா? அதற்கும் உடனே இடங்கொடாமல், நீதி மன்றத்தைக் குறித்து ஏதோ கதை படித்த பின்புதான் விஷயத்தைச் சொல் கிறார்கள்.

'புலம்தெரி பொய்க்கரி
புகலும் புன்கணர்
குலங்களின் அவிந்தனர்,
குரங்கி னல்!' என்றார்.

[புலம் - அறிவு. கரி - சாட்சி. புன்கண் - துன்பம்.]

'நீதிமன்றம் ஏறி நெஞ்சறியப் பொய்ச்சாட்சி சொல்லும் பேதைகளின் வம்சம் நாசமாவது போல், கிங்கரர்களும் கூட்டங் கூட்டமாக நாசமடைந்தார் கள், குரங்கினலே!' என்று சொன்னபோது, அந்தப் பிரசங்கத்தின் சன்மார்க்கப் பகுதியை ராவணன் காது வாங்கிக் கொள்ளவேயில்லை. 'தோற்றவர் பேச்சு அது' என்பதுதான் அவனுக்குத் தெரியுமே!

இப்போது கிங்கரர் இறந்ததுகூட அவ்வளவு பெரியதாகத் தோன்றவில்லை. ஆனல், அந்தச் செய்தி சபா மண்டபத்திலே அவ்வளவு பகிரங்கமாக அறிவிக்

கப்படுவதற்கு ஏகாதிபத்திய இறுமாப்பு எப்படி இடம் கொடுக்கும்?

ஏவலின் எய்தினர்
இருந்த எண்திசைத்
தேவரை நோக்கினன்,
நாணும் சிந்தையான்,
'யாவ(து)என்று அறிந்திலிர்
போலு மால்?' என்றான்.

[அறிந்திலிர் போலும் - அறியவில்லை போலும். ஆல் - அசை.]

அங்கே அவனுடைய உத்தரவினால் அஷ்டதிக்குப் பாலகர்களும் ஏதோ ஒரு காரியமாக ஆஜராயிருந்தார்கள். அவர்கள் முன்னிலையிலே எவ்வளவு அசந்தர்ப்பமாகக் காவற்காரர்கள் செய்தி சொல்லிவிட்டார்கள்! 'என்ன நினைக்கிறார்களோ?' என்று ராவணன் ஒரு க்ஷணம் அந்த அன்னியர்களை நோக்குகிறான்; வெட்கம் மனசைத் தின்னுகிறது. அடிமைத் தேவர்களைப் பார்த்து, 'நடந்தது இன்னதென்று நீங்கள் அறியவில்லை போலும்!' என்று அதட்டுகிறான்.

பயம் அதிகப்படுகிறது; ஒன்றும் பதில் சொல்லாமலே ஏங்குகிறார்கள். இந்த மௌனத்தால் ராவணனுக்குக் கொஞ்சம் நம்பிக்கை பிறக்கிறது. ஒரு வேளை இந்தப் பயங்காளிகள் நேரில் பார்த்திருக்க மாட்டார்கள் என்று நினைக்கிறான்.

'வீட்டியது அரக்கரை
என்னும் வெவ்வுரை
கேட்டதோ, கண்டதோ?
கிளத்து வீர்!' என்றான்.

[வீட்டியது - கொன்றது. வெவ்வுரை - கொடுமையான வார்த்தை. கிளத்துவீர் - சொல்லுங்கள்.]

'குரங்கு' என்ற வார்த்தையை வாயால்கூட ராவணன் உச்சரிக்கக் கூசுகிறான். கிங்கரர் வதமான கொடுமையும் ஒரு கொடுமையாகத் தோன்றவில்லை. அதை ராஜபோகத்திலும் கர்வத்திலும் ஊறிக்கிடக்கும் செவிகளிலே வார்க்கும் வார்த்தையே கொடிது! அந்த வார்த்தையையும் தன் குடைக் கீழ் ஒதுங்கி வாழும் அன்னியர் முன் முழக்கம் செய்வதென்றால், சக்ரவர்த்தியின் கௌரவம் எவ்வளவு தூரம் குறைந்து போகும்! இது அந்த மூடர்களுக்குத் தெரியுமா? இனியாவது கிங்கரர் வதத்தை நேரில் பார்க்கவில்லை யென்று ஒப்புக்கொள்ள மாட்டார்களா? பிறர் சொல்லக் கேட்டிருக்கலாம்; கேட்டதை நம்பியும் இருக்கலாம். 'கேட்டோம், காணவில்லை!' என்ற ஒரு வார்த்தை போதுமே, திசைத்தேவர் முன் கௌரவத்தைக் காத்துக்கொள்ள! நிபுணரான ஒரு வக்கீல் சாட்சி விசாரணை செய்வதுபோல், காவல் - தேவரை முகம் நோக்கி, 'கேட்டதோ, கண்டதோ? தைரியமாகச் சொல்லுங்கள்!' என்று நயமும் பயமுமாக எச்சரித்துத் தந்திரமாகக் குறுக்குக் கேள்வி போடுகிறான்.

ராவணனது நிலையும் ராஜதந்திரமும் காவல் - தேவர்களுக்கு விளங்கவில்லை. முழு மூடர்கள் என்று

அவ்ன் பட்டம் சூட்டி வைக்கும்படி அவர்கள் பளிச் சென்று உண்மையைக் கக்கிவிடுகிறார்கள். 'கேட்டதோ, கண்டதோ?' என்ற கேள்வியை வைத்துக் கொண்டு, அந்தாதி பாடும் புலவர்களைப்போல், இந்த அடிமைத் தேவர்களும்,

'கண்டனம் ஒருபுடை
நின்று கண்களால்:
தெண்டிரைக் கடல்என
வளைந்த சேனையை,
மண்டலம் திரிந்(து)ஒரு
மரத்தி னல்அடித்(து)
உண்ட(து)அக் குரங்(கு); இனம்
ஒழிவது அன்று!' என்றார்.

[புடை - பக்கம். தெண்டிரை - தெளிவான அலை. உண்டது-உயிரை உண்டுவிட்டது. இனம் - இன்னம்.]

'ஒரு பக்கத்திலே ஒதுங்கி மறைந்திருந்து கண்டோம்; இல்லாவிட்டால் நாங்கள்மறைந்தே போயிருப்போமே!' என்று தங்கள் சாமர்த்தியத்தைத் தாங்களே மெச்சிக் கொள்கிறார்கள். சொந்தக் கண்களாலேயே பார்த்துவிட்டார்களாம்! பிறர் கண்களை இரவல் வாங்கிக் கொள்ளவில்லையாம்! இவ்விதமாகத் தொடங்கிய வேகத்திலே, அவர்கள் மனசிலே கிடந்த போர்க் காட்சி, ஒரு பேசும் படக்காட்சியாகப் புறப்படுகிறது. கிங்கர சமுத்திரம் விரிந்து பொங்கி வளைந்துகொண்டு அலைமேல் அலையெறிந்து மோதி

யதும், நடுவிலே அகப்பட்டுக்கொண்ட குரங்கு—பட்ட பாடு—இல்லை, படுத்திய பாடு!—ஆம்,மரமும் கையுமாக மண்டலமிட்டுச் சுழன்றதும், அந்த ஒரேமரம்அத்தனை உயிர்களையும் அதிசயமாக உண்டுவிட்டதும், ராவண சபையில் அப்படியே பிரத்தியட்ச மாகிவிட்டன: 'அந்தக் குரங்கு இன்னமும் அங்கேதான் இருக்கிறது; சனியன் ஒழிந்தபாடில்லை!' என்று காவற்காரர் சொல்லி முடித்ததும், ராவண கோபத்தைச் சொல்ல வேண்டுமா?

நல்ல வேளை, கோபப் பார்வை தேவர்கள் பக்கம் திரும்பாமல், தற்செயலாக ஒரு ராட்சஸ வீரன் மீது விழுகிறது. உத்தரவை எதிர்பார்த்துக் கைகூப்பி நின்று, பாம்பைப்போல் சீறிக்கொண்டிருக்கிறான் அவன். 'அடா ஜம்புமாலி, நீ குரங்கைப் பிடித்துவா!' என்று கட்டளையிடுகிறவன் எவ்வளவு ஜாக்கிரதை யாக இப்போது பேசுகிறான் பாருங்கள் :

கூம்பின கையன், நின்ற
குன்றெனக் குவவுத் திண்தோள்,
பாம்(பு)இவர், தறுகண் சம்பு
மாலிஎன் பவனைப் பாரா,
'வாம்பரித் தானை யோடு
வளைத்(து)அதன் மறனை மாற்றித்,
தாம்பினில் பற்றித் தந்(து)என்
மனச்சினம் தணித்தி!' என்றான்.

[கூம்பின - கூப்பின. குவவுத் திண்தோள் - திரண்ட வலிய தோள்கள். பாம்பு இவர் - பாம்பை ஒத்த. தறு

கண் - அஞ்சாமைக் குணம். பாரா - பார்த்து. வாம்பரி - தாவிச்செல்லும் குதிரை. தானை - சேனை. மறன் - வலிமை. தாம்பு - கயிறு. தணித்தி - தணியச் செய்வாய்.]

'நீ உன் குதிரைப் படையோடு போய்க் குரங்கை வளைத்துப் பிடித்துக்கொண்டு வந்து என்னிடம் தந்து என் கோபத்தைத் தணிக்க வேண்டும்!' என்று கட்டளையிட்டு, அந்தக் குரங்கைக் கட்டச் சரியான கயிறு கொண்டுபோக வேண்டும் என்பதையும் ஞாபகப்படுத்துகிறான். ராணுவ நிபுணர்கள் அற்ப விஷயங்களையும் முன்கூட்டியே ஜாக்கிரதையாகக் கவனிப்பார்கள் அல்லவா?

இப்போது ஜம்புமாலியின் குதூகலத்தைத்தான் என்னென்பது? கவிஞன் காட்டும் ஜாலக்கண்ணாடியில் அந்த ஜம்புமாலியின் முகத்தோடு அகத்தையும் பார்க்கிறோம்:

ஆயவன் வணங்கி, ' வீரம்
அளக்கரும் அளக்கர் முன்னர்,
'' நீஇது முடித்தி !'' என்று
நேர்ந்தனை நினைவின் எண்ணி
ஏயினை என்னைப் பெற்றால்,
என்னின்யார் உயர்ந்தார் ?' என்னாப்
போயினன், இலங்கை வேந்தன்
போர்ச்சினம் போவது ஒப்பான் !

[ஆயவன் - அந்தச் சம்புமாலி. வீரம் அளக்கரும் அளக்கர் - அளத்தற்கு அரிய வீர சமுத்திரம். முடித்தி -

முடிப்பாய். நேர்ந்தனை - சம்மதித்தவனாய். ஏயினை - ஏவி னாய். என்னப்பெற்றால் - என்று கூறும் பாக்கியத்தைப் பெற்றேனானல். என்னின் -என்னைக்காட்டிலும். என்னா- என்று எண்ணிக் கொண்டே.]

'ராவணன் முன் பொங்கிக்கொண்டிருக்கும் இந்த வீர சமுத்திரத்திலே நான் யார்? ஒரு திவலைதானே! இந்தத் திவலையைப் பார்த்துச் சக்ரவர்த்தி, பட்சபாத மாக, மற்றவர்கள் எதிரே, "நீதான் இதைச் செய்து முடிப்பாய்!" என்று நிச்சயித்துவிட்டான் அல்லவா? அவனுடைய நினைவிலேதான் என்னைப்பற்றி எவ் வளவு மதிப்பு! இவ்வளவு பாக்கியத்தைப் பெற்ற என்னைக் காட்டிலும் உயர்ந்தவர் யார்?' என்று எண்ணமிட்டுக்கொண்டே போகிறான்? ஜம்புமாலியா போகிறான்? பிரதாப லங்கேச்வரனுடைய போர்ச் சினமல்லவா அப்படி உருவெடுத்துக் குதிரைமேல் குதித்து ஓடுகிறது!

ஜம்புமாலியின் குதிரைகள், குதிரை வீரர்களுக் கிடையே ஹனுமானுடைய உக்கிர தாண்டவத்தை மீண்டும் பார்க்கிறோம். படைகள் அழிந்து, தனிப் பட்ட ஜம்புமாலியிடம் ஹனுமான் பரிவு காட்டுவதை யும், அந்த இரக்கம் அவனைச் சமாதானப் படுத்து வதற்கு மாறாகக் கோபாவேசத்தையும் வீராவேசத்தை யும் விசிறிவிடுவதையும் வியந்து பார்த்துக் கொண் டிருக்கும் போதே, விரைவில் ஜம்புமாலி வதமாகி, காவல் தேவர்கள் மீண்டும் சாவோலை கொண்டு புறப்படுகிறார்கள். 'சபாமண்டபத்தில் தெரிவிக்கக் கூடிய விஷயமல்ல இது!' என்பதை இதற்குள் பாட

மாகப் படித்துக் கொண்டார்கள். எனவே இரகசிய மாகச் சக்ரவர்த்தியிடம் சொல்ல வேண்டுமென்று அரண்மனைக்குள்ளே போகிறார்கள்.

புக்கார் அமரர் பொலம்தார்
அரக்கன் பொருவில் பெருங்கோயில்,
விக்கா நின்றார், விளம்பல்
ஆற்றார், வெருவி விம்முவார் ;
நக்கான் அரக்கன், ' நடுங்கல் !'
என்றான் ; 'ஐய ! நமர்எல்லாம்
உக்கார், சம்பு மாலி
உலந்தான், ஒன்றே குரங்கு !' என்றார்.

[புக்கார் - புகுந்தார். அமரர் - தேவர்கள். பொலம் தார் - பொன் மாலை. பொருவில் - ஒப்பற்ற. பெருங் கோயில் - (இங்கே) பெரிய அரண்மனை. விக்கா நின் றார் - விக்கிக்கொண்டு நின்றார்கள். விளம்பல ஆற்றார் - பேச முடியாதவர்களாய். வெருவி - பயந்து. நக்கான் - சிரித்தான். நடுங்கல் - நடுங்காமல் நில்லுங்கள். நமர் - நம்மவர் ; நம்முடைய பந்துககள். உக்கார் - செத்தார். உலந்தான் - அழிந்தான்.]

சபையிலாவது கூட்டத்திலே ஏதேதோ சொல்லி விட்டார்கள். தனியாயிருந்த அந்த லோக - பயங் கரனைப் பார்த்ததும், பயம் எவ்வளவோ அதிகப்படு கிறது! தொண்டை விக்கிக்கொள்கிறது ; பேச்சு வர வில்லை ; அழுகைதான் வருகிறது! ராவணனுக்கோ சிரிப்பு வந்துவிடுகிறது. ஆ, இரக்கம் தெரியாத அந்த ராட்சஸச் சிரிப்பு! ' நடுங்காதே, நேரே நில் !' என்று ராணுவதோரணையில் எழுந்த கொக்கரிப்புநடுக்கத்தை

அதிகப்படுத்துகிறது. எப்படியாவது செய்தி சொல்லி விட்டு ஓடப்பார்க்கிறார்கள். 'ஐயனே! நம்மவர்களெல்லாம் செத்துப்போனார்கள். ஜம்புமாலியும் போய் விட்டான்!' என்று உருகிப்போகும் இந்த அடிமைகளுக்கு ராட்சஸர்கள் எப்போது பந்துக்களானார்கள்? செத்த பிணங்களோடு இந்தச் சாகாப் பிணங்கள் உறவாடும் மர்மம் என்ன? அவசரப்படாமல் பின்னால் தெரிந்து கொள்வோம்.

தாங்கள் சொன்ன செய்திக்கு, 'ஒன்றே குரங்கு!' என்று ஒரு கொடுக்கும் வைத்து விடுகிறார்கள். அதற்கு உதவிப் படை ஒன்றும் வந்துவிடவில்லை என்பது தான் அவர்கள் கருத்து.

ராவணனுக்கு வந்த கோபத்தில், 'நானே குரங்கைப் பிடிப்பேன்!' என்று துடிக்கிறான்:

என்னும் அளவின், எரிந்து
வீங்கி எழுந்த வெகுளியான்,
உன்ன உன்ன உதிரக்
குமிழி விழியூ(டு) உமிழ்கின்றான்,
'சொன்ன குரங்கை யானே
பிடிப்பன், கடிது தொடர்ந்(து)' என்று,
அன்ன(து) உணர்ந்த சேனைத்
தலைவர் ஐவர் அறிவித்தார்.

[என்னும் அளவின் - ('ஒன்றே குரங்கு') என்றெல்லாம் தேவர்கள் செய்தி தெரிவித்தபோது. வெகுளியான் - கோபத்தையுடைய ராவணன். உன்ன உன்ன - (நடந்ததை) நினைக்க நினைக்க. உதிரம் - இரத்தம். விழியூடு - விழிகளின் வழியாக. கடிது - விரைவாக. அன்னது - அது. தலைவர் ஐவர் - பஞ்ச சேனாபதிகள்.]

· நல்லது, திரிலோக சக்ரவர்த்தியான லங்கேசன் போய்க் குரங்கு பிடிப்பதா? அவனுடைய சேனைத் தலைவர் ஐவருக்கும் ஒரே ஆத்திரம்: 'கருடன் கொசு மீது படையெடுப்பது போல, நீ அற்பக் குரங்கின்மேல் சண்டைக்குப் போகலாமா? உன் தோளை நினைத்து நினைத்து அல்லும் பகலும் குலுங்கிக் கொண்டிருக் கிறதே, அந்தக் கைலயங்கிரி, இனிமேல் அப்படிச் செய்யுமா?' என்று சொல்லிப் புறப்படுகிறார்கள் பஞ்ச சேனாபதிகள், 'நாங்களே குரங்கைப் பிடித்து வருவோம்!' என்று.

அந்த ஆசாமிகள் அந்த ராணுவ மகா ராஜ்யத் திலே முதன்மையான ஸ்தானம் வகிப்பவர்கள்:

> உலகம் மூன்றிற்கும் முதன்மைபெற்
> றோர்என உயர்ந்தார்,
> திலகம் மண்ணுற வணங்கினர்,
> கோயிலின் தீர்ந்தார்.

[திலகம் - நெற்றியில் அணிந்துகொள்ளும் வட்டப் பொட்டு. மண்ணுற - தரையில் படும்படி. கோயிலின் தீர்ந்தார் - அரண்மனையிலிருந்து வெளிப்பட்டார்கள்.]

ராவண மகாராஜ்யத்தின் முதல்வர்கள் என்று சொல் லத்தக்க அவர்கள் நெற்றியிலே வட்டப் பொட்டு அணிந்திருந்தார்களாம். அந்தத் திலகம் தரையில் படும்படி சக்ரவர்த்தியைச் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கி அரண்மனையிலிருந்து வெளிப்பட்டுப் போகி றார்கள்.

இவர்கள் எப்பேர்ப்பட்ட ராஜவிசுவாசிகள்!

'பால்நிறத்(து) அந்தணன்
பணிய னாகி, நின்
கோல்நினைத் திலன்!' என
உலகம் கூறலும்,
நீல்நிறத்(து) இராவணன்
முனிவு நீக்குவான்,
காலனைக் காலினில்
கையில் கட்டினார்!

[அந்தணன் - பிரமன். பணியன் - பணி அல்லது கட்டளையின்படி நடப்பவன். நீல் நிறம் - (இங்கே) கரு நிறம். முனிவு - கோபம.]

'சிருஷ்டிகர்த்தாவான பிரம்மதேவன் தானே நமக்கு எஜமான்!?' என்று ஒரு சமயம யமதர்மன் நினைத்து விட்டானும். பிரமலோகத்திலும் ராவணன் கொடிதான் பறக்கிறது என்பதை அந்தச் சமயம் மறந்துவிட்டானும். உண்மையில் அவன் அப்படி எண்ணினுனே, என்னவோ? உலக வதந்தி ஒன்று— ஏதோ பரதேசித் தபால்—அப்படி வந்ததாம். இந்த நினைப்பே துரோகம் என்று ராவணனுக்குக் கோபம பிறந்ததாம. அதை அவன் வெளியில் சொல்லவும் இல்லை. எனினும, அந்தக் கோபத்தை எப்படியோ மோப்பம் பிடித்துவிட்ட பஞ்ச சேனபதிகள் யமன் முன்னே போய்க் குதித்துவிட்டார்கள். அவனை எப்படித்தான் தண்டிப்பது என்று ஒரு க்ஷணம் யோசனை. 'காலன்' என்று ஒரு பெயர் இருப்பதால் காலில் கட்டினார்கள். கோபம் தணியாததால், கைகளை யும் கட்டி ராவணன் முன் கொண்டுவந்து போட்டார் களாம்.

இப்படிச் செய்யக் கூடியவர்கள்தான்!' என்பதற்கு இவர்கள் தோற்றமே சான்று :

மலைகளை நகும்தட
மார்பர், மால்கடல்
அலைகளை நகும்நெடுந்
தோளர், அந்தகன்
கொலைகளை நகும்நெடுங்
கொலையர், கொல்லன்உலை(து)
உலைகளை நகும்அனல்
உமிழும் கண்ணினர் !

[நகும் - அவமதிக்கும்; சிரிக்கும். தடமார்பர் பரந்த மார்பையுடையவர். மால்-பெரிய. அந்தகன் யமன்.]

மலைகளைப் பரிகசிக்கும் மார்புகள்! சமுத்திர அலைகளை அவமதிக்கும் தோள்கள்! இப்படிப்பட்ட தோள்களும் மார்புகளும் செய்யும் கொலைகளோ, யமன் கொலைகளைப் பார்த்து, 'இவ்வளவுதானா?' என்று சிரிக்குமாம். அந்தக் கொலைவெறி அவ்வளவும், அதோ முகங்களில்—கொல்லனுடைய உலைக்களங்களைப்போல் சிவ்வென்று ஜொலிக்கின்றனவே அந்தக் கண்களில்—அப்படியே தெரிகிறதல்லவா?

வஞ்சமும் களவும் வெஃகி
வழியலா வழிமேல் ஓடி,
நஞ்சினும் கொடிய ராகி
நவைசெயற்(கு) உரிய நீரார்,

வெஞ்சின அரக்கர் ஐவர்,
ஒருவனே வெல்லப் பட்ட
அஞ்செனும் புலன்கள் ஒத்தார்,
அனுமன் நல்அறிவை ஒத்தான்.

[வெஃகி - விரும்பி. நவை - குற்றம். நீரார் - தன்மையுடையவர்கள். ஒருவனே - ஒருவனால்.]

ராவணன் வழியல்லாத வழிமேல்* செல்லுகிறவன் என்றால், இவர்களோ வழியல்லாத வழிமேல் ஓடுகிறவர்கள். குருவுக்கு மிஞ்சின சிஷ்யர்கள்! ராஜாவுக்கு முன் படுகுழியில் விழுந்து விடுகிறார்கள்.

சமுதாய வாழ்க்கைக்கு இந்தப் பேர்வழிகள் நஞ்சைக் காட்டிலும் கொடியவர்கள். சன்மார்க்கத்தையே கொலை செய்தவர்கள் அல்லவா? இவர்களை வென்ற ஹனுமான், கெட்ட வழிகளிலே ராட்சஸ ஆவேசத்துடன் ஓடும பஞ்சேந்திரியங்களை ஜயித்த நல்லறிவு போல் விளங்குகிறான்!

இப்படி ஆலோசித்துக் கொண்டிருக்கும் போதே, அதோ—அடடா!—பழைய காவல் - தேவர்கள்! பழைய உத்தியோகம போய்விட்டதென்பதும், தாங்களே ஒரு புதிய உத்தியோகத்தில் தங்களை நியமித்துக் கொண்டார்கள் என்பதும் நமக்குத்தான் தெரியுமே! இவர்களோடு போய் ராவணன் முன்னே வாசிக்கும சாவோலையைக் கேட்போம்:

---

*அங்கதன் தூதுப் படலம், செய்யுள் 5.

தானையும் உலந்த(து) ஐயா!
நலைவரும் சமைந்தார், தாக்கப்
போனபின் மீள்வேம் யாமே!
அதுவும்போர் புரிகி லாமை!
வானையும் வென்று ளோரை
வல்லையில் மடிய நூறி,
ஏனையர் இன்மை, சோம்பி
இருந்த(து)அக் குரங்கும்!' என்றார்.

[தானை - சேனை. சமைந்தார் - செத்தார். வல்லையில் - விரைவில். நூறி - அழித்து.]

போர் புரியாமல் பதுங்கியிருந்து தாங்கள் உயிர் தப்பி வந்த சாமர்த்தியத்தை, வீர வீரர்களையெல்லாம் விரைவிலே கொன்றொழித்து, 'இன்னும் இரை கிடைக்கவில்லையே!' என்று சோம்பிச் சும்மாயிருக்கும் குரங்கின் சாமர்த்தியத்தோடு பிணைத்துப் பேசும் அழகை என்னென்பது!

## 20. 'தேவரும் அழுதனர்!'

ராவண சேனபதிகளும் குரங்கினல் கொலையுண்டனர் என்று காவல் - தேவர்கள் கூறிய வார்த்தையைக் கேட்டதும் ராவணன் குமாரனை அட்சன், கொடிய கோபக் கனல் பொங்கப் பெருமூச்சு விட்டு, சிவந்த கண்களுடன் தந்தையை நோக்கித் தொழுது, 'இந்தச் சிறிய கடமையைச் சிறியேனுக்கு அருள வேண்டும்!' என்று விண்ணப்பம் செய்து கொண்டான். இந்திரனுடன் நடந்த அந்தப் பழம்பெரும் போரில் இவனது தமையனை இந்திரஜித்தை ஏவிவிட்டான் ராவணன். அதனலன்றே இந்திரஜித்து இந்திரஜித்தானன்? அந்தப் புகழும் பேரும் தம்பிக்குத் தீராத மனக்குறையை உண்டாக்கிவிட்டது. அத்தகைய சந்தர்ப்பம்தான் கிடைக்கவில்லையே! ஆகவே, வலிமையில்லாத ஒரு குரங்கின் மேலாவது தன்னை ஏவ வேண்டும் என்று வேண்டிக் கொண்டான்.

எண் திசை வென்ற ராவணேச்வரன் ஏவும்போது, இந்த அற்ப வெற்றியாலும் அந்தப் பழைய மனக்குறை ஒருவாறு தீர்ந்து போகக்கூடும் என்று அட்ச குமாரன் தெரிவிக்கிறன்:

> 'அண்டர்கோன் தன்னைப் பற்றித்
> தரு(க)!' என, அடியேன் நிற்க,
> கொண்டனை எம்முன் தன்னைப்
> பணி,என நெஞ்சம் கோடல்

உண்(டு), அது தீரும் அன்றே?
உரன்இலாக் குரங்(கு) ஒன் றேனும்,
எண்திசை வென்ற நீயே
ஏவுதி என்னை!' என்றான்.

[அண்டர்கோன் - தேவேந்திரன். தருக என - தரு வாய் என்று சொல்லி. எம் முன் - என் தமையனான இந்திரஜித்து. நெஞ்சம் கோடல் - நெஞ்சிலே கொண் டது; மனக்குறை. அன்றே - அல்லவா. உரன் இலா - வலிமையில்லாத. ஏவுதி - ஏவுவாயாக.]

'மேலும், அந்தக் குரங்கு குரங்கா யிராமல் ஈசனே வேடம் தாங்கி வந்ததா யிருந்தாலும், அரை நொடிக்குள்ளே பிடித்து வருவேன், அப்பா! தவறி னால் தண்டனை செய்!' என்று அட்சன் பிரார்த்தித் ததும், ராவணன் மைந்தனை மகிழ்ந்து நோக்கி, 'தேரேறிச் சேனையோடு செல்வாய்!' என்று விடை கொடுத்து அனுப்பிவைத்தான்.

மிக்க ஆடம்பரத்தோடு படையெடுத்துச் சென்ற அட்சகுமாரன் ஹனுமானைக் கண்டதும், அலட்சிய மாக நகைத்து, 'குரங்கு என்ற பேரே இல்லாமற் போகும்படி உலகிலுள்ள குரங்குகளை யெல்லாம் கரு வறுத்து விடுவேன்!' என்று சபதம் செய்தான். ஹனும - அட்ச யுத்தம் உக்கிரமாக நடைபெற்றது. அப்போரில் ஹனுமான் அட்சகுமாரனைத் தரையிலே அரைத்துத் தேய்த்து ஒழித்துவிட்டான்.

அப்படி ராவண குமாரன் தங்கள் கண் முன் வதஞ் செய்யப்பட்டதும் அரக்கர்கள் திகிலடைந்து போயினர். இதுவரையிலும் போர்முனையில் முதுகு காட்டாமல் உயிர் கொடுத்தார்கள் அரக்க வீரர்கள்

என்பது கண்டோம். இப்போதோ, தோல்விமேல் தோல்வியாகி, ராவணேச்வரனது அருமைப் பிள்ளையும் ஏதோ ஒரு மூட்டைப் பூச்சிபோல் நசுக்கப்பட்டதையும் கண்ட அரக்கர்கள், கண்ட திசையெல்லாம் தப்பி ஓடுகிறார்கள் :

> புண்தாழ் குருதியின் வெள்ளத்(து) உயிர்கொடு
> புக்கார் சிலர் ; சிலர் பொதிபேயின்
> பண்டா ரத்திடை இட்டார் தம்உடல் :
> பட்டார் சிலர் ; சிலர் பயம்உந்தத்
> திண்டா டித்திசை அறியா மறுகினர்,
> செற்றார் சிலர் ; சிலர் செலவற்றார் ;
> கண்டார் கண்ட(து)ஓர் திசையே விசைகொடு
> கால்விட் டார்,படை கைவிட்டார் !

[புண் தாழ் குருதி - புண்களிலிருந்து பெருகுகிற இரத்தம். வெள்ளத்து உயிர் கொடு புக்கார் - வெள்ளத்திலே உயிரோடு புகுந்து ஒளித்துக் கொண்டார்கள். பொதி பேய் - பிணங்களைச் சுற்றிப் பொதிந்து நிற்பது போலத் தோன்றிய பேய்கள். பண்டாரம் - பொக்கிஷம் ; (இங்கே) பேய்களின் பொக்கிஷமாகிய பிணக் குவியல். பட்டார் - (பயத்தினாலே) இறந்தார்கள். உந்த - தூண்ட. மறுகினர் - கலங்கினவர்களாய். செற்றார் - ஒடுங்கிக் கிடந்தார்கள். செலவு அற்றார் - செல்ல மாட்டாமல் பிரமித்திருந்தார்கள். கொடு - கொண்டு. கால்விட்டார் - ஓடினார்கள். படை - ஆயுதங்கள்.]

போரிலே இறவாமல் எஞ்சியிருந்த அரக்கர்களில் இரத்தவெள்ளத்திலே மூழ்கி ஒளித்தவர் சிலர். பேய்களுக்குப் பொக்கிஷம் என்று சொல்லக்கூடிய பிணக் குவியலில் நுழைந்து, பிணத்தோடு பிணம்

போல விழுந்து கிடந்தவர் சிலர். ஹனுமானால் அன்றி, அச்சம் என்ற பேயால் அறையுண்டு கொல்லப்பட்டவர் சிலர். வேறு சிலர், அச்சம் தூண்ட, அங்கும் இங்கும் திக்குத் தெரியாமல் திண்டாடித் திரிந்து கலங்கி ஒடுங்கிக் கிடந்தார்கள். இன்னும் சிலர், எங்கும் போக அஞ்சித் திக்பிரமை பிடித்தவர்களாய், நின்ற இடத்திலே நின்றுகொண் டிருந்தார்கள். கண்ட கண்ட திசையெல்லாம் தாறுமாறாக ஓடினவர்களும் உண்டு. இப்படி ஓடும்போது, எப்போதும் பிரியாத ஆயுதங்களையும் சுமையென்று கைவிட்டார்களாம்.

கண்டார் கண்ட(து)ஓர் திசையே விசைகொடு
காலவிட் டார்,படை கைவிட்டார் !

என்ற வர்ணனை, அந்தப் போர்க் களத்தையும் அப்பெருங் குழப்பத்தையும் அப்படியே கண் முன் கொண்டுவந்து விடுகிறதல்லவா ?

அரக்கர்கள் காமரூபிகளாதலால் பல உருவங்களைக் கொண்டு தப்ப முயல்கிறார்களாம் :

மீனாய் வேலையை உற்றார் சிலர்;சிலர்
பசுவாய் வழிதொறும் மேய்வுற்றார் ;
ஊனார் பறவையின் வடிவுற் றார்சிலர் ;
சிலர்நான் மறையவர் உருவானார் ;
மானார் கண்இள மடவார் ஆயினர்,
முன்னே தம்குழல் வகிர்வுற்றார்
ஆனார் சிலர் ; சிலர், ‘ஐயா, நின்சரண் !’
என்றார் ; நின்றவர், ‘அரி !’ என்றார்.

[வேலை - சமுத்திரம். உற்றார் - அடைந்தார்கள். வழிதொறும் - வழிகள் தோறும். மேய்வு உற்றார் - மேயத் தொடங்கினார்கள். ஊனார் பறவை - மாமிசத்தை உண்ணும் பட்சிகள். வடிவுற்றார் - வடிவத்தைக் கொண்டார்கள். நான்மறையவர் - நாலு வேதங்களோடு கூடிய வைதிகப் பிராம்மணர்கள். மானார் கண் இள மடவார் - மான் போன்ற கண்களோடு கூடிய இளம் பெண்கள். குழல் - கூந்தல். வகிர்வு உற்றார் - வகிர்ந்துகொண்டு நின்றார்கள். அரி - ஹரி; விஷ்ணு.]

சில அரக்கர்கள் மீனுருவம் கொண்டு சமுத்திரத்தில் ஒளிந்து கொள்கிறார்களாம். சிலர் பசு வடிவம் கொண்டு, ஹனுமானுக்குச் சந்தேகம் உண்டாகாதபடி, புல்லாந்தரையில் மேயத் தொடங்குகிறார்களாம். இவர்களைக் காட்டிலும் புத்திசாலிகள் கழுகு முதலிய பட்சிகளின் வடிவத்தைத் தரித்திருக்கிறார்கள். உயிர் தப்புவதோடு, வயிறார ஆசை தீரப் பிணங்களையாவது கொத்தித் தின்னலாமே என்பது யோசனை.

அதோ, சில வைதிகப் பிராம்மணர்கள், கையிலே தர்ப்பைப் புல்லும் பஞ்சாங்க ஏடுமாய்! அவர்களுக்குப் போர்க்களத்தில் என்ன வேலை? சில ராட்சஸர்கள் தான் அந்த வேஷத்தைப் போட்டுக்கொண் டிருக்கிறார்கள்! வேறு சிலர், ஹனுமானுடைய இரக்கத்திற்கே பாத்திரமாக விரும்பி, பெண் வேஷம் போட்டுக்கொள்கிறார்கள்! பெண்களிலும் இளம்பெண்கள், அழகான பெண்கள் என்றால், அதிகமான இரக்கம் ஏற்படுமாம்! பெண்கள்தான் என்று ருஜுப்படுத்துவதற்கு—இவர்கள் மூளையே மூளை!—கண்ணாடியும்

சிப்பும் கையில் கொண்டு, முன்னே சீவி வகுப்பு எடுக்கிறார்கள்!

சிலர் ஹனுமானையே சரணாகதி பண்ணுகிறார்கள். உயிராசையால் இதைக் காட்டிலும் இழிவான காரியத்தைக்கூட இன்னும் சில ராட்சஸர்கள் செய்யத் துணிகிறார்கள். அதாவது, இலங்கையில் ஒருவரும் உச்சரித்திராத ஹரி நாமத்தையே இவர்கள் கோஷிக்கிறார்கள், ஹனுமான் காது செவிடுபடும்படி!

இவர்களைக் காட்டிலும் அதி புத்திசாலிகளும் உண்டு. இந்த ஆசாமிகள் உயிர் தப்பச் செய்த உபாயங்களையும் பார்க்கலாம்:

> தம்தா ரமும்,உறு கிளையும் தமைஎதிர்
> தழுவுந் தொறும்,'நும தமர்அல்லேம் ;
> வந்தேம் வானவர்!' என்(று)ஏ கினர்சிலர் ;
> சிலர், 'மா னுயர்!'என வாய்விட்டார் ;
> மந்தா ரம்கிளர் பொழில்வாய் வண்டுகள்
> ஆனார் சிலர்;சிலர் மருள்கொண்டார் ;
> இந்தார் எயிறுகள் இறுவித் தார்சிலர் ;
> எரிபோல் குஞ்சியை இருள்வித்தார்!

[தம் தாரமும்-தமது மனைவிமாரும். உறு கிளையும் - நெருங்கின உறவினர்களும். தழுவுந்தொறும் - தழுவிக் கொள்ளும் போதெல்லாம். நும தமர் - உமது சுற்றத்தார், வந்தேம் - வந்தோம். வானவர் - தேவர்கள். என்று ஏகினர் - என்று சொல்லி அப்பால் போய்விட்டார்கள். மானுயர் - மானிடர்; மனிதர். மந்தாரம் - ஒருவகைத் தேவ விருட்சம். கிளர் - விளங்குகிற. பொழில்வாய் - சோலையினிடத்தில். மருள் - மயக்கம். இந்தார் - இந்து + ஆர்; பிறைச் சந்திரனை ஒத்த. எயிறுகள் - கோரப் பற்

கள். இறுவித்தார் - உடைத்துக்கொண்டார்கள். எரி — நெருப்பு. குஞ்சி - ரோமம். எரி போல் குஞ்சி - செம்பட்டை மயிர். இருள்வித்தார் - இருளைப்போல் கறுப்பாக்கிக்கொண்டார்கள்.]

சில அரக்கர்கள் தப்பி ஓடும்போது, அவர்களுடைய மனைவிமாரும் வேறு நெருங்கின கிளைஞரும் எதிரே வந்து தழுவிக் கொள்கிறார்களாம், இப்படியாவது—ஐயோ, பாவம்!—உயிர் தப்பி வந்தார்களே என்ற உத்ஸாகத்துடன். அப்படி அவர்கள் தழுவிக் கொள்ளும் போதெல்லாம், ஓடித் தப்ப முயலும் ஆசாமிகள், ஹனும பயத்தால், 'நாங்கள் உங்கள் உறவினர் இல்லையே! தேவர்கள் அல்லவா? தெரியவில்லையா உங்களுக்கு?' என்று சொல்லிக்கொண்டே அப்பால் நழுவிப் போகிறார்கள். மனைவியை நோக்கிக் கணவன், உயிரைக் காப்பாற்றிக் கொள்ளும் ஆசையால், 'என்ன தவறு! அடி, பெண்ணே! நான் உன் புருஷனில்லையே!' என்று சொல்வது எவ்வளவு பரிதாபமானது!

தங்களை அடிமைத் தேவர்கள் என்று சொல்லிக் கொண்டு ஓடும் பரிதாபம் ஒரு புறம்; 'நாங்கள் அரக்கர்கள் இல்லை, மனிதர்கள்!' என்று தங்கள் இரையான மனிதப் புழுக்களின் பேரால் தப்ப முயலும் விந்தை ஒரு புறம். தேவர்கள் என்றும், மனிதர்கள் என்றும் தப்ப முயன்றது போல், வண்டுகளாகவும் உருவங்கொண்டு சோலைகளில் பறந்து சென்று உயிர் பிழைத்தவர்களும் உண்டு.

அதி புத்திசாலிகளில் சிலர் கீழே கிடந்த கல்லை எடுத்து, தங்களைக் காட்டிக் கொடுக்கும் கோரப் பற்

களையே தட்டி விடுகிறார்களாம். சில மேதாவிகள் செம்பட்டை மயிரைக் கறுப்பாக்கும் முயற்சியில் திவிரமாக ஈடுபடுகிறார்கள்! எத்தக் கடையில், ஏமாறிப் போகாமல், கூந்தல் - தைலம் வாங்கினார் களோ?

ஆண்பிள்ளைகள் பாடு இந்த விதமாக, அரக்க மாதர்களின் துயரத்தை என்னென்பது? இலங்கை யெங்கும் அழுகையொலிதான். காலில் படும்படி யாகக் கூந்தலை விரித்துக்கொண்டு கூக்குரலிடும் பெண்களைப் பாருங்கள் :

குண்டலக் குழைமுகக்
குங்குமக் கொங்கையார்,
வண்டலைத்(து) எழுகுழல்-
கற்றைகால் வருடலால்,
விண்(டு)அலத் தகவிரைக்
குமுதவாய் விரிதலால்,
அண்டம்உற் றுள(து)அவ்வூர்
அழுதபேர் அமலையே!

[குண்டலக் குழை - குண்டலம் அணிந்த காது. வண்டு அலைத்து - வண்டுகளை அலையச் செய்து. குழல் கற்றை - கூந்தல் தொகுதி. கால் வருடலால் - காலில் விழுந்து புரளும்படியாகி. விண்டு - திறந்து. அலத்தகம் - செம்பஞ்சு. விரை - நறுமணம். குமுதம் - ஆம்பல். அவ் வூர் - அந்த இலங்கை. பேர் அமலை - பெருங் குரலோசை. அண்டம் உற்றுளது - வானத்தையும் எட்டியது.]

இத்தகைய குழப்பங்களுக்கிடையே, சாவோலை கொண்டு போகும் தேவர்களைக் கடைசி முறையாகச் சந்திக்கிறோம். இவர்களுக்கு இப்போது ஓலை வாசிக்

கும் உத்தியோகமும் போய்விட்டது. மகனுடைய மரண சமாசாரம் ஏற்கெனவே சக்ரவர்த்திக்கு எட்டி விட்டது. அரண்மனை, அழுகையும் அடிப்புமா யிருக்கிறது. கஷ்டமான ஒரு கடமையிலிருந்து விடுபட்ட தேவர்கள் இப்போது வேறொரு கஷ்டத்தில் சிக்கிக் கொள்கிறார்கள். சக்ரவர்த்தியிடம் துக்கம் விசாரிப்பதென்றால், எளிதான காரியமா? பக்கத்திலுள்ளவர்களைப் பார்த்து அப்படியே செய்யவேண்டுமல்லவா?

எவ்வளவோ புத்திசாலித்தனமாய் நடந்து கொள்வதாக எண்ணம்!

தாவரும் திருநகர்த்
    தைய லார்முதல்
ஏவரும் இடைவிழுந்து
    இரங்கி ஏங்கினர்;
காவலன் கால்மிசை
    விழுந்து, காவல்மாத்
தேவரும் அழுதனர்;
    களிக்கும் சிந்தையார்!

[தாவரும் - வருத்தம் இல்லாத. ஏவரும் - எல்லாரும். இடை - இடத்தில்; இங்கே பாதத்தினிடத்தில். காவலன் - சக்ரவர்த்தி. மா - பெருமை.]

பெண்கள் மார்பிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு ராவணன் காலில் விழுந்து அலறுவதும் ஏங்குவதுமா யிருக்கிறார்கள். 'இதுதான் இந்த ஊரில் துக்கம் விசாரிக்கும் முறை!' என்று துணிந்து தேவர்களும் அடித்து விழுந்து அலறத் தொடங்குகிறார்கள். இவ்வளவு ராஜபக்தியின் இரகசியம்

கடைசியாக விளங்கி விட்டதல்லவா ? வெளியே அழுகை, உள்ளே களிப்பு. 'ராவணன் மகன் செத்தான் !' என்ற மகிழ்ச்சியால் உள்ளம் கள்வெறி கொள்கிறது. ராஜ பக்தி - நாடகமாடும் இந்த ஆஷாடபூதிகள்தான் முன்னே அரக்கர்களை 'நம்மவர்கள்' என்று உறவு கொண்டாடியவர்கள் ! இவர்களைக் 'காவல் மாத் தேவர்' — பெரிய காவல் - தேவர்கள் — என்று கவிஞன் ஞாபகப் படுத்துகிறான்.

ராவண ராஜ்யத்திலே அடிமைகளுக்கு இரட்டை வாழ்க்கை ! எந்த ராவண ராஜ்யத்திலும் இப்படித் தானே ? இவ் வாழ்க்கை, அடிமைகளையும் கெடுத்து ஆளும் சாதியையும் வஞ்சித்துவிடுகிறது !

## 21. இந்திரஜித்தின் வெற்றி

அட்சன் வதமான செய்தி கேட்டு இந்திரஜித்தின் கண்கள் நெருப்புச் சிந்துகின்றன. பழி வாங்கத் துடிக்கிறது வீர உள்ளம். ஆயிரத்து இருநூறு பேய்கள் பூட்டிய தேர்த்தட்டிலிருந்து, 'கொலைக்குக் கொலை! இரத்தத்திற்கு இரத்தம்!' என்று வெறியுடன் கர்ஜிக்கிறான், — 'திசைகள் பீறி அண்டமே பிளந்து விட்டது!' என்று நடுங்கும்படி. வீரக் கழலும் வீரக் கிண்கிணி மாலையும் யுத்த பேரிகைகளோடு கலந்து ஒலி செய்ய, எவ்வளவு ஆடம்பரமாக வருகிறான்! 'போர் மும்முரமாகி விட்டது!' என்று மும்மூர்த்திகளும் தொழில் மறந்து நிற்கிறார்கள்!

தம்பியை நினைக்க நினைக்க இப்போது அவனுடைய கண்களில் நீர் தாரைதாரையாகப் பெருகப் பார்க்கிறது; ஆனால் அடக்கிக் கொள்ளுகிறான், தாரை நீர் சிந்தாமல் அப்படியே கண்களில் ததும்பி நிற்கும்படி. ஏன் இப்படித் தன் வில்லைப் பார்த்துக் கோபிக்கிறான், உடனேயே சிரிக்கிறான்?

> தம்பியை உன்னும் தோறும்
> தாரைநீர் ததும்பும் கண்ணான்,
> வம்பியல் சிலையை நோக்கி
> வாய்மடித்(து) உருத்து நக்கான்;
> 'கொம்பியல் மாய வாழ்க்கைக்
> குரங்கினால், குரங்கா ஆற்றல்
> எம்பியோ தேய்ந்தான்? எந்தை
> புகழன்றோ தேய்ந்த(து)!' என்றான்.

[உன்னும் - நினைக்கும். வம்பு - வீண். சிலை - வில். உருத்து - கோபித்து. நக்கான் - சிரித்தான். கொம்பு - மரக்கொம்பு. குரங்கா - குறையாத். ஆற்றல் - வலிமை. எம்பி - என் தம்பி. எந்தை - என் தந்தை.]

ஆபத்து வேளையில் தம்பியைக் காப்பாற்ற உபயோகப்படாத வில் தன் கையிலே வீண் பாரமென்று தோன்றுகிறது. அந்த வில்லை அப்படிப் பார்க்கும் போதே, திடீரென்று சோகம் முழுமையும் கோபதாபமாக மாறிவிடுகிறது. வாய் மடித்து உதட்டைக் கடித்துக் கொண்டு சிரிக்கிறான் ஒரு பேய்ச் சிரிப்பு !

உடன் பிறந்த அட்சன் பலம் இவனுக்கு நன்றாகத் தெரியும். எப்பேர்ப்பட்ட தம்பி — ராவண குமாரன் — ஒரு குரங்கினால் — கிளைக்குக் கிளை தாவிக் குதிக்கும் போது தவறி விழுந்தாலே உயிர் விடக்கூடிய அந்த அற்பப் பிராணியினால் — தேய்க்கப் பட்டான் என்ற நினைப்பு வந்ததும், 'அடடா, தம்பியா தேய்ந்தான் ? என் தந்தையான சக்ரவர்த்தியின் புகழன்றோ தேய்ந்து போயிற்று ?' என்று தனக்குள்தானே சொல்லிக் கொள்கிறான். ஆழ்ந்த சோகத்திலும் அதிபயங்கர ஆடம்பரம் — ஏகாதிபத்திய இறுமாப்பு !

ராவணனுடைய ராணுவ ராஜ்யத்தில் தேவர்கள் தன்மதிப்பில்லாத பேடிகளாகவும், அரக்கர்கள் செருக்கு வாய்ந்த வீர வெறியர்களாகவும் விளங்குகிறார்கள். கௌரவமே அந்த 'பாஸிஸ்ட்' மகா ராஜ்யத்தைத் தாங்கி நிற்கும் முக்கியமான தூணாகக் காண்கிறது. இதனாலேயே ராவணன் தன் கௌரவத்தையும் அந்தஸ்தையும் காப்பாற்றிக்கொள்ள அரும்பாடு

படுகிறான்; எத்தனையோ அரக்கர்களைப் பலிகொடுக்கவும் கூசவில்லை. அப்படியே இந்திரஜித்தும் தன் அருமைத் தம்பி அழிந்ததைக் கூட ஒரு பெரிய நஷ்டமாகக் கருதவில்லை; சக்ரவர்த்தியின் கௌரவத்தையே பெரிதாக மதிக்கிறான். அட்சன் சாவைக் காட்டிலும் அரும் புகழின் தேய்வையே பெரிதாக மதிக்கும்போது, அந்த ஏகாதிபத்திய கௌரவத்தின் முழுப் பாரமும் தன் தலைச்சுமை யாகிவிட்டது என்பதை எப்படி உணர்ந்திருக்கிறான், பாருங்கள்!

இத்தகைய ராஜபக்தி வாய்ந்த வீரமகன் வீரத் தந்தையைச் சந்திக்கும் காட்சி எவ்வளவு உருக்கமாயிருக்கிறது!

> தாளிணை விழுந்தான், தம்பிக்(கு)
> இரங்கினான்; தறுக ணானும்
> தோளிணை பற்றி ஏந்தித்
> தழுவினன், அழுது சோர்ந்தான்;
> வாளிணை நெடுங்கண் மாதர்
> வயி(று)அலைத்(து) அலறி மாழ்க,
> மீளிபோல் மொய்ம்பி னானும்
> விலக்கினன், விளம்ப லுற்றான்.

[இணை - இரட்டை. தறுகணன் - அஞ்சா வீரனான ராவணன். அலைத்து - அடித்து. மாழ்க - மயங்க. மீளி - யமன்; பேய். மொய்ம்பு - வலிமை.]

ராவணனைக் கண்டதும் இந்திரஜித்தின் சோகம் அதிகரித்துச் சில நிமிஷங்கள் கோபத்தை மறைக்கிறது. அழுதுகொண்டே காலில் விழுகிறான். தந்தை மகன் தோளைப் பிடித்துத் தூக்கித் தழுவிக்

கொண்டே சோர்ந்து புலம்புகிறான். சுற்றியிருந்த இந்திரஜித்தின் தாயாரும் மற்ற ஸ்திரீகளும் வயிற்றில் அடித்து அலறிக் கொண்டு மயங்கி விழுகிறார்கள். உடனே இந்திரஜித்து தன் சோகத்தை அடக்கிக் கொண்டு, பெண்டுகளையும் விலக்கி முன் சென்று, தந்தையைப் பார்த்துப் பேசத் தொடங்குகிறான் :

'ஒன்றும்நீ உறுதி ஓராய் !
உற்றிருந்(து) உளைய கிற்றி ;
வன்திறல் குரங்கின் ஆற்றல்
மரபுளி உணர்ந்தும், மன்னா !
"சென்றுநீர் பொருதிர் !" என்று
திறம்திறம் செலுத்தித் தேயக்
கொன்றனை நீயே அன்றோ,
அரக்கர்தம் குழுவை ?' என்றான்

[ஓராய் - ஆலோசிக்கவில்லை. உற்றிருந்து - துன்பம் அனுபவித்து. உளையகிற்றி - மனம் அழிந்து வேதனைப் படுகிறாய். மரபுளி - கிரமமாக. பொருதிர் - போர் செய்யுங்கள். திறம் திறம் - வரிசை வரிசையாக. செலுத்தி - ஏவி அனுப்பி. குழு - கூட்டம்.]

'கடல் தாண்டி வந்து அசோக வனத்தை அழிக்கத் துணிந்த குரங்கின்கொடிய வலிமையை அறிந்திருந்தும், என்னை அனுப்பாமல் அரக்கர்களை வரிசை வரிசையாக அனுப்பிப் பலி கொடுக்கலாமா ?' என்று கேட்கும் இந்திரஜித்தின் கோபம் பளிச்சென்று ஹனுமானை விட்டு ராவணன் மேல் பாய்கிறது. 'குரங்கா கொன்றது ? ஐயோ ! இந்த அரக்கர் கூட்டங்களை யெல்லாம் நீ யல்லவோ அநியாயமாகக் கொன்று விட்டாய் ?' என்று அந்தக் கொலைக் குற்

றத்தை ராவணன் மீது சுமத்துகிறான். 'அட்சனைக் கொன்று இன்னும் ஓடிப்போகாமல் நின்ற குரங்கை இப்படி ஆடவிட்டு வேடிக்கை பார்க்கலாமா?' என்றும் குமுறுகிறான்.

'இனிப் போய் ஜயிப்போமாயினும், அந்த ஜயம் தான் இப்போது ஏற்பட்டுவிட்ட அவமானத்தைத் துடைக்க முடியுமா?' என்று தகப்பனை அவன் முன்னிலையிலேயே கண்டித்துப் பேசும் இந்திரஜித்து, ராஜபக்தியிலாவது, பிதாவின் பக்தியிலாவது குறைந்தவன் அல்லன். எனவே, கடைசியாக, 'ஐயனே! அந்தக் குரங்கை நானே போய் வெகு சீக்கிரத்தில் சிரமம் இல்லாமல் பிடித்து உன்கையில் கொடுப்பேன். நீ வருந்த வேண்டாம்; நீண்ட காலம் புகழோடு வாழ்ந்திருப்பாயாக!' என்று அன்போடு ராவணனுக்கு உறுதி கூறிப் போருக்குப் புறப்படுகிறான். இத்தகைய இந்திரஜித்தைக் கவிஞன் 'வீரத்தின் பன்மை தீர்ப்பான்' என்று கூறுகிறான். இந்திரஜித்துக்கு முன்னால் (வீரர் பலராக இருந்ததால்) வீரம் பன்மையாயிருந்ததாம். ஆனால் இவன் தோன்றிப் பிரசித்தி பெற்ற பின்பு, வீரத்தின் பன்மை தீர்ந்து, அது ஒருமையாகி விட்டதாம். 'வீரத்திற்கு ஒருவன்தான்: அவன்தான் இந்திரஜித்து!' என்று உலகம் அறிந்து கொண்டது.

இப்படிப்பட்ட இந்திரஜித்தே, போகும் வழியில், ஹனுமானுடைய வீரத்தைப் புகழ்கிறான். வீரன் அல்லவா வீரனை அறிவான்?

> சென்றனன் என்ப மன்னோ :
>
> திசைகளோ(டு) உலகம் எல்லாம்

வென்றவன் இவன்என் றாலும்,
வீரத்தே நின்ற வீரன்,
அன்(று)அது கண்ட ஆழி
அனுமனை, 'அமரின் ஆற்றல்
நன்(று)!' என உவகை கொண்டான்!
யாவரும் நடுக்கம் உற்றார்;

[ஆழி - சமுத்திரம்; இங்கே வீர சமுத்திரம். நின்ற - நிலைபெற்ற. அமர் - போர்.]

எத்தனையோ ராட்சஸர்களையும், முக்கியமாகத் தன் தம்பியையும், தந்தையின் புகழையும் அழித்து விட்ட ஹனுமானைக் குறித்து, 'இந்தப் போர்த் திறமை நன்றாயிருக்கிறது!' என்று சந்தோஷப்படுகிறான். இது என்ன சந்தோஷம்? சரியான எதிரி கிடைக்கும்போது வீரர் அடையும் இந்தச் சந்தோஷத்தை என்னவென்று சொல்வது? இப்படி எதிர்பாராத நிலையில் வீரக் கடலாகிய ஹனுமானைக் குறித்து இந்திரஜித்து ஒரு யோக்கியதா பத்திரம் வாசித்து மகிழ்ந்ததும், அந்த மகிழ்ச்சியே அவனுடன் போகும் சமுத்திரம் போன்ற ராட்சஸர்களை யெல்லாம் நடுங்கச் செய்கிறது. தேவர் முதலானவர்களும், 'இந்த மகிழ்ச்சி என்ன செய்துவிடுமோ?' என்று நடுநடுங்குகிறார்கள்.

போர்க்களத்தைப் பார்த்ததும் இந்திரஜித்துக்கு அது இலங்கையின் பகுதியென்றே தோன்றவில்லை. எங்கே பார்த்தாலும் பிண மலை, இரத்த வெள்ளம், ஆயுதக் காடு! வேறோர் உலகத்துக்குப் போய்விட்டது போலத் தோன்றுகிறது. எதற்கும் கலங்காத இவன் நெஞ்சில் சிறிது ஏக்கம்கூட உண்டாகிறது:

வெப்(பு)அடை கில்லா நெஞ்சில்
சிறியதோர் விம்மல் கொண்டான் ;
'அப்படை வேலை அன்ன
பெருமையர் ஆற்ற லோடும்
ஒப்(பு)அடை கில்லார் எல்லாம்
உலந்தனர்; குரங்கும் ஒன்றே !
எப்படை கொண்டு வெல்வ(து)
இராமன்வந்(து) எதிர்க்கின் ?' என்றான்.

[வெப்பு - வெப்பம். வேலை - சமுத்திரம். ஒப்பு - உவமை ; ஈடு. அடைகில்லார் - பெறுதவர்கள். உலந்தனர் - அழிந்தார்கள்.]

'ஒரே குரங்கு இத்தனை பேரையும் இப்படி அழித்துவிட்டதே! இனி ராமன் வந்து எதிர்த்தால், நாம் எந்தப் படை கொண்டு ஜயிக்கப் போகிறோம்?' என்ற கவலை இப்போதே வந்துவிடுகிறது இந்திர ஜித்துக்கு!

போகும் வழியெல்லாம் எத்தனை ராட்சஸ வீரர்கள் விழுந்து கிடக்கிறார்கள்! அவர்களை யெல்லாம் அவன் நன்றாக அறிவான். எத்தனையுத்தங்களில் தன்னுடன் சேர்ந்து வெற்றியைப் பங்கிட்டுக் கொண்டார்கள்! அவர்களில் பலரையும் தோழர்களாகவே மதித்திருந்தான். சிலர், கண் போலிருந்து, எந்தப் பக்கத்திலிருந்தும் ஏற்படக்கூடிய ஆபத்துக்களை யெல்லாம் விலக்கக்கூடியவர்கள் ; அவர்களை அவன் கண்ணாகவே போற்றினான். சிலர், அபாய காலங்களில், அவனுக்காகச் சந்தோஷமாய்த் தங்கள் உயிரையே கொடுக்கக் கூடியவர்கள் ; அப்படிப்பட்ட வீரர்களை அவனும் தன் உயிராக மதித்து வந்தான்.

சிலர் அவன் கையிலுள்ள ஆயுதம்போலவே உழைத்து வந்தார்கள் ; தங்களுக்கென்று பிரத்தியேக விருப்பு வெறுப்பில்லாமல், அவனுக்காகவே உயிர் வாழ்ந்து, அவனைப் பாதுகாப்பதையே விரதமாக—உயிராசை யாகக் கொண்டிருந்தார்கள். இப்படிப்பட்ட ராஜ பக்தர்களான படைவீரர்கள் இப்போது அந்த யுத்த ரங்கத்திலே மண்ணோடு மண்ணாகக் கிடப்பதைக் கண்ணால் கண்ட இந்திரஜித்தின் நிலையை என் னென்று சொல்வது ? ஆனால், துக்கத்தை இப்போது இங்கே வெளியிடுவது பலவீனமல்லவா ?

> கண்ணனார், உயிரே ஒப்பார்,
> கைப்படைக் கலத்தின் காப்பார்,
> எண்ணலாம் தகைமை இல்லார்
> இறந்(து)இடைக் கிடந்தார் தம்மை,
> மண்ணுளே நோக்கி நின்று,
> வாய்மடித்(து) உருத்து, மாயாப்
> புண்ணுளே கோலிட்(டு) அன்ன
> மானத்தால் புழுங்குகின்றான்.

[கண்ணனார் - கண் போன்றவர்கள். உருத்து - கோபித்து. படை - ஆயுதங்கள். மாயா - ஆறாத.]

உள்ளத்திலே கொந்தளித்துக் கொண்டிருக்கும் உணர்ச்சி வெள்ளத்திற்கு அணைபோடுவது போல், அவன் உதட்டை மடித்துக் கடித்துக் கொண்டிருக் கிறான். ஆ, அந்த நிலை எவ்வளவு கோபாவேசத்தை யும், ஆறாத மனப் புண்ணிலே கோலை இட்டுக் குத்தும் ரோஷத்தையும், புழுக்கத்தையும் காட்டு

இறது! அதே நிலையில் அவனுக்கு வேறு சில ஞாப கங்களும் வருகின்றன.

ராட்சஸ பயத்தால் ரிஷிகள் கிடுகிடென்று நடுங் கிக் கிடந்த தண்டகாரண்யத்திலே, அந்த ரிஷிகள் காணத் தன் அத்தையான சூர்ப்பணகைக்கு அங்க பங்கம் ஏற்படவில்லையா? சிற்றப்பனை கரனுக்கும் மரணம் வந்துவிட வில்லையா? அதே விதி இப்போது தன் செல்லத் தம்பிக்கும் வந்துவிட்டது. இப்படிப் பட்ட அநர்த்த பரம்பரைக்குக் காரணம் என்ன?

'கானிடை அத்தைக்(கு) உற்ற
குற்றமும், கரனார் பாடும்,
யானுடை எம்பி வீந்த
இடுக்கணும், பிறவும் எல்லாம்,
மானிடர் இருவ ராலும்
வானரம் ஒன்றி னாலும்
ஆனிடத்(து), உளஎன் வீரம்
அழகிற்றே, அம்ம!' என்றான்.

[யானுடை எம்பி-நான் உடைமையாக மதித்த தம்பி. வீந்த - செத்த. இடுக்கண் - துன்பம். ஆனிடத்து - ஆன இடத்து : ஆயின என்றால். அழகிற்று - அழ குடையது.]

உண்மையான காரணத்தை இந்திரஜித்து அறிந்து கொள்ளவில்லை. இரண்டு மனிதர்களாலும் ஒரு குரங்கினாலும்தான் இந்தத் துன்பங்களெல்லாம் விளைந்துவிட்டன என்று நினைக்கிறான். அவர்கள் விதியின் கைக்கருவிகள் என்பதும், அந்த விதி தங்க ளாலேயே உருவாகியது என்பதும் இவனுடைய

வேதாந்தத்திற்கு அப்பால் உள்ள விஷயங்கள். ‘இறந்தவர்களைத் தக்க சமயத்தில் காப்பாற்றாத தாலும், பழிக்குப் பழி வாங்காததாலும், என் வீரம் அழுகாயிருக்கிறது!’ என்று தன்னைத்தானே வெறுத் துக்கொண்டு போகிறான்.

தேர் போய்க் கொண்டிருக்கும் போதே ஒரு பிணக் குவியல் சக்கரங்களை இடறித் தடுக்கிறது. அந்தப் பிணங்களிடையே தன் தம்பியின் உடம்பையும் பார்த்துவிடுகிறான். நெருப்பில் காய்ச்சிய செம்பு போலத் தோன்றும் அந்தக் கண்களின் நிலை இந்திர ஜித்தை என்ன பாடு படுத்துகிறது! தான் வீற்றிருந்த தேர் தன்னை அந்தரத்தில் விட்டுவிட்டு எங்கேயோ அதல பாதாளத்தில் நழுவி விழுவது போலத் தோன்றுகிறது:

தேர்உக, கையின் வீரச்
சிலைஉக, வயிரச் செங்கண்
நீர்உக, குருதி சிந்த,
நெருப்(பு)உக, வயிர்த்து நின்றான்!

[உக - உதிர; நழுவி விழ. வயிர்த்து - வயிரம கொண்டு.]

கையோடு கையாகச் சேர்ந்திருக்கும் அந்த வீர வில்லும் நழுவிவிடுகிறது. சிவந்த கண்களிலிருந்து நீர் மட்டுமின்றி இரத்தமும் சிந்துகிறது; நெருப்பும் சிந்துகிறது! அந்தக் கண்களிலும் உடம்பிலும் வயிரம் பாய்ந்த உள்ளம் அப்படியே பிரதிபலிக் கிறது! அந்த உணர்ச்சி வெள்ளம் இப்போது அணையை உடைத்துவிடுகிறது.

'வெவ்இலை அயில்வேல் உந்தை
வெம்மையைக் கருதி நோக்கி,
வவ்வுதல் கூற்றும் ஆற்றான் ;
மாறுமா(று)உ லகின் வாழ்வார்
அவ்வுல கத்(து)உ ளாரும்
அஞ்சுவர் ; ஒளிக்க, ஐயா !
எவ்வுல கத்தை உற்றாய்,
எம்மைநீத்(து) எளிதின், எந்தாய் ? '

[வெவ் இலை அயில வேல் - அச்சம் தருவதும, இலை வடிவமா யிருப்பதுமான கூரிய வேலாயுதம். உந்தை - உன் தகப்பன். வவ்வுதல் - கவர்தல். மாறு மாறு - இன்னம் வெவ்வேறான. நீத்து - விட்டு. எளிதின - லேசாக.]

என்று புலம்பும்போது, இந்த வயிரம் பாய்ந்த நெஞ்சிலே எவ்வளவு சகோதர பாசம் குடிகொண்டிருக்கிறது என்று அதிசயிக்கிறோம். எனினும், அந்தப் பிரலாபம் ஒரு மகாவீரனுடைய பிரலாபம்தான் ; அது பலவீனத்தை வெளியிடவில்லை.

'உன்னுடைய தந்தைக்குப் பயந்து ஜ்வரம் அடைந்து கிடக்கும் யமனே, உன் உயிரைக் கவர்ந்து போயிருக்கமாட்டான்; மற்ற லோகங்களில் உள்ளவர்களும் அப்படியே. அடா, தம்பீ ! நீ எந்த லோகத்தில் போய் ஒளித்துக் கொண்டாய்? ஐயோ, எவ்வளவு எளிதாக எங்களை இப்படி விட்டுப் போய்விட்டாய் !' என்று உருகிக்கொண்டிருக்கும் இதயத்தையும், அதில் நிறைந்திருக்கும் அன்பு, வீரம், ராஜபக்தி முதலான அருங் குணங்களையும் யாரால்தான் மறக்க முடியும் ?

'இந்தச் சோகத்தைக் கடைசியாக இந்திரஜித்தாலும் தாங்க முடியவில்லை. அவன் நிலைகலங்கி அறிவு மயங்கிச் சோர்ந்து போகிறான்: ஆனால், அந்தச் சமயத்தில் மேலும் மேலும் பொங்கியெழும் சீற்றம் வீரத்திற்குக் கை கொடுத்து உதவுகிறது. ஆணிமேல் ஆணி அடிப்பதுபோல், இந்தச் சீற்றம் சோகத்தை உள்ளே அடித்துத் தள்ளிவிடுகிறது. சற்று முன் வயிர உள்ளத்தையும் பிளக்க முயன்ற சோகம் இப்போது கோபாவேசத்திற்கும் வீராவேசத்திற்கும் அடிப்படையாக அமைந்து, அவற்றை உறுதிப்படுத்துகிறது. இந்த நிலையிலே இந்திரஜித்தை,

> மூண்டுமுப் புரம்சுட
> முடுகும் ஈசனின்
> ஆண்தகை வனைகழல்
> அனுமன் நோக்கினான்.

[மூண்டு - கோபம் மூண்டு. முப்புரம் - திரிபுரம். முடுகும் - விரைந்து சமீபித்த. ஈசன் - சிவபெருமான். வனை - கட்டிய.]

அந்த வீர லட்சணமும் திட சங்கற்பமும் ஹனுமானையே பிரமிக்கச் செய்கின்றன. 'இதற்குமுன் நான் சில வீரரைக் கொன்றதல்லவா இவனை இவ்வளவு விரைவாக அழைத்து வருகிறது? இனி, வெற்றியோ தோல்வியோ இரண்டில் ஒன்று சமீபித்து விட்டது!' என்று ஹனுமான் தனக்குள்தானே சொல்லிக் கொள்ளுகிறான். இப்படிப்பட்ட வீரன் தன் கையால் இறந்தால் அது இராவணனுக்கே வீழ்ச்சியாகும். பிறகு சீதையை அவன் ராமனிடம் கொண்டுவிட்டுப் போகக்கூடும்.

அதுவுமல்லாமல், ராட்சஸர்களுடைய கொடுமையும் அடங்கும். இப்படி அவன் மனோராஜ்யம் செய்து கொண்டிருக்கும் போதே, ராட்சஸர்கள் போர் தொடங்குகிறார்கள்.

> வீர வீரனும், முறுவலும்
> வெகுளியும் வீங்க,
> வாரும்! வாரும்!' என்(று) அழைக்கின்ற
> அனுமன்மேல் வந்தான்.

[முறுவல் - சிரிப்பு. வெகுளி - கோபம். வீங்க - அதிகரிக்க.]

வில்நாணியை விரலால் தெறித்து இந்திரஜித்து டங்காரம் செய்ததும், ஹனுமான் அவனைத் தோள் கொட்டி வரவேற்கிறான். 'நீ நல்லவன், மிகவும் நல்லவன். இந்த லோகத்திலே உன்னைப்போல நல்லவர்கள் இல்லை!' என்று இந்திரஜித்து சொல்லுகிறான். நல்லது! தம்பியைக் கொன்றவன் எப்படி நல்லவன் ஆகிறான்? ஷேக்ஸ்பியர் நாடகத்திலே, ஷைலக் என்ற யூத வணிகன், வெனிஸ் வர்த்தகன் கொழுத்த புள்ளி என்று கண்டதும் அவனை 'நல்லவன்' என்று சொல்லுகிறான். கடன் கொடுக்க நல்லவன் என்பது அவன் கருத்து. அப்படியே இந்திரஜித்தும் ஹனுமானை அதிக வலிமைவாய்ந்தவன் என்று கண்டதும், 'சண்டை போட நல்லவன்' என்று சொல்லுகிறான்.

இவ்விதமாகப் பாராட்டி, 'அப்படிப்பட்ட உன் ஆயுளுக்கும் எல்லை வந்துவிட்டது!' என்று வீரம் பேசுகிறான். அதற்கு மேலாக ஹனுமான், ஆயுளோடு மட்டுமின்றி அவர்களுடைய கொடுந்தொழிலுக்கும்,

அவர்கள் நம்பியிருக்கும் ஆயுத பலத்திற்கும் எல்லை வந்துவிட்டதுஎன்றும், முக்கியமாகப்பலாத்காரத்தைக் கொண்டு உலகத்தை ஹிம்ஸிக்கும் கொள்கைக்கே எல்லை வந்துவிட்டது என்றும் வீரவாதம் செய்கிறான்.

'நாளுக்(கு) எல்லையும், நிருதராய்
உலகத்தை நலியும்
கோளுக்(கு) எல்லையும், கொடுந்தொழிற்(கு)
எல்லையும், கொடியீர்!
வாளுக்(கு) எல்லையும் வந்தன;
வகைகொடு வந்தேன்;
தோளுக்(கு) எல்லைஒன்(று) இல்லை!' என்(று)
அனுமனும் சொன்னான்.

[நிருதர் - ராட்சஸர். நலியும் - வருத்துகிற. கோள் - கொள்கை. கொடு - கொண்டு.]

தன் தோளுக்கு எல்லையில்லை என்று சொல்லிக் கொண்டே, தலையிலும் மார்பிலும் தாக்கும் பாணங்களுக்கிடையே, பெரு வடிவம் கொண்டு நிமிர்கிறான் ஹனுமான்.

அந்த வடிவத்திற்குத்தான் கவிஞன் எப்படிப் பட்ட உபமானம் காட்டுகிறான்!

மறியும் வெண்திரை மாகடல்
உலகெலாம் வழங்கிச்
சிறிய தாய்சொன்ன திருமொழி
சென்னியில் சூடி,
நெறியில் நின்றதன் நாயகன்
புகழ்என நிமிர்ந்தான்.

[மறியும் - கீழ்மேலாகிப் புரளும். வெண் திரை வெண்மையான அலைகள். வழங்கி - கொடுத்து.]

ராமன் தனக்குக் கிடைத்த ராஜ்யம் முழுவதையும் அலட்சியமாகத் தம்பிக்குக் கொடுத்துவிட்டுத் தான் இழந்த கிரீடத்திற்குப் பதிலாகச் சிறிய தாயின் கொடிய கட்டளையைச் சூடிக்கொண்டானும். அந்த வார்த்தையை அவன் தனக்கு ஏதோ பெரு நன்மை தரக்கூடிய வேத வாக்காகவே மதித்ததால், அதைத் திருமொழி என்றே சிரஸால் வகித்துக் கௌரவித்தானும். இவ்விதமாகத் தியாக நெறியிலே நின்ற அவனுடைய புகழ் வானுற ஓங்கி வளர்ந்து விட்டதல்லவா? அப்படி வளர்கிறதாம் ஹனுமானது ரூபமும், இந்திரஜித்தின் கண்முன்னே! ஹனுமானுடைய ஸ்தூல பலத்திற்கு அடிப்படையாக உள்ள நலவனது தியாக பலத்தை எவ்வளவு நயமாக ஞாபகப்படுத்துகிருன் கவிஞன்!

அந்தப் பெரு வடிவைக் கண்டு இந்திரஜித்து முதன்முதல் திகைப்பும் ஆச்சரியமும் அடைந்தபோதிலும், ஹனுமானோடு கடும் போர் செய்கிருன். ஹனுமானும் இந்திரஜித்து எய்த கொடிய அம்புகளை எல்லாம் தன் நீண்ட கைகளால் பற்றித் திருப்பி வீசி எறிந்துவிட்டு, அவன் தேரில் பூட்டிய பேய்களையும் சாரதியையும் அடித்து அழிக்கிருன். உடனே இந்திரஜித்து ஊழிக்காற்றைப் போன்ற வேகமுள்ள குதிரைகள் பூட்டிய மற்ருெரு தேரில் ஏறிக்கொண்டு, அளவற்ற அம்புகளால் ஹனுமானுடைய மேனியை மறைக்கிருன். ஹனுமான் அவன் தேர்மீது குதித்து,

*பற்றி வன்கையால் பறித்(து)எழுந்(து)*
*உலகெலாம் பலகால்*
*முற்ற வென்றபோர் மூரிவெஞ்*
*சிலையினை முறித்தான்.*

[வன் கை - வலிய கை. மூரி வெஞ்சிலை - வலிமை யான கொடிய வில்.]

இந்திரஜித்து இந்திரனிடம் காணிக்கையாகப் பெற்ற வேறொரு வில்லை எடுத்துக்கொண்டு கடுஞ் சமர் செய்கிறான். ராம தூதன், உடம்பிலே பல புண்கள் உண்டாகிச் சிறிது ஆயாசமுற்ற போதிலும், உடனே அயர்ச்சி தீர்ந்து, கையில் ஒரு பெரிய மரத்தை ஏந்தி, மணிமுடி தரித்திருந்த இந்திரஜித்தின் தலை மேல் அடிக்கிறான். அமரர்களை வெற்றி கொண்ட அந்த வீரன், தலையிலிருந்து இரத்தம் அருவியாக ஒழுக, உடல் நடுங்குகிறான். விரைவிலே போதம் வரப்பெற்று, மீண்டும் அம்புமழை பொழிகிறான். அதைக் கண்ட ஹனுமான், அவனைத் தேரோடு தூக்கி ஆகாயத்தில் வீசியெறிந்துவிட்டு, ஆரவாரம் செய்கிறான். தேரைக் கீழே விழும்படியாக விட்டு விட்டு, இந்திரஜித்து, வானமண்டலத்தில் மறைந்து கொண்டு, ஹனுமான் மீது பிரமாஸ்திரத்தைப் பிர யோகிக்கத் தீர்மானிக்கிறான். அந்த அஸ்திரத்தை எடுத்து, தூபதீபங்களால் அதற்குரிய வந்தனை செய்து, வில்லில் கோத்து,

*மண்துளங்கிட, மாதிரம்*
*துளங்கிட, மதிதோய்*
*விண்துளங்கிட, மேருவும்*
*துளங்கிட விட்டான்!*

[துளங்கிட - நடுங்க. மாதிரம் - திசைகள். மதி தோய் - சந்திரன் பொருந்திய. விண் - மேலுலகம.]

'தோளுக்கு எல்லை ஒன்றில்லை!' என்ற அந்தத் தோள்களையே பிரமாஸ்திரத்தால் கட்டிவிடுகிறான் இந்திரஜித்து. ஹனுமான் சாய்ந்து விழுந்ததும், அவனுடைய பலத்தை நம்பிப் பின்னே வந்துகொண்டிருந்த தர்ம தேவதையே கண்ணீர் வடிக்கிறதாம். ஹனுமானுடைய போரைப் பொறுக்க மாட்டாமல் அரிதில் உயிர் தப்பி ஓடி ஒளித்திருந்த அரக்கர்களெல்லாம் இப்போது அவனைச் சூழ்ந்துகொண்டு அதட்டுகிறார்கள். 'குரங்கின் வலிமை ஒடுங்கி விட்டது!' என்று ஆரவாரம் செய்து கூத்தாடுகிறார்கள் :

'குரக்கு நல்வலம் குறைந்தது!' என்று
ஆவலம் கொட்டி
இரைக்கும் மாநகர் எறிகடல்
ஒத்த(து); எம் மருங்கும்
திரைக்கும் மாசுணம் வாசுகி
ஒத்தது ; தேவர்
அரக்கர் ஒத்தனர் ; மந்தரம்
ஒத்தனன் அனுமன்.

[குரக்கு நல்வலம - குரங்கின மிகுந்த பலம். ஆவலம் - எக்களிப்புடன் செய்யும் ஒருவகையான கோஷம். எம் மருங்கும் - எல்லாப் பக்கங்களிலும். திரைக்கும் - இறுக்கும். மாசுணம் - பாம்பு. தேவர் அரக்கர் ஒத்தனர் - ராட்சஸர்கள் தேவர்களைப் போன்றார்கள். மந்தரம் - மந்தர மலை.]

ராட்சஸர்களில் ஆண்களோடு பெண்களும் இடிக்குரலில் தங்கள் சந்தோஷத்தைத் தெரிவித்துக் கொண்டு இரைச்சல் போடுகிறார்கள். இந்த வெற்றியைக் குறித்து இலங்கை அடைந்த சந்தோஷத்திற்கு எல்லையே இல்லை. ராவண மகாராஜ்யத்தின் வீர சரித்திரத்தில்கூட இப்படிப்பட்ட பரம சந்தோஷம் முன்னே ஒரு தடவைதான் ஏற்பட்டிருந்தது. அப்போது தேவேந்திரனை இந்திரஜித்து கட்டிக்கொண்டு வந்தான். அதற்கு முன் அவனுக்கு மேகநாதன் என்று பெயர். அன்றுதான் இந்திரஜித்து என்று பெயர் பெற்றான். அந்த ஜயமே ராவண ஸாம்ராஜ்யத்தின் அஸ்திவாரக் கல்லாக அமைந்தது. அப்படியே இந்த ஜயமும் தங்களுக்கு விசேஷ அதிர்ஷ்டத்தைக் கொடுக்கக் கூடும் என்று ராட்சஸர்கள் நம்புகிறார்கள்.

வந்(து)இ ரைத்தனர் மைந்தரும்
மகளிரும் மழைபோல்;
அந்த ரத்தினும் விசும்பினும்
திசைதொறும் ஆர்ப்பார்;
முந்தி உற்றதோர் உவகைக்(கு) ஓர்
கரையிலை; மொழியின்,
இந்தி ரன்பிணிப் புண்டநாள்
ஒத்த(து)அவ் இலங்கை.

[இரைத்தனர் - இரைச்சல் போட்டார்கள். அந்தரம் - வானம். விசும்பு - (இங்கே) மேலுலகம். ஆர்ப்பார் - ஆரவாரிப்பார்கள். பிணிப்புண்ட - கட்டுப்பட்ட.]

## 22. என்ன தடபுடல்! என்ன தர்பார்!

'அம்பால் எய்யுங்கள்!' என்று ஒருவன் கூச்சல் போடுகிறான். அவ்வளவு கருணை காட்டவும் இஷ்டப் படாத ஒருவன், 'ரம்பம் கொண்டு இழுத்து மரம் அறுப்பதுபோல் அறுத்துத் தள்ளுங்கள்!' என்று இரைச்சலிடுகிறான். அவ்வளவு சமீபத்தில் போவது ஆபத்தாக முடியுமென்று தெரிந்து கொண்ட ஒரு புத்திசாலி, 'கல்லையோ, ஈட்டியையோ எறியுங்கள்!' என்று கத்துகிறான். 'கொய்துவிடுங்கள் குடலை; கொய்து கூறு கூறாக்குங்கள்!' என்று கோபிக்கிறான் ஒருவன். 'மூட்டுப் பூச்சியை நசுக்குவதுபோல் தரையில் தேய்த்து விடுங்கள்!' என்று கொதித்துக் குமுறுகிறான் ஒருவன். அட்சகுமாரன் வதத்தை ஞாபகப் படுத்திக்கொண்டு, அப்படித் தசையை வீணாக்கிவிட வேண்டாம் என்று கருதும் சிக்கனப் பேர்வழி ஒருவன், 'தின்னுங்கள்!' என்று கர்ஜிக்கிறான். ஏன் இவ்வளவு தடபுடல், இந்த ரௌத்திராகாரம்?

'எய்யுமின்! ஈருமின்!
எறிமின்! போழுமின்!
கொய்யுமின்; குடரினைக்
கூறு கூறுகள்
செய்யுமின்! உலகிடைத்
தேய்மின்! தின்னுமின்!
உய்யுமேல் இல்லைநம்
உயிர்!' என்(று) ஓடுவார்

[ஈருமின்-இழுத்து அறுத்துத் தள்ளுங்கள். போழுமின்-பிளவுங்கள். உலகிடை-தரையில். உயயுமேல்-பிழைக்குமானால்.]

குரங்கு பிடிபட்டதுதான் இவ்வளவு அட்டகாசத்திற்குக் காரணம். எனினும் ராட்சஸர்கள் இப்போது கெட்டிக்காரர்களாகிவிட்டார்களா? மேற்படி உத்திரவுகளைப் பிறருக்குத்தான் போடுகிறார்கள். தாங்கள் ஹனுமானை நெருங்கவும் துணியவில்லை. 'அடடா, இது பிழைத்துக் கொள்ளுமானால் இனி நமக்கு உயிர் இல்லை!' என்று சொல்லிக்கொண்டு தூரத்தில்கூட நிற்கத் துணியவில்லை; ஒரே ஓட்டமாக ஓடிப்போகிறார்கள். ஐயோ, எவ்வளவு அனுபவத்திற்குப் பின் இந்தப் பாடம் படித்துக்கொண்டார்கள்!

இப்போது ஆணும் பெண்ணுமாக ஒரு கூட்டம் திரண்டு வருகிறது. ஹனுமானைக் கண்டதும் படம் எடுத்த பாம்பைப்போல் சீறிக்கொண்டு வருகிறார்கள். 'இந்தக் குரங்குப் பயலை இத்தனை பொழுது வைத்துப் பார்ப்பதா?' என்று சொல்லிக்கொண்டே, கோபத்தால் பயத்தையும் மறந்து, கொலை செய்ய நெருங்குகிறார்கள்.

மைத்தடம் கண்ணியர்
மைந்தர் யாவரும்
பைத்தலை அர(வு)எனக்
கனன்று, 'பைதலை
இத்தனை பொழுதுகொண்
டிருப்ப தோ?' என,
மொய்த்தனர் கொலைசெய
முயல்கின் றார்சிலர்.

[மைந்தர் - ஆடவர். பை - படம். பைதல் - பயல்.]

ஆனால் எப்படிக் கொல்லலாம் என்றுதான் தெரிய வில்லை. 'நஞ்சு தடவிய ஆயுதங்களாலும் இதை ஹிம்சிக்க முடியாதே!' என்று ஞாபகம் வருகிறது. கோபாவேசமும் பொங்கி வருகிறது. 'சமுத்திரத்திலே முக்கி, மேலே கிளம்பிவிடாதபடி உச்சந்தலையிலே வச்சிராயுதத்தை வைத்து எல்லோரும் அமுக்கிக் கொண்டே இருங்கள், மூச்சுத் திணறிச் செத்துப் போகும்!' என்றும், 'சனியனை நெருப்பிலே தள்ளி விடுங்கள்!' என்றும் எவ்வளவு வயிற்றெறிச்சலோடு பேசுகிறார்கள் !

வேறொரு கூட்டம் மிகவும் தைரியமாக ஹனுமா னுக்குக் குறுக்கே வந்து விழுகிறது. போரில் நெருங் கிய உறவினர்களைப் பறிகொடுத்தவர்கள்! இவர்கள் ஏதோ சொல்லுகிறார்களே!

'எந்தையை, எம்பியை,
எம்மு னோர்களைத்
தந்தனை போக!' எனத்
தடுக்கின்றார் பலர்.'

[எம் முனோர் - எமது தமையன்மார். தந்தனை - தந்து.]

'எங்கள் தந்தையைக் கொடுத்துவிட்டு அப்பால் போ!' என்று சொல்லுகிறார்கள் சிலபேர். தம்பியை இழந்தவர்கள், 'எங்கள் தம்பியைத் தந்துபோ!' என்று தடுக்கிறார்கள். தமையன்மார்களை இழந்தவர்கள், 'அட, குரங்கே! அண்ணனைக் கொடுத்துவிட்டுப் போ!' என்று வழி மறிக்கிறார்கள். 'எய்தவன் இருக்க, அம்பை நோவதுண்டோ? இந்தக் குரங்கை அனுப்பிய

தேவர்களையல்லவா கொல்லவேண்டும்?' என்று பல அரக்கர்கள் சொல்லுகிறார்கள்.

சிலர் ஹனுமானுடைய முகத்தைப் பார்த்ததும், இந்த முகத்தில் கொஞ்சமும் வாட்டமில்லையே! அடடா, என்ன ஒளி, என்ன களை! தன்னை ஏதோ ஒரு பூமாலை கொண்டு கட்டியிருப்பதுபோல் அவ்வளவு லேசாக எண்ணிக்கொண்டிருக்கிறது குரங்கு! தீர்க்கமாக ஆலோசனை செய்துதான் ஏதாவது செய்யவேண்டும். இந்த நிலையில் இதை ராஜசபையில் கொண்டு சேர்ப்பது சரியன்று' என்று மற்றவர்களுக்குப் புத்தி சொல்லுகிறார்கள். இன்னும் சில ஆலோசனைக்காரர்கள், 'இந்தக் குரங்கின் எண்ணம் வேறு; வேறுமென்றே அகப்பட்டிருக்க வேண்டும்!' என்று ஊகிக்கிறார்கள்.

'களிவரு சிந்தையால்
    காண்டி; நங்களைச்
சுளிகிலையாம்!' எனத்
    தொழுகின்றார்சிலர்.

[சுளிகிலை - கோபியாதே.]

'ஐயா, சாமி! எங்களை அப்படிப் பார்க்க வேண்டாம்; சந்தோஷ மனசோடு பார்; கோபித்துக் கொள்ளாதே!' என்று முன்னே போய்த் தண்டன் சமர்ப்பிக்கும் இந்த ராட்சஸர்களுடைய பயபக்தியை என்ன என்று சொல்லுவது?

'இது குரங்கன்று; யமன்தான் நமது கர்வத்தை அடக்க இந்த ரூபத்தில் வந்துவிட்டானே!' என்று பல ராட்சஸர்கள் எண்ணுகிறார்கள். ஆனால், எந்த

யமனுக்கு இந்தச் சக்தி யிருக்கும்? ராவண கோபத் தால் காலிலும் கையிலும் கட்டப்பட்ட யமனுக்கு இவ் வளவு தைரியம் வருமா? 'சிவபெருமானே சீதையினது கற்பின் மகிமையால் இந்த நகரத்தை அழிக்க வந்திருக் கலாம்!' என்றும், மகாவிஷ்ணுவும் பிரமதேவனும் இப் படி ஒரே வடிவமாக மாறி வந்திருக்கவேண்டுமென்றும் பலர் கருதுகிறார்கள். இப்படி யோசித்துக்கொண்டே, எத்தனை ஸ்திரீ புருஷர்கள் கும்பல் கும்பலாய் மாளிகைகளின் நிலா முற்றங்களிலும், மேல் நிலைகளி லும், பலகணிகளிலும், வாசல்கள் தோறும், மொய்த்து ஆரவாரம் செய்து கொண்டிருக்கிறார்கள்!

அரமியத் தலம்தொறும்,
 அம்பொன் மாளிகைத்
தரமுறு நிலைதொறும்,
 சாளரம்தொறும்,
முர(சு)எறி கடைதொறும்
 இரைத்து மொய்த்தனர்,
நிரைவளை மகளிரும்
 நிறைந்த மைந்தரும்.

[அரமியம் தலம் - நிலா முற்றம். முரசு எறி-முரசு வாத்தியம் முழங்கும். கடை - வாசல். நிரை - வரிசை.]

அசோகவனத்தோடு ராட்சஸ வீரர்களையும் அழித்த குரங்கைக் கட்டி இழுத்துக்கொண்டு போகும் விநோதத்தைப் பார்க்க, தேவ ஸ்திரீகளும், வித்யா தர ஸ்திரீகளும், நாக கன்னிகைகளும், சித்த யட்ச கன்னிகைகளும் வந்து கூடுகிறார்கள். இவர்களால் கண்ணீரை அடக்கிக்கொள்ள முடியவில்லை.

அரக்கரும் அரக்கியர்
குழாமும் அல்லவர்,
கரக்கிலர் நெடுமழைக்
கண்ணின் நீர்; அது
விரைக்குழல் சீதைதன்
மெலிவு நோக்கியோ ?
இரக்கமோ ? அறத்தின(து)
எண்மை யேகொலோ ?

[அல்லவர்-தேவர்கள் முதலிய மற்றவர்கள். கரக்கிலர்-மறைக்கமாட்டாதவர் ஆனார்கள். விரை-வாசனை. குழல்-கூந்தல். மெலிவு - துன்பம்; தளர்ச்சி. எண்மை-தாழ்மை.]

பல சௌகரியங்களை உத்தேசித்து இலங்கை வாசிகள் ஜனங்களை ராட்சஸர்கள் என்றும், ராட்சஸர்கள் அல்லாதார் என்றும் இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரித்து வைத்திருந்தார்கள். இவர்களில் இப்போது ராட்சஸர்களுக்குச் சந்தோஷம் பெருக, 'அல்லாதார்க'ளுக்குக் கண்ணீர் பெருகுகிறதாம். அது ராவண பயத்திற்கும் அடங்காமல் பெருகுகிறதென்றால், தக்க காரணம் வேண்டுமே! சீதையின் துன்பமா ? ஹனுமான் விஷயத்தில் ஏற்பட்ட இரக்கமா? 'தருமம் இப்படி இளைத்துவிட்டதே!' என்ற எண்ணந்தானா ?

ஹனுமான் திமிறிக்கொண்டு போக முயலவில்லை. தன்னை இழுத்துப் போகிறவர்களுடைய இஷ்டத்திற்கு மாறாக ஒன்றுமே எண்ணாதவனைப்போல், அப்படியே பரம சாதுவாக அவர்களுடன் போய்க் கொண்டிருக்கிறான். 'எப்படியாவது ராவணனைப் பார்ப்பது நல்லதுதானே!' என்று எண்ணுகிறான். ராமன் ஆணையால் விளையக்கூடியதை ராவணனுடைய

ஆலோசனை சபை அறிய வெளியிட வேண்டும் என்பது அவனுடைய ஆசை. அப்படிச் செய்தால், சீதையை ஒருவேளை தன்னிடம் ஒப்புவிக்கக்கூடும். எந்த விதத்திலும் ராவணனுடைய மனநிலை தெரிந்துவிடும். தன் வாக்கு வல்லமையால், ராமனுடைய வல்லமையும் அந்தக் கட்சியிலுள்ள நியாயமும் ராவணன் நெஞ்சில் பதியவும் கூடும். சீதையை விடவில்லை என்றால், இன்னுமுள்ள ராட்சஸ சேனையிலும் பாதிக்கு மேலாக அழித்துவிட்டுக் கிஷ்கிந்தைக்குத் திரும்புவதற்கும் அவகாசம் இருக்கிறது.

இவ்விதமாக மனோராஜ்யம் செய்துகொண்டே போகையில், தூதர்கள் ஓடி, 'உன் மகனுடைய பிரமாஸ்திரத்தினால் குரங்கு கட்டப்பட்டது!' என்று ராவணனுக்கு ஆச்சரியமாகச் செய்தி சொல்லுகிறார்கள். அவனும் அதை ஆச்சரியமாகக் கேட்டுத் தன் மார்பில் அணிந்திருந்த முத்துமாலையை உடனே கழற்றி அவர்களுக்கு வெகுமானமாகக் கொடுக்கிறான். எல்லையில்லாத சந்தோஷம் நெஞ்சிலே பொங்கித் தோளிலே பூரிக்கிறது. கண்களை மலர விழித்து, 'நீங்கள் விரைவில் போய், அந்தக் குரங்கைக் கொல்லாமல் கொண்டுவரும்படி இந்திரஜித்திடம் என் ஆணையைத் தெரிவியுங்கள்!' என்று சொல்லியனுப்புகிறான்.

ஹனுமான் பிடிபட்ட செய்தி சீதைக்கும் எட்டுகிறது.

ஒவி யம்புகை
உண்டது போல்,ஒளிர்
பூவின் மெல்லியல்
மேனிபொ டியுறப்

பாவி வேடன்கைப்
பார்ப்புறப் பேதுறும்.
தூவி அன்னம்அன்
ளுள், இவை சொல்லினுள்.

[ஓவியம் - சித்திரம். பூவின்-பூவை ஒத்த. பார்ப்பு-குஞ்சு. பேதுறும் - வருத்தப்படும. தூவி - சிறகு.]

இரக்கமில்லாத வேடன் கையில் தன் குஞ்சு சிக்கிக் கொண்டால், தாயான அன்னப் பறவை என்ன பாடு படும்! அவ்வளவு அவஸ்தைப்பட்டுச் சீதை தரையிலே விழுந்து புரளுகிருள்.

'கற்றுண் டாய்! ஒரு
கள்ள அரக்கனுல்
பற்றுண் டாய்! இது
வோ அறப் பான்மையே ?

[கற்றுண்டாய் - கலைகளைக் கற்றுத் தேர்ந்தவனே. கள்ள-வஞ்சனையுள்ள. பற்றுண்டாய்-பிடிக்கப்பட்டாய். அறப் பான்மை - தரும முறை.]

என்று ஒரு சமயம் புலம்புகிருள்.

'ஆழி காட்டிஎன்
ஆருயிர் காட்டினுய்க்(கு),
"ஊழி காட்டுவென்!"
என்(று)உரைத் தேன்; அது
வாழி காட்டும் என்(று)
உண்(டு); உன் வரைப்புயப்
பாழி காட்டி,
அரும்பழி காட்டினுய்!'

[ஆழி-கணையாழி. ஊழி காட்டுவென்-ஊழிக் காலம் வரை நீண்ட ஆயுள் கொடுப்பேன். வாழி-சாகாமல் வாழும் நிலை. என்று உண்டு-என்பது தவருது நிலைக்கும். வரை-மலை. பாழி - வலிமை.]

என்று ஒரு சமயம் கதறுகிருள். அவன் மூலமாகத் தனக்கு க்ஷேமம் உண்டாகும் என்று தான் கொண் டிருந்த முழு நம்பிக்கையும் போய்விட்ட தென்றே கருதிச் சீதை தளர்ந்து மூர்ச்சிக்கிருள்.

ஹனுமானைக் கட்டியபடியே, வெற்றி வீரனுகிய இந்திரஜித்து சபாமண்டபத்திற்குப் போகிருன். அங்கே திரிலோகாதிபத்தியத்திற்கும் அறிகுறியாய் ஓங்குகிற பிரமாண்டமான ஒரு சந்திரவட்டக் குடை சுற்றிலும் ஜாலராகத் தொங்கி அசைந்து கொண் டிருக்கும் முத்துச் சரங்களோடு 'ஜில்' என்று தாவள்யமாய்ப் பிரகாசிக்கிறது. அந்தக் குடை நிழ லில், மகாமேருவையே மகுடமாகத் தரித்துக்கொண்டு கருங்கடலானது திரண்டெழுந்து உட்கார்ந்திருப்பது போன்ற ஒரு பெருமிதத் தோற்றம் தோன்றுகிறது! அடுத்த நிமிஷத்தில்,

சிந்துராகத்தின் செறிதுகில் -
 கச்சொடு செறிய,
பந்தி வெண்முத்தின் அணிகலன்
 முழுநிலாப் பரப்ப,
இந்து வெண்குடை நீழலில்
 தாரகை இனம்பூண்டு
அந்தி வான்உடுத்(து) அல்லுவீற்று
 இருந்ததாம் என்ன, —

[சிந்துராகம் - சிந்தூரம். துகில் - வஸ்திரம். கச்சு - அரைக்கச்சு. செறிய - சேர்ந்து விளங்க. பந்தி - வரிசை வரிசையாக. அணிகலன் - ஆபரணங்கள். முழு நிலா - பூரண சந்திரனின் காந்தி. இந்து - சந்திரன். தாரகை - நட்சத்திரம். இனம் - கூட்டம். அல்லு - இருட்டு.]

விளங்குகிறது அதே தோற்றம். இருட்டானது கால் கை முதலிய அவயவங்களோடு உருவாகி, பூரண சந்திரனாகிய வெண்பட்டுக் குடை நிழலில் நட்சத்திரக் கூட்டங்களை ஆபரணமாக அணிந்து, அந்தி வானத்தையே ஆடையாகத் தரித்துக்கொண்டு, அரசு வீற்றிருக்கும் இந்த ஆச்சரியத்தை இன்னும் கொஞ்சம் கவனிப்போம்.

மரக தக்கொழும் கதிரொடு
மாணிக்க நெடுவாள்
நரக தேயத்துள் நடுக்குறு
இருளையும் நக்க,
சிரம்அனைத்தையும் திசைதொறும்
திசைதொறும் செலுத்தி,
உரகர் கோன்இனி(து) அரசுவீற்(று)
இருந்தனன் ஒப்ப,—

[கொழும் - செழுமையான. கதிர் - ஒளி. நெடுவாள் - நீண்ட ஒளி. நரக தேயம் - நரகலோகம். நடுக்குறு - மறையாது நிறைந்த. நக்க - விழுங்கிவிட. உரகர் கோன் - சர்ப்பங்களின் அரசனான ஆதிசேஷன்.]

பத்துக் கிரீடங்களிலுமுள்ள மரகதம் மாணிக்கம் முதலான இரத்தின வகைகளின் கிரண காந்திகளும்,

பலவித ரத்னாபரணங்களின் ஜோதிகளும் ஜாஜ்வல்யமாகப் பிரகாசிக்கின்றன. ஆஹா, அந்தக் கிரீடங்கள் எத்தனை? தலைகள்தான் எத்தனையோ? ஆயிரம் தலையுள்ள ஆதிசேஷன் உயர்ந்தெழுந்து படங்களைக் கம்பீரமாக விரித்திருப்பதுபோல், மின்னி ஒளிவீசும் மகுடங்கள் தாங்கி, தசக்கிரீவன் ஒவ்வொரு தலையையும் ஒவ்வொரு திக்கில் செலுத்திக்கொண்டு வீற்றிருக்கிறான். அக்கினி ஜ்வாலைகள்போல் தோன்றும செம்பட்டை மயிர்களும், வாய்களிலிருந்தும் மூக்குகளிலிருந்தும் கோபாக்னியோடு புகைபோல் கிளம்பும் பெருமூச்சும் இந்த உருவத்தை எவ்வளவு பயங்கரமாகக் காட்டுகின்றன!

வண்மைக் கும், திரு மறைகட்கும்,
　　வானினும் பெரிய
திண்மைக் கும்தனி உறையுளாம்
　　முழுமுகம், திசையில்
கண்வைக் கும்தொறும், களிற்றொடு
　　மாதிரம் காக்கும்
எண்மர்க் கும்,மற்ற இருவர்க்கும்
　　பெரும்பயம் இயற்ற,—

[தண்மை - ஈகை. மறைகள் - வேதங்கள். திண்மை - வலிமை. தனி - ஒப்பறற. உறையுள் - இருப்பிடம். களிறு - திக் கஜம். மாதிரம் - திகசு. எண்மர் - அஷ்ட திக்பாலகர்கள். மற்றை இருவர் - துருவன், ஆதிசேஷன் ஆகிய இருவர்.]

வீற்றிருக்கும் காம்பீரியம், எட்டுத் திசைகளோடு ஆகாசத்தையும் பாதாளத்தையும்கூட நடுங்கச் செய்து

போதிலும், இப்போது நம்மை வசீகரிக்கிறது. அத்தனை திசைகளிலிருந்தும் கொள்ளையடித்துக் கொணர்ந்த பொருளை எத்தனை ராட்சஸர்களுக்கு வாரி வாரி வழங்கியிருக்கிறான்! அம்மம்ம! அந்த முகங்கள் எவ்வளவு ஔதாரியத்திற்கும், வைதிகக் கல்விக்கும், எவ்வளவு மகத்தான சௌரியத்திற்கும் உறைவிடமாயிருக்கின்றன! அவ்வளவு வண்மையும், அறிவும், பலமும, அந்தக் கண்களில் அப்படியே ஜ்வலிக்கின்றன! அந்தக் கண் பார்வையே போதும் உலகத்தை இப்படி அப்படி ஆட்டிவைத்து ஆட்சி செலுத்துவதற்கு. மகாவிஷ்ணுவின் சக்கரம், சிவபெருமானுடைய சூலம முதலானவை தாக்கி, அந்த வீரத் தோள்கள் எப்படிக் காய்த்துப் போயிருக்கின்றன! ஆனால், ஆயுதங்கள் மட்டும் என்ன பாடு பட்டிருக்குமோ?

இப்படிப்பட்ட மகாசபையிலே சிவனையும், விஷ்ணுவையும், சில ரிஷிகளையும தவிர, மற்றைத் தேவகணத்தார் எல்லோரும் அடிமைப்பட்டு, ராட்சஸர்களோடு ராட்சஸர்களாகக் கலந்து, சக்ரவர்த்தியின் கட்டளையை எதிர்நோக்கிக் கொண்டிருக்கிறார்கள். வானரமும் வாலில்லாத நரமும்தான் அங்கே காணப் படவில்லை — கண்ணாலும் தீண்டத்தகாத ஜாதிகளானதால்.

ஒரு புறம்,

> அரம்பை மங்கையர், அமிழ்(து)உகுத்
> தால்அன்ன பாடல்
>
> வரம்பில் இன்னிசை செவிதொறும்
> செவிதொறும்......

[உகுத்தால் அன்ன - சொரிந்தாற் போன்ற.]

வழங்குகிறார்கள். ஒரு புறம் இசைப்பாட்டுக்கும் தாள அடைவுக்கும் பொருந்த மிருதங்க த்வனியோடு தொடர்ந்த முறும்படி அடிவைத்து, மனோபாவத்தை அபிநயத்தால் வெளியிட்டு, மேனகை பரதநாட்டியம் செய்கிறாள். அத்தகைய ஆடல் பாடல்களை ராவணன்,

பாடி னார்முகத்(து) ஆரமு(து)
ஒருமுகம் பருக,
ஆடி னார்முகத்(து) அணியமு(து)
ஒருமுகம் அருந்த, —

[அணியமுது - (இங்கே)அழகான அபிநய ரஸம்.]

எவ்வளவு ஆவலோடு அனுபவிக்கிறான்!

இப்படிப் பத்து முகங்களும், பத்து விதமாகத் தொழிற்படும் விந்தையைப் பாருங்கள். ஒரு முகம் தனக்கு எதிரே பணிப் பெண்கள் ஏந்துகிற கண்ணாடியில் அழகு பார்க்கிறது; ஒரு முகம் தன் கீழ்க் குடிகளான தேவர்களோடு கலந்து பேசி ஆட்சி செலுத்துகிறது; ஸ்தானீகர்கள் மூலமாக மும்மூர்த்திகளோடு பெரிய பெரிய மந்திராலோசனைகளை நடத்துகிறது ஒரு முகம்; உலகத்தில தீமையைப் பெருக்குவதற்காகத் தீய சிந்தனைகளைக் குறிப்பாக வெளியிடுகிறது ஒரு முகம; கிளி போன்ற சீதையை ஒரு முகம *உருவெளித் தோற்றமாகக் கண்டு களித்துககொண் டிருக்கிறது!

தேவ ரோ(டு) இருந்து அரசியல்
ஒருமுகம் செலுத்த,

* உருவெளித் தோற்றம் - பாவனை மிகுதியால் கண்ணுக்கு எதிரே உருவம் தோன்றுவது.

மூவ ரோ(டு)மா மந்திரம்
ஒருமுகம் முயல,
பாவ காரிதன் பாவகம்
ஒருமுகம் பயில,
பூவை சானகி உருவொடும்
ஒருமுகம் பொருந்த. —

[மா மந்திரம் - பெரிய மந்திராலோசனை. பாவ காரி - பாவம் செய்பவன். பாவகம் - கருத்தைக் குறிப்பாகவும் இயலபாகவும் வெளியிடுவது. பூவை - கிளி, அல்லது மைனு.]

வீற்றிருக்கும் ராவணனுக்கு இப்போது சீதையைப் பற்றிய கவலைதான். தன்னுல் அணுக முடியாத ஒரு புதரிலிருக்கும தேனைக் குடிக்க ஆசைகொண்டு அலையும் வெறிகொண்ட வண்டுபோல, மனமானது மதங் கொண்டு சுழன்று திரிகிறது. இதைக் கண்டு சகிக்காமல் ராஜபத்தினிகள் உள்ளம் வெந்து உடல் வெதும்பிக் கண்ணீர் வடிக்கிருர்கள். அவர்களுக்கு அவன்மேல் அவ்வளவு காதல், அவனுக்கோ அவர்கள் இப்போது பெண்களாகவே தோன்றவில்லை !

அந்த ஸ்திரீகளுடைய கண்கள் அவனைப் பார்த்த வ்ண்ணம் சூரியனைக் கண்ட தாமரைபோல் மலர்ந்திருக்க, அடிமைகளான தேவ-அசுரர்களுடைய கைகள் சந்திரனைக் கணட தாமரைபோல் குவிந்திருக்க, ராட்சஸேந்திரனும் அகில லோக பயங்கரனுமான பிரதாப லங்கேச்வரன் கொலுவீற்றிருப்பதை ஹனுமான் தூரத்திலிருந்தே பார்த்துவிடுகிருன். பார்த்த மாத்திரத்திலே பொல்லாத ஒரு நாகத்தைக் கண்ட கருடன் போல் துடிக்கிருன். 'தோளில் கட்டிய

பாசத்தைச் சிதறடித்து, இந்த ராவணன் மேல் பாய்ந்து முடித் தலைகளைத் திசைதோறும் உருட்டிவிடு வேன்!' என்று உக்கிரம் கொள்கிறான். ஆனால், அது அவ்வளவு எளிதான காரியம் அன்று என்பதும் நினை வுக்கு வருகிறது. 'இவனோடு சண்டை போட்டு இறந்து போனாலும், புகழேயன்றிப் பழியுண்டாகாது; சாவுக்குப் பயந்து உயிர் சுமந்து கொண்டிருப்பது பூமி பாரம்தானே!' என்ற எண்ணமும் உண்டாகிறது. ஆனால், போர் தொடங்குவது காலதாமதத்திற்கு ஏது வாகுமே! இன்னும் ஒரு மாச காலம்தானே சீதை உயிர் வைத்திருப்பதாகச் சொன்னாள்!' என்று கடை சியாக யோசித்துத் தன்னை ராம தூதனாக மாத்திரம் வெளியிட்டுக் கொள்ளவேண்டும் என்று தீர்மானிக் கிறான்.

இப்படி ஆலோசித்து, அடங்கி, ராவண சந்நி தானத்தை அடைந்த ஹனுமானை இந்திரஜித்து சக்ர வர்த்திக்குக் காண்பித்து எப்படி அறிமுகம் செய்து வைக்கிறான், பாருங்கள்!

புவனம்எத் தனைஅவை
அனைத்தும் போர்கடந்
தவனைஉ(ற்)று, 'அரிஉரு
வான ஆண்தகை,
சிவன்எனச், செங்கணான்
என்னச் சேவகன்
இவன்!' எனக் கூறிநின்று,
இருகை கூப்பினான்.

[புவனம் - உலகங்கள். அரி - குரங்கு. செங்க ணான் - மகாவிஷ்ணு. சேவகன் - வீரன்.]

லோகங்கள் எத்தனை உண்டோ அத்தனையும் ஜயித்தவனல்லவா ராவணன்? அப்படிப்பட்டவன் ஹனுமானைச் சாமானியனாக உருவத்தால் மட்டும் மதித்து விடலாகாது என்று இந்திரஜித்து கவலைப்படுகிறான். எனவே, 'இவன் குரங்கு ரூபத்திலிருக்கும் ஆண்தகை!' என்று முதன் முதல் சொல்லுகிறான். ஆண்மையே அந்த வடிவத்தில் வந்திருக்கிறது என்பது கருத்து. பிறகு சிவனை, விஷ்ணுவைப் போன்ற ஒரு மகா புருஷன் என்கிறான். இவ்வளவு சொல்லியும் திருப்தியுண்டாகாமல், கடைசியாய், எல்லாவற்றுக்கும் மேலாக, 'வீரன் இவன்!' என்று அறிமுகப்படுத்துகிறான். இது ஹனுமான் வீரத்தை எடுத்துக் காட்டுவதோடு, இந்திரஜித்தின் குணநிசயத்தையும் தூக்கிக் காட்டுகிறதல்லவா?

## 23. 'ராட்சஸா, பயப்படாதே!'

இருபது கண்களிலும் கோபப் பொறி பறக்கிறது. பத்து வாய்களும உக்கிரமாக உறுக்குகின்றன. தன் முன் நிற்பது குரங்குதான் என்ற நம்பிக்கையே அவனுக்கு இல்லை. 'இந்த வேஷத்தில் வந்திருக்கும் நீ யார்? மும்மூர்த்திகளில் ஒருவனா? ரிஷிகள் யாகம் செய்து மந்திர சக்தியால் எழுப்பி ஏவிய பூதமா? இந்த ஊரை அழிக்கும்படி சிருஷ்டிகர்த்தா விசேஷ சிருஷ்டியாகச் செய்து அனுப்பிய பயம் தெரியாத ஒரு புதுமைத் தெய்வமா? நீ இங்கே வந்த காரணம் என்ன? யார் உன்னை அனுப்பியவர்?' என்று சரமாரியாகக் கேள்விகள் போடுகிறான். இந்தக் கேள்விகளுக்கு,

'சொல்லிய அனைவரும்
அல்லென்; சொன்னஅப்
புல்லிய வலியினோர்
ஏவல் பூண்டிலேன்!'

[புல்லிய - அற்பமான.]

என்ற பீடிகையோடு, தன்னை அனுப்பியவன்,

'தேவரும் பிறரும் அல்லன்;
திசைக்களி(று) அல்லன்; திக்கின்
காவலர் அல்லன்; ஈசன்
கயிலையங் கிரியும் அல்லன்;

மூவரும் அல்லன்; மற்றை
முனிவரும் அல்லன்; எல்லைப்
பூவல யத்தை ஆண்ட
புரவலன் புதல்வன் போலாம்!'

[களிறு - யானை. பூவலயம் - பூமண்டலம். புரவலன் - சக்ரவர்த்தி, (இங்கே) தசரதர்.]

என்று ஹனுமான் அமைதியாக உத்தரம் சொல்லுகிறான். தேவரும் பிறரும் ராவணனுக்கு அடிமைகளாக இருப்பவர்கள். திக் கஜங்களோ, தந்தம் முறிக்கப்பட்ட நாள் முதல், அவன் இருக்கும் திசையைப் பார்க்கவும் பயந்து வேறு பக்கமாகத் திரும்பிக் கொண்டிருக்கின்றன. திக்பாலகர்களோ, அவனது குடைக் கீழ் ஒதுங்கிப் பதுங்கி வாழ்பவர்கள். திரிமூர்த்திகளையும் சில ரிஷிகளையும்தான் சக்தியுள்ளவர்களென்று அவன் எண்ணியிருக்கிறான். 'இப்படிப்பட்டவர்களில் ஒருவன் அல்லன் என் தலைவன்; உன்னால் மதிக்கப்பட்ட அனைவர்களைக் காட்டிலும் எவ்வளவோ மேம்பட்டவன்!' என்பது ஹனுமான் குறிப்பு.

ஆனால் ராவணன் எவ்வளவு புஜபலமும், தபோபலமும், வரபலமும், மனோபலமும், ஆயுதபலமும், சேனா சமுத்திரம், கீர்த்திப் பிரதாபம், வாழ்வுச் சிறப்பு முதலானவையும் தேடி வைத்திருக்கிறான்! அவற்றை அசைக்க யாரால் முடியும் என்று இறுமாந்திருக்கிறான் அல்லவா? எனவே, அவையெல்லாம் ராமனுடைய ஒரே அம்பிற்கு முன் அடியோடு அழிந்து போகுமென்று எச்சரிக்கிறான். 'வல்லவனுக்கு வல்லவன் வையகத்தில் உண்டு' என்பதை ராவணனுக்கு விளங்கும் பாஷையில் தெரிவித்த

பிறகு, அந்த வில் - வீரன் தர்மஸ்வரூபி என்பதையும், தர்மமே அந்த வீரத்தின் உயிர் 'நிலை என்பதையும் வற்புறுத்துகிருன். அதே உத்ஸாகத்தில் ராமனுடைய தெய்வத்தன்மையையும் அறிவிக்கத் தொடங்குகிருன் :

'மூலமும் நடுவும் ஈறும்
இல்ல(து)ஓர் மும்மைத்(து) ஆய
காலமும் கணக்கும் நீத்த
காரணன், கைவில் ஏந்தி,
சூலமும் திகிரி சங்கும்,
கரகமும் துறந்து, தொல்லை
ஆலமும் மலரும் வெள்ளிப்
பொருப்பும் விட்(டு),அயோத்தி
வந்தான்.'

[மூலம் - ஆதி. ஈறு - முடிவு. மும்மைத்து ஆய - மூன்று வகைப்பட்ட. திகிரி - சக்கரம். கரகம் - கமண்டலம். தொல்லை - பழமையான. ஆலமும் - ஆலிலையும். மலர் - (இங்கே) தாமரை மலர். பொருப்பு - மலை.]

என்று ராமாவதார - தத்துவத்தை வெளியிடுகிருன்.

ராமன் எல்லா மதத்தினருக்கும் பொதுவான கடவுளின் அவதாரம் என்பது கம்பன் கொள்கை. சிவ பெருமான் தமது சூலாயுதத்தைத் துறந்து வில்லைக் கையில் எடுத்துக் கொண்டாராம்; வெள்ளி மலையைத் துறந்து அயோத்திக்கு வந்து விட்டாராம். மகா விஷ்ணு சங்கு சக்கரங்களையும், தாம் பள்ளி கொள்ளும் ஆலிலையையும் துறந்துவிட்டாராம். பிரமா தமது

கமண்டலத்தையும் தாமரை மலரையும் விட்டு ராம ளுக வந்திருக்கிருராம்.' தர்ம ஸ்வரூபியான மகாவீர னைத் திரிமூர்த்தி ஸ்வரூபியாகவும் முழுமுதற் கடவு ளாகவும் கூறுவது, கவிஞனுடைய உயர்ந்த வேதாந்தக் கொள்கையை வெளியிடுவதோடு, பரந்த சமரச மனப்பான்மையையும் காட்டுகிறது என்னலாம். இதே மனநிலையோடுதான் அவதார ரகசியமும் ஹனுமான் மூலமாக வெளியிடப் பெறுகின்றது :

'அறம்தலை நிறுத்தி, வேதம்
அருள்சுரந்(து) அறைந்த நீதித்
திறம்தெரிந்(து) உலகம் பூணச்
செந்நெறி செலுத்தி, தீயோர்
இறந்(து)உக நூறி, தக்கோர்
இடர்துடைத்(து) ஏக ஈண்டுப்
பிறந்தனன் தன்பொற் பாதம்
ஏத்துவார் பிறப்(பு)அறுப்பான்.'

[தலைநிறுத்தி - நிலைநாட்டி. பூண - மேற்கொள்ள. உக-ஒழிய. நூறி - அழித்து. தக்கோர்-நல்லவர்கள்.]

தருமம் தலை சாயும் போதெல்லாம் அதைத் தலை நிமிர்ந்து நிற்கச் செய்ய ஒரு தெய்வ வீரன் — ஓர் அவதார புருஷன் — தோன்றுகிருன். உண்மையான பலம் மிருக பலம் அன்று, ஆயுத பலம் அன்று; 'நீதியின் பலமே பலம்' என்பதை எவ்வளவு கால மாக வேதங்கள் கோஷித்துக் கொண்டிருக்கின்றன! பரம கிருபையோடு வேத முரசு இப்படி முழங்கியும், இந்த உண்மையை இடையிடையே மறந்துவிடுகிறோம் அல்லவா? இதைத் தெரிந்து உலகம் சன்மார்க்கத்திலே

முன்னேறிச் செல்ல வேண்டும் என்பதுதான் அவதாரங்களின் நோக்கம். ஆனால் செந்நெறியாகிய 'ஒளி நெறி' யில் செல்வதைத் தடுப்பதற்கு இருளின் சக்திகள் துர்ச்சனர் மூலமாக வேலை செய்கின்றன. எனவே, துஷ்ட நிக்கிரகம் செய்து சாது ஜனங்களின் துன்பம் துடைப்பதற்காக ராமன் அவதாரம் செய்திருக்கிறான் என்றும், அப்படிப்பட்ட வீரனை வழிபடுவது பிறவிப் பிணிக்கு நல்ல மருந்தென்றும் ஹனுமான் சொல்லுகிறான்.

இவ்வளவு உத்ஸாகத்திற் கிடையே, ராவணன் முகத்தைப் பார்த்ததும், 'இவன் முன் இவ்விதமாகப் பேசுவதில் என்ன பிரயோஜனம்?' என்றும் தோன்றுகிறது. உடனே தன்னைத் தெரிவித்துக் கொண்டு, 'இப்படிப்பட்ட கர்வத்திற்கும் இந்த இடத்திலேயே சரியான ஒரு சூடு போடவேண்டும்' என்று தீர்மானிக்கிறான். 'எப்படியாவது அந்தச் சபையில் வாலி பெயரைச் சொல்லி விட்டாலே போதும், ராவணனை அவமானப் படுத்துவதற்கு!' என்பது ஹனுமான் எண்ணம். வாலியிடம் ராவணன் அடைந்த தோல்வியை அங்கே உள்ளவர்கள் மறந்திருக்கக் கூடும். ஹனுமானைத் தவிர வேறு யார்தான் அந்தப் பழைய சமாசாரத்தை இவ்வளவு சாமர்த்தியமாக ஞாபகப்படுத்த முடியும்?

'அன்னவற்(கு) அடிமை செய்வேன் ;
நாமமும் அனுமன் என்பேன் ;
நன்னுதல் தன்னைத் தேடி,
நாற்பெரும் திசையும் போந்த

மன்னரில், தென்பால் வந்த
தானைக்கு மன்னன் வாலி
தன்மகன் : அவன்தன் தூதன்,
வந்தனென் தனியேன்!' என்றான்.

[அன்னவற்கு - அத்தன்மையுள்ள ராமனுக்கு. நன்னுதல் - அழகிய நெற்றியை யுடையவள்; (இங்கே) சீதை. தானை - சேனை. மன்னன் - (இங்கே) தலைவன்.]

சீதையைத் தேடித் தெற்கே வந்த தலைவன் அங்கதன் ஆனதால், 'அந்த வாலி மகனுக்குத் தூதனாய் வந்தேன் தனியாக!' என்று சொல்லி முடிக்கிறான். அங்கதன் இளைஞனானதால், பிரசித்தனான தகப்பன் பெயரால் குறிப்பிட வேண்டும் என்பது வெளிப்படையான காரணம். 'அடடா, இந்தக் குரங்கு அந்தக் குரங்கின் பெயரைச் சொல்லி விட்டதே! இதனால் கௌரவக் குறைவு ஏற்படக் கூடாது!' என்று ராவணன் எவ்வளவு முன் ஜாக்கிரதைப் படுகிறான் பாருங்கள்!

மேகத்தின் நடுவிலே மின்னல் திரிவதுபோல், பத்து வாயிலுமுள்ள கோரப்பற்கள் வரிசையாகப் பிரகாசிக்க லங்கேச்வரன் கடகடவென்று சிரிக்கிறான். அப்படிச் சிரித்துக்கொண்டே, வாலி தனக்கு நெருங்கிய நண்பன் என்பதைச் சபை அறியும்படி யோக க்ஷேமம் விசாரிக்கிறான். தன் சிநேகிதன் மகனுடைய தூதன்தானே என்ற அலட்சியமும் அந்தச் சிரிப்பிலே தொனிக்கிறது.

என்றலும், இலங்கை வேந்தன்
எயிற்றினம் எழிலி நாப்பண்

மின்திரிந்(து) என்னநக்கு,
'வாலிசேய் விடுத்த தூத!
வன்திற லாய வாலி
வலியன்கொல்? அரசின் வாழ்க்கை
நன்றுகொல்?' என்ன லோடும்,
நாயகன் தூதன் நக்கான்.

[எயிற்றினம - எயிறு+இனம் - பல் வரிசை. எழிலி - மேகம். நாப்பண் - நடுவில். நக்கு - சிரித்து. வன் திறல் - வல்+திறல் - மிக்க பலம். வலியன் - சௌக்கிய நிலையில் உள்ளவன்.]

'வாலி மகன் அனுப்பிய தூதனே! உன்னை நான் யாரோ ஒரு பகைவன் அல்லது அவனுக்கு வேண்டியவன் என்றல்லவா நினைத்துவிட்டேன்? நீதானா இங்கே இவ்வளவு ஆர்ப்பாட்டம் செய்துவிட்டாய்? அது இருக்கட்டும்: மகா பலசாலியான நம்முடைய வாலி க்ஷேமமா? அவனுடைய அரசாட்சி நன்றாக நடந்து வருகிறதா?' என்று படாடோபமாகக் கேட்கிறான். இந்த அதிரடிக்காரனுக்கு எதிரிடையாக ஹனுமானும் முதன்முதல் ஒரு சிரிப்பைப் பிரயோகிக்கிறான். 'இவன் தம்பி கும்பகர்ணன்தானே எப்போதும் உறங்கிக் கொண்டிருப்பவன்? இந்த அண்ணனும் உலக நடப்பை அறியாமல், கண்ணைத் திறந்தபடியே உறங்கிக் கொண்டிருக்கிறானா?' என்ற சந்தேகமும் இகழ்ச்சியும் அந்த அடக்கமான சிரிப்பிலே பொதிந்திருக்கின்றன.

தான் வைத்த பொறியில் ராவணன் மாட்டிக் கொண்டான் என்பதை அறிந்த ஹனுமான், 'பயப்படாதே, ஓ, ராட்சஸா!' என்ற பீடிகையோடு, வாலி

இறந்த செய்தியைக் குதூகலமாகவும் ஹாஸ்யமாக வும் சொல்லுகிறான்: '

அஞ்சலை அரக்க! பார்விட்(டு)
அந்தரம் அடைந்தான் அன்றே
வெஞ்சின வாலி! மீளான்;
வாலும்போய் விளிந்த(து) அன்றே!
அஞ்சன மேனி யான்தன்
அடுகணை ஒன்றால் மாழ்கித்
துஞ்சினன்: எங்கள் வேந்தன்
சூரியன் தோன்றல்!' என்றான்.

[பார் - இந்த நில உலகம். அந்தரம் - வானுலகம். மீளான் - திரும்பி வரமாட்டான். விளிந்தது - அழிந்தது. அஞ்சன மேனியான் - மைபோன்ற நிறமுடைய ராமன். அடு - (பகை) அழிக்கவல்ல. மாழ்கி - வருந்தி. தோன்றல் - மகன்.]

வாலி பெயரைக் கேட்டதும் ராவணனுடைய நெஞ்சு 'படபட'வென்று அடித்துக் கொண்டது என்றும், உடம்பே நடுங்கியது என்றும் ஹனுமான் விளம்பரப் படுத்துகிறான். அதை மறைக்கத்தான் ராவணன் அப்படிச் சிரித்தானும்; அப்படிப் பேசினானும். 'ஆனால், என்னிடம் அந்த நடுக்கத்தை மறைத்துக் கொள்ள முடியுமா?' என்று கேட்பது போல், 'இப்போது அப்படிப்பட்ட பயத்திற்கு அவசியமில்லை' என்று சொல்லி, 'அவன் பூமியில் இல்லை!' என்கிறான். இதனாலும் ராவணனுக்குப் பயம் நீங்கவில்லையென்று கருதியது போல், 'அவன் சொர்க்கலோகம் போனான்!' என்று சில மாதங்களுக்கு முன் நடந்த

தைச் சுருக்கமாகச் சொல்லுகிறான். அந்த லோகத்திலும் ஒருவேளை சண்டைக்குத்தான் போயிருக்கிறானோ?' என்று ராவணன் சந்தேகிக்கக் கூடுமாம். எனவே, 'அந்தக் கோபக்காரன் திரும்பிவர மாட்டான்!' என்று சொல்லுகிறான். 'வாலிகூட வேண்டாம் ராவணனைப் பயப்படுத்துவதற்கு; அவனுடைய வாலே போதும்!' என்பதையும் குறிப்பிட வேண்டுமென்று, 'வாலியும் போனான்; அந்த வாலும் போய் விட்டது!' என்று சொல்லுகிறான். அப்படிச் சொல்லும்போது, எவ்வளவோ காலத்திற்கு முன், எங்கேயோ ஓரிடத்தில் வாலியின் வாலால் கட்டப்பட்டு ராவணன் பரிதாபமாகத் தொங்கி ஊஞ்சலாடிக் கொண்டிருந்த காட்சி எவ்வளவு தத்ரூபமாக அந்தச் சபையிலே பிரத்தியட்சமாகிறது! இவ்வளவு பரிகாசத்திற்குப் பின்பு, வாலி நோயால் சாகவில்லை என்பதையும் குறிப்பித்து, 'ஒரே ராமபாணம் அவனை வதைத்துவிட்டது!' என்று சொல்லுகிறான். 'கிஷ்கிந்தா பட்டணத்தில் இப்போது மகாராஜா சுக்கிரீவன்!' என்று சொல்லி முடிக்கும்போது, 'வாலி தொலைந்து, ஒரு பெரிய அரசியல் - புரட்சி ஏற்பட்டிருப்பதுகூட உனக்குத் தெரியவில்லையே! அந்தக் கும்பகர்ண நித்திரையில் உனக்கும் பாகமுண்டா?' என்று இடித்துக் கூறுவதுபோல் இருக்கிறதல்லவா?

இப்படி ஹனுமான் ராவணனைப் பரிகசிக்க முயன்ற போதிலும், அவனும் தன் புத்தி நுட்பத்தால், அதே சமாசாரத்தை ஹனுமான் அங்கதன் முதலானவர்களைப் பரிகசிக்க உபயோகப் படுத்துகிறான். தகப்பனைக் கொன்றவனுக்கு ஹனுமான் அடிமையாயிருப்பதும் எவ்வளவு மூடத்தனம்! இவ்விதமான

பிடிவாதத்தோடு, ‘ராமனைக்கொண்டு தமையனைக் கொல்வித்து, அந்தக் கொலைகாரனுக்கு அன்பு செய்யும் பூர்ண யோக்கியனுன உங்கள் புதிய ராஜா, உன்னைப் போன்ற பரம யோக்கியனை என்ன நீதி சொல்ல அனுப்பியிருக்கிறுன்? உன்னைக் கொல்ல மாட்டோம்; பயப்படாமல் பேசு!’ என்று ராவணன் கர்ஜிக்கிறுன். இதற்கு விடையாக ஹனுமான் ஹிதோபதேசம் செய்யத் தொடங்குகிறுன். ‘இந்த அதிகப்பிரஸங்கம் எவ்வளவு தூரம்தான் போகிறது, பார்க்கலாம்!’ என்று ராவணன் பொறுமையோடு வேடிக்கை பார்க்கிறுன்.

## 24. தன் வினை தன்னைச் சுடும்

ராவணன் தன் வாழ்க்கையை வீணாகக் கெடுத்து விட்டான் என்றும், சிறிதும் ராஜதர்மத்தைப் பாராமல் தீமையைப் பெருக்கிக் கொண்டிருக்கிறான் என்றும், ஹனுமான் தைரியமாகச் சொல்லத் தொடங்குகிறான் :

'வறிது வீழ்த்தனை
வாழ்க்கையை : மன் அறம்
சிறிதும் நோக்கலை :
தீமை திருத்தினாய்!'

[வறிது - வீணே. மன் அறம் - ராஜ தர்மம். திருத்தினாய் - செய்தாய்.]

என்று ராவணேச்வரனுடைய ஜீவிய சரித்திர சாரத்தைத் தைரியமாக எடுத்துக் காட்டி, தீமை நன்மையை வெல்லமாட்டாது என்பதை வற்புறுத்துகிறான். சீதையைக் கொடுத்துவிடுவதே பிழைக்கும் வழி என்று சுக்கிரீவன் சொல்லி அனுப்பியதாக ஹனுமான் கூறி முடித்ததும், ராவணன் மறுபடியும் ஒரு பெருஞ் சிரிப்புச் சிரிக்கிறான்.

என்றலும், 'இவை
சொல்லிய(து) எற்(கு)ஒரு
குன்றில் வாழும்
குரங்குகொலாம்! இது

நன்று, நன்று !' என
மாநகை செய்தனன்,
வென்றி என்(று)ஒன்று
தான்அன்றி வே(று)இலான்,

[எற்கு - எனக்கு. வென்றி - வெற்றி.]

ஜயம் ஒன்றுதான் ராவணன் கவலை. தர்மத்தைப் பற்றிய பேச்சே அநாகரிகமானது என்பது அவன் அபிப்பிராயம். 'குரங்கிலும் இது நாட்டுக் குரங் கன்று; பட்டிக்காட்டுக் குரங்குமன்று: மலைக் குரங் கானதால்தான், கொஞ்சங்கூட நாகரிகம் தெரியாமல், உள்ளதைப் பச்சையாகச் சொல்லிவிடுகிறது!' என்று நினைக்கும்போதே, 'அடடா! குரங்கா நமக்குப் புத்தி சொல்லுகிறது? நல்லது, நல்லது!' என்று சிரிப்பும் வந்து விடுகிறது. 'திரிலோக சக்ரவர்த்தியாகிய எனக்கு, கேவலம் ஒரு குரங்கு, வேறொரு குரங்கையே தூதாக அனுப்பத் துணிந்ததே! இந்தப் பட்டணத் திற்கு வந்து சேட்டையும் செய்யத் துணிந்ததே!' என்று கோபமும் பொங்குகிறது. இவ்வளவு தர்மம் பேசும் குரங்கை, ராட்சஸர்களைக் கொன்றதற்குக் காரணம் என்ன என்று ஒரு கேள்வியும் கேட்க வேண்டும் அல்லவா?

'குரக்கு வார்த்தையும்
மானிடர் கொற்றமும்
இருக்க; நிற்க !
நீஎன்கொல் அடா,இரும்

புறத்தி னுள்தரும்
தூ து புகுந்தபின்,
அரக்க ரைக்கொன்றது?
அஃ(து)உரை யாய்!' என்றான்.

[குரக்கு வார்த்தை-குரங்காகிய சுக்கிரீவன் செய்தி. கொற்றம் - வீரப் பிரதாபம். இரும் - பெரிய. புரம் - நகரம்.]

தான் விளைத்த வீரமும் சொன்ன நீதியும் பயன் படவில்லை என்பதையும், ராவணன் மரியாதை தவறிப் பேசுகிறான் என்பதையும் அறிந்துகொண்ட ஹனுமான், 'உன்னிடம் என்னை அழைத்து வந்து காட்டு கிறவர் எவரும் அகப்படவில்லை. எனக்கோ உன்னைக் கண்டு பேசவேண்டிய காரியம அவசியமாக வும், அவசரமாகவும் இருந்தது. அசோக வனத்தை அழித்தால், ராட்சஸர்கள் கவனிப்பார்கள் என்று நினைத்தேன். அவர்களோ, என் கருத்தை உணர்ந்து கொள்ளாமல், கொல்ல வந்தார்கள். என்னைக் கொல்ல வந்தவர்களை நான் தற்காப்புக்காகக் கொன்று விட்டேன். அதன் பின்பு நானே அடங்கி உன்னைக் கண்டு பேச வந்தேன் என்று பதில் சொல்லுகிறான். இதைக் கேட்ட ராவணனுக்கு அமோகமாகப் பொங் கும் கோபத்தையும், 'கொல்லுங்கள்!' என்று அவன் இடும் கட்டளையையும், உடனே ஹனுமானை நெருங் கும் கொலையாளிகளையும், அந்த க்ஷணத்திலேயே, 'நில்லுங்கள்!' என்று கம்பீரமாகப் பிறக்கும் சப்தத் தையும், அதைக் கேட்டுக் கொலைஞர்கள் அடையும் திகைப்பையும், அப்படி எதிரிடையாக உத்தரவு

செய்யத் துணிந்த விபீஷணனையும், ஒரு பேசும் படத்தில் பார்ப்பது போல் இதோ பாருங்கள் :

என்னும் மாத்திரத்து.
ஈண்டுஎரி நீண்டுஉக,
மின்னும் வாள்எயிற் -
றன்சினம் வீங்கினான்,
'கொன்மின் !' என்றனன் ;
கொல்லியர் சேர்தலும்,
'நின்மின் !' என்றனன்,
வீடணன் நீதியான் !

[ஈண்டு எரி - மிகுதியான நெருப்பு. உக - சிந்தும்படி. எயிற்றன் - பற்களை உடையவன்.]

தூதனைக் கொல்லலாகாது என்று சொல்லுகிறான் விபீஷணன். 'மேலும், நமது நிலைமையை அவர்கள் அறிந்துகொள்வதற்கு இவன் திரும்பிப் போகவேண்டியது அவசியம். அதற்கு மாறாக இவனைக் கொல்வது பகைவர்களுக்குப் பயப்படுவதேயாகும்' என்று இணக்கமாகவும் நயமாகவும் பேசுகிறான். விபீஷணனுடைய புத்திமதியில் நீதிப் பகுதியை ஒப்புக் கொள்ளாவிட்டாலும், பராக்கிரமத்துக்குக் குறைவான காரியத்தைச் செய்யவேண்டாம் என்று ராவணன் தீர்மானிக்கிறான். எனவே,

'தொல்லை வாலை மூலம்அறச்
சுட்டு, நகரைச் சூழ்போக்கி,
எல்லை கடக்க விடுமின்கள் !'
என்றான் ; நின்றார் இரைத்(து) எழுந்தார்.

[தொல்லை வால் - தொந்தரவு கொடுக்கும் வால். மூலம் - அடி. சூழ் போக்கி - சுற்றிவரச் செய்து.]

இவ்விதமாக வாலைக் கொளுத்தித் துரத்திவிட்டால், தன் பராக்கிரமத்தை எதிரிகள் ஒருபோதும் மறக்கமாட்டார்கள் என்பது ராவணன் எண்ணம்.

எவ்வளவு உத்ஸாகமாக ராட்சஸர்கள் ஹனுமானைக் கயிறுகொண்டு கட்டத் தொடங்குகிறார்கள்! அவனுக்கும் அது ஒரு வேடிக்கையாக இருக்கிறது. அவர்கள் கட்டக் கட்ட, அவன் வடிவத்தைப் பெரிதாக்கிக் கொண்டே யிருக்கிறான். லங்கா பட்டணத்தில் கயிற்றுப் பஞ்சமே வந்துவிட்டது. நாடு நகரங்களிலுள்ள கயிறுகளை யெல்லாம் கொண்டு கட்டிய பின், தேர் வடங்களைக் கொண்டு கட்டுகிறார்கள்! குதிரை, யானை கட்டும் கயிறுகளைக் கொண்டு கட்டுகிறார்கள்! ஊஞ்சல்களை அவிழ்த்துவிட்டு, அந்தக் கயிறுகளைக் கொண்டு கட்டுகிறார்கள்! ராட்சஸிகளின் தாலிக் கயிறுகள் தவிர, மற்றைக் கயிறுகள் எல்லாம் இவ்விதமாக உபயோகப்படுகின்றன. பிறகு, அவர்கள் ஹனுமானை ஒரு வெளியிடத்திலே கொண்டு போய், வாலில் சீலைகளைச் சுற்றி நெய்யிலும் எண்ணெயிலும் தோய்த்து, நெருப்பைப் பற்ற வைக்கிறார்கள்.

‘அந்த நகரும் கடிகாவும்
அழிவித்(து), அக்கன் முதலாயோர்
சிந்த நூறி, சீதையொடும்
பேசி, மனிதர் திறம்செப்ப
வந்த குரங்கிற்கு உற்றதனை,
வம்மின், காண வம்!’ என்று

தம்தம் தெருவும் வாயில்தொறும்
யாரும் அறியச் சாற்றினர்.

[கடி காவும் - கட்டுக்காவலுள்ள சோலையையும். அக்கன் - அட்சகுமாரன். நூறி - அழித்து. வம்மின் - வாருங்கள். வம் - வாருங்கள்.]

இவ்விதமாகப் பறைசாற்றிக் கொண்டே அவர்கள் ஓடிப்போய்ச் சீதைக்கும் செய்தி சொல்லுகிறார்கள். அந்த ராட்சஸர்களுடைய குதூகலத்தையும், சீதையின் துயரத்தையும் பாருங்கள் :

ஆர்த்தார் அண்டத்(து) அப்புறத்தும்
அறிவிப் பார்போல் அங்கோ(டு)இங்கு
ஈர்த்தார் ; முரசம் எற்றினர் ;
இடித்தார் ; தெழித்தார் ; எம்மருங்கும்
பார்த்தார்; ஓடிச் சானகிக்கும்
பகர்ந்தார்: அவளும் உயிர்பதைத்தாள் ;
வேர்த்தாள் ; உலந்தாள் ; விம்மினள்;
விழுந்தாள்; அழுதாள்; வெய்(து)உயிர்த்
[தாள்.

[ஆர்த்தார் - ஆரவாரம் செய்தார்கள். ஈர்த்தார் - இழுத்தார்கள். எற்றினர் - அடித்தார்கள். தெழித்தார் - அதட்டினார்கள். மருங்கு - பக்கம். உலந்தாள் - மனம் அழிந்தாள். வெய்து - வெப்பமாக.]

என்ன இரைச்சல் போடுகிறார்கள்! இந்த அண்டத்துக்கு வெளியிலும் இந்தச் செய்தியை அறிவிக்கப் பார்க்கிறார்களா? ஹனுமானை அங்கும் இங்குமாக எத்தனை இடங்களில் இழுக்கிறார்கள்! அப்படி

அந்தக் குரங்கை ஆட்டி வைப்பது அவர்களுக்கு ஒரு தமாஷாக இருக்கிறது. பேரிகைகள் முழங்க முழங்கக் கூட்டம் அதிகப்பட்டுக் கொண்டே வருகிறது. சிலர் கோபமாக வந்து ஹனுமானைக் கையால் இடிக்கிறார்கள்; அதட்டுகிறார்கள். இதைக் கேட்டுச் சீதை அனுபவிக்கும் கஷ்டங்களைக் கண்ணாரக் கண்டு அனுபவிப்பதில்தான் அவர்களுக்கு எவ்வளவு ஆசை! 'ஹனுமானைச் சுடாதே!' என்று சீதை அக்கினி பகவானை நோக்கிக் குழந்தை உள்ளத்தோடு எவ்வளவு உருக்கமாகப் பிரார்த்திக்கிறாள்!

'தாயே அனைய கருணையான்
துணையை, ஏதும் தகவில்லா
நாயே அனைய வல்அரக்கர்
நலியக் கண்டால், நல்காயோ?
நீயே உலகுக்கு ஒருசான்று;
நிற்கே தெரியும்; கற்பதனில்
தூயேன் என்னில், தொழுகின்றேன்,
எரியே! அவனைச் சுடல்!' என்றாள்.

[துணை - துணைவன். தகவு - தகுதி. நலிய - துன்புறுத்த. நல்காயோ - அருள் செய்யமாட்டாயோ. சான்று - சாட்சி. நிற்கே - உனக்கே. எரி - அக்கினி. சுடல் - சுடாதே.]

எல்லா உயிர்களிடத்திலும் தாய்போலக் கருணை காட்டும் தன் புருஷனுக்கு உதவியாக வந்தவனை, நாய்போலக் கடைப்பட்டவர்கள் ஹிம்சிக்கிறார்களே என்ற வருத்தத்திற்கு அளவில்லை. அவ்வளவு வருத்தமும் இரக்கமும் ஊடுருவிக் கலந்த உள்ளமே

இப்போது உருகிப் பிரார்த்தனையாக வெளிப்படு கிறது. கற்புக் கனலாகிய சீதையின் இந்தப் பிரார்த் தனையை எந்தத் தேவன்தான் அலட்சியம் செய்ய முடியும்? உடனேயே ஹனுமானின் வாலைச்சுற்றிப் பற்றியிருந்த தீ ஜில்லென்று குளிர்ந்து விடுகிறது. அம்மட்டுமா? முப்புரம் எரித்த சிவபெருமானின் நெற்றிக் கண்ணிலும, இடிகளிலும், சூரிய மண்டலத் திலும் உள்ள தீயும் குளிர்ந்ததாம். மீளா நரகமும், குளிர்ந்து போய்விட்டதாம்! அனல் குளிர்ந்த அதிசயத் தைக் கண்டதும், ஹனுமான் உண்மையை ஊகித்துக் கொண்டு, ஆனந்தம அடைகிறான்.

அந்தக் கோலத்தில் ஹனுமானை ராட்சஸர்கள் ஊர்வலம் செய்விக்கிறார்கள். இரவின் முற்பகுதியில் சீதையைத் தேடியபோது, சில இடங்களை அவன் ஊன் றிப் பாராமல் விட்டிருக்கலாம் அல்லவா? இந்திர ஜித்து கட்டிக்கொண்டு போனபோது ராஜபாட்டை வழியாகத்தானே கொண்டுபோயிருக்க வேண்டும்? இந்தக் குறைகள் தீரும்படி, இப்போது அரக்கர்கள் வலிய அழைத்துப் போய்ப் பட்டணத்தின் அமைப்பு முழுவதையும் நன்றாகவே காட்டுவதாக ஹனுமான் நினைக்கிறான். ஊரின் கடை எல்லை வந்து சேர்ந்ததும், — என்ன ஆச்சரியம்! — ராட்சஸர்களுக்கிடையே அடங்கிப்போய்க்கொண்டிருந்த குரங்கு, திடீரென்று, பாம்புகளால் சூழப்பட்ட கருடன் போல, ஆகாசத் திலே காணப்படுகிறது. கைகள் தனிப்பட்டுக் கயிற் றுடனே தொங்குகின்றன! எத்தனை ராட்சஸர்கள் தோள் அற்றுக் கீழே விழுந்து உயிர் துறக்கிறார்கள்! இந்த நிலையில் அவன்,

' துன்னலர் புரத்தை முற்றும்
சுடுதொழில் - தொல்லை யோனும்,
பன்னின பொருளும் நாணப்
பாதகர் இருக்கை பற்ற,
மன்னனை வாழ்த்திப் பின்னை
வயங்(கு)எரி மடுப்பென் !' என்று,
பொன்னகர் மீதே தன்போர்
வாலினைப் போக விட்டான்.

[துன்னலர் - பகைவர். புரத்தை - திரிபுரத்தை. தொல்லையோன் - ஆதிப் பொருள்; பழமையான பரம சிவன். பன்னின - சொல்லப்பட்ட. நாண - வெட்க மடையும்படி. இருக்கை - இருப்பிடம்; (இங்கே) இலங்கை. பற்ற - எரிய. மன்னனை - (இங்கே) இராம பிரானை. வயங்கு எரி - பிரகாசிக்கிற நெருப்பு. மடுப் பென் - பற்றவைப்பேன்.]

பாதகர்களுடைய இருப்பிடங்கள் அழிய வேண்டும் என்று ராமனை ஸ்தோத்திரம் செய்துகொண்டு, நெருப்புமயமான வாலை அந்தப் பட்டணத்தின் மேலே போக விடுகிறான். தன் வாலை அந்தப் பாதகர்கள் கொளுத்த முயன்றது, 'இந்த ஊரை நீ கொளுத்தி விடு!' என்று அவனுக்குத் தெளிவாகச் சொன்னது போலிருந்தது. தன்வினை தன்னைச் சுடும் அல்லவா ?

வெள்ளியினாலும், பொன்னாலும், பலவகைப்பட்ட ரத்தினங்களினாலும் தெய்வச் சிற்பி எவ்வளவு அருமை யாக, எவ்வளவு அழகாக, அந்த நகரத்தை அமைத் திருந்தான்! குன்றின் மீது பயங்கரமான இடி விழு வது போல், ஹனுமான் சிற்பச் செல்வமாகிய மாட மாளிகைகள் தோறும் தன் பெரிய மேனியைச் சுற்றி

எரியும் நெருப்போடு தாவியும், திடீர் திடீரென்று குதித்துப் பாய்ந்தும் செல்லுகிறான்! சீதையைத் தேடிக் கொண்டிருந்த போது, 'ஐயோ! இந்தப் பட்டணத்தின் அழகும் ஐசுவரியமும் போய்விடுமே!' ('நீங்கும் அந்தோ இந்த நெடுநகர்த் திரு!') என்று இரக்கப் பட்டான். ஆனால், இப்போது அந்த இரக்கம் எங்கே? பயங்கரமான விதியின் கையில் பயங்கரமான ஒரு கருவியாகி விடுகிறான் ஹனுமான்!

## 25. லங்கா தகனம்

ராட்சஸ ராஜதானியிலுள்ள ஒவ்வொரு வீடும் ராணுவத் திமிருக்கு ஓர் அரணாய், உயர்ந்த தூண்களாலும் நீண்ட சுவர்களாலும் அமைந்து, பிரமாதமான மேற்கட்டிகளோடும் பிரமாண்டமான கொடிகளோடும் விளங்குகிறது. ராவண பக்திக்கு அறிகுறியாகக் கம்பீரமாய்ப் பறந்துகொண்டிருக்கும் அந்தக் கொடிகளிலேதான், ஹனுமான் வால் கொண்டு வைத்த தீ முதலாவதாகப் பற்றிக் கொண்டு, வீடுகள் தோறும் பரவுகிறது.

கொடியைப் பற்றி,
விதானம் கொளுத்தித்தான்,
நெடிய தூணைத்
தழுவி, நெடுஞ்சுவர்
முடியச் சுற்றி,
முழுதும் முருக்கிற்றால்,
கடிய மாமனை
தோறும் கடுங்கனல்.

[விதானம் - மேற்கட்டிகள். முருக்கிற்று - அழித்தது. கடிய - பாதுகாவலையுடைய.]

உயிர்தப்ப வேணும் என்ற ஆசையோடு, பிள்ளை குட்டிகளையும் அருமையான பொருள்களையும் காப்பாற்றவேணும் என்ற ஆசையும் காணப்படுவதால், ஜனக்கூட்டம் உள்ளும் புறமுமாக ஊஞ்சலாடுகிறது;

அங்குமிங்கும் ஓடியோடி அலைந்து திரிந்து ஒருவரை யொருவர் கூப்பிட்டுக்.கொண்டு, அழுவதும், கதறு வதும் கூக்குரலிடுவதுமா யிருக்கிறது. சில மாளிகை களில் இரத்தினங்களின் ஜோதிக்கும், அக்கினி ஜ்வா லைக்கும் வித்தியாசம் தெரியவில்லையாம். இதனால், 'தீப் பிடித்த இடம் இது ; பிடியாத இடம் இது!' என்று அங்கேயுள்ள பெண்கள் கண்டு பிடிக்க முடிய வில்லையாம். அவர்களில் சிலர், தீப்பற்றாத இடங் களிலிருந்து தீப்பற்றி எரியும் இடங்களுக்குப் போகி றார்கள் ; சிலர் தீப்பற்றின இடங்களிலேயே தடு மாறித் திரிகிறார்களாம். வேறு சிலர் தங்கள் செம் பட்டை மயிரில் நெருப்புப் பற்றியதையே அறிந்து கொள்ளாமல் மயங்கித் திரிகிறார்களாம். இரத்தின மயமான மாளிகைகளும் பொன்மயமான மாளிகை களும் இப்போது நெருப்பு மயமாகவும் புகை மயமாக வும் காண்கின்றன.

அக்கினியின் உக்கிர சொரூபம் வரவர வளர்ந்து கொண்டே யிருக்கிறது. புகை, ஆகாய வெளி மறை யும்படி எழுந்து, எங்கும் பரவிச் சூழ்ந்து கொள்ளு கிறது. தப்பியோடும் பெண்கள் சிலருக்குத் திசையே தெரியவில்லை. பலவகை மலர்கள் சிந்தியிருக்கும் காட்டிலே மயில்கள் ஓடுவதுபோல் ஓடிக் கொண்டே அந்தப் பெண்கள் இன்னது செய்வதென்று தெரியா மலே திகைத்துப் பிரலாபிக்கிறார்கள்.

வான கத்தை
நெடும்புகை மாய்த்தலால்,
போன திக்(கு)அறி
யாது புலம்பினர்,

தேன்அ கத்த
மலர்பல சிந்திய
கான கத்து
மயில்அன்ன காட்சியார்.

[மாய்த்தலால் - மறைத்தலால். தேன் அகத்த - தேனை உள்ளேயுடைய.]

வேறு சில பெண்கள் வெப்பம் தாங்க முடியாமல் ஒரு நீர்நிலையில் போய் விழுந்து தண்ணீரிலே கிடக்கிறார்கள். அப்போது நகரமெங்கும் பனி அடர்ந்தாற்போலப் புகை சூழ்ந்துகொண் டிருப்பதையும், உஷ்ணத்திற்குப் பயந்தோடும் எருமைகள் மேகங்கள் போல வந்து அதே நீர்நிலையில் விழுவதையும், அங்கே மூங்கிக் கொண்டிருந்த அந்த இளம் பெண்கள் அன்னங்களைப்போல் அஞ்சி ஒதுங்கிக் கொள்வதையும்,

மீ(து)இ மம்கலந்
தால்அன்ன வெம்புகை,
சோதி மங்கலத்
தீயொடு சுற்றலால்,
மேதி மங்குலின்
வீழ்புனல் வீழ்மட
ஓதி மங்களின்
மாதர் ஒதுங்கினர்.

[மீஇமம் - மீது+இமம - மேலே பனி. மேதி - எருமை. மங்குலின் - மேகம்போல். புனல் - (இங்கே) நீர்நிலை. மட ஓதிமங்களின - இளமையான அன்னங்களைப் போல்.]

என்ற சப்த சித்திரத்திலே எவ்வளவு பிரத்தியட்ச மாகப் பார்க்கிறோம்!

சில பெண்கள் தப்பியோட முயற்சி செய்யவே யில்லை. 'நமது பிராண நாயகன் கொல்லப்பட்டான்; அதனால் வாழ்வே இல்லாமல் போய்விட்டது. நாம் தப்பிப் பிழைப்பதில்தான் என்ன பிரயோசனம்? இந்த வீட்டில் இப்படியே இருந்து, இந்தநெருப்புக்கே இரையாவோம். இதுதான் நம்மை இப்போது எதிர் நோக்கும் கடமை' என்று எண்ணமிட்டுக்கொண்டு உயிர்த் தியாகம் செய்யும் பெண்மணிகளைப் பாருங் கள். 'இந்த ராட்சஸ பூமியிலும் இவ்வளவு தியாக புத்தியா?' என்று அதிசயித்துக் கொண்டே, தேர்கள், குதிரைகள், சோலைகள் முதலியவை எரிந்து கரிந்து போவதையும், தப்பியோடும் போதே சில புரு ஷர்கள் புகையால் மூச்சு முட்டி நெருப்பில் விழுந்து மடிவதையும், தீப்பிடித்த ஆடையோடு சிலர் மயங்கி ஓடுவதையும் கண்டு, 'ஐயோ, என்ன நாசம்!' என்று வருந்துகிறோம்.

அந்த ஊரில் எத்தனையோ பானசாலைகள்! அங்கேயுள்ள மதுவகைகள்தான் எத்தனை! அறிவை நல்ல வழிகளில் பேணி வளர்ப்பதற்குரிய வசதிகளை ராட்சஸர்கள் தேடவில்லை. அறிவை மயக்கி வெறி கொண்டு தீமை செய்வதற்குத் துணையாக அவர்கள் மதுபானம் செய்வதை வழக்கமாக்கிக் கொண்டார்கள். அக்கினி பகவானும் இப்போது அந்தப் பான சாலைக்கு விஜயம் செய்கிறாராம். ஜாடி ஜாடியாக வும், குடம் குடமாகவும் குடிக்கிறாராம்! என்ன ஆச் சரியம்!

பேய மன்றினில்
நின்று, பிறங்(கு)எரி,
மாயர் உண்ட
நறவும் மடுத்ததால் ;
தூயர் என்றவர்,
வைகிடம் துன்னினால்,
தீயர் அன்றியும்
தீமையும் செய்வரால்.

[பேயமன்று - (இங்கே) மதுபானசாலை. பிறங்கு - விளங்குகிற. மாயர் - (இங்கே) கெட்டவர் ; கொடியவர். நறவு - மது. மடுத்தது - உண்டது. அன்றியும - அல்லாமலிருந்தே.]

மகா பரிசுத்தனான அக்கினி தேவனும் சகவாச தோஷத்தால் மதுபானம் செய்தான் என்றால், தூயராய் உள்ளவர்களும் தீயவர்கள் இருக்குமிடம் சேர்ந்து அவர்களோடு நெருங்கிப் பழகும்போது அவர்களுடைய தீய செயல்களிலும் பழகிவிடக் கூடுமல்லவா ? இதனாலன்றோ, 'உன்னுடைய நண்பனைக் காட்டு, உன்னை நான் தெரிந்து கொள்வேன் !' என்ற ஆப்த வாக்கியம் பிறந்தது ?

இவ்வளவு அக்கினி ஜ்வாலைகளுக்கும், புகைக் காடுகளுக்கும இடையே ஒரு நாடகக் காட்சி நம் கண் முன் வருகிறது. திரையில்லாமல், மேடையில்லாமல், பள்ளமில்லாமல் நடைபெறும் நாடகத்தை இதோ பாருங்கள்: ஒரு பிரபுவின் மாளிகை; அதிலே புருஷனும் பெண்சாதியும்தான் ; பிள்ளைகுட்டி இல்லை. அவள் ஒரு கிளி வளர்க்கிறாள் : அழகான பச்சைக் கிளி. அதை ஒரு பச்சைப பிள்ளையாகவே மதித்துப்

பாலூட்டிச் சீராட்டுகிறாள். புருஷன் இல்லாத சமயங்களில் தன் செல்லக் கிளியோடு கொஞ்சிக் கொண்டிருப்பாள். ஒரு சமயம் அவன் வீட்டில் இருக்கிறான்; கிளி மாளிகை முகப்பில் தொங்கிக் கொண்டிருக்கும் கூட்டில் இருக்கிறது. அவள் அப்போதுதான் கண்ணிலே மையிட்டுக்கொண்டு புருஷனோடு உற்சாகமாக வார்த்தையாடிக் கொண்டிருக்கிறாள். திடீரென்று 'தீ! தீ!' என்ற இரைச்சல் கேட்கிறது. அவர்கள் வெளியே வருகிறார்கள். நகரமெங்கும் நெருப்புமயமாக இருக்கிறது என்று கண்டதும், அவர்கள் விலையுயர்ந்த சாமான்களைக் காப்பாற்ற வேணும் என்று நினைக்கவேயில்லை. தங்கள் உயிரைக் காப்பாற்றிக் கொள்வதே போதுமென்று தீர்மானிக்கிறார்கள்.

அவ்வளவு கலவரத்திலும் கலாட்டாவிலும் புருஷன் முன்னே வழி காட்டிக்கொண்டு போகிறான், மனைவி தொடர்ந்து போகிறாள். எரிகிற வீட்டைத் திரும்பிப் பாராமலே அவன் போய்க்கொண்டிருக்கிறான்; அவளும் அப்படித்தான் போய்க்கொண்டிருந்தாள். கொஞ்ச தூரம் போனதும், அவள் மட்டும் திரும்பிப் பார்க்கிறாள். ஏன்? இப்போது பளிச் சென்று என்ன ஞாபகம் வந்துவிட்டது? 'வைர நகைகளையும் தங்கப் பாத்திரங்களையும் போட்டு விட்டுப் போகிறோமே!' என்ற வருத்தமா? இல்லை, அவள் நினைத்த நினைப்பையும், கண்ட காட்சியையும், அடைந்த நிலையையும் கதியையும் இதோ பாருங்கள் :

> பஞ்ச ரத்தொடு பசுநிறக்
> கிளிவெந்து பதைப்ப,
> அஞ்ச னக்கணின் அருவிநீர்
> முலைமுன்றில் அலைப்ப,

குஞ்ச ரத்தன கொழுநரைத்
தழுவுறும் கொதிப்பால்,
மஞ்சு றப்புகும் மின்னனப்
புகையிடை மறைந்தார் !

[பஞ்சரம் - கூடு. முன்றில் - முகட்டிலே. அலைப்ப - அலைபட. குஞ்சரம் - யானை. அன - அன்ன ; போன்ற. தழுவுறும் - அன்போடு நெருங்கிச் செல்ல எண்ணிய. மஞ்சு - மேகம்.]

அவசர அவசரமாக வரும்போது, கிளிக்கூட்டைத் திறந்துவிட மறந்து போனார்கள். அந்தக் கிளியைப் பற்றிய கவலைதான் இப்போது அவளுக்கு! தான் பயந்த பெரும் பயம் அப்படியே கண்முன் சாட்சாத் காரமாகிறது. தங்கள் மாளிகையில் பிடித்துக்கொண்ட தீ அந்தக் கூட்டிலும் பற்றி எரிகிறது. ஐயோ, பச்சைக்கிளி கூட்டோடு வெந்து பதைத்துக் கொண்டிருக்கிறது! இந்தக் கொடுமையை அவளால் சகிக்க முடியவில்லை. கண்ணீர் அருவியாகப் பொங்கி, அஞ்சனத்தைக் கரைத்துக்கொண்டு கன்னத்தைக் கறுப்பாக்கி, நெஞ்சிலே அலைபடுகிறது! இது உள்ளத்திலே அலைவீசும் சோக சமுத்திரத்தை எவ்வளவு தெளிவாகக் காட்டுகிறது! இவ்வளவு சோகத்திலும் பனிச்சென்று புருஷன் ஞாபகம் வருகிறது. உடனே அந்தப் பேரன்பு இந்த அன்பை விழுங்கிவிடுகிறது. அவள் அவனைத் தொடரவேணும் என்று திரும்புகிறாள். தனக்கு முன்னே யானைபோல் கம்பீரமாக நடந்துசென்ற அந்த நடையை இப்போது காணவில்லை: அவள் நின்று பார்த்துக்கொண்டிருந்தது அவனுக்குத் தெரியாதல்லவா! ஆபத்திலும் அன்

போடு அவனை நெருங்கிச் சென்று கொண்டிருந்ததில் ஒரு திருப்தி. சாகும்போதும் அவன் பக்கத்திலே இருக்கவெண்டுமென்ற ஆசை. அப்போதுதான் அந்த நெஞ்சுக் கொதிப்பு ஆறும். கணவனைக் காணாததால் ஏற்பட்ட கொதிப்பிற்கு, இலங்கையைக் கொளுத்தி வரும் அந்தத் தீயின் கொதிப்பும் ஒப்பாகுமா? அந்த நிலையில் கணவனைக் காணாத அந்தப் பெண்மணி தனக்கு எதிரே ஒரு புகைப்படலத்தைக் காண்கிறாள்; அப்பால் ஒன்றும் தெரியவில்லை. மேகத்திற்குள்ளே முங்கி மறையும் ஒரு மின்னற் கொடிபோல் அவள் அந்தப் புகைக்குள்ளே மறைந்து விடுகிறாள். புருஷனை அடைந்தாளா, இல்லையா? யாருக்குத் தெரியும்? திரை விழுகிறது—நாடகத் திரையன்று; புகைத் திரை! இதைப்பற்றி யோசிப்பதற்குள் வேறு பயங்கர மான காட்சிகள் நம் கண்முன் வருகின்றன.

பெரிய பெரிய மாளிகைகளிலெல்லாம் தீப்பற்றிக் கொள்ளுகிறது. சில பெண்கள் தப்பிப் பிழைப்பதற்காக ஆகாச வீதியில் ஆபரணங்கள் ஒளி வீசப் போகிறார்கள். அவர்களில் சிலர் நுண்ணிய புகைப் படலத்தில் அகப்பட்டுக்கொண்டு திரை மறைவில் காணும் சித்திரப் பதுமைபோலக் காணப்படுகிறார்கள். சில ராட்சஸர்களும் ராட்சஸிகளும் தாபத்திற்கு அஞ்சிப்போய்க் கடல்நீரில் முழுகுகிறார்கள். சில ராட்சஸிகள் சூடு பொறுக்க முடியாமல் குழந்தை குட்டிகளோடு கடலில் போய் விழுகிறார்கள். என்ன அநியாயம்!

> மருங்கின் மேல்ஒரு மகவுகொண்(டு),
> ஒருதனி மகவை
> அருங்கை யால்பற்றி, மற்றொரு
> மகவுபின் அரற்ற,

நெருங்கி னுரொடு, நெறிகுழல்
சுறுக்கொள நீக்கி,
கருங்க டல்-தலை வீழ்ந்தனர்,
அரக்கியர் கதறி !

[மருங்கு - இடுப்பு. அரற்ற - அழ. நெறி குழல் - சுருள் சுருளான கூந்தல். கடல்-தலை - கடலிலே.]

அதோ அவள் பிள்ளைகுட்டிக்காரி. இடுப்பிலே ஒரு குழந்தை. மற்ருெரு குழந்தை கொஞ்சம் வய தானது; அதை அருமையாகக் கையால் பிடித்துக் கொண்டு வருகிருள். இன்னும் கொஞ்சம் வயதான குழந்தை பின்னே அழுதுகொண்டு வருகிறது. உற்ருர் உறவினர்களும் நெருங்கி வருகிருர்கள். அப்படி வரும் போதே, சுருள் சுருளான கூந்தலில் சுறுசுறுவென்று பற்றிக்கொண்ட நெருப்பைத் துடைத்து அவித்துக் கொண்டே ஓடுகிருர்களாம். எங்கே? கதறி ஓடிக் கடலில் போய் விழுகிருர்களாம்.

## 26. விடை பெறுதல்

எங்கே பார்த்தாலும் தீ; எங்கே பார்த்தாலும் புகை! ஒருபுறம், நந்தவனங்கள் வெந்துபோகின்றன. ஒருபுறம் கற்பகத் தருக்கள் எரிகின்றன. ஆயுதசாலைகளில் தீப்பற்றி, வில், வேல், ஈட்டி முதலிய ஆயுதங்களெல்லாம உருகி உண்டைகளாய்த் திரளுகின்றன. யானைகள் மதங்கொண்டு, கால்களில் பூட்டிய விலங்கை அறுத்து, கட்டுத்தறியைப் பெயர்த்து, காதுகளை அசையாமல் நிறுத்தி, வாலை முதுகின்மேல் முறுக்கி நீட்டித் தும்பிக்கையைத் தூக்கிக்கொண்டு வீரிடுகின்றன. பட்சிகள் ஆகாசத்தில் பறந்து போவதற்கும் பயந்து, கடலில் விழுந்து மீன்களுக்கு இரையாகின்றன. இவ்விதமாகப் பிரளய காலாக்கினி போல் அந்த நெருப்பானது ஊரை அழித்துச் சக்ரவர்த்தியின் அரண்மனையிலும் பற்றுகிறது. அங்கே உள்ளவர்கள் கலங்கி நிலை குலைந்து ஓடுகிறார்கள். கஸ்தூரி சந்தனம் முதலிய வாசனைத் திரவியங்கள் வெந்து புகைய, அந்தப் பரிமளம் வெகுதூரம் வீசுகிறது. ஒன்றன் மேல் ஒன்றாக உயர்ந்த ஏழு உப்பரிகைகளும் எரியும் போது, பொன்மயமான அந்த ராஜமாளிகை உருகி ஒரே பிண்டமாய்த் தங்க மலைபோலக் காண்கிறது. ராவணன் முதலானவர்கள் புஷ்பக விமானத்தில் ஏறிக்கொண்டு மிக விரைவிலே வானத்தில் சென்று தப்பிப் பிழைக்கிறார்கள். வேறு பல அரக்கர்களும் அப்படியே வானத்தில் எழுந்து போய்த் தப்பிப் பிழைக்கிறார்கள். ராவணன் பெருங் கோபத்தோடு

அவர்களைப் பார்த்து, 'யுகாந்த காலம் வந்து விட்டதா? இவ்விதமாக நம்முடைய நகரம் எரிவதற்குக் காரணம் என்ன?' என்று அதட்டுகிறான். அவர்கள் பரிதாப மாக நடந்த செய்தியை விண்ணப்பம் செய்கிறார்கள்.

கரங்கள் கூப்பினர், தம்கிளை
திருவொடும் காணார்,
இரங்கு'கின்றவல் அரக்கர்ஈ(து)
இயம்பினர், 'இறையோய்!
தரங்க வேலையின் நெடியதன்
வால்இட்ட தழலால்,
குரங்கு சுட்ட(து)ஈ(து)!' என்றலும்,
இராவணன் கொதித்தான்.

[கிளை - சுற்றத்தார். தரங்க வேலை - அலைகளுடைய கடல். ஈது - இது.]

அந்த ராட்சஸர்கள் தங்கள் பந்து ஜனங்களையும் செல்வத்தையும் பறிகொடுத்தவர்கள். 'இனி எப்படி ஜீவிப்போம்?' என்று மனம் அழிந்தவர்களாய், சக்ரவர்த்தியைக் கைகூப்பித் தொழுதுகொண்டு, 'தலைவனே! அந்தக் குரங்கின் வாலிலே தீவைக்க உத்தரவு செய்தாயல்லவா? அது தன் வாலை நீட்டி இப்படிச் சுட்டுவிட்டது!' என்று சொல்லுகிறார்கள். சுடப் பட்ட இலங்கையைப் போல் ராவணன் உள்ளமும் கொதிக்கிறது. 'ஆ, ஆ! எந்தக் காலத்திலேதான் இப்படிப்பட்ட வலிமை, குரங்கு போன்ற எளிய பிராணிக்கு உண்டு? இலங்கை முழுவதும் எரிந்து சாம்பல் பறக்கிறதே! நெருப்பு நம் பொருள்களை உண்டுவிட்டுப் பெருந் தீனிக்காரனைப் போல் ஏப்பம்

இடுகிறதே!' என்று சொல்லும் ராவணனுக்கு ராஜ தானி அழிந்ததுகூடப் பிரமாதமாகத் தோன்றவில்லை!

'என்று கொல்குரங்(கு) அன்ன(து)இவ்
வலியுள(து)? இலங்கை
நின்று வெந்துமா நீ(று)எழு
கின்றது; நெருப்புத்
தின்று தேக்கிடு கின்றது:
தேவர்கள் சிரிப்பார்!
நன்று, நன்றுபோர் வலி!' என
இராவணன் நக்கான்.

[என்று கொல் - எப்போதுதான். அன்னது - போன்றது. மா நீறு எழுகின்றது - பெருஞ் சாம்பல் பறக்கின்றது. தேக்கிடுகின்றது - ஏப்பம் இடுகிறது. நக்கான் - சிரித்தான்.]

'நமக்கு அடங்கியிருக்கும் தேவர்கள் சிரிப்பார்களே!' என்ற கவலைதான் இப்போது ராவணனுக்கு. இந்த நினைப்பு அவனுக்கும் சிரிப்பை உண்டாக்குகிறது. 'நம்முடைய போர்த் திறம் நன்றாயிருக்கிறது, மிகவும் நன்றாயிருக்கிறது!' என்ற சிரிப்போடு, 'குரங்குதான் தெரியாமல் கொளுத்தினாலும், அந்த அக்கினிப் பயலுக்கு இவ்வளவு கொழுப்பா?' என்ற கோபாவேசமும் உண்டாகிறது. எனவே, முதன் முதல் அக்கினி தேவனைத் தண்டிக்க வேண்டும் என்று எண்ணி,

'உண்டநெருப்பைக்
கண்டனர் பற்றிக்
கொண்(டு)அணை(க)!' என்றான்
அண்டரை வென்றான்.

[நெருப்பை - அக்கினி தேவனை. பற்றிக்கொண்டு அணைக - நாடிப் பிடித்து வாருங்கள். அண்டர் - தேவர்.]

கொஞ்சமாவது பயமில்லாமல் இலங்கையை எரித்த துஷ்ட அக்கினியைக் கண்டவர்கள் கைப்பிடியாகப் பிடித்து இழுத்து வரவேண்டும் என்று உத்தரவு செய்தபின், குரங்கையும் பிடித்த பிடியோடு கொண்டு வரவேண்டும் என்று சில அரக்கர்களுக்குக் கட்டளை யிடுகிறான் :

'உற்(று)அக லாமுன்,
கற்ற குரங்கைப்
பற்றுமின் !' என்றான்,
முற்றும் முனிந்தான்.

[உற்று அகலா முன் - வேகமாக ஓடிப்போகு முன்னால். கற்ற - (துஷ்டத்தனத்தில்) தேர்ச்சி பெற்ற. பற்றுமின் - பிடித்து வாருங்கள். முற்றும் - முழுதும் ; பெரிதும். முனிந்தான் - வெகுண்டவனாய்.]

பக்கத்திலே இருந்த வீரர்கள் பலர், 'புத்தி! புத்தி! அப்படியே செய்வோம்!' என்று சொல்லிக் கொண்டு, அதிவேகமாகப் போகிறார்கள். அவர்களில் சிலர் தேர் வீரர்கள் ; சிலர் வில் வீரர்கள். அந்தக் கூட்டத்தில், பரம்பரையாகப் பலவகை அதிகார ஸ்தானங்களை வகிப்பவரும் உண்டு. எப்போதுமே யுத்த சன்னத்தர்களா யிருக்கும் ஏழு வீரர்கள் தலைமை வகிக்கிறார்கள். இவர்கள் கடல் போலப் பொங்கி இலங்கையைச் சூழ்ந்துகொண்டு, ஹனுமானைத் தேடி யலைந்து, தனியே ஓரிடத்தில் கண்டுபிடிக்கிறார்கள்.

'பற்றுதிர்! பற்றுதிர்!' என்பார்;
'எற்றுதிர்! எற்றுதிர்!' என்பார்;
முற்றினர் முற்றும் முனிந்தார்;
சுற்றுணர் மாருதி கண்டான்.

[எற்றுதிர் - தாக்குங்கள். முனிந்தார் - கோபாவேச முள்ளவர்கள். முற்றினர் - வளைந்தார்.]

'பிடியுங்கள், பிடியுங்கள்! பிடித்து அடியுங்கள், அடியுங்கள்!' என்று இரைச்சல் போட்டுக்கொண்டே அவர்கள் கோபத்தோடு ஹனுமானைச் சூழ்ந்து கொள்கிறார்கள். சிலர் காலால் உதைக்கிறார்கள்; சிலர் கைகளால் கட்டப் பார்க்கிறார்கள். சிலர் வேலாயுதங்களால் குத்தத் தொடங்குகிறார்கள். இவ்விதமாகத் தன்னை வளைந்துகொண்ட அரக்கர்களில் ஒருவரையும் ஓடிப்போகவிடாமல் தானும் நெருப்பு மயமான தன் வாலைக்கொண்டு சுற்றி வளைத்துக்கொண்டு, ஹனுமான் ஒரு மரத்தைப் பெயர்த்தெடுத்து மோதி அடிக்கிறான். அவர்கள் ஆயுதங்களோடு ஆயுளையும் இழந்து விடுகிறார்கள். இப்படி ஐம்பதினாயிரம் பேர் இறக்க, மற்றையோர் நடுங்கிச் சமுத்திரத்தில் போய் விழுகிறார்கள். இப்போதுதான் ஹனுமான் தன் வாலில் கொளுத்தப்பெற்ற தீக்கு வேலை முடிந்துவிட்டது என்பதை உணர்கிறான். உடனே தீயோடு கூடிய தன் வாலைக் கடலில் தோய்க்கிறான். அதனால் கடல் நீர் கொதிப்படைந்து, அங்கே ஒளிந்து முழுகிக்கொண்டிருந்தவர்களில் சிலரும் செத்துப் போகிறார்கள்.

லங்கா தகனம் செய்யும்போது, ஹனுமான் கூடுமான வரையில் ஜாக்கிரதையாக இருந்தான். சீதைக்கு

ஆபத்து ஏற்படலாகாது என்ற எண்ணம் எப்போதும் அவனுக்கு உண்டல்லவா?' எனினும், நகரமெங்கும் தீப்பற்றி எரியும்போது, உள்ளுக்குள்ளே கொஞ்சம் கவலைதான். எனவே, சீதையின் க்ஷேமத்தைச் சந்தேகமில்லாமல் அறிந்துகொள்ள விரும்புகிறான். அந்தச் சமயத்தில் வானத்திலே கிளம்பிப் போகும் வித்யாதரர்கள், 'இந்த நெருப்பானது சீதை இருக்கிற சோலைக்குப் பக்கத்திலும் போகவில்லை!' என்று அதிசயமாகச் சொல்லி ஆறுதலளிக்கிறார்கள்.

வந்தவர் சொல்ல மகிழ்ந்தான்
வெந்திறல் வீரன், வியந்தான் ;
'உய்ந்தனென்!' என்ன உயர்ந்தான் ;
பைந்தொடி தாள்கள் பணிந்தான்.

[உய்ந்தனென் - பிழைத்தேன் ; பாவத்திலிருந்து தப்பினேன். பைந்தொடி - (இங்கே) சீதை.]

அவர்கள் சொன்னதைக் கேட்டு ஹனுமானும், 'நான் உஜ்ஜீவித்தேன்!' என்று மகிழ்கிறான். பிறகு சீதையைப் பிரத்யட்சமாகவும் பார்க்க விரும்பி, அவளிருக்கும் இடத்திற்கு வந்து வணங்குகிறான். அவளுக்கோ, இப்போது அவனைக் குறித்த கவலைதான். அவன் வாலில் அரக்கர்கள் தீவைத்த செய்தியைக் கேட்டது முதல், 'ஐயோ! என்ன ஆச்சோ?' என்ற தாபம் அவள் உடம்பைத் தகித்துக் கொண்டிருந்தது. இப்போது அவனை க்ஷேமமாகக் கண்முன் பார்த்ததும், அவள் மேனி குளிர்ந்து விடுகிறதாம். அவர்களுடைய அந்தச் சந்திப்பு, எவ்வளவு அழகாகவும் சுருக்கமாகவும் சித்திரிக்கப்படுகிறது!

பார்த்தனள் சானகி ; பாரா,
வேர்த்(து)எரி மேனி குளிர்ந்தாள் ;
'வார்த்தை என் ? வந்தனை!' என்றுப்
போர்த்தொழில் மாருதி போனான்.

[பாரா - பார்த்து. என் - என்ன. வந்தனை - வந்தனம்.]

சீதை அவனைப் பார்க்கும் அந்தப் பார்வையில் எவ்வளவு அருள் கலந்திருக்கிறது; எவ்வளவு ஆனந்தம் ததும்புகிறது! அந்த நோக்கு ஒன்றே, அவன் செய்த பணிக்கெல்லாம் தக்க பரிசாகுமல்லவா? அப்போது அவர்கள் ஒருவருக்கொருவர் சொல்லிக் கொள்ள வேண்டிய வார்த்தை என்ன இருக்கிறது? ஹனுமான், 'வந்தனம்!' என்று ஒரே வார்த்தையில் விடை பெற்றுக் கொள்ளுகிறான். சீதைக்கோ, அந்த மகத்தான சந்தர்ப்பத்தில் ஒரு வார்த்தைகூடச் சொல்லத் தோன்றவில்லை. அந்தக் குளிர்ந்த அருட் பார்வைக்கு ஒப்பான பேச்சும் உண்டா? அதற்கு மேல் வந்தனோபசாரமும் வேண்டுமா?

ஹனுமான் போன பின்பு, தீயும் தணிந்து விடுகிறது. மற்றத் தேவர்களைப்போல் அக்கினி தேவனும வெகு காலமாக ராவணேச்வரனுக்கு அடிமையாயிருந்தவன்தான். ஹனுமானுடைய வாலைத் துணையாக நம்பித்தான், இலங்கையைச் சுட்டெரிக்கத் துணிந்தான். இப்போது ஹனுமான் போய்விட்டதால், அந்தத் துணிவு போய், மறுபடியும் ராட்சஸ பயம் வந்து விடுகிறதாம்.

'தெள்ளிய மாருதி சென்றான்;
கள்ள அரக்கர்கள் கண்டால்,
எள்ளுவர்! பற்றுவர்!' என்று,
ஒள்ளெரி யோனும் ஒளித்தான்.

[தெள்ளிய - தெளிந்த அறிவுடைய. எள்ளுவர் - இகழ்வர். ஒள் - ஒளிபொருந்திய.]

அப்போது ஹனுமான் இருந்ததால், அக்கினி பகவானை அரக்கர்கள் பிடிக்க முடியவில்லை. இப்போது ஒளித்துக் கொண்டதால், சமையல் முதலான காரியங்களுக்குக்கூட அக்கினியை அழைப்பது கஷ்டம்தான்!

## 27. தூது மீண்டது

அந்த மலைச் சிகரத்தில் சூரியோதயம் ஆகிவிட்டதா? காரியசித்தி பெற்ற ஹனுமானுடைய பிரசன்ன வதனம்தான் விஜயலட்சுமி கடாட்சத்தால் அப்படி ஒளி வீசுகிறது. 'நேரமாகி விட்டதே; இலங்கையிலிருந்து விரைவில் புறப்படவேண்டும்!' என்ற எண்ணம் உதயமாகி விட்டது. உத்ஸாகத்தால் உள்ளம் பூரிக்க, உடம்பும் அதற்குத் தகுந்தபடி பூரித்துக்கொண்டே வருகிறது. அந்தப் பூரிப்பிலே, 'உலகை யெல்லாம் விழுங்கிவிட்டான்!' என்று சொல்லும்படி வளரும் விசுவரூபம் வந்துவிடுகிறது:

'நீங்குவென் விரைவின்' என்னும்
நினைவினன், மருங்கு நின்ற(து)
ஆங்கொரு குடுமிக் குன்றை
அருக்கனின் அணைந்த ஐயன்,
வீங்கினன், உலகை யெல்லாம்
விழுங்கினன் என்ன, வீரன்
பூங்கழல் தொழுது வாழ்த்தி,
விசும்பிடைக் கடிது போனான்.

[நீங்குவென் - நீங்குவேன். மருங்கு - அருகே. குடுமி - சிகரம். அருக்கனின் - சூரியன் போல. அணைந்த - அடைந்த. ஐயன் - (இங்கே) ஹனுமான். வீங்கினன் - (வடிவம்) பூரித்தவனாய். பூங்கழல் - தாமரை மலர் போன்ற அடிகள். விசும்பிடை - ஆகாசத்தின் வழியாக. கடிது - விரைவாக.]

அவ்வளவு குதூகலத்திலும் தன்னைப் பற்றிய நினைப்பே யில்லை. ராமனும் ராமகாரியமும்தான் நினைப்பு, விருப்பம், நோக்கம், லட்சியம் எல்லாம். 'எல்லாம் அவன் அருள்தான்!' என்று, மகாவீரனும் தன் இஷ்ட தெய்வமுமான ராமனுடைய அடிமலர் களுக்கு மானத பூஜை செய்துவிட்டு, ஆகாய வீதியிலே வெகு வேகமாய்ப் போகிறான்.

வழியில் மைனாக பர்வதத்தின்மேல் கொஞ்சம் இளைப்பாறிக் கொள்கிறான். 'என்னை ஆட்கொண்ட ஐயனுடைய காரியத்தை முடித்துத் திரும்பி வரக் கூடுமானால், உன்னோடு விருந்து சாப்பிடுகிறேன்' என்று போகும்போது வாக்குக் கொடுத்திருந்தா னல்லவா?

மைந்நாகம் என்ன நின்ற
குன்றையும் மரபின் எய்தி,
கைந்நாகம் அனையோன், உற்ற(து)
உணர்த்தினன், கணத்தின் காலைப்
பைந்நாகம் நிற்கும் வீரர்
தன்நெடு வரவு பார்க்கும்
கொய்ந்நாகம் நறுந்தேன் சிந்தும்
குன்றிடைக் குதியும் கொண்டான்.

[மரபின் எய்தி - முறையாக அடைந்து. கை - துதிக்கை. நாகம் - யானை. அனையோன் - போன்ற வன். உற்றது - நிகழ்ந்தது. உணர்த்தினன் - தெரிவித் தவனாகி. கணத்தின் காலை - கணப்பொழுதிலே. பைந் நாகம் நிற்கும் - படம் எடுத்து நிற்கும் பாம்பு போல் தலைதூக்கி நிற்கும். கொய்ந்நாகம் - மலர் கொய்வதற்கு உரிய சுரபுன்னை மரங்கள். நறுந்தேன் - நல்ல தேன்.]

மைனாகத்திற்கு ஒரு கணத்தில் செய்தி தெரிவித்து விட்டு, மறுகணத்தில் தன்னுடைய நண்பர்கள் தனக்காகக் காத்திருக்கும் மகேந்திர மலையிலேயே வந்து குதித்து விடுகிறான்.

இலங்கைக்கு ஹனுமான் புறப்பட்டது முதல் ஒவ்வொரு கணமும் அவனுடைய வரவை ஆவலுடன் எதிர் நோக்கித் தலையை நீட்டிக் கண்ணுக்கு எட்டிய தூரம் வரையில் பார்த்துக் கொண்டிருக்கும் வானர வீரர்களையும், அவர்களைச் சூழ்ந்து பூக்களும் தேன் கூடுகளுமாய் இருக்கும் விருட்ச ஜாலங்களையும், அவற்றுக்கிடையே ஹனுமான் போய்க் குதிப்பதையும், அப்போது தேன்கூடுகள் சிதைந்து தேன் சிந்துவதையும் ஏதோ ஒரு மந்திரக் கண்ணாடி வாயிலாகப் பார்ப்பதுபோல் பார்க்கிறோம், கம்பனது கவிதைக் கண்ணாடி வாயிலாக.

க்ஷேமமாக வந்து சேரவேண்டுமே என்ற கவலையினாலும், ஹனுமானுக்கு என்ன நேர்ந்திருக்குமோ என்ற அச்சத்தினாலும், அவர்களுக்கு அடிக்கடி வாய் குளறி வார்த்தை தடுமாறியதாம், ஒருவரோடொருவர் பேசிக் கொண்டிருக்கும்போதே.

இவனுடைய பலம் அவர்களுக்குத் தெரியும் ; 'வெற்றியோடு வருவான், அந்த வெற்றியில் நமக்கும் பங்கு உண்டு!' என்ற நம்பிக்கையும் ஒருபுறம் உண்டு. எனினும், அவ்வளவு அச்சம், அவ்வளவு கவலை, அவ்வளவு ஆத்திரம்! இப்போது அவனைத் தூரத்தில் கண்டதும், 'போன காரியம் முடிந்து விட்டது!' என்றே கருதி மகிழ்ச்சி அடைகிறார்கள் :

'போய்வரும் கருமம் முற்றிற்று !
என்பதோர் பொம்மல் பொங்க,
வாய்வெரீஇ நின்ற வென்றி
வானர வீரர் மன்னோ,
பாய்வரு நீளத்து ஆங்கண்
இருந்தன பறவைப் பார்ப்புத்
தாய்வரக் கண்டது அன்ன
உவகையின் தளிர்த்தார் அம்மா!

[கருமம் - தொழில். முற்றிற்று - முடிந்தது. பொம்மல் - மகிழ்ச்சி. வாய்வெரீஇ - வாய் வெருவி; (அச்சத்தால்) வாய் குளறி. வென்றி - வெற்றி. மன்னோ - அசை. பாய்வரு - பாய்ந்து உள்ளே புகுவதற்கு உரிய. நீளம் - கூண்டு. ஆங்கண் - அவ்விடத்திலே. பார்ப்பு - குஞ்சு. கண்டது அன்ன - கண்டது போன்ற. உவகையின் - உவகையினால். அம்மா - அதிசயக் குறிப்பு.]

தாய்ப் பறவையை எதிர்பார்த்துக் கூண்டிலிருக்கும் குஞ்சுகளைப்போல் ஹனுமானது வரவு பார்த்திருந்த வானர வீரர்கள், அவனைக் கண்டதும் பட்ட மரம் தளிர்ப்பது போலத் தளிர்க்கிறார்களாம் உவகையினால். இத்தகைய மகிழ்ச்சியிலே வாய் குளறிப் பேசவும் மறுத்து விடுகிறது. உவகை மிகுதியால் அழுகையே வந்துவிடுகிறது. சிலர் ஏதேதோ ஆரவாரம் செய்கிறார்கள் : அந்த ஆரவாரத்திற்கும் ஆவேசத்துக்கும் மிடையே உருப்படியான வார்த்தை ஒன்றும் வெளிப்படவில்லை. சிலர் ஹனுமானை நெருங்கி வருகிறார்கள் ; அப்பால் இன்னது செய்வது என்று தெரியாமல், அமைதியாகத் தொழுது நிற்கிறார்கள். வேறு சிலருக்கு அந்த

அமைதி பிடிக்கவில்லை; ஆடித் துள்ளுகிறார்கள்—குதித்துக் கூத்தாடுகிறார்கள். சிலர் ஹனுமானைச் சூழ்ந்து மொய்த்தவர்களாய், அப்படியே அள்ளி விழுங்குவார் போலப் பார்க்கிறார்கள். சிலர் சுற்றிச் சுற்றி வந்து ஆசை தீரத் தழுவிக் கொள்கிறார்கள். இன்னுஞ் சிலர் ஹனுமானை அப்படியே தூக்கிச் சுமக்கிறார்கள்.

இந்த ஆனந்தக் கூத்தையெல்லாம் பின்வரும் கவிதை வாயிலாக நாமும் அனுபவிக்கிறோம் :

அழுதனர் சிலவர்; முன்நின்று
ஆர்த்தனர் சிலவர்; அண்மித்
தொழுதனர் சிலவர்; ஆடித்
துள்ளினர் சிலவர்; அள்ளி
முழுதுற விழுங்கு வார்போல்
மொய்த்தனர் சிலவர், சுற்றும்
தழுவினர் சிலவர்; கொண்டு
சுமந்தனர் சிலவர் தாங்கி!

[ஆர்த்தனர் - ஆரவாரம் செய்தனர். அண்மி சமீபத்தில் நெருங்கி.]

அவன் வந்து சேர்ந்ததும், செய்திகூட விசாரிக்கவில்லை. அவன் முகத்திலே ஜொலிக்கும் பெருமையும் தேஜசும் வாய் திறப்பதற்குமுன்னமே செய்தி சொல்லி விட்டனவாம். ஹனுமானுக்குத் தற்பெருமை கடுகளவேனும் உண்டா? 'இந்தக் கைங்கரியம் செய்யும் பாக்கியம் கிடைத்ததே!' என்ற பெருமைதான்! பிராட்டியைத் தரிசித்து வந்த ஆனந்தச் செய்தியைஅவன் முகத்தில் விளங்கும் ஒளியே தெரிவித்து விடுகிறது. சில வானரர்கள் ஓடிச் சென்று, நல்ல தேனும் காயும்

கிழங்குகளும் கொண்டு வந்து அவன் முன்பு படைத்து, 'முதலில் சாப்பிடு; களைப்புத் தீர்ந்த பிறகு விவரமாக எல்லாம் பேசிக் கொள்ளலாம்!' என்று வேண்டிக்கொள்கிறார்கள்.

அந்த நேரத்தில், அவன் முகத்தைக் காட்டிலும், உடம்பிலுள்ள புண்கள் எல்லோருடைய கவனத்தையும் வசீகரிக்கின்றன. ஐயோ, சத்துருக்கள் காலிலும் கையிலும், தோளிலும் மண்டையிலும் மார்பிலும் எப்படி யெல்லாம் வெட்டிக் குத்தித் துளைத்து விட்டார்கள்! பொன்னன மேனியைப் புண்ணாக்கி விட்டார்களே! இத்தகைய சிந்தனையோடு, தலையிலிருந்து கால்வரை, எத்தனையோ புண்களைப் பார்த்துப் பார்த்துப் பெருமூச்சு விடுகிறார்கள் வானரவீரர்கள்:

ஊழ்கொள நோக்கி நோக்கி,
உயிர்உக உளைந்(து)உ யிர்த்தார் !

[ஊழ் கொள - முறைப்படி ஒவ்வொன்றாக. உயிர் உக - (மூச்சோடு) உயிர் வெளியே போகும்படி. உயிர்த்தார்- பெருமூச்சு விட்டார்கள்.]

ஹனுமான் முதல் முதல் வாலி புதல்வனும் இளவரசுமான அங்கதனை வணங்குகிறான். பின்பு, பிராயத்தில் மூத்த ஜாம்பவானை வணங்குகிறான். அப்பால், மற்றவர்களுக்கு ஏற்ற மரியாதைகள் செய்து, எல்லோருடைய உள்ளத்தையும் வசமாக்கி மலரச் செய்யக்கூடிய ஒரு வார்த்தை சொல்லுகிறான்:

... ... 'ஆங்கண்
இருந்(து),இவண் இருந்தோர்க் கெல்லாம்
ஞாலநா யகன்தன் தேவி
சொல்லினள் நன்மை!' என்றான்.

[ஆங்கண் - அவ்விடத்திலே. இவண் - இங்கே. ஞாலம் - உலகம்.]

தென் திசையைச் சுட்டிக் காட்டி, 'அந்த இடத்திலேயுள்ள சிறையிலிருந்து, லோக நாயகன் தேவியாகிய லோகநாயகி, இங்கேயுள்ள உங்களுக்கெல்லாம் மங்களம் சொன்னாள்!' என்று சொல்லுகிறான். என்ன ஆச்சரியம்! இவர்களை அவள் பார்த்ததே யில்லை; ஹனுமான் மூலமாகத்தான் தெரிந்து கொண்டிருக்கிறாள். எனினும், 'தன்னுடைய துயரங்களுக் கிடையே நம்மையும் நினைத்துக் கொண்டு, நமக்கெல்லாம் நன்மை உண்டாகவேணும் என்று விரும்புகிறாளே! என்ன தங்கமான உள்ளம்!' என்று எண்ணியதும், அவர்கள் உள்ளம் அப்படியே உருகிப் போகிறது. உடனே எழுந்து கைகூப்பித் தாழ்ந்து நிற்கிறார்கள்.

இந்நிலையில் நடந்த செய்திகளையெல்லாம் ஆதியோடந்தமாகத் தெரிந்துகொள்ள ஆசை உண்டாகிறது. அந்த வரலாற்றில் தங்கள் தோழனுடைய தேக பலம், மனோபலம், ஆத்மபலம் ஆகியவை எல்லாம் எவ்வளவு அழகாகப் பிரதிபலிக்கும்! அதைக் கேட்பதே ஆனந்தம் அல்லவா! எனவே, 'பராக்கிரமம் நிறைந்த நண்பா! இங்கிருந்து நீ போனது முதலாக இப்போது திரும்பி வந்தது வரை, நடந்த விஷயங்களையெல்லாம விரிவாகச் சொல்லவேண்டும்!' என்று சொல்லி, அந்த அதிசயமான கதையைக் கேட்கத் தயாரா யிருக்கிறார்கள்.

ஆனால் ஹனுமான்,

ஆண்தகை தேவி உள்ளத்து
அருந்தவம் அமையச் சொல்லி,—

[ஆண்தகை - (இங்கே) புருஷோத்தமனுன ராமன்.]

—வேறு ஏதாவது சொல்லப் போகிருனு? 'புருஷோத் தமனுகிய ராமனுக்கு எந்த விதத்திலும் இணையான தேவிதான்; கொஞ்சமும் குறைந்தவள் இல்லை. அவளுடைய உள்ளத்தை என்னவென்று சொல்வது? அருமையான தவம் என்பது காட்டில் முனிவர்களிடத் திலே இல்லை; சிறையிருக்கும் சீதா பிராட்டியின் உள்ளத்திலேதான் இருக்கிறது!' என்று அவளுடைய குணுதிசயத்தையும் க்ஷேமத்தையும் விவரிக்கிருன். இந்த ஒரே விஷயம்தான் சொல்லுகிருன். 'அதற்கு என்னிடம் ஒரு சாட்சி இருக்கிறது; பொய்யே சொல்லத் தெரியாத சாட்சி!' என்பதையும் சொல்லு கிருன். அது என்ன சாட்சி?

பூண்டபே ரடையா ளம்கைக்
கொண்டதும் புகன்று,—

[பூண்ட - (அவள்) அணிந்திருந்த.]

வேறொன்றும் சொல்லாமலே—சொல்லத் தெரியா மலே—பேச்சை நிறுத்தி விடுகிருன். கைக்கொண்ட பெரிய அடையாளமாகிய சூடாமணியைத்தான் சீதை யின் க்ஷேமத்திற்குச் சாட்சியாகக் குறிப்பிடுகிருன்.

ஹனுமான் சொல்லாதது என்ன என்பதையும் கவிஞன் சொல்லிக் காட்டுகிருன். இப்போது முழுப் பாட்டையும் பாருங்கள்:

ஆண்தகை தேவி உள்ளத்து
அருந்தவம் அமையச் சொல்லி,
பூண்டபே ரடையா ளம்கைக்
கொண்டதும் புகன்று, போரில்—

நீண்டவாள் அரக்க ரோடு
நேர்ந்ததும், நெருப்புச் சிந்தி
மீண்டதும் விளம்பான், தான்தன்
வென்றியை உரைப்ப வெள்கி!

[வென்றி - வெற்றி. வெள்கி - வெட்கம் அடைந்து.]

புண்களை யெல்லாம் பார்த்து, எத்தனையோ தைரிய சாகஸச் செயல்களைப் பற்றிக் கதை கேட்க லாம் என்ற ஆசையோடு இருந்தார்களல்லவா? அந்த ஆசையை ஹனுமான் நிறைவேற்றவில்லை. போரில் அரக்கர்களுடைய ஆயுதம் நீண்டவுடன் அந்த ஆயுதங்களுக்கும் அவற்றை ஏந்தியவர்களுக்கும் நேர்ந்த கதி, கற்பாறையிலே போய் முட்டிக்கொள்ளும் தலைக்கு நேரும் கதிதானே! ஆனால் அந்த வீரத்தைப் பற்றி எதுவும் சொல்லவில்லை. இலங்கை வாசிகளின் கவனத்தை வேறு முகமாய்த் திருப்பிவிட்டுப் புறப் படுவதற்காக அலட்சியமாய் நெருப்பைச் சிந்தினும்! அதுதான் இலங்கையில் அவ்வளவு பிரமாதப் பட்ட தாம்! அந்த 'நெருப்பு விளையாட்'டைக் குறித்தும் வாயைத் திறக்கவில்லை. அந்தக் கதைகளைத் தொடங் கினால், அவை தன்னுடைய வெற்றியாகுமல்லவா? தன் வெற்றியைத் தானே சொல்வதற்கு வெட்கமா யிருக்கிறதாம் என்ன ஆச்சரியமான வெட்கம்! என்ன உயர்தர வீரம்! இந்த மகா வீரத்திற்கு முன், சலசலவென்று தன்னைக் குறித்துத் தானே ஆரவா ரம் செய்து சொல்லம்பு போடும் வீரமும் வீரமாகுமா?

ஹனுமான் சொல்லாவிட்டாலும், அந்த விஷ யங்களை வானர வீரர்கள் குறிப்பாக உணர்ந்து கொண்கிறார்கள். 'நாங்கள் எவ்வளவு சாமர்த்திய

மாக ஊகித்துக் கொண்டு விட்டோம்!' என்பதையும், துப்பறியும் கதா நாயகனை ஷெர்லக் ஹோம்ஸ் போல், அவர்கள் வெளிப்படையாகச் சொல்லி விடுகிறார்கள். ஹனுமான் போர் செய்ததும் தெரியுமாம்; வெற்றி யடைந்ததும் தெரியுமாம்; ஊரில் தீ வைத்ததும் தெரியுமாம்! எப்படி?

'பொருதமை புண்ணே சொல்ல,
வென்றமை போந்த தன்மை
உரைசெய, ஊர்தீ யிட்டது
ஓங்கிரும் புகையே ஓத,
கருதலர் பெருமை தேவி
மீண்டிலாச் செயலே காட்ட,
தெரிதர உணர்ந்தேம்! பின்னர்
என்இனிச் செய்தும்?' என்றார்.

[பொருதமை - போர் செய்தது. போந்த - (இங்கே) திரும்பி வந்த. ஓங்கு இரும் - ஓங்கி யெழுந்த பெரிய. கருதலர் - பகைவர்.]

ஹனுமான் போரைக் குறித்து வாய்திறவாமல் இருந்த போதிலும், அந்தப் புண்களெல்லாம் வாய் பெற்று, அவன் அரக்கர்களோடு செய்த யுத்தத்தை வர்ணித்துப் பேசுகின்றனவாம். 'அந்த யுத்தத்திலே தலை தப்பினது தம்பிரான் புண்ணியம் என்று பயந்தோ, தந்திரம் செய்தோ, தப்பி வரவில்லை, வெற்றியோடுதான் திரும்பினான்!' என்பதை அவன் திரும்பி வந்த தன்மையே உரை செய்கிறதாம். தோற்று வந்தவன் முஞ்சியும் தோற்றமும் இப்படிக் கம்பீரமாக இருக்குமா? அந்த ஜயப்பிரதாபத்தை, அப்படி வந்து குதித்த குதியே வியாக்கியானம்

செய்து விட்டதல்லவா? தீ வைத்தது புகையினால் தெரிந்து விட்டதாம். ஹனுமான் போனதுமுதல் 'எப்போது வருவான்?' 'என்று வழிமேல் விழி வைத்துக் காத்துக் கொண்டிருந்தவர்கள் அல்லவா? தூரத்திலே, இலங்கை இருக்கும் திசையில், புகை தெரிந்தது; அது பிரமாதமாக உயர்ந்து தெரிந்தது. 'ஹனுமான் செய்யும் லங்கா தகனம்தான்!' என்று அந்தப் புகையே தெளிவாகச் சொல்லி விட்டதாம். இவ்விதமான ஊகங்களோடு அவர்கள் ஒரு தவறான ஊகமும் செய்கிறார்கள். துப்பறி நிபுணனும் தவறிப் போவதுண்டல்லவா?

'சத்துருக்கள் பெருமையையும், நாங்கள் நன்றாகத் தெரிந்து கொண்டோம்!' என்று சொல்லுகிறார்கள். 'சீதா தேவி வராததே அந்தப் பெருமையைக் காட்டுகிறது!' என்கிறார்கள். உண்மையில், அவள் சம்மதித்திருந்தால், ஹனுமான் எப்படியாவது அவளைக் கொண்டு வந்து சேர்த்திருப்பான் அல்லவா? அவர்கள் ஊகம் இவனுடைய பெருமைக்குக் குறைவேயாகும். எனினும், அந்தப் பிழையைத் திருத்த முயலவில்லை. ஹனுமான், 'விரைவில் ராமனுக்குச் செய்தி சொல்லித் துன்பத்தை ஆற்றவேண்டும்; இப்படி ஊகங்களில் பொழுது போக்குவது புத்திசாலித்தனமன்று' என்று ஜாடையாகச் சொல்லி, அவர்கள் வாயை மூடுகிறான்.

பிறகு, ஹனுமான் உள்ளிட்ட வானர வீரர்கள் அனைவரும் புறப்பட்டு, மத்தியான்ன வேளையில் வழியிலுள்ள மதுவனத்தை அடைகிறார்கள். இப்போது தான் அவர்களுக்கெல்லாம் பசி தெரிகிறது. இதற்கு முன் உணவு வேண்டும் என்றே தோன்றவில்லை.

மதுவனத்தில் செழிப்பாயிருந்த தேன் கூடுகளைக் கண்டபோது, வாய் ஊறுகிறது; பசி தாகங்களையும் உணர்கிறார்கள். உடனே அங்கதனிடம் அனுமதி பெற்றுத் தேனைப் பருகிக் களிக்க ஆரம்பிக்கிறார்கள்.

குரங்குகள் கும்பலாகப் புகுந்து விட்டால் எந்தச் சோலைதான் தப்பிப் பிழைக்க முடியும்? ஒன்றன் முன் ஒன்றாகப் பாய்ந்து, வானரங்கள் கிளைகளை ஒடித்து வீசியும், தேன் கூடுகளை யெல்லாம் பிய்த்துப் பிழிந்து தேன் குடித்தும், கூத்தடிக்கின்றன:

ஒன்றின்முன் ஒன்று பாயும்;
ஒடிக்கும்;மென் பிரசம் எல்லாம்
தின்றுதின்(று), உவகை கூரும்,
தேன்நுகர் அளியின் மொய்த்தே!

[மென் பிரசம் - இனிய தேன். உவகை கூரும் - ஆனந்தம் மிகும். நுகர் - குடிக்கிற. அளி - வண்டு; வண்டுக் கூட்டம்.]

மதுபானஞ் செய்வதிலும், குரங்குச் சேட்டைகளுடன் கூட்டமாய்க் கும்மாளம் போடுவதிலேதான் எவ்வளவு உத்ஸாகம், கெண்டி வீரர்களுக்கு! இங்கேயோ,ஸாக்ஷாத் வானரங்களின் திருவிளையாடல்கள்! ஒன்று எடுக்கும் தேனை மற்றொன்று பறிக்கிறது. ஒன்றை யொன்று தழுவிப் பிடித்துக் கொள்கிறது. ஒன்றின் மேல் ஒன்று ஏறிக்கொண்டு கூத்தாடுகிறது! சில வானரங்கள் அங்கு மிங்கும் ஓடி விழுகின்றன.

ஒருவர்வாய்க் கொள்ளும் தேனை
ஒருவர்உண்டு எளிதில் போவார்!
ஒருவர்கைக் கொள்ளும் தேனை
ஒருவர்கொண்டு ஓடிப் போவார்!

ஒருவரோடு ஒருவர் ஒன்றத்
 தழுவுவர்; விழுவர் ஓடி!
ஒருவர்மேல் ஒருவர் ஏறி
 'ஓகை!' என்(று) உவகை கூர்வார்!

[எளிதில் போவார் - யாதொரு சிரமமும் இல்லாமல் (குடித்து விட்டுப்) போவார்கள். ஒன்ற - இறுக்கமாக. ஓகை - ஆனந்தம். உவகை கூர்வார் - மிகுந்த மகிழ்ச்சி அடைவார்கள்.]

இப்படி இவர்கள் மதுவனத்தை நாசஞ் செய்வது கண்டு, காவலாளர்கள் தங்கள் தலைவனான ததிமுகனுக்குச் செய்தி சொல்லுகிறார்கள். அந்த வனம் ஒரு காலத்தில் வாலிக்குச் சொந்தமா யிருந்தது; இப்போது சுக்கிரீவன் ஆணைக்கு உட்பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட வனத்தை அங்கதன் கட்டளையினால் வானர சேனை அழிக்கிறதென்று தெரிந்து கொண்ட ததிமுகன், 'தந்தை பட்ட பாட்டை மகன் அறிந்து கொள்ளவில்லை போலும்!' என்று அங்கதன் மேல் சீறுகிறான்; கற்பாறை ஒன்றை எடுத்து வீசுகிறான். அங்கதனோ அதைப் பின்னங்கையால் லேசாகத் தட்டிவிட்டு, ததிமுகனைப் பிடித்து வாய் வழியாக இரத்தம் வரும்படி குத்துகிறான். குத்திவிட்டு, 'போய்ச் சுக்கிரீவனிடம் சொல்லு!' என்று துரத்தி விடுகிறான்.

மது வனத்தில் வானரர்கள் இப்படி விருந்தாடி இருக்கும் போது, ஒரு மலையிலே சுக்கிரீவன் ராமனுக்குத் தேறுதல் சொல்லிக் கொண்டிருக்கிறான்:

கார்வரை இருந்தனன்,
 கதிரின் காதலன்
சீரிய சொற்களால்
 தெருட்டிச் செங்கணான்,

ஆருயிர் ஆயிரம்
உடைய னும்எனச்;
சோர்தொறும் சோர்தொறும்
உயிர்த்துத் தோன்றினன்.

[கார் வரை - பெரிய மலை. கதிரின் காதலன் - சூரிய புத்திரனான சுக்கிரீவன். சீரிய - நல்ல. தெருட்ட - தேற்ற. செங்கணான் - சிவந்த கண்களையுடைய ராமன். ஆர் - அருமையான. சோர்தொறும் - சோர்ந்துபோகும் போதெல்லாம். உயிர்த்து - உயிர் பெற்று.]

சீதையைப் பிரிந்த சோகத்தைத் தாங்க முடியாமல் ராமன் அடிக்கடி சோர்ந்து போகிறான். அப்படிச் சோர்ந்து மயங்கும் போதெல்லாம், சுக்கிரீவன் பக்கத்திலிருந்து அன்போடு எவ்வளவோ இனிமையாக நல்ல வார்த்தைகள் சொல்லித் தேற்றுகிறான். அப்போது, போன உயிர் மீண்டு வருவது போலிருக்கிறதாம். இப்படி எத்தனை தடவை உயிர் போய்ப் போய் மீளுகிறது! இவனை ஆயிரம் உயிர்கள் உடையவன் என்றே சொல்ல வேண்டும்!

வடக்கு, கிழக்கு, மேற்கு என்னும் மூன்று திக்குகளிலும் தேடப் போனவர்கள், 'காணவில்லை!' என்று திரும்பி விட்டார்கள். அந்த வார்த்தை எப்படி ஹிம்சை செய்தது? அந்த ஹிம்சைக்கிடையே ஹனுமானையும் அவனுடைய மகாபலத்தையும் குறித்த நினைவு வருகிறது. அந்த நினைவினால் பிறந்த நம்பிக்கைதான், 'உயிர் உள்ளே இருக்கிறது; இன்னும் வெளிப்படவில்லை!' என்ற நம்பிக்கையையும் தருகிறது.

இவ்விதமாகத் துயரக் கடலில் ஆழ்பவனைச் சுக்கிரீவனை நோக்கி, 'நண்பா! இனி நாம் சும்மா

இருப்பது சரியன்று; கொடிய பழி வந்துவிட்டது! தெற்கே போனவர்கள் தவணை கழிந்தும் வந்து சேரவில்லை. செத்துத்தான் போனார்களோ? வேறே என்ன ஆபத்து நேர்ந்து விட்டதோ? ஒன்றும் தெரியவில்லையே!' என்ற பயங்கரமான நினைப்பும் உண்டாகிறது.

'"மாண்டனள் அவள்; இவண்
மாண்ட வார்த்தையை
மீண்டுஅவர்க்(கு) உரைத்தலின்,
விளிதல் நன்(று)!" எனப்
பூண்டதோர் துயர்கொடு
பொன்றி னார்கொலோ?
தேண்டினர் இன்னமும்
திரிகின் றார்கொலோ?'

[விளிதல் - செத்துப்போதல். இவண் - இங்கே. உரைத்தலின் - சொல்வதைக் காட்டிலும். என - என்று. பொன்றினார் - இறந்தார். தேண்டி - தேடி.]

என்று சொல்வதைக் கேளுங்கள். '"சாவோலை கொண்டு போவதைவிட நாமும் செத்துப் போவது தான் நலம்!" என்று எண்ணி அந்தத் துயரத்தினாலேயே இதயம் வெடித்து மாண்டுபோனார்களா?' என்று வருந்தும்போதே, 'இன்னமும் தேடித் திரிகிறார்களோ?' என்ற சந்தேகமும் குறுக்கிடுகிறது. திடீரென்று வேறொரு நினைப்பும் தோன்றுகிறது. இந்த நினைப்பையும் சிநேகனோடு பங்கிட்டுக்கொள்ளுகிறான்:

'கண்டனர் அரக்கரை,
கறுவு கைம்மிக,
மண்(டு)அமர் தொடங்கினார்,
வஞ்சர் மாயையால்

விண்தலம் அதனின் மே-
யினர்கொல்? வேறிலாத்
தண்டலில் நெடுஞ்சிறைத்
தளைப்பட் டார்கொலோ?'

[கறுவு - கோபத்தோடு கூடிய மனவைரம். கைம் மிக - அதிகமாக. மண்டு அமர் - மிகுதியான சண்டை. விண்தலம் - சொர்க்கம். வேறிலா - வேறே தப்பும் வழியில்லாமல். தண்டலில் - நீங்காத. தளை - விலங்கு.]

என்று எவ்வளவு பரிதாபமாகக் கேட்கிறான்! 'அரக்கர்களைக் கண்டதும் எவ்வளவு அடத்தோடும் கோபத்தோடும் சண்டை போட்டிருப்பார்கள்! எதிரிகளோ வஞ்சகர்கள், மாயாவிகள்! கையில் சிக்கிக்கொண்டால், சும்மா விடுவார்களா? உடனே கொன்றுவிட்டார்களா? அல்லது கைக்கும் காலுக்கும் விலங்கு போட்டு மீளாத சிறைக்குள் தள்ளி விட்டார்களா?' என்று இவ்விதமாகக் குமுறுகிறது ராமனுள்ளம்.

சுக்கிரீவன் பதில் சொல்ல வாய்திறக்கும்போது, ஒருவன் தலையிலிருந்து இரத்தம் பெருக அபசகுனம் போல் ஓடிவந்து, இரண்டு கைகளையும் கூப்பிக் கொண்டு சுக்கிரீவன் காலில் விழுகிறான். 'அழிந்தது மது வனம்!' என்று அவன் சொன்னதும், 'அழித்தவர் யார்?' என்று வானரராஜா கேட்கிறான். நீலன், குமுதன், ஜாம்பவான்........என்று பெயர்களைச் சொல்லிவிட்டு, வாலி மகன் மகாராஜாவை இகழ்ந்து பேசியதாகவும், தான் பொறுக்காமல் ஒரு பாறையை வீசியதாகவும், அவன் தன்னைப் பிடித்து உயிர் பதைக்கக் குத்திக் குமைத்து,

நீ போய் உங்கள் ராஜாவிடம் சொல்லு!' என்று துரத்தி விட்டதாகவும், இரத்தம் வழிந்து கொண்டிருந்த அந்த முகம் கோரமாகச் செய்தி சொல்லுகிறது.

ஆனால், அதைக் கேட்ட சுக்கிரீவன் அந்த ஆசாமி எதிர்பார்த்தபடி கோபங் கொள்ளவில்லை; அந்தச் செய்தியை மிகுந்த சந்தோஷமாகவே. வரவேற்கிறான்.

ஏம்பலொடு எழுந்துநின்று,
இரவி கான்முளை
பாம்பணை அமலனை
வணங்கி, ' பைந்தொடி
மேம்படு கற்பினள்
என்னும் மெய்ம்மையைத்
தாம்புகன் றிட்ட(து) இச்
சலம்!' என்(று) ஓதினான்.

[ஏம்பல் - ஆசையோடு கூடிய களிப்பு. இரவி கான் முளை - சூரிய புத்திரனை சுக்கிரீவன். பாம்பணை அமலன் - ஆதிசேஷனைச் சயனமாகவுடைய விஷ்ணு; (இங்கே) ராமன். பைந்தொடி - சீதை. சலம் - கோபம்.]

அங்கதனின் கோபத்திற்கு உட்பொருள் சீதையின் க்ஷேமம்தான் என்று சுக்கிரீவன் எவ்வளவு சரியாக ஊகித்து, எவ்வளவு சாதுரியமாகப் பேசுகிறான்! சீதையைப் பார்த்த ஆனந்தமே மதுவனத்தை யழித்து விட்டது என்று தீர்மானித்து, ராமனைப் பார்த்து, 'இனிமேல் துன்பத்தை விட்டு விடலாம்' என்று உறுதி சொல்லுகிறான்:

'பண்தரு கிளவியாள்
தன்னைப் பாங்குறக்
கண்டனர் என்பதோர்
களிப்பி னால்அவர்
வண்(டு)உறை மதுவனம்
அழித்து மாந்தினர்;
அண்டநா யக,இனி
அவலம் தீர்'கென்றான்.

[பண்தரு கிளவியாள் - ராகம் போன்ற இனிய சொல்லையுடைய சீதை. பாங்குற - க்ஷேமமாக. மாந்தினர் - (தேன்) குடித்தனர். அண்டநாயக - ராமனே. அவலம் - துன்பம்.]

எனினும் அந்தத் துன்பம் லேசாகப் போகிறதா? 'தெற்கே போனவர்கள் வந்து விட்டார்கள்!' என்ற ஒரு விஷயம்தான் ராமனுக்கு விளங்குகிறது. 'அவர்கள் என்ன சொல்லப் போகிறார்களோ?' என்ற கவலை அதிகப்படுகிறது.

இந்த நிலையில் சுக்கிரீவன் ததிமுகனைப் பார்த்து, 'வாலி புத்திரன் இழிவான காரியம் செய்யமாட்டான். உனக்கு நன்மை வேண்டுமானால், அவனை அரசனாகவே மதித்துச் சரணடைய வேண்டும்!' என்று கட்டளை யிடுகிறான்.

ததிமுகன் திரும்பி வருவதைக் கண்டதும், மதுவனத்தில் உள்ள அங்கதன், 'இன்னும் அந்தப் பயல் சண்டைக்கு வருவானானால், உயிரை உண்டு விடுவோம்!' என்று கோபிக்கிறான். ஆனால் ததிமுகன்,

'போழ்ந்தன யான்செய்த
குறைபொ றுக்கெ'ன
வீழ்ந்தனன் அடிமிசை;
வீழ, வாலிசேய்,

தாழ்ந்துகைப் பற்றிமெய்
 தழீஇக்கொண்(டு), 'உம்மையான்
சூழ்ந்தது பொறுக்கெ'ன
 முதன்மை சொல்லினான்.

[போழ்ந்தன - வெட்டினாற் போன்ற. தழீஇ - தழுவி. சூழ்ந்தது - செய்த குற்றம்.]

'ஐயா, நான் செய்த குற்றத்தைப் பொறுக்க வேணும்!' என்று ததிமுகன் நமஸ்கரித்த அளவில், அந்த அன்பிலே பகை அவிந்துவிட்டது. உடனே, வாலிமகனும் தாழ்ந்து கையைப் பிடித்துத் தூக்கி அவனைத் தழுவிக் கொண்டு, 'நான் செய்த குற்றத்தை நீங்களும் பொறுப்பீர்களாக!' என்று உபசாரம் சொல்லுகிறான். மனஸ்தாபம் தீர்ந்து மனம் திருந்துவதற்கு எவ்வளவு லேசான வழியை இவர்கள் கண்டு பிடித்து விட்டார்கள்! ததிமுகன் உபாயத்தை ராவணனும் கைக்கொண்டிருந்தால், யுத்த காண்டமே வேண்டியதில்லையல்லவா?

## 28. சௌந்தரிய சிகரம்

மேற்கே ஒரு சூரியன் அஸ்தமித்துக் கொண் டிருக்கத் தெற்கே ஒரு சூரியன் உதயமாகிறதா? அந் தத் திசையை எவ்வளவு அன்போடு ராமன் உற்று நோக்குகிறான்? 'அப்பா, சுக்கிரீவா! மது வனத்தில் வந்திருப்பவர்கள் சந்தேக மில்லாமல், "பார்த்தோம்!" என்று சொல்லுவார்களா? "இனி இந்த லோகத்தில் தேடவேண்டிய அவசியமில்லை, வேறு லோகத் திலேதான் பார்க்கவேணும்!" என்று சொல்லப் போகிறார்களா?' என்று அப்போதுதான் கேட்டுக் கொண்டிருந்தான். சுக்கிரீவன் பதில் சொல்வதற்குள், ஹனுமான் அவர்களை நோக்கி வருகிறான். அந்த முகத்திலே இப்போது என்ன தேஜஸ்! எவ்வளவு உத்ஸாகம்!

> எய்தினன் அனுமனும்,
>
> எய்தி, ஏந்தல்தன்
>
> மொய்கழல்—

[எய்தினன் - வந்து சேர்ந்தான். ஏந்தல் - ராமன். மொய்கழல் - பெருமை வாய்ந்த திருவடி.]

'தொழுகிறான்'—என்று தானே கவிஞன் சொல்லப் போகிறான்? அதுதான் இல்லை! ஹனுமான் ராம னுடைய திருவடி தொழவில்லையாம். வேறே என்ன செய்யப் போகிறான்?

எய்தினன் அனுமனும்,
எய்தி, ஏந்தல்தன்
மொய்கழல் தொழுகிலன்;
முளரி நீங்கிய
தையலை நோக்கிய
தலையன், கையினன்,
வையகம் தழீஇநெடி(து)
இறைஞ்சி வாழ்த்தினன்.

[முளரி - தாமரைப்பூ. முளரி நீங்கிய தையல் - சீதையாகிய லட்சுமி. வையகம் - பூமி. தழீஇ - தழுவி.]

சீதை இருக்கிற திசை நோக்கித் திரும்பித் தலைமேல் கை கூப்பிக் கொள்கிறான். 'என்ன? இப்படி ராமனுக்கு முதுகைக் காட்டிக் கொண்டு நிற்கிறானே இந்த ராமபக்தன்!' என்று ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக்கும் போதே, ஸாஷ்டாங்கமாக விழுந்து அந்தத் தென்திசை நோக்கியே நமஸ்காரம் செய்கிறான். ஆனந்த அதிசயத்தினால், 'ராமன் இருக்கிற இடத்திற்கு நேரே காலை நீட்டிக் கொண்டோமே!' என்ற ஞாபகங்கூட இல்லை.

இந்தச் செய்கை ராமனுக்கும் ஆனந்தத்தைக் கொடுக்கிறது. ஹனுமான் வாய் திறப்பதற்கு முன்னமே, சீதையின் க்ஷேமத்தை அறிவித்து விடுகிறதல்லவா? இதோ செய்தியும் சொல்லத் தொடங்குகிறான்:

'கண்டனென் கற்பினுக்கு
அணியைக் கண்களால்,
தெண்டிரை அலைகடல்
இலங்கைத் தென்நகர்!

அண்டர்நாயக! இனித்
துறத்தி ஐயமும்,
பண்டுள துயரும்!' என்(று)
அனுமன் பன்னுவான்.

[தெண்டிரை அலை - தெள்+திரை+அலை - தெளிவான அலைகளை அலைக்கும். அண்டர் - தேவர். துறத்தி - நீக்குவாயாக. பண்டுள - முன்னமேயுள்ள. பன்னுவான் - சொல்வான்.]

'சீதையை' என்று ஆரம்பித்தால், 'ஐயோ! என்ன சொல்லப் போகிறானோ?' என்னும் கவலை ஏற்படக் கூடுமல்லவா? 'கண்டேன்!' என்கிறான். 'கண்டேன் சீதையை!' என்று கூட அவன் சொல்லவில்லை. 'கண்டேன் கற்பின் பூஷணத்தை!' என்று சாதுரியமாகக் குறிப்பிட்டு, தான் நேரில் கண்டதைக் 'கண்களால்' என்று வற்புறுத்துகிறான், 'குண சௌந்தரிய மாகாத்மியம்' என்ற அந்தப் பிரபந்தத்திற்கு எவ்வளவு அழகான பீடிகை! பிரபந்தம்தான் இதோ எவ்வளவு அழகாகத் தொடங்குகிறது!

தர்ம வீரனாகிய ராமனுக்கு ஏற்ற தர்ம பத்தினி என்றும், சத்திய வீரனை தசரதனுக்கு இசைந்த செல்வ மருமகள் என்றும், ஞான வீரனை ஜனக மகாராஜாவுக்குத் தகுந்த அருமைத் திருமகள் என்றும் சொல்லி, தனக்கும் ஒரு புதிய உறவு கிடைத்து விட்டதாகக் குதூகலமடைகிறான்:

'உன்பெருந் தேவி என்னும்
உரிமைக்கும், உன்னைப் பெற்ற
மன்பெரு மருகி என்னும்
வாய்மைக்கும், மிதிலை மன்னன்

தன்பெருந் தனயை என்னும்
தகைமைக்கும் தலைமை சான்றாள்,
என்பெருந் தெய்வம், ஐயா!
இன்னமும் கேட்டி!' என்பான்.

[உரிமை - தகுதி. மன் - சக்ரவர்த்தி. மருகி; மருமகள். தனயை - மகள். தலைமை - முதன்மை, சிறப்பு. சான்றாள் - அமைந்தாள். கேட்டி - கேள்.]

ஒழுக்கத்தின் சிகரத்திலிருந்து ஸாட்சாத் தெய்வமாகக் காட்சியளித்த சீதைக்கு ஒப்பாவார் யார்? தங்கத்திற்கு ஒப்பாவது தங்கம்தானே! அவளுக்குக் கணவனாக வந்த பாக்கியசாலியான ராமனுக்கும் ஒப்பாவார் இல்லையாம். இவ்விதமாகச் சொல்லிவரும் ஹனுமான், 'என்னை ஒப்பான் என்னை அல்லது வேறு எவனும் இல்லை!' என்றும் இறுமாந்து பேசுகிறான். பணிவுக்கு ஓர் இலக்கியமாயிருந்த இவனுக்கு இப்போது வந்த பவிஷுதான் என்ன? இதுவும் அவளுடைய அனுக்கிரகம்தானாம். ராமனைப் புருஷோத்தமனாக்கிய சீதை, அவனைத் தேடிப் போய்வந்த தூதனுக்கும் எவ்வளவு பெருமை அளித்திருக்கிறாள்!

ராமன் குலத்தை இனிமேல் ஒருவரும் சூரிய குலம் என்றாவது, மனு குலம் என்றாவது. ரகு குலம் என்றாவது சொல்ல மாட்டார்களாம், 'ராம குலம்' என்றுதான் முன்னோர்களையும் கௌரவிப்பார்களாம். இவ்வளவு கௌரவமும் சீதாதேவியால்தான்! ஜனக குலமும் 'சீதையின் குலம்' என்றுதான் பெயர்பெறப் போகிறதாம். இவ்விதமாக, புகுந்த குலத்துக்கும் பிறந்த குலத்துக்கும் ஒருங்கே பெருங் கீர்த்தி அளித்த சீதை, ஹனுமானுடைய குலப் பெருமையையும் இவ

னுடைய குலப் பெருமையாகவே செய்து விட்டாளாம். இனி ஹனுமானை ஒருவரும் 'வாயு புத்திரன்' என்று சொல்லிக் காட்டவேண்டாம்; வாயு பகவானைத்தான் 'ஹனுமான் தந்தை' என்று கௌரவிக்க வேண்டும். இவ்விதமாகச் சூரிய குலம், ஜனக குலம், வானர குலம் என்ற முக்குலத்துக்குமே பெருமை கொடுத்தவள், தேவ குலத்துக்கும் ராட்சஸ குலத்துக்கும் என்ன செய்திருக்கிருள் என்பதையும் தெளிவு படுத்துகிறான்:

> 'உன்குலம் உன்ன தாக்கி,
> உயர்புகழ்க்கு ஒருத்தி ஆய
> தன்குலம் தன்ன தாக்கி,
> தன்னை இத் தனிமை செய்தான்
> வன்குலம் கூற்றுக்(கு) ஈந்து, அவ்
> வானவர் குலத்தை வாழ்வித்து,
> என்குலம் எனக்குத் தந்தாள்!
> என் இனிச் செய்வது எம்மோய்?'

[வன் குலம் - கொடிய குலம். ஆய - ஆகிய. கூற்று -யமன். எம்மோய் - எமது தாயாகிய சீதை.]

காதலனை விட்டுத் தன்னைப் பிரித்த ராவண குலத்தை யமனுக்கு அர்ப்பணம் செய்து, அடிமைகளாய் ஒடுங்கிக் கிடந்த தேவகுலத்தை வாழவைத்திருக்கிறாளாம். இப்படிப்பட்ட சீதா பிராட்டியை ஹனுமான் 'எமது தாய்' என்று வாய்குளிரச் சொல்லுகிறான்.

ராவணன் பிரித்து வைத்த போதிலும், அவள் ராமனைப் பிரிந்திருக்கவில்லையாம்; எப்போதும் ராமனையே நினைத்துக் கொண்டிருக்கிறாள்; ராம

நாமத்தையே உச்சரித்துக் கொண்டிருக்கிறாள். 'தியானம் முற்றினால் தரிசனம்' என்றபடி அவள் கண்ணுக்கு எல்லாம் ராமன்தானே! இப்படிப்பட்ட சீதை கற்பு என்னும் தவத்தைச் செய்துகொண்டிருக்கிறாள் என்பதைக் காட்டிலும், அந்தத் தவமே தவஞ் செய்து சீதையாக உருவாகியிருக்க வேண்டும் என்று கருதுகிறான் ஹனுமான்.

'தவம் செய்த தவ'மாகிய தேவியின் திவ்ய சொரூபத்தோடு, அவள் இருக்கும் மனோ ரஞ்சிதமான கற்பகச் சோலையும் கண்முன் பிரத்யட்ச மாவதைப் பாருங்கள், பாட்டின் அழகோடும் ஓசையின்பத்தோடும், உதயமும் அஸ்தமனமும் தெரியாத அந்தப் பூஞ்சோலையின் செழுமையும் குளிர்ச்சியும், பரிமளமும், தேவியின் தெய்விக சோபையும் சோகமும் எப்படியோ அதிசயமாய்க் கலந்து விடுகின்றன!

> 'வேலையுள் இலங்கை என்னும்
> விரிநகர் ஒருசார், விண்தோய்
> காலையும் மாலை தானும்
> இல்லதோர் கனகக் கற்பச்
> சோலைஅங்கு அதனின் உம்பி
> புல்லினால் தொடுத்த தூய
> சாலையின் இருந்தாள், ஐய!
> தவம்செய்த தவமாம் தையல்!'

[வேலை - சமுத்திரம். சார் - புறம். விண் தோய் - ஆகாசத்தை அளாவி வளர்ந்த. கனக - (இங்கே) பொன்மயமான. கற்பகம் - கற்பக விருட்சங்கள். தையல் - பெண்.]

என்று ஹனுமான் சொல்லுகிறான். அந்தச் சோலையில் சீதையைப் பர்ணசாலையோடு பார்க்கும்போது,

'லட்சுமணன் செய்த பர்ணசாலை எப்படி இலங்கை யாத்திரை செய்தது?' என்று அறிய விரும்புகிறீர்கள் அல்லவா? சீதையின் புண்ணிய மேனியைத் தீண்டு வதற்கு ராவணன்கூட ஒரு பழைய சாபத்தை முன் னிட்டு அஞ்சினான். எனவே, மண்ணோடு பெயர்த் துப் பர்ணசாலையோடுதான் கொண்டு போனான்.

ராவணன் தீண்டவில்லை என்பதற்கு உரிய சாட் சியங்களையும் ஹனுமான் விவரிக்கிறான். முதல் சாட்சி பூமாதேவிதான். பூமி வெடிப்புண்டு இன்னும் பிளந்துவிடவில்லை! அதைத் தாங்கும் ஆதிசேஷனது தலை வெடிக்கவில்லை! கடல் பொங்கிப் பிரளயம் ஏற் படவில்லை! சந்திர சூரியர்களும் மற்ற நட்சத்திரங் களும் ஆகாயத்திலிருந்து உதிரவில்லை! வேதங்களும் கருமங்களும் அழியவில்லை! இந்த உண்மைகளைக் கொண்டே சீதையின் புனிதமான கற்பை அறிந்து கொள்ளும்படி வேண்டுகிறான். அண்ட கோளத்தில் ஆரம்பித்து, எந்த வேதங்களின் தர்மத்தை உலகில் நிலைபெறச் செய்ய ராமன் வாழ்ந்து வந்தானோ, அந்த வேதங்களையே முடிவான சாட்சியாக ஹனுமான் குறிப்பிடுவது எள்ளளவு ஐயமும் தோன்றாதபடி செய்துவிடக்கூடியது என்பது கருத்து.

இந்த உத்தமி தன் சோகத்தினாலேயே சத்திய சோதனை செய்து வெற்றியடைந்துவிட்டாள் என்றும், அவளுடைய வெற்றி பெண்குலத்திற்கே வெற்றியாகி விட்டதென்றும், ஹனுமான் சொல்லுகிறான் :

'சோகத்தாள் ஆய நங்கை
கற்பினால், தொழுதற்கு ஒத்த
மாகத்தார் தேவி மாரும்
வான்சிறப்பு உற்றார்; மற்றைப்

*பாகத்தாள் இப்போது ஈசன்*
*மகுடத்தாள்! பதுமத் தாளும்*
*ஆகத்தாள் அல்லள், மாயன்*
*ஆயிரம் மௌலி மேலாள்!'*

[மாகத்தார் - பெரிய வானுலக வாசிகள். பதுமத் தாள் - லட்சுமி. ஆகம் - மார்பு. மாயன் - விஷ்ணு. மௌலி - கிரீடம்.]

பூலோகத்துப் பெண்கள் மட்டுமா? வானுலக வாசிகளான தெய்வப் பெண்களும்—பார்வதி தேவியும் மகாலட்சுமியும் கூட—சீதையின் வெற்றியால் விசேஷமான பெருமையடைந்து விட்டார்களாம். பார்வதியின் பெருமையைப் பரமசிவன் ஏற்கெனவே அறிந்து கொள்ளாமல் இருக்கவில்லை. அறிந்திருந்ததால்தான், தமது பாகத்தில் வைத்துக் கொண்டார். சீதையின் கற்பினால் பெண்மையின் பெருமை அதிகமாக விளங்கியதும், இடப்பாகத்தில் வைத்தது போதாதென்று, தேவியைத் தலைமேல் தூக்கி வைத்துக் கொண்டாராம். சிவபெருமானைப் போலவே மகா விஷ்ணுவும், சீதை மூலமாகப் பெண் தெய்வத்தின் உயர்வைக் கண்டுபிடித்து, 'மகாலட்சுமி இனிமேல் மார்பில் வீற்றிருக்கத் தக்கவள் அல்லள்' என்று தமது தலையிலுள்ள ஆயிரம் கிரீடங்களின் மேலும் வீற்றிருக்கச் செய்தாராம்.

இவ்விதமாகப் பேசிவரும் ஹனுமான், தான் கண்ட சீதையை அப்படியே ஒரு சிறு படமாகப் பிடித்து ராமனுக்கு 'இதோ, இவள்தான், பார்த்துக் கொள்!' என்று காட்டுகிறான். ராட்சஸிகள்—எண்ணிக்கையிலும் கொடுமையிலும் அளவில்லாத

வர்கள்—நெருக்கிக் காவல் செய்து கொண்டிருக்கிறார் கள் என்றும், அந்தக் கூட்டம் பிசாசுக் கூட்டங் களையே நடுங்கச் செய்துவிடும் என்றும் சொல்லும் போதே, ராமன் முகத்தில் பளிச்சென்று தோன்றும் கவலையை அறிந்து கொண்டு, 'அவ்வளவு பயங்கர மும் அவளுக்குப் பயங்கரமா யில்லை!' என்று சொல்லி, யதார்த்த நிலையை எவ்வளவு ஆச்சரியமாக வெளியிடுகிறான் :

'அரக்கியர் அளவற் றோர்கள்,
அலகையின் குழுவும் அஞ்ச,
நெருக்கினர் காப்ப, நின்பால்
நேசமே அச்சம் நீக்க,
இரக்கம்என்(று) ஒன்று தான்ஓர்
ஏந்திழை வடிவம் எய்தித்
தருக்(கு)உயர் சிறையுற் றன்ன
தகைமையள் தமியள், அம்மா!'

[அலகை - பிசாசு. குழு - கூட்டம். ஏந்திழை - பெண். தருக்கு - களிப்பு; செருக்கு. சிறையுற்று அன்ன - சிறையில் அகப்பட்டால் போன்ற. தமியள் - தனியா யிருப்பவள்.]

ராமன் மேலுள்ள நேசம் நெஞ்சிலே நிறைந்திருப் பதால், பயப் பிராந்திக்கு எப்படி இடம் கிடைக்கும்? தான் எவ்வளவோ இரங்கத் தக்க நிலையிலிருந்தும், ராவணன் ஆட்சியில் பிறர் படும் துன்பமும் எப்படியோ அந்த நெஞ்சிலே படுவதால், இரக்கமே ஒரு வடிவம் வேண்டுமென்று தவம் கிடந்து பெண் ணாகி வந்தது என்று கருதும்படி இருக்கிறாளாம். இன்றைக்கு 1946 ஆண்டுகளுக்கு முன் இரக்கம் ஒரு

வடிவம் பெற்று முள்முடி சூடிச் சிலுவையில் மாண்ட தென்று கிறிஸ்து சரித்திரம் கூறுகிறது. கம்பனே, இரக்கத்திற்கு மிகவும் பொருத்தமான ஒரு பெண் வடிவம் தந்திருக்கிறன். தேவ குமாரர் (கிறிஸ்து) சிலுவையில் மரணமடைந்தார் என்றால், லோக மாதா சிறையிருந்து மரணத் துன்பத்தையே அனுபவித்தாள் அல்லவா? இதனால்தான் ஆன்றோர்கள், 'சிறையிருந் தவள் ஏற்றம் சொல்லுகிறது ராமாயணம்!' என்று சொல்லி யிருக்கிறார்கள்.

இந்தச் சிறையிருப்பிலேதான் சீதைக்கு எவ்வ ளவு பெருமை! 'தருக்கு உயர் சிறை'—அதாவது, செருக்கிலே உயர்ந்த சிறை—என்று ஹனுமான் சொல் லுகிறன். நிரபராதியின் சிறையல்லவா? ராவணன் ஆட்சியில் தேவர்கள் தன்மதிப்பு இல்லாதவர்களாய் ('தருக்கு இலர்') உழன்று கொண்டிருப்பதாக அறிந்து கொண்டான் ராமதூதன். அரக்கர்களோ, 'அதிகச் செருக்கால் அழிந்தது லங்கை!' என்று சொல்லும்படி, அழிந்து கொண்டிருக்கிறார்கள். இந்த நிலையில், உண்மையான பெருமையிலே—தன் மதிப்பிலே—உயர்ந்திருப்பவள், சிறையிருக்கும் சீதை தான் என்று ஹனுமான் கண்டுபிடிக்கிறன்.

சிறை யிருந்த செல்வியின் சித்திரம் சுந்தர காண் டத்திலே எத்தனை பாடல்களாக வளர்ந்து வருகிறது! இப்போது அதே சித்திரம், இந்த ஒரே பாட்டில், எவ்வளவு சுருக்கமாக—கொஞ்சமும் அழகு குறையா மல்—அடங்கிக் காண்கிறது!

சீதையின் பெருமையைக் குறிப்பாகவும் வெளிப் படையாகவும் சித்திரித்த பின் ஹனுமான், ராவணன்

அவளைச் சந்தித்ததையும், சிறிக் கொல்லத் தலைப் பட்டதையும் குறிப்பிடுகிறான் :

'ஆயிடை அணங்கின் கற்பும்,
ஐயநின் அருளும், செய்ய
தூயநல் அறனும் என்றிங்கு
இனையன தொடர்ந்து காப்பப்
போயினன், அரக்கி மாரைச்
"சொல்லுமின் பொதுவின்!" என்றாங்கு
ஏயினன்; அவரெ லாம்என்
மந்திரத்து உறங்கி இற்றார்.'

[ஆயிடை - அப்போது. செய்ய - செவ்வையான. இனையன - இவையெல்லாம். பொதுவின் ஏயினன் - பொதுவாக உத்தரவிட்டான். உறங்கி இற்றார் - (மாண்டு விழுபவர்போல்) தூங்கி விழுந்தார்கள்.]

அவளைக் கொல்லாது விட்டு, வேண்டிய புத்தி சொல்லும்படி ராட்சஸிகளைப் பயமுறுத்திவிட்டு ராவணன் சென்ற பின், தான் கண்டதையும் விவரிக்கிறான். பிராட்டி உயிர் துறப்பதற்காகக் கையிலே கொடிஒன்று ஏந்தி ஒரு மரத்தின் கிளையிலே உறுதியாகக் கட்டித் தன் கழுத்தில் சுருக்கிட்டுக் கொள்ளும் வேளையிலே, தான் 'ராமநாமம்' சொன்னதையும், அது கேட்டு அவள், 'இதுவும் ராட்சஸர் செயலோ?' என்று ஒரு பக்கம் சந்தேகமும், மற்றொரு பக்கம் சந்தோஷமும் அடைந்ததையும் பிரஸ்தாபிக்கிறான். பிறகு, ராமன் சொல்லி யனுப்பிய அடையாளங்களைச் சொல்லி அவள் சந்தேகத்தை அறவே நீக்குவதற்காகக் கணையாழி கொடுத்ததை,

... ... வண்ண
மோதிரம் காட்டக் கண்டாள் ;
இறுதியின் உயிர்தந்து ஈயும்
மருந்துஒத்தது அனையது எந்தாய் !'

[வண்ணம் - அழகு. இறுதியின் - மரண காலத்தில். உயிர் தந்து ஈயும் - இறவாதபடி உயிரைக் காத்துக் கொடுக்கும். மருந்து - சஞ்சீவி. அனையது - அது (மோதிரம்). எந்தாய் - எங்கள் தலைவனே.]

என்று விவரிக்கிறான்.

அவன் கையிலிருந்த வரையில் சாதாரணமாயிருந்த மோதிரம், சீதையின் கைக்குப் போனவுடனே பெரிய மாறுதலை அடைந்ததாம். ஒரே கணத்தில் அது இரண்டு விதமாக மாறி மாறிக் காட்சியளித்ததாம். ராமனிடம் கொண்டிருந்த காதல்-கொதிப்பினால் உருகிப்போயிற்றாம். கணையாழியைக் கண்டதும் ராமனையே கண்டதுபோல் அவள் மகிழ்ந்து குளிர்ந்ததும், அதுவும் குளிர்ச்சியடைந்து இறுகி முன்போல் ஆயிற்றாம். இதை ஹனுமான், 'ஒரு கணத்து இரண்டு கண்டேன் !' என்று குதூகலத்தோடு வர்ணிக்கிறான்.

கணையாழியின் நிலை இதுவானால், சீதையின் நிலை எப்படியிருந்தது என்பதையும் அற்புதமாகச் சித்திரித்துக் காட்டுகிறான் :

'வாங்கிய ஆழி தன்னை,
வஞ்சர்ஊர் வந்த தாம்என்று
ஆங்குயர் மழைக்க ணீரால்
ஆயிரம்கலசம் ஆட்டி,

ஏங்கினள் இருந்த தல்லால்
இயம்பலள்; எய்த்த மேனி
வீங்கினள் வியந்த தல்லால்
இமைத்திலள், உயிர்ப்பு விண்டாள்!'

[ஆழி - மோதிரம். ஆயிரம் கலசம் ஆட்டி - (கண்ணீரால்) ஆயிரம் கலசம் அபிஷேகம் செய்து. இயம்பலள் - ஒன்றும் பேச முடியாதவளானாள். உயிப்பு - மூச்சு. விண்டாள் - நீங்கியிருந்தாள்.]

கணையாழியை வாங்கிப் பார்த்துக் கொண்டே தாரை தாரையாகக் கண்ணீர் வடித்தாள் அல்லவா? 'எவ்வளவு பரிசுத்தமான மோதிரம்! பாவிகளான வஞ்சகர்களுடைய ஊருக்கு வந்துவிட்டதே!' என்று அசுத்தம் போக்க ஆயிரம் கலசம் நிறையத் தீர்த்தம் கொணர்ந்து மஞ்சனம் ஆட்டியது போலிருந்ததாம் அந்தக் கண்ணீர் வெள்ளம்! அப்படியே ஏங்கி ஒன்றும் பேசாமல் இருந்தாளாம் ஒரு க்ஷணம். அடுத்த க்ஷணம் எய்த்துப் போயிருந்த உடம்பு பூரித்துப் போயிற்றாம்! ஏதோ பேராச்சரியம் அடைந்தவளைப் போலிருந்தாளாம்; கண்கள் இமைக்க வில்லையாம். திடீரென்று மூச்சும் கொஞ்சம் அடங்கிவிட்டதாம் ('உயிர்ப்பு விண்டாள்'). உடனே சரியாக மூச்சு வருவதற்கு ஔஷதப் பிரயோகமாக,

'மன்ன! நின் வருத்தப் பாடும்
உணர்த்தினேன்; உயிர்ப்பு வந்தாள்!'

என்று எவ்வளவு சுவாரசியமாகச் சொல்லுகிறான்!

இப்படிப்பட்ட பேச்சுக்கிடையே, இதைக் காட்டிலும் அதிசயமாக,

> ‘ விற்பெருந் தடந்தோள் வீர!
> வீங்குநீர் இலங்கை வெற்பில்,
> நற்பெருந் தவத்த ளாய
> நங்கையைக் கண்டேன் அல்லேன்!’

[தடந் தோள் - நீண்ட கைகள். வீங்கு நீர் - கடல். வெற்பு - மலை.]

என்றுகூட ஹனுமான் சொல்லுகிருன். ‘ கற்பு என்ற பெரிய தவத்தையுடைய நங்கையைக் காண வில்லை !’ என்று துணிந்து சொல்வதற்குக் காரணம் என்ன ?

‘தவம்’ என்ற சொல், காடுகளையும் கஷ்டங் களையும் நினைப்பூட்டுகிறதல்லவா? ராமனின் காதலில் வேரூன்றி வளர்ந்தோங்கும் சீதையின் கற்பை அப் படிப்பட்ட கஷ்டங்களோடு பிணைத்துப் பேசக் கூசு கிருன் ஹனுமான். அவளுடைய குடிப்பிறப்பு என்ன! குணதிசயம்தான் என்ன ! மேலும், எப்படிப்பட்ட தியாகமும் ஸாராம்சத்தில் ஆனந்தமாகத்தானே இருக்கவேண்டும் ? எனவே,

> ‘ இற்பிறப்(பு) என்ப(து) ஒன்றும்,
> இரும்பொறை என்ப(து) ஒன்றும்,
> கற்பெனும் பெயர(து) ஒன்றும்
> களிநடம் புரியக் கண்டேன் !’

[இற்பிறப்பு - இல்+பிறப்பு - உயர் குடிப் பிறப்பு. இரும் பொறை - பெரும் பொறுமை. களி நடம் - ஆனந்த நடனம்.]

என்று தொடர்ந்து கூறுகிருன். ‘நங்கையைக் கண் டேன் அல்லேன் !’ என்று சொன்னவன், தான்

கண்டது இன்னதென்று விளக்கிச் சொல்லுகிருன். 'உயர் குடிப் பிறப்பு' என்ற குணத்தைக் கண்டானும்; 'பெரும் பொறுமை' என்ற குண ரத்தினத்தையும் கண்டானும்; 'கற்பு' என்னும் பெயர் வாய்ந்த குணத்தையும் கண்ணாரக் கண்டானும். இந்த மூன்று குண விசேஷங்களும் கைகோத்து ஆனந்த நர்த்தனம் பண்ணிக் கொண்டிருப்பதையே பார்த்துவிட்டானும்.

சீதையின் குணுதிசயத்திலே முக்கியமாக நான்கு நிலைகளைக் காணலாம். அவள் கன்னிகையாய் மிதிலைச் செல்வியாக நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தது முதலாவது நிலை. அப்போது ரூப சௌந்தரியமும் குண சௌந்தரியமும், கவியும் கவியின்பமும்போல, ஒன்றுக்கொன்று ஏற்றத் தாழ்ச்சி யில்லாமல் சமமாக இருந்தன. அயோத்திச் செல்வியாக இருந்தது அடுத்த நிலை. இராஜதானியில் கவலை யில்லாமல் புருஷனோடு வாழ்ந்து கொண்டிருந்த அந்தக் காலத்திலே, ரூப சௌந்தரியமும் குண சௌந்தரியமும் ஒன்ருேடொன்று போட்டி போட்டு வளர்ந்து வந்தன; எனினும், குண சௌந்தரியம் கடைசியாக ரூப சௌந்தரியத்தையும் வென்று அதைக் காட்டிலும் மும்மடங்கு வளர்ச்சி பெற்று விட்டதாம். ஸஹதர்மிணி நாடு துறந்து போய்ப் புருஷனுடைய கஷ்ட நஷ்டங்களைப் பங்கிட்டுக் கொண்டு காடுறை செல்வியாக வாழ்ந்த காலத்திலே, உருவம் வாடி மெலிந்துபோய்க் குண எழில் காட்டுத் தீயைப் போல் பெருகிக் கொண்டிருந்ததாம். இப்போது போக பூமியாகிய இலங்கையிலே 'சோகத்தாளாய நங்கை' என்று சொல்லும்படி, சிறை புகுந்த செல்வியா யிருக்கும்போது ரூப சௌந்தரியம் முழுவதும்

வெய்யிலொளியில் மறையும் விளக்கொளி போலக் குண சௌந்தரியத்திலே மறைந்துபோய் விடுகிறதாம். அந்த நிலையிலே சீதையைக் கண்ட ஹனுமான், 'நங்கையைக் கண்டேன் அல்லேன்!' என்றும், 'குண சௌந்தரியத்தையே கண்ணுற்றேன்!' என்றும் சொல்வது எவ்வளவு பொருத்தமா யிருக்கிறது!

அத்தகைய நிலையில் சீதையைப் பார்க்கும் பாக்கியம் தனக்குத்தான் கிடைத்ததென்றும், ராமன் கண்களும் செய்யாத தவத்தைத் தன் கண்கள் செய்திருந்தன என்றும்கூட இவன் எண்ணத் துணிந்ததுண்டு.

'மாணநோற்(று) ஈண்(டு)இவள்
இருந்த வாறெலாம்,
காணநோற் றில அவன்
கமலக் கண்களே!'

[மாண - மாட்சிமைப்பட. நோற்று - தவஞ்செய்து. ஈண்டு - இங்கே.]

என்று சீதையைப் பார்த்தவுடன் தனக்குள் தானே சொல்லிக்கொண்டான் அல்லவா? அந்தப் பாக்கியத்தைப் பெறுவிட்டாலும், இராமனுடைய தாமரைக் கண்கள் குணசௌந்தரிய சிகரத்தி லிருக்கும் சீதா தேவியின் அறிகுறியான சூடாமணியையாவது கண்டு திருப்தியடைய வேண்டும் என்ற நினைப்பு தன்னை அறியாமலே இவன் உள்மனத்தில் கிடக்கிறது. சூடாமணியை இராமனிடம் கொடுக்கும்போது அந்த ஆசை இவன் வார்த்தைகளிலே பிரதிபலிக்கிறது:

' ...... ...... ......
தாமரைக் கண்கள் ஆர,
வித்தக, காண்டி !' என்று,
' கொடுத்தனன் வேத நன்னூல்
உய்த்துள காலம் எல்லாம்
புகழொடும் ஓங்கி நிற்பான்.

[ஆர - திருப்தியடையும்படி. வித்தக - பேரறி வாள. உய்த்துள - வழங்கக்கூடிய.]

சீதையின் குண சௌந்தரிய மாகாத்மியம் கூறும் இந்தப் பாடல்கள் கவிதா சௌந்தரியத்திலும் நிக ரற்று விளங்குவதால், நாம் இவற்றைச் சௌந்தரிய சிகரமென்று சொல்லலாம்.

சிறையிருந்த செல்வியின் தியாக சௌந்தரிய வெற்றி ஹனுமானுடைய வீர சௌந்தரியத்திற்கும் ஒரு விசேஷ வெற்றியாகி, அவனுடைய வாக்கின் வசீகர வன்மைக்கும் ஒரு விஜயமாகிறது. இது வாக் கின் செல்விக்கே ஒரு தமிழ் வெற்றிதான். யுத்த காண் டத்திலே ராமனுடைய விஜய சௌந்தரியத்திற்கு இது ஒரு வசீகரமான தோற்றுவாய்.



# செய்யுள் அகராதி

## [இந்நூலில் எடுத்தாளப்பெற்ற சுந்தர காண்ட முழு விருத்தம்—266]